## அத்தியாயம் நூற்று ஒன்று
## "கோட்டான் கூவியது!"

எப்பொழுதும் அமைதியாக இருக்கும் விஜயாலயச் சோழீஸ்வரக் காட்டில், அவ்வப்போது அதிசயங்கள் நடக்கும். காலை வெளிச்சத்தில் கானக அமைதியைக் கிழித்துக்கொண்டு கோட்டான்கள் கத்தும். உடனே எப்போதும் இல்லாதது போல, காட்டில் இருந்த பாண்டியப் போராளிகளெல்லாம் பரபரப்பாவார்கள். அந்த அதிசய ஒலியைக் கேட்டவுடன் தத்தம் வேலைகளைப் பாதியில் விட்டு விட்டு ஓரிடத்துக்கு ஓடி வருவார்கள்.

அவர்களுக்குத் தெரியும், காலையில் கூவும் கோட்டான் ஒரு மனிதனாகத்தான் இருக்க வேண்டும் என்று. அதுவும் முக்கியச் செய்தி கொண்டு வந்த தூதுவன் காட்டுக்குள் வந்தால், முதலில் கோட்டான் போலக் கத்த வேண்டும் என்பது போராளிகளின் சங்கேத மொழி.

முதலில் தூதுவன், குழுத் தலைவனிடம் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு. அவன் கேட்கும் விஷயத்துக்கெல்லாம் தெரிந்தவரை பதில் கொடுப்பான். பின் கூட்டத்தில் ஒருவர் ஒருவராக அவனைத் தனியே அழைத்துச் சென்று நாட்டு நடப்புகளைப் பற்றி விசாரிப்பார்கள்.

எல்லாம் அவனிடம் இருக்கும்.

நாட்டுடன் தொடர்பின்றிக் காட்டில் வாழ்ந்தவருக்கு நாட்டு நடப்புகள் தெரியவேண்டுமே. ஒரு முறை நாட்டுப் பக்கம் போய்ப் பார்த்துவிட்டு வருவதென்றால் எளிதில் முடிகின்ற காரியமா? நாட்டில் காலடி வைத்தால் சிரசாக்கினை என்று சோழர்கள் விதித்திருக்கிறார்களே. அதனால், எங்கேயாவது கண்காணாத காட்டுப்பிரதேசத்திலிருந்து போராடி வாழும் போராளிகளுக்கு வெளி உலகத் தொடர்பே இந்தத் தூதுவன் மூலம்தான்.

குழுத் தலைவன் ரவிதாசன் என்பதால், கொண்டுவந்த செய்தியைச் தூதுவன் அவனிடம்தான் முதலில் சொல்வான். பின்பு புஜங்கனும் அவன் மனைவியும் அவனைத் தனியே அழைத்துச்

சென்று தஞ்சை விவரங்களைப் பற்றிக் கேட்பார்கள். மற்றவர்களுக்குத் தஞ்சையில் பெரும் சொந்த பந்தமில்லை. எனினும் பொதுவாகக் கேள்விகள் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள்.

வந்தவன் ஒற்றனல்ல. சாமர்த்தியமாக யார் கண்ணிலும் படாமல் காட்டுக்குள் சென்று செய்தி சொல்லிவிட்டுத் திரும்பத் திறமைகொண்ட தூதுவன் தான். இந்தச் செய்தியையெல்லாம் சேகரிப்பவர்கள் வெவ்வேறு ஆட்கள். சோழ நாட்டுக்குள் ஏராளமான பாண்டிய விசுவாசிகள் இருந்தார்கள். சோழச் சக்கரவர்த்தி பேசுவதைக் கேட்கக்கூடிய தூரத்தில் கூட ஓரிருவர் வெண் சாமரம் வீசியபடி நின்றுகொண்டு இருந்தார்கள். அரசவையில் சேவகராக, மாளிகையில் பணியாளராக பலரும் வேலை செய்து வந்தனர். எதிர்கால நிகழ்வுகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு அவர்களை எங்கு சென்று வேலைக்குச் சேர்ப்பதென்று ரவிதாசன்தான் முடிவெடுப்பான். அப்படி முக்கியமான இடங்களில் இருப்பவர்கள் தற்செயலாகக் காதில் எட்டிய விஷயங்களையும், முனைந்து ஒட்டுக்கேட்ட விஷயங்களையும் சேகரிப்பார்கள்.

அரசியலில் ஒட்டுக் கேட்பது என்பது ஒரு தவறான காரியமாகவே கருதப்படுவதில்லை. ஒட்டுக் கேட்கும்போது அகப்பட்டுக் கொண்டால் மட்டுமே கஷ்டம். ஒற்றன் என்று சந்தேகப்பட்டால் போதும்- ஒரு காதை அறுத்து விடுவார்கள். அத்துடன் அவன் பார்க்கும் ஒற்றன் வேலையைத் தூக்கி உலையில் வைத்துவிட்டுத் வேறு வேலையைத் தேட வேண்டும். ஒற்றைக் காதில்லாதவனை அடையாளம் கண்டு கொண்டு வேறு யார் வேலை கொடுப்பார்கள்? ஆனால், ரவிதாசன் தேர்ந்தெடுக்கும் ஆட்கள் இதில் கைதேர்ந்தவர்கள். எல்லாருக்கும் பலவாண்டுகள் கழிந்தும் கூட, இரண்டு செவிகளும் செவ்வனே இருந்தன என்பதே அதற்குப் பூரண அத்தாட்சி.

தஞ்சை ஒற்றர்கள் ஒன்று கூடித் தயாரித்து அனுப்பும் ஒட்டுமொத்தச் செய்திதான் இப்போது வந்தது. மாதம் ஒரு முறையோ, இரு முறையோ பட்டப்பகலில் காட்டில் கோட்டான் குரல் கேட்பது வழக்கமாக நடப்பதே. பாண்டியப் போராளிகள் மறைந்திருந்த சோழீசுவரக் காட்டில் ஒரு நாள் காலை கோட்டானின் குரல் பலமுறை கேட்டது. எல்லாரும் செய்துகொண்டிருந்த வேலையை விட்டு ஓடி வந்தனர். நேற்று வரை அமைதி குடிகொண்டிருந்த இடத்தில், பலரின் பேச்சுக் குரல் ஒரே சமயத்தில் கேட்க ஆரம்பித்தது. ஆனால், எல்லாரும் வருவதற்கு முன் தூதுவன் ரவிதாசனைக் கண்டு பிடித்துவிட்டான்.



வருங்காலத்தில் வரப் போவதை அகக் கண்ணால் கண்டு சொல்லப் பல ஜோதிடர்கள் நாடெங்கும் இருந்தார்கள். ஆனால், மதி நுட்பத்தில் அதே வேலையைச் செய்தவரும் இருந்தனர். ரவிதாசன் அப்படிப் பட்டவன்தான். ரவிதாசன் வந்தது என்ன செய்தியாய் இருக்குமென்று யூகித்துவிட்டுத்தான் ஓலைச் சுருளுக்குக் கை நீட்டினான். அதை பிரிக்காமலேயே அவனுக்குத் தெரியும். அதற்குள் என்ன செய்தியென்று.

போன வாரம் சோழீஸ்வரக் காட்டில் அரங்கேறிய விஷயங்களின் எதிரொலியே இந்தச் செய்தி. இதற்குள்ளாகக் கடம்பூரும் பழுவூரும் கைகோத்திருக்கும். பழுவூர்ப் பெண்ணைப் பாண்டியரிடமிருந்து காப்பாற்றியதற்காக, அவளையே சம்புவராயனுக்குப் பரிசாய்க் கொடுக்க முடிவு செய்திருப்பார், பழுவூர்க் கிழவர். தன் குலக் கொழுந்தைக் கூட்டி வந்ததற்குத் தன் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவிக்கத் தன் மகளையே கொடுக்கச் சம்மதித்திருப்பார். திருமணப் பேச்சுகள் அதிவேகத்தில் தஞ்சையில் நடந்து கொண்டிருக்கும். அந்தச் செய்தியைதான் ஒற்றர்கள் அனுப்பியிருப்பார்கள். தான் கடத்தி வந்த பெண்ணைச் சம்புவராயன் மீட்டுப் பத்திரமாகத் தஞ்சைக்குக் கூட்டிச் சென்றவுடனேயே இது நடக்குமென்று அவனுக்குத் தெரியும்.

நிச்சயமாக இது ரவிதாசனுக்குத் தோல்விதான். அவன் நினைத்தது ஒன்று. நடந்தது வேறு. ஆனால், இந்தச் சரிவைச் சரிக்கட்டிவிடலாமென்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. எப்பொழுதும் தோல்விகளைச் சந்திக்கும் ரவிதாசனுக்கு, அந்த நிகழ்வுகளில் ஏதாவது ஆதாயம் கண்டு பிடிக்கவும் தெரியும்.

ஒற்றன் வந்திருக்கிறானென்று தெரிந்தவுடன், அவனது மூளை அதிவேகத்தில் வேலை செய்தது. இப்போதுகூடச் சோழர் குடும்பத்தில் பழுவூர் சம்பந்தம் செய்யவில்லை என்பது அவனுக்கு ஒருவகை வெற்றிதான். என்றைக்காவது இந்த இரண்டு சிற்றரசர் குலங்களும் ஒன்று சேர்த்தே நம்முடன் இணைய வாயப்பிருக்கிறதென்ற நம்பிக்கை அவனுக்கு இன்னுமிருந்தது.

தூதுவன் பணிவுடன் குனிந்து ஒரு கையை மட்டும் நீட்டினான். அதில் ஒரு ஓலைச் சுருள் இருந்தது. ஏற்கெனவே தெரிந்த செய்தியைத் தஞ்சை ஒற்றன் எழுதியிருப்பானென்ற நினைப்பில் ரவிதாசன் அதை வாங்கிக் கட்டவிழ்த்தான்.

அதில் எழுதியிருந்த முதல் வரியின் வார்த்தைகளைமட்டும் ஒரு முறை படித்தான். பின் தன் கண்களையே நம்பாமல் இரண்டாம் முறையும் படித்தான். அவனுடைய மனத்தில் என்றுமில்லாத

பீதியை உண்டாக்கி உடம்பெல்லாம் நடுங்கும்படி செய்தது, அவன் சற்றும் எதிர்பாராத அந்தச் செய்தி. அவனுக்கு தலை சுற்றிக் கண்கள் இருண்டன. ரவிதாசன் நிற்கமுடியாமல் தடுமாறினான்.

இதே இடத்தில் பல முறை இந்தத் தூதுவன் வந்து இதே விதமாக நின்றதுண்டு. ஆனால், செய்தியைப் படித்துவிட்டு ஒரு வகை முக மாற்றமும் காட்டாமல் ரவிதாசன் அவனை அனுப்பி வைப்பான்.

இப்போதோ ''ஆ!'' என்று அவன் வாயிலிருந்து புறப்பட்ட வியப்பொலியில் விவரிக்க முடியாத அதிர்ச்சியின் உணர்ச்சிகள் தொனித்தன. ஓலையில் அவன் பார்வை விழுந்தவுடன், அதிலிருந்த விவரங்கள் சொல்ல முடியாத ஆத்திரத்தையும் எல்லையில்லாத பயத்தையும் மாறி மாறி அளித்தன. உண்மையில் பார்த்தால், அந்தச் சுருளுக்குள் ஒரு பூகம்பத்தை வைத்து அனுப்பியிருந்தான் தஞ்சை ஒற்றன் எனச் சுற்றியிருந்தவர்கள் எல்லாருக்கும் தோன்றியது.

ரவிதாசனின் முகம் பேயடித்தவன் முகம் போல் காட்சி தந்தது மற்றப் போராளிகளுக்கு. போராட மனமில்லாதவனைப் போலத் ''தொபேல்'' என்று உட்கார்ந்தான். உட்கார்ந்தானா இல்லை விழுந்தானா?

ரவிதாசனின் செயல் எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தது. அப்படி என்னதான் அந்தச் சுருளில் இருந்தது? வாரம் ஒரு முறையோ, மாதம் இருமுறையோ ஒற்றன் வருவான். கோட்டான் போலக் கூச்சலிடுவான். அவன் கொண்டு வந்த செய்தியைக் கேட்டுவிட்டு. இவன் பங்குக்கு ஏதாவது செய்தியைச் சொல்லி அனுப்புவான், ரவிதாசன். இப்போது நடந்தது போல இதற்கு முன் நடந்தது இல்லையே !

சூரியன் தலைக்கு மேலிருந்தான். எனினும் காரிருள் சூழ்ந்தது போல ஒரு எண்ணம் ரவிதாசனுக்கு. நள்ளிரவின் கனாந்தகாரத்தைப் போலிருந்தது. இந்தத் தோல்வி வழக்கமான தோல்வி போலத் தோன்றவில்லை. எப்போதும் போல இதில் எப்படித் தேடினாலும் ஒரு சிறு ஆதரவோ, ஆதாயமோ கிட்ட வாயப்பில்லை. ரவிதாசன் என்னும் மலையே ஆடியது. மனதில் பீதியையும் கவலையையும் அதிகரித்தது. இதுவரை எந்த சந்தரப்பத்திலும் அவன் மனம் கலங்கியது கிடையாது; அப்படி ஒரு சந்தர்ப்பத்தைச் சோழர்கள் அவனுக்கு அளித்ததும் கிடையாது.

ரவிதாசனைக் கலங்கச் செய்து வேதனைக்குள்ளாக்கிய விவரம் இதுதான். ''பாண்டியரின் புராதனக் கிரீடமும், ரத்தின ஹாரமும் சோழர் கையில் அகப்பட்டு விட்டன!'' என்றது முதல் வரி.



மேலும் படித்தால், பாண்டியரின் புராதனக் கிரீடமும் இந்திரன் கொடுத்த ரத்தின ஹாரமும் எங்கு கிடைத்தன என்றும் ஓலை சொல்லியிருந்தது. ''கடம்பூர் இளவரசன் அதைத் தஞ்சையின் பாதாளச் சுரங்கத்தில் கண்டுபிடித்து விட்டான்'' என்று எழுதியிருந்தது.

முகத்தில் குரோதம் பொங்க, கண்களில் தீப்பொறி பறக்கத் தூதுவனை ரவிதாசன் பார்வையால் சுட்டெரித்தான். துர்ச் செய்தியைக் கொணர்ந்தவனின் நிலையே கஷ்டம்தான். மிக முக்கியம் வாய்ந்த செய்தி யென்றாலும், அதைச் சொல்வதற்கு நாக் கூசும். முகம் வெட்கம் கொண்டு ஆயிரம் கோணல்களாக மாறும். ஏதோ அந்தச் செய்தியைச் சுமந்தவன் அவன் என்பதை மறந்து, அவனே அதற்குக் காரணமென்று தோன்றும். அப்படிப் பட்ட நிலையில் தான் அந்தப் பாண்டிய நாட்டு உளவாளி இருந்தான்.

அவன் நின்றது ரவிதாசனின் முன். அதற்கே சாமானியனின் உடல் நடுக்கம் கொள்ளும். அதை விடச் சுமந்து வந்த செய்தியின் பாரமும் அவனை மிரண்டு போகச் செய்தது.

ரவிதாசனுக்கு வாய் குழறியது. எனினும் மளமளவென்று தூதுவனைக் கேள்விகளும் குறுக்குக் கேள்விகளுமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். ''அவர்களுக்கு மணிமகுடம் கிட்டி விட்டதா?''

ஆனால், பயன் சொற்பமே. அவன் வெறும் தூதுவன்தானே. ரவிதாசனின் கேள்விகளின் முக்கியத்துவம் புரிந்திருந்தாலும், அவனால் பெரிதாய் உதவியிருக்க முடியாது.

அவன் அந்தக் கேள்வியைக் கேட்டபோதே செவிகளில் பழுக்கக் காய்ந்த வேல் நுழைவது போலிருந்தது. தூதுவன் கொண்டு வந்த ஒவ்வொரு வார்த்தையும் ரவிதாசனின் இருதயத்தை வாளால் அறுப்பது போலிருந்தது. ஒரு நொடியில் எல்லாம் போனது என்றே அவன் தீர்மானித்துக் கொண்டான்.

பின்னர் ஓரமாய்ச் சென்று பாறையின் மீது அமர்ந்து விட்டான், ரவிதாசன். அவனுக்கு யோசிக்க நேரம் தேவைப்பட்டது. மற்றவர்கள் மேற்படி விஷயத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு ஒற்றனை விசாரித்தனர்.

தீவிரமாக யோசனை செய்தான் ரவிதாசன். ''ஈழம், ஈழம்தான் என்று கிரீடத்தின் இருப்பிடத்தை எவ்வளவு நாட்களாய்ச் சொல்லி வந்தார்கள்! அதைப் பாதுகாக்க ஆபத்துதவிகளின் வம்சமே அங்கு தங்குகிறதென்று கேள்விப் பட்டிருக்கிறோமே- அதை மூச்சு உள்ளவரை பாதுகாக்கிறோமென்று. பின் இது என்ன புதுக் கதை?

தஞ்சைக்கடியில் எப்படிப் பாண்டியரின் புராதனப் பொக்கிஷம் கிடைக்கும்? வைத்தவன் என்ன மடையனா?''

அந்தக் கவிதையை நினைவு கூர்ந்தான். வீரபாண்டியர் சொன்னதாக அந்தக் கருத்திருமன் அடிக்கடி சொல்வானே, 'வேங்கையின் காலடியில்' என்ற அந்த வார்த்தை தஞ்சைக்கும் பொருந்தியது. பார்க்கப் போனால், அதற்குப்பின் வந்த எல்லாமே பொருந்துவது போலிருந்தது. வெகு நாட்களாய்ச் சொல்லுவான் ரவிதாசன், 'நம் தலை நகர் மதுரையோ தேவாமிர்தத்தை வைத்துப் பெயரிடப்பட்டது. தஞ்சைக்கோ அரக்கனின் பெயர்' என்று.

ஆனால், ஒரு பெண்ணின் கையில் அது கிடைக்குமென்று ஆரூடக்காரன் சொன்னானே. அது பொய்யா? நந்தினிதான் அவள் என்று நினைத்திருந்தோமே. ஆனால், நன்றாய் யோசித்துப் பார்த்தால் கண்டுபிடித்திருக்கக் கூடியவர் இருவர். மாறனும் பழுவூர் இளவரசியும்தான். ஆனால், அவள் திருமணமாகாத பெண் என்பதற்காகச் செய்தியை வெளிவிட மாட்டேன் என்கிறார்கள். அடக்கி வாசிக்கிறார்கள்.

தஞ்சைக் கோட்டை கொத்தளங்கள்வரை லோகாவையும் சம்புவராயனையும் துரத்திச் சென்றிருந்தான் ரவிதாசன். தஞ்சையில் இருந்த தன் கூட்டாளிகள் இருவரையும் தூக்கத்திலிருந்து எழுப்பி அழைத்துச் சென்றான். கோட்டைக் கதவுகளை அவ்வளவு எளிதில் இரவில் திறக்க முடியாதென்ற சோழர்களின் சட்டம் அவனுக்கு அதிக நம்பிக்கை கொடுத்தது. ஐயனார் கோயில் வரை இருவரும் சென்ற தடயங்கள் தெரிந்தன. துரத்திச் சென்றனர். கையில் கிட்டினால் மாறனைக் கொன்றுவிட்டு லோகாவைக் காட்டுக்கு இழுத்துச் செல்ல வேண்டுமென்று வெறியுடன் செயல்பட்டனர். ஆனால், ஐயனார் கோயிலுக்கு மேல் தடயங்கள் ஏதுமில்லை. இருவரும் மாயமாய் மறைந்துவிட்டனர்.

ரவிதாசன் விடியும்வரை தேடிவிட்டுத் தோல்வியுடன் காட்டுக்குத் திரும்பினான். பூட்டிய கோட்டைக்குள் எப்படிப் பிரவேசித்தான் மாறன் என்று எண்ணியவனுக்கு, ஏதோ ரகசியச் சுரங்கம் வழியாகக் கோட்டைக்குள் சென்றிருக்கவேண்டுமென்று இப்போது புரிந்தது. அந்த இடைவெளியில்தான் மாறனுக்குக் கிரீடம் கிடைத்திருக்க வேண்டும்.

'ஆகா! நாமே அவர்களைத் துரத்தித் துரத்தி அதன் இருப்பிடத்துக்கு அனுப்பி வைத்து விட்டோமே!' என்றும், 'ஈடு இணையில்லாத பொக்கிஷத்தை அவன் கண்டுபிடிக்க நாமே காரணமாயிருந்து விட்டோமே' என்றும், தலையெழுத்தை நொந்தான். 'நம்மையும் சரி, அவர்களையும் சரி, வெறுங்கையுடன் ஈழம் அனுப்பி வைத்ததற்கு இதுதான் காரணமா?'



அதற்குள்ளாக ஓலையை வாங்கிப் படித்தான், பரமேசுவரன். ரவிதாசனை அணுகுவதற்கு பரமேசுவரனுக்கு மட்டும் தெம்பு வந்தது. ''நாட்டையே பிடித்துவிட்டார்கள். நமது பொக்கிஷ அறையின் சாவிக்கொத்தைச் சோழன் இடுப்பில் செருகி வைத்திருக்கிறான். இது ஒன்றுதானே. போனால் போகட்டுமே!'' என்றான் ஆறுதலாய் பரமேசுவரன்.

''இல்லையடா! வெறும் பொக்கிஷம் என்றால் இவ்வளவு சிரமப்பட்டுச் சோழன் இதைத் தேடிக் கொண்டிருக்க மாட்டான். அதை அவன் தலையில் அணிந்து கொண்டு சோழர் பாண்டியர் என்ற புது வம்சத்தைத் தொடங்க நினைப்பதே இதன் காரணம். ஒரு பொருளுக்கு இவ்வளவு அரசியல் முக்கியத்துவமா என்றால், அந்தக் கிரீடத்துக்கு அது உண்டு.''

'ஐயோ! சோழருடைய ஆசை இவ்வளவு சீக்கிரமாகவா நிறைவேற வேண்டும்?' என்று மனம் கதறியது எல்லாருக்கும்.

''ரவிதாசா! கவலைப் படாதே. இது சோழனின் சூழ்ச்சி. உனது நம்பிக்கைக்குரிய ஒற்றன் அவன் என்று நினைத்துக் கொண்டு சும்மா இருந்துவிட முடியாது. உமது ஒற்றன் என்ற வேஷம் பூண்ட அவன் மாற்றார்களின் ஒற்றனாகவுமிருக்கலாம் அல்லவா?'' என்றான்.

''இல்லை, இருக்கவே இருக்காது. என்னை ஏமாற்ற மாட்டான் தஞ்சை ஒற்றன். என்னை ஏமாற்றி அவனுக்கு என்ன காரியம் ஆக வேண்டும்?''

''சரி, அப்போது ஒற்றன் போலி அல்ல. ஆனால், அது போலிக் கிரீடமாக இருக்கலாமல்லவா? நம்மைக் குழப்ப வேண்டுமென்றே அப்படியொரு செய்தியை நம் ஒற்றன் காதுகளில் படும்படி பரப்பிவிட்டிருக்கலாம் அல்லவா?''

ரவிதாசனுக்கு மனம் அதி வேகத்தில் செயல் பட்டது. பாண்டிய நாட்டு மணிமகுடம் தன் சிரசை அலங்கரிக்க வேண்டிப் பல சோழ மன்னர்கள் ஆசைப்பட்டனர். அதற்காகப் பொன்னியின் செல்வருக்காக ஒரு கிரீடத்தைத் தயாரித்துக் கட்டுக்கதை விடுகிறானோ? பொன்னியின் செல்வருக்கும் உத்தம சோழருக்கும் பிரச்சனை ஏதும் வராமல் சோழர் பாண்டியர் என்ற புது வம்சத்தை மதுரையில் உருவாக்க எண்ணுகிறானோ? சோழ ராஜ்யம் கடல்களுக்கு அப்பாலுள்ள தேசங்களிலும் பரவ வேண்டுமென்று ஆசையுண்டு. ஆனால், வெகு காலமாக மதுரையின் மேல்தான் முதல்

கண். சோழர் பாண்டியர் என்ற புது வம்சத்தை உருவாக்குவதே அவன் எண்ணம்.

பின்பு வேறொரு யோசனையும் வந்தது. சோழ நாட்டுப் பிரதமர் அநிருத்தர் செய்த சூழ்ச்சியாய் இது இருக்குமோ? 'தென்னாட்டைச் சொப்பன லோகமாக்குவோம். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு இந்தப் பிராந்தியத்துக்கு வருகிறவர்கள் எல்லாரும் பார்த்துப் பிரமிக்கும்படியாகச் செய்வோம்' என்பது அவர் கனவு.

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்து வெளி உலகப் பிரக்ஞையே இல்லாதவனாய் இருந்தான், ரவிதாசன். "இல்லை, பரமேசுவரா. இப்படித்தான் வெகு காலமாக எல்லாம் நமக்குச் சாதகமாகவே எண்ணிக் கொண்டிருக்கிறோம். கடைசியில் நேருக்கு நேர் உண்மையைக் காணும்போது திடுக்கிடுகிறோம். இது உண்மையா என்று முதலில் கண்டறியவேண்டும்."

"எப்படி?" என்றான், பரமேசுவரன்.

"சோழரின் அடுத்த கட்ட நடவடிக்கையை யோசிப்போம். அது சோழரின் கையில் கிடைத்தால் என்ன செய்வார்கள்?"

"அருள்மொழி வர்மனுக்கு மதுரையில் முடி சூட்டுவார்கள்" என்றான் பரமேசுவரன்.

"அதெல்லாம் உண்மைதான். ஆனால், இப்போது சோழனின் எண்ணத்தில் மாற்றமிருக்கும் என்று யூகித்திருக்கிறேன்." அதைச் சொல்லக் காரணம், ரவிதாசன் மனதில் ஒரு விபரீதமான சந்தேகம் உதித்தது. அந்தக் கோர சந்தேகத்தின் நிழல் அவன் முகத்தில் படர்ந்தது.

"இதெல்லாவற்றையும் விட முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது. நான் அநிருத்தனாக இருந்தால் அதைத்தான் செய்வேன்."

பின் ஏன் சோழர்கள் அந்தக் கிரீடத்தை இவ்வளவு தூரம் உயிரைக் கொடுத்துத் தேடினார்கள். எவ்வளவு மனக் கோட்டைகள் கட்டினார்கள் என்று அவன் மனமே ஆட்சேபம் தெரிவித்தது.

ரவிதாசன் எழுந்தான். "உண்மையில் கிரீடம் அவர்களிடம் சிக்கிவிட்டதா என்று கண்டறிய ஒரு வழிதான் இருக்கிறது" என்றான்.

"அது உண்மைக் கிரீடமா என்று சோதிக்கவும் ஒரு வழி தானிருந்தது. நேரே ஓரிடத்துக்குச் செல்ல வேண்டும். அங்கே நாம் நினைக்கும் நபர் இல்லையென்றால் இது நிஜக் கிரீடம்தான்" என்றான்.

"நான் இப்போது கிளம்புகிறேன். எல்லாரும் கவனமாய் இருங்கள்" என்று சொல்லி உடனே புறப்பட்டான்.

"எங்கே, தஞ்சைக்கா?" என்றான் புஜங்கன்.

"இல்லை. அதை வந்து சொல்கிறேன். பரமேசுவரா! என்னுடன் வொம்பு" என்றான் ரவிதாசன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இரண்டு
## "மீண்டும் சேவூர்"

செய்தி உண்மையா பொய்யா என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் ரவிதாசனைப் பிடுங்கித் தின்று கொண்டிருந்தது. மனதில் உதித்த சந்தேகம் ஏற்கெனவே எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலிருந்தது அவனுக்கு. அதற்குப் பின் காட்டில் இருப்புக் கொள்ளவில்லை. சென்று பார்த்து விட்டால்தான் மனம் அமைதியாகும். அமைதியான மனதில்தான் அடுத்த கட்ட நடவடிக்கை உருவாகும்.

'அது என்ன? சோழர்களுக்கு எதிராக என்ன சதி செய்தாலும் அந்த முயற்சியின் பலன் பாண்டியருக்கு விபரீதமாகவே முடிகிறது!' என்று ஆச்சரியப்பட்டான். பாண்டியர்கள் பெரிதாய்ச் சாதித்த காரியம் ஆதித்த கரிகாலனின் கொலைதான். ஆனால், அதுவே பாண்டியக் கூட்டத்துக்குள் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியது. பொதுவான எதிரி உயிருடன் இருக்கிறான் என்கிறவரையில், உடைவதற்கு இடம் கொடுக்காமல் காத்து வந்த ஒற்றுமை சுக்கு நூறாய்ச் சிதறியது. அது மட்டுமல்ல. ஆதித்தனைக் கொன்றவுடன், தஞ்சையில் இருந்த அனைத்துப் போராளிகளும் வெளியேறும் நிலை. காட்டில் இன்னல்படும் நிலை.

இப்போது, சிற்றரசர்கள் ஒருவரைச் சோழர்களிடமிருந்து பிரிக்கலாமென்றால்கூட, பாண்டியர் பொக்கிஷம் கால் முளைத்தாற்போல் ஓடிச் சென்று சோழர்களிடமே அகப்பட்டுக் கொண்டது. அது ஆரம்பம்தான். இன்னும் ஏதாவது இடர் நேருமா என்று இந்தப் பயணத்தின் முடிவில் தான்தெரியும். பழுவூர் இளவரசி

தப்பியதும் மீண்டும் பாண்டியர் போராட்டம் பூஜ்யத்துக்கு வந்து விட்டது என்றுதானே நினைத்தான் ரவிதாசன். ஒற்றன் கொணர்ந்த செய்தி அவனைத் திகைக்க வைத்து விட்டது. இதுவரை அவன் விட்ட சவால்களைச் சமாளிக்கத் திணறிய சோழர்கள் இன்று அவனுக்கே சவால் விட்டனர். லோகா தப்பிச் சென்றவுடன் அடுத்தகட்ட நடவடிக்கை என்னவென்று யோசிப்ப தற்குள், இந்தச் செய்தி.

'இப்போது வந்த செய்தி பெரும் பின்னடைவாய் அல்லவா மாறியது?' என்று நினைத்தவன், அதி வேகமாக நடந்தான். பின்னால் வந்த பரமேசுவரனால் அவன் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. பரமேசுவரனுக்கு ஆச்சரியம். தன்னை மட்டும் ரவிதாசன் அழைத்தான் என்று. லோகாவைத் தப்பிக்க விட்டதால், ரவிதாசனுக்குத் தன் மேல் மிகுந்த கோபமென்று அவனுக்கு தெரியும். அதனால் கேள்வி கேட்டுத் தன் சந்தேகங் களையும் நிவர்த்தி செய்து கொள்ள முடியவில்லை. அவனுக்கு எங்கு செல்கிறோம். ஏன் இவ்வளவு அவசரமாகச் செல்கிறோ மென்று தெரிந்து கொள்ள ஆவல்.

ரவிதாசனுக்குக் கோபம் கொப்பளித்துக் கொண்டு வந்ததிலும் நியாயமிருந்தது. திணறித் திண்டாடிய பாண்டியப் போராட்டத் தைத் தூக்கி நிறுத்த வேண்டுமென்ற வெறியில்தான் பழுவூர் இளவரசியைக் கடத்தி வந்தான். அந்தச் செயலால் என்றென்றும் தன் பெயருக்கு மாசு கற்பித்துக் கொண்டு விட்டான். ஆனால், அதைக்கூட ஆபத்துதவிகளால் முழுதாக நிறைவேற்ற முடிய வில்லையே? ஓர் அபலைப் பெண்ணைக் கூட நடுக் காட்டில் பாதுகாக்க முடியவில்லை. இப்பேர்ப்பட்டவர்களுடன் சேர்ந்து நாம் எப்படித் தனி ராஜ்ஜியத்தை நிர்மாணிக்கப் போகிறோமென்ற கோபம் அவனுக்கு.

வெகுவிரைவில் இருவரும் காட்டை விட்டு வெளி யேறினார்கள். பரமேசுவரனைக் காட்டின் எல்லையில் காத்திருக்கச் சொல்லிவிட்டு ரவிதாசன் நாட்டுக்குள் சென்றான். சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் இரண்டு புரவிகளுடன் வந்தான்.

பரமேசுவரனுக்குப் புரியவில்லை. ரவிதாசனால் எப்படி இதெல்லாம் சாதிக்க முடிகிறது? குதிரைகளைத் திருடி வந்தானா? இல்லை, ஏற்கெனவே அங்கு விட்டு வைத்திருந்தானா? இல்லை, எல்லாரும் சொல்வது போல மாயமந்திரத்தினால் உருவாக் கினானா? நரிகளையும் பரிகளையும் மாற்றி அமைத்ததும் ஒரு



பாண்டிய நாட்டு மந்திரிதானே?அதுபோல இவனுக்கும் சக்திகள் உள்ளனவா?

கேட்டாலும் சொல்ல மாட்டான். எங்கு செல்கிறோம் என்று கேட்டாலே முறைப்பான். புரவிகளின் ரிஷிமூலம் என்ன முக்கி யமா? பேசாமல் பரமேசுவரன் தனக்கென ஒதுக்கிய புரவியின் மேலேறிக் கொண்டான். ரவிதாசனின் புரவியைத் தொடர்ந்து தனது குதிரையைச் செலுத்தினான்.

குதிரைகளைத் தெற்கே செலுத்திக் கொண்டு சென்றனர். அதனால் எதிரியின் கோட்டையாம் தஞ்சைக்குச் செல்லவில்லை யென்று மட்டும் ஆறுதல் கொண்டான், பரமேசுவரன்.

அடிக்கடி குறுக்கிட்டுப் பேசினால் பிடிக்காது என்ற போதிலும், நேரம் ஆக ஆக ரவிதாசன் முகத்தில் கோபம் குறைவதாய்த் தெரிந்தது. பயணத்தின் குறிக்கோளைப் பற்றி எவ்வளவோ கேட்டுப் பார்த்தான், பரமேசுவரன். ஆனால், வாயை திறக்க வில்லை ரவிதாசன். அவன் மனதில் எண்ணங்கள் புயற்காற்று வேகத்தில் வீசினால் அவனுக்கு வெளியுலகமே தெரியாது போல. பரமேசுவரனின் வார்த்தைகள் அவன் செவிகளில் விழுந்தனவா என்றே தெரியவில்லை.

இப்படிப் பிரயாணம் நடந்து கொண்டிருக்கையில், கொஞ்ச நேரத்துக்குப் பிறகு சுற்றுப்புறக் காட்சியின் தோற்றத்தில் ஒரு மாறுதல் காணப்பட்டது. காடுகள் குறைந்தன. ஆங்காங்கே உயரமான குன்றுகள் தென்பட்டன.

தன் குதிரையை முன்னால் செலுத்தி, "எத்தனை முறை கேட்பேன், ரவிதாசா? சின்னப் பிள்ளை போல நடந்து கொள்கிறாய். இந்தப் பிடிவாதம் எதற்கு? எங்கே செல்கிறோம்?" என்றான் பரமேசுவரன்.

"சொல்கிறேன், சொல்கிறேன்" என்றே தட்டிக்கழித்து வந்தான் ரவிதாசன்.

ஒரு நாள் பயணத்துக்குப் பின், ஒரு மலை அடிவாரத்துக்கு வந் தனர். சுற்றுப்புறத்தைக் கண்டவுடன் பரமேசுவரன் ஒரு நடுக்கம் கொண்டான். அந்த நடுக்கத்தின் காரணம், அந்த இடத்தை அடையாளம் கண்டு கொண்டு விட்டான் என்பதனால்தான். மறந்தால் தானே அது அவன் மனதை விட்டு அகலும்.

"ரவிதாசா! இது சேலூர் அல்லவா?" என்றான்

"ஆம்" என்பது போல் தலை அசைத்தான், ரவிதாசன்.

ரவிதாசன் தன்னிடம் போகும் இடத்தைப் பற்றிய விவரத்தை ஏன் சொல்லவில்லை என்று தெரிந்தது இப்போது. சொல்லி யிருந்தால் நிச்சயமாகப் பரமேசுவரன் வந்திருக்க மாட்டான். சேலூரை அடையாளம் கண்டு கொண்ட பரமேசுவரன், அதிர்ந்து போனான். சேலூர் யுத்தத்தில் ஏற்பட்ட காயங்களால் அவன் அடைந்த தேக அசௌகரியம் இன்னும் தீரவில்லை. ஓரிரு ஆண்டுகள் பலவீனம் தாங்காமல் படுத்த படுக்கையாக இருந்தான். ஜன்மத்துக்குச் சேலூர்ப் பக்கம் தலை வைத்துப் படுப்பதில்லை என்ற தீர்மானத்திலிருந்தான்.

இங்குதான், பாண்டியர் சேனை ஒரு காலத்தில் சர்வ நாசம் அடைந்தது. பரமேசுவரனுக்கு அந்த நினைவு குடலைக் குமட் டியது. எவ்வளவு ரத்தம்! எல்லாம் பாண்டிய ரத்தம்! உழைத்து, உழைத்துப் பாண்டிய நாட்டை வளப்படுத்தவேண்டிய ரத்தம் தரையில் வீணாய்ச் சிந்தி, பின் உறைந்து சேலூர் மண்ணை இன்னும் சிவப்பாக்கியது.

என்னவொரு கெட்ட நினைவுகளைக் கொடுக்கக் கூடிய இடமிது! ஆயிரமாயிரம் பாண்டிய வீரர்கள் தயவு தாட்சாண்ய மின்றி இங்கு வெட்டிச் சாய்க்கப்பட்டார்கள். அவர்கள் உடல் களை எடுத்துத் தகனம் செய்யக்கூட யாரையும் விட்டு வைக்க வில்லை சோழர்கள். பாதி உயிருடன் இருக்கும் போதே, காக்கைக் கழுகுகளால் கொத்தப்பட்டு எவ்வளவு பேர் சாவே சிறந்தது என்று உயிரை விட்டனர்.

அப்பப்பா! என்ன கொடூரம்! மனிதரும், குதிரைகளும், யானை களும் அவ்வளவு அருகில் சாவதைக் கண்டவன் வாழ்நாளில் இனி நிம்மதியாய்த் தூங்க முடியாது.

சேலூர்ப் போர்க்களத்தின் ஓரத்தில் தனியாக ஒரு மலை நின்றது. மலையின் அருகில் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்து மேலே விழித்துப் பார்த்துவிட்டுப் பரமேசுவரனை நோக்கி, ''நீயும் மலையேறுகிறாயா, இல்லை...?'' என்று இழுத்தான் ரவிதாசன்.

''என்ன கேட்கிறாய்? இப்போதே மாலையாகி விட்டது'' என்றான் பதறிப்போன பரமேசுவரன். அவனுக்கு உற்சாகம் குறைந்து விட்டது. 'சேலூர்ப் போர்க்களத்தில் தனியாக இரவைக் கழிப்பதா? இருட்டில் ஒருவரையொருவர் தைரியப்படுத்திக் கொண்டிருப்பதை விட்டுத் தனியாக இருப்பதா?'

பயம் என்று சொன்னால் மனோதைரியந்தான் மாவீரனுக்கு முதல் ஆயுதம் என்பான் ரவிதாசன். அப்படிச் சொல்லாமல் தானும்



வருகிறேன் என்று அவசரமாக ரவிதாசனுடன் ஒட்டிக் கொண் டான்.

''இல்லை, இல்லை. நானும் உம்முடன் வருகிறேன். ஆனால், ஒரே ஒரு கேள்வி''... என்று இழுத்தான். ''யார் மலை மேலே இருக்கிறார்கள் என்று நான் இப்போது தெரிந்து கொள்ளலாமா?'' என்றான்.

''உன்னிடம் சொல்லவில்லை அல்லவா? பாண்டிமாதேவி என்று நாம் பக்தியுடன் அழைப்போமே, நந்தினி தேவியார். அவர்கள் இந்த மலைமேல் இருந்தார்கள்'' என்று இழுத்தான் ரவிதாசன்.

உடனே பரமேசுவரன் புதிரைப் புரிந்து கொண்டு, ''இப்போது அவர்கள் இல்லையென்றால், மகுடம் சோழர் கையில் இருக்கிறது என்று அர்த்தம், அல்லவா?'' என்றான்.

தான் சொல்ல விரும்பாததைப் பரமேசுவரன் வாயிலிருந்து பிடுங்கிவிட்டான் ரவிதாசன். ''இன்னும் வெகு காலம் சந்தேகத்திலும் குழப்பத்திலும் என்னை வைத்துக் கொள்ள விரும்ப வில்லை. இன்னது செய்வது என்று திட்டமாகத் தெரியவேண்டும். அதற்காகத்தான் வந்தேன்'' என்றான். முற்றிலுமாகப் புரிந்து கொண்ட பரமேசுவரன் தலையசைத்தான்.

குதிரைகளை மலையடிவாரத்தில் இருந்தத் தனி மரம் ஒன்றில் கட்டிவிட்டு மலையை நோக்கிச் சென்றான் ரவிதாசன். அப்போது அந்தி நேரம் என்றாலும் அவனுடைய கூரிய கண்களுக்குத் தரை யில் ஒரு காட்சி தென்பட்டது. மலையடிவாரத்தில் ஏகப்பட்ட காலடிச் சுவடுகள் இருந்தன. குதிரைகளின் குளம்படிகளும் இருந்தன. ஒற்றைக் கூடாரம் அமைத்த குழிகளுமிருந்தன. ரவிதாசன் தலையை அசைத்தான். அவன் உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்தது. சகுனம் சரியில்லை என்று அவனுக்குத் தெரிந்தது. ஒரு வாரத்துக்குள் இங்கு ஆட்கள் வந்ததற்கு அடையாளங்கள் தெரிந்தன. ''தாமதித்துவிட்டோமோ?'' என்று அவன் மனம் பதறியது.

இருவரும் ஒருவர் கையை ஒருவர் கெட்டியாகப் பற்றிக் கொண்டு மேலே செல்வதைத் தொடர்ந்தார்கள். மலையேற ஏறக் காற்று இன்னும் வேகமாக அடித்தது. பாறைகளுக்கிடையே வளர்ந்திருந்த மரம் செடி கொடிகளெல்லாம் பேயாட்டம் ஆடிய படி இருந்தன. சுற்றுச் சூழலின் சரித்திரத்துக்கு ஏற்றாற்போல் இருட்டில் அந்த இடம் இருந்தது.

மலை ஏறும் போது நேரமோ, ஒரு நிமிடம் ஒரு யுகமாகச் சென்றது. இருட்டு மேலும் இருண்டு கொண்டிருந்தது. எனினும் கண்ணுக்கு ஏதாவது நடமாட்டம் தென்படாதா என்று கீழிருந்து ஏறும் போதே பார்த்து வந்தான் ரவிதாசன். கண்ணில் ஒன்றும் தட்டுப்படவில்லை. அவ்வப்போது யாரேனும் மேலிருந்து தங்கள் வரவை எதிர்நோக்குகிறார்களா என்று பார்த்தபடி நடந்தனர். ஆனால், அவர்களை எதிர்கொண்டு யாரும் நிற்கவில்லை. உச்சியை அடையும் முன் ரவிதாசனின் மனதில் ஆரவாரம் அதிகரித்தது. அவன் குமுறலை அவனுக்குப் பின்னால் நடந்து வந்த பரமேசுவரனால் உணர முடிந்தது.

ரவிதாசனுக்கு ஓர் ஆசை. ''மலையின் மேலே நந்தினியும் அந்தச் சிறுவனும் இருக்க வேண்டும்'' என்று. ஆனால், அப்படி நந்தினி மேலே இருந்தால் இவனைப் பார்த்துச் சந்தேகப்படுவான் அல்லவா? 'இந்த நடுநிசியில் இவ்வளவு இரகசியமாக மலையேறி இருவரும் எதற்காக வந்திருக்கிறார்கள்?' என்று. அப்போது என்ன பதில் சொல்வது?

இத்தனை நேரம் மலையேறிய காரணத்தினால் அவனுக்கு மூச்சு வாங்கிற்று. ''நந்தினி, நந்தினி!'' என்று கத்தியபடி சுற்றினான். ''பாண்டி மாதேவி! மகராஜா! எங்கிருக்கிறீர்கள்? உங்கள் சேவகன் வந்திருக்கிறேன்'' என்று கூவினான்.

அப்போது மாலை நேரம். வெளிச்சம் மிகக் குறைவாயிருந்த போதிலும், நூற்றுக் கணக்கான வீதி விளக்குகள் ஏற்றப்பட்டது போல நட்சத்திரங்கள் ஒளிவீசத் தொடங்கியிருந்தன. சற்று நேரத்தில் கண்களுக்கு எல்லாம் நன்றாகத் தெரிந்தன.

கண்கள் இங்குமங்கும் ஆவலுடன் தேடின. ஆனால், சிறிய இடம்தானே. ஜனசூன்யமாக இருக்கிறது என்று கண்டுபிடிப்பதற்கு அதிக நேரம் ஆகவில்லை. விஷயம் புரிந்தது. விதி தன்னை எவ்விதம் கேலிக் கூத்துக்குள்ளாக்கி விட்டதென்று மிரண்டு போய்விட்டான், ரவிதாசன்.

மலையின் மீதிருந்த அந்த ஒற்றை விருட்சம் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. அதன் நறுமணம் நாலா புறமும் சூழ்ந்திருந்தது. 'தாமதமாக்கிவிட்டாயே?' என்று அது அவனை ஏளனமாகப் பார்ப்பது போலொரு எண்ணம்.

ஆயிரம் சந்தேகங்கள் அவனைப் பிடுங்கித் தின்றன. ''சுயேச்சையாக எவ்விதக் கட்டுப்பாடுமின்றி இருப்பதற்காவே தனியாய் இருக்கிறாள் என்று கருதினோமே. இவ்வளவு சஞ்சலப் புத்தியுடையவளா அவள்? ஜன்ம எதிரியுடன் கை கோப்பாளா? சோழ



னுடைய தீய போதனை அதிவேகத்தில் அவளை மயக்கிவிட்டதா? இரு புரவிகள் பூட்டிய வண்டியில் ஒன்று சண்டித்தனம் செய்தால் வண்டியென்ன ஆகும்? அது போலத்தான். தன் வழி தனியென நந்தினி நினைக்க நேர்ந்தால் போராட்டமே சீர்குலைந்துவிடும். என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் பாண்டியர் சேவையில் அர்ப்பணம் செய்ய எந்த க்ஷணமும் சித்தமாயிருக்கிறேன் என்றாளே. ஈவு, இரக்கம், பச்சாதாபம் ஏதுமில்லாச் சோழர்களை நம்பி சென்று விட்டாளோ?'' என்று பல கேள்விகளுக்கு இடையில் குழம்பியது அவன் மனம்.

''அவளை மட்டும் அழைத்துச் செல்ல ஏன் பிரயத்தனப் படுகிறார்கள் சோழர்கள்?'' என்றும் சிந்தித்தான். ஆசை வார்த்தையில் மயங்கக் கூடியவள் அவள்தான் என்று நினைத்திருப்பார்கள். அவளுக்குக் காட்டுவாழ்க்கை கட்டோடு பிடித்திருக்காது. ஆடல், பாடல், அலங்காரம், அகம்பாவம் என்றிருந்தவளுக்கு எப்படிப் பிடிக்கும்? நாகரிக வாழ்க்கையின் மீது அவளது மனதுக்குள் எப்போதுமே நாட்டம் உண்டு. எப்போதும் ஐந்து ஆண்கள் அவளைச் சூழ்ந்து கொண்டு கவிபாடிப் புகழ்ந்து தள்ள வேண்டும். இதையெல்லாம் தெரிந்து கொண்ட சோழர்கள் அவள் மனதையே எளிதில் மாற்ற முடியுமென்று முடிவெடுத்திருப்பார்கள் என்று யூகித்தான்.

மற்ற மனிதர்களைப் போலன்றிப் போராளிகள் திடமாக இருக்க வேண்டும். சாலையின் அடுத்த திருப்பத்தில் மரணம் சம்பவிக்கலாம். மீதி வாழ்க்கையைக் கானகத்திலோ, கைதியாகவோ செலவழிக்க நேரிடலாம். தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கை என்பது சரித்திரத்தின் பாதையில் அவ்வளவு பெரியதொன்றும் இல்லை என்று கருதியே தியாகம் செய்ய வேண்டும். ஆனால், நந்தினி போன்றவர்கள் வெட்கித் தலை குனிய வேண்டும். ''ஆயிரம் ஆண்டுப் பகைவனுடன் கை கோர்ப்பதா? திசை தவறிச் சென்று விட்டாளே!'' என்று ஆதங்கப்பட்டான்.

பரமேசுவரனுக்கு ரவிதாசனைப் பார்த்தால் பாவமாய் இருந்தது. ரவிதாசன் மனத்தில் சொல்ல முடியாத கவலையும் பயமும் குடி கொண்டன என்று அவன் முகம் காட்டியது. ரவிதாசனின் பயப்பிராந்தி கொண்ட வெளிரிய முகத்தைப் பார்க்கப் பரமேசுவரனுக்கே இது ஒரு சந்தர்ப்பம்.

காலியான குகையில் இருந்து வெளியேவந்தவுடன் பொங்கி வந்த துயரத்தையும், ஆத்திரத்தையும் தாங்க முடியாமல் அந்த ஒற்றைப் பாறையின் மேல் இடிந்து போய் உட்கார்ந்தான் ரவிதாசன்.

பாறை மீதமர்ந்திருந்த ரவிதாசனின் தோள் மீது ஆறுதலாய்க் கைவைத்தான் பரமேசுவரன். "இல்லை, ரவிதாசா. எல்லாம் உன் யூகம் தானே. அவர்கள் வேறெங்காவது சென்றிருக்கலாம். பாண்டியநாடு சென்றிருக்கலாம். இல்லை, இதே சேலூர்ப் பகுதியில் வேறெங்காவது மறைந்திருக்கலாம்."

நந்தினி வேறெங்காவது சென்றிருப்பாளென்று பரமேசுவரன் சொன்னது ரவிதாசன் உள்ளத்தில் சிறியதொரு நம்பிக்கைச் சுடரை உண்டாக்கியிருந்தது.

"எப்படிச் சொல்கிறாய், பரமேசுவரா?"

"நாம் நந்தினியைத் தப்பாகக் கணக்குப் போட்டு விட்டோம். நமது தோல்வியை நினைவுபடுத்தும் சேலூரைக் கடக்கவே நமக்கு வேதனையாய் இருக்கிறது. அப்பேர்ப்பட்ட இடத்தைத் தினம் தினம் பார்த்து மனதைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று தானே நந்தினி இங்கு சதா சர்வ காலம் இருந்தாள். வளரும் சிறுவனான மகராஜாவுக்குக் கூட அதைப் பார்த்துப் பார்த்து வெறி வர வேண்டும். சோழரை என்றாவது அவன் துவம்சம் செய்ய வேண்டுமென்றுதானே இங்கேயே இருந்தாள். பின்பு எப்படி இன்று திடீரெனச் சோழர்கள் கட்சிக்குச் சென்று விட்டாளென்று சொல்கிறாய்?"

இதுவும் உண்மை போலத்தான் தோன்றியது ரவிதாசனுக்கு. அப்படி இருந்தால்தான் தேவலையே!

மேலும் தொடர்ந்தான் பரமேசுவரன். "ரவிதாசா! உனக்குக் கற்பனை சற்று அதிகம்தான். அவள் எங்கு வேண்டுமானாலும் சென்றிருக்கலாம். இப்பிரதேசத்தில் மலைகளுக்குக் குறைவா? குகைகளுக்குத்தான் குறைவா?"

இவ்விதம் பரமேசுவரன் சொல்லிச் சற்று நிறுத்தியதும், ரவிதாசனுக்கு ஒரு நம்பிக்கை பிறந்தது. "நம்மைப் போலத்தானே நந்தினியும். ஒரே இடத்தில் இருக்க முடியாதல்லவா? இடத்தை மாற்றியிருப்பாள். ஒரேடியாகத் தஞ்சை சென்று சோழருடன் கை கோத்துவிட்டாள் என்று நினைத்துப் பயந்து விட்டோமே. என்ன அசட்டுத் தனம்!" என்று நினைத்துக் கொண்டான். "செய்தியைக் கேட்டவுடன் நம் உணர்வே தப்பிவிடும் போலிருந்தது. புத்தி பேதலித்தவன் போலச் செய்தியைக் கேட்டவுடன் மளமள வென்று சேலூருக்கு ஓடிவந்தோம்" என்று அவமானம் கொண் டான்.

அந்தக் கிரீடத்தின் மகத்துவம் அப்படி. அதைக் கண்டவனுக்குத் தனக்கே அது வேண்டும் என்றுதான் தோன்றும். "சோழன் ஏன்



அதை நந்தினியிடம் ஒப்படைக்கிறான்? முன் போலச் சோழர் அந்தக் கிரீடத்தைக் கொண்டு தங்களை சோழ பாண்டியர் என்று மதுரையில் முடிசூட்டத்தான் எண்ணியிருக்கிறார்களோ என்னவோ? நாம்தான் கற்பனை செய்து பயந்து விட்டோம்" என்று ஆறுதல் சொல்லிக் கொண்டான்.

பின்னர் ஒரு நம்பிக்கை பிறந்தது. "அப்படி அவர்கள் முடி சூட்டிக் கொண்டால் அவர்களுக்குதான் விபரீதமாகும். அதிகார வர்க்கத்தாருக்கு அடிமட்ட மக்களின் ஆசா பாசங்களும் தெரியாது. கோப தாபங்களும் புரியாது. மக்கள் கோபம் கொண்டு எழுவார்கள். போராட்டம் மீண்டும் உயிர் பெறும்."

"பரமேசுவரா! எனக்குக் களைப்பாய் இருக்கிறது. நான் முகம் கழுவி வருகிறேன்" என்று மழைநீர் தேங்கியிருந்த குட்டைக்குச் சென்றான். இரு கைகளாலும் நீரை அள்ளி முகத்தில் அடித்துக் கொண்டான். அதற்குப்பின் மனம் தெளிவாய் இருந்தது. உடலிலும் களைப்புக் குறைந்தது.

ரவிதாசன் தன் முகத்தைத் துடைத்துகொண்டு திரும்பியபோது அவன் கண்கள் தற்செயலாகக் குளத்தருகே பார்த்தன. உடனே பரபரப்புடன். "பரமேசுவரா இங்கே வா" என்று அலறினான். ஓடி வந்த பரமேசுவரனிடம் குளக்கரையைச் சுட்டிக் காட்டினான். அவன் காட்டிய திசையைப் பரமேசுவரன் பார்த்தான். ரவி தாசனை அலற வைத்தது வெள்ளை நிறத்தில் ஒரு சுண்ணாம்புக் கட்டி. இரவு பூரணச் சந்திரனுடைய ஒளியில் அந்தச் சுண்ணாம்புக் கட்டி தெளிவாய்த் தெரிந்தது.

"என்ன இது?"

"வைணவர்கள் தினந்தோறும் தம் குலப் பாஷாண்டாங்களைத் தீட்டிக்கொள்ளும் கட்டி. சமீபத்தில் இங்கு வந்தது யாரென்று தெரிகிறதா?"

அதை யூகித்த பரமேசுவரனின் முகம் வெளுத்தது.

ரவிதாசனுக்கு எல்லாம் புரிந்தது. சென்ற முறை வந்தபோது கூட எவ்வளவோ தைரியமாகவும் உற்சாகமாகவும் இருந்தானே! அதைப் பற்றித் தான் ஆச்சரியப்பட்டதும் உண்டல்லவா? அப்படிப் பட்டவனை இவ்விதம் மாறும்படியாக போதனை யார் செய்தது என்று தெரிந்து கொண்டான். அந்த வைணவன் தான் செய்திருந் தான்.

"ஆகா! ரவிதாசன் யூகங்கள் எல்லாம் எப்போதும் போல இப்போதும் சரிதான்" என்று நினைத்து அசந்து போனான் பரமேசுவரன்.

"சோழனென்னும் ஒரு துஷ்ட நாகம் கூறிய விஷங்கலந்த மொழிகளை நம்பிச்சென்று விட்டாள். இனி அவளும் எனக்குக் கொடிய நாகம் போலத்தான்!" என்று முணுமுணுத்தான் ரவிதாசன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று மூன்று
## அண்ணனும் தங்கையும்

ரவிதாசன் யூகித்தது போல வீர வைணவன் ஆழ்வார்க்கடியான் திருமலை நம்பிதான் இந்தச் சேலூர் மலைக்கு விஜயம் செய்திருந் தான்.

ஒற்றரில் கைதேர்ந்தவன் அந்த நாமக் கட்டியைத் தெரியாமல் விட்டுச் சென்றிருக்க மாட்டான் என்று ரவிதாசன் யூகித்தான். வேண்டுமென்றேதான் விட்டுச்சென்றிருப்பான் என்று தெரிந்தது.

தான் வந்த அடையாளமாக விட்டிருப்பானோ? பாண்டியர் போராட்டத்தைச் சர்வ நாசமாக்கியவன் நான்தான் என்று அடை யாளம் காட்டுவதற்காக விட்டுச் சென்றிருந்தானோ என்னவோ? அவனைப் பிடித்துக் காட்டில் மூன்று நாள் கட்டிப்போட்ட பாண்டியரைப் பழிவாங்கத் துடித்திருப்பான். அந்த வெறுப்பில் செயல்பட்டிருப்பான்.

ஒரு வார காலத்துக்கு முன், கஷ்டப்பட்டு, பருமனான உடலு டன் அடியான் சேலூர் மலையையேறியதைச் சிறுவன் முதலில் பார்த்துவிட்டான். அவன் கூக்குரலைக் கேட்டு உடனே நந்தினியும் ஓடி வந்தாள். யாரோ மேலே ஏறிவருவதைக் கேள்விப்பட்டுப் பழையபடி பீதி கொண்டாள்.

'இந்த வெறிபிடித்த ரவிதாசன் நம்மை நிம்மதியாய் விட்டுப் போய்த் தொலையமாட்டானா?' என்று மனத்திற்குள் எண்ண மிட்டாள். ஆனால், மெல்ல மெல்ல ஏறிவருவது யாரென்று தெரிந்தவுடன், அவள் மனதிலிருந்த கலக்கம் அகன்றுவிட்டது.

என்ன அதிசயம்? வந்தது அவளை வளர்த்த சகோதரன், திருமலை!

அவள் முகத்தில் இருந்த பயம் விலகிப் புன்னகை மலர்ந்தது. தமையன் திருமலையைப் பார்த்து வெகு காலமாயிற்று. ஆனால்,



அடியானை ஒரு காத தூரத்தில் கூட அடையாளம் கண்டு விடலாம்.

தன் நலனில் அக்கறையுள்ள ஒரு ஜீவன் இந்தப் புவிமீது உள்ளது என்றால், அது இவன்தான் என்று நந்தினிக்கு நன்றாய்த் தெரியும். ஆனால், அவனும் ஒரு காலத்தில் அவள் ஆசைகளைப் புரிந்து கொள்ளாமல், அவளது திறமைகளைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தான். சுய நலத்துக்காக இல்லை. பொது நலத்துக்காக; வைணவ மதத்துக்காக.

அவனைச் சொல்லியும் குற்றமில்லை. அனாதையான நந்தினியை வளர்க்கும் பொறுப்பை அவனே ஏற்றுக் கொண்டான். அதனால் அவனுக்குத் தெரிந்த விதத்தில்தானே வளர்ப்பான்? நந்தினிக்குப் பிராயம் வளர வளரப் பெருமாளிடம் பக்தியும் வளர்ந்து வரும்படி பார்த்துக் கொண்டான் அடியான். நந்தினி துளபமாலை அணிந்து பக்திப் பரவசத்துடன் பாசுரம் பாடியதைக் கேட்டவர்கள் மதிமயங்கிப் போனார்கள். பூமியில் அவதரித்த மற்றொரு ஆண்டாள் எனப் பலரும் நினைத்தார்கள். அடியானும் அவளது காந்த சக்தியை உணர்ந்தான். அதைத் தக்க விதமாக உபயோகப்படுத்தலாம் என்று எண்ணினான்.

இவள் வைணவ பக்தர்களையெல்லாம் ஆட்கொள்ளப் போகிறாள் என்ற நம்பிக்கை ஆழ்வார்க்கடியானுக்கு அதிகமா யிருந்தது. அவன் இஷ்டம் போலவே இருவரும் ஊர் ஊராகச் சென்று ஆழ்வார்களின் பாசுரங்களைப் பாடி ஸ்ரீ வைஷ்ண வத்தைப் பரப்பி வந்தார்கள். அவளுடைய குரலிலேதான் என்ன மதுரம்! அவளுடைய குரலும், பக்தியும் தமிழகத்தில் மீண்டும் வைணவத்தை வளர்க்கும் தூண்டுகோலாய் இருக்குமென்று பார்த்தவரெல்லாம் நினைத்தார்கள். ஆனால், அவளுக்குள் ஓடிய ரத்தம் வலுவானது என்று அவர்கள் யாரும் அறியவில்லை.

உலகமே தன்னைப் பயன்படுத்திக்கொண்டு, காரியம் முடிந்த வுடன் விட்டெறிந்துவிடும் பழக்கம் கொண்டது என்று நந்தினி நினைப்பாள். அப்படிப் பார்த்தால் இவனும் அதில் விதி விலக்கல்ல. ஆனால், யோசனைசெய்து பார்க்கும்போது இவன் சொன்னதைக் கேட்டிருந்தால், இந்தக் கஷ்டமெல்லாம் தனக்கு வந்திருக்காது. அவனுடன் செலவழித்த காலங்கள் மிகவும் இனிமையானவை என்று நினைக்கத் தோன்றும்.

ஆழ்வார்களின் பிரபந்தங்களைப் பாடிக் கொண்டு ஊர் ஊராய்த் திரிந்த போது, அவனது விந்தையான தோற்றத்தைப் பார்த்து அவனை யார் என்று யாராவது கேலியாய்க் கேட்டால்

போதும்: ''மூட சிகாமணி மாந்தர்களே! திருக்குருகூரில் அவதரித்த மாபெரும் பக்தனான நம்மாழ்வாரின் அடியார்க்கு அடியான் நான்! மற்றவர்கள் மண்டையில் நையப்புடைக்கும் கைத்தடியான்!'' என்று கவிதையில் மிரட்டுவான். அதை நினைத்தவனுக்கு இப்போது சிரிப்பு வந்தது.

அவள் சென்ற காலத்தின் எண்ண ஓட்டம் முடிவதற்கும் அடியான் மலையுச்சிக்கு மூச்சிரைக்க வருவதற்கும் சரியாக இருந்தது. புன்னகையுடன் தன்னை நந்தினி வரவேற்கிறாள் என்பது அடியானுக்கு ஆறுதலைத் தந்தது. அவன் வந்த வேலை அவ்வளவு முக்கியமானது. இதை நல்ல சகுனமாகவே எடுத்துக் கொண்டான்.

ஆனால், அவளை அடையாளம் கண்டவுடன், அவன் மனம் வலித்தது. ஒரு காலத்தில் இந்த மாயா மோகினியின் வசீகரத்தில் மயங்கிப் போகாதவன் யார்? இன்று இப்படிப் பிச்சி போல இருக்கிறாளே! அவனுக்கு அழுகையே வந்தது. இப்படி ஒரு காலத்தில் கஷ்டப்படுவாள் என்றா அவ்வளவு ஆசையாய் இவளை வளர்த்தான்?

இருவரும் பேச்சுக்காக நலம் விசாரித்துக் கொண்டனர். பின்பு மனம் வெம்பிய அடியான், பொறுக்காமல் ''தங்காய்! நீ தஞ்சையில் ராஜ போகமாக இருக்கும்போதே உன் வாழ்க்கை சீரழிந்தது என்று புலம்புவேன். இன்று உன் கதியைக் கண்டு ரத்தக் கண்ணீரே வடிக்கிறேன்'' என்று சொன்னான். ''திருமால் காக்கும் தெய்வமல்லவா? அவருக்கு நீ செய்ய வேண்டிய உன் கடமையை மறந்தாய். அதனாலேயே இப்படி அலங்கோலமாய் இருக்கிறாய்'' என்று அவள் கோலத்துக்குக் காரணமும் கற்பித்தான்.

''அண்ணா! அதெல்லாம் வெறும் பேச்சு. உன் ரத்தமே என் உடலில் ஓடியிருந்தால் நானும் உன் வழியில் வந்திருப்பேன், ஆண்டாளைப் போல. ஆனால், என்னுள் ஓடும் ரத்தமே வேறல்லவா? உன்னை அண்ணன் என்று கூறினாலும், உன் ரத்தம் என்னுடலில் ஓடவில்லையே. ஆயிரம் ஆண்டு அரச குல ரத்தமல்லவா ஓடுகிறது?'' ஏன்றாள்.

''வந்தவுடன் சண்டை போட வேண்டாம். களைப்பாறு. உனக்கு ஏதேனும் சாப்பிடச் செய்து கொடுக்கிறேன். பின்பு பேசலாம்'' என்றாள். வைணவனும் அந்தக் குளத்துக்குச் சென்று குளித்து பூஜைகளை முடித்து வந்தான். உடலில் நாமங்களைப் போட்டு விட்டு நாமக்கட்டியை உடையில் சுற்றிவைக்க நினைத்தவன், பின்பு ஏதோ தோன்றக் குளத்தங்கரையில் வைத்தான்.



தன் காரியம் ஜயமாகிவிடும் என்ற நம்பிக்கை அவனுக்கு முழுதாய் இருந்தது. அப்படி இல்லாவிட்டாலும் ரவிதாசன் பாண்டிய மணிமகுடத்தைப் பற்றிய செய்தியைக் கேள்விப்பட்டவுடன் இங்கு விரைவான். அவன் கழுகுக் கண்களுக்கு இந்த நாமக்கட்டி தப்பிக்காது. அதனால் அவனுக்கு நந்தினியின் மீது சந்தேகம் வரும். எப்படியிருந்தாலும் தன் செயல் இது என்று எதிரி புரிந்து கொள்ளவேண்டும். 'காட்டில் என்னைக் கட்டியா போடுகிறீர்கள்? நான்தானடா உங்கள் போராட்டத்துக்கு யமன்!' என்று அதைத் தரையில் வைக்குமுன் முணுமுணுத்தான்.

அடியான் பூஜை முடித்து வருவதற்குள் அந்தி சாய்ந்து விட்டது. மலையுச்சியில் இடைவெளியாய் இருந்த ஓரிடத்தில் அமர்ந்தனர்.

''அண்ணா! என்னைப் பார்க்க இப்போதாவது வந்தாயே. என் தாய் என்னை அனாதையாய் விட்டுச் சென்றபோது, என்னை ஒரு குறையும் இன்றி வளர்த்தாயே. உனக்கு நன்றி செலுத்தாமல் போய்ச் சேர்ந்துவிடுவேனோ என்று பயமெனக்கு'' என்றாள் நந்தினி.

''நந்தினி. நான் வந்ததும் வராததுமாய், ஏன் சாவைப் பற்றிப் பேசுகிறாய்?''

''ஏன் அண்ணா சாவைக் குறித்து நாம் பயப்பட வேண்டும்? என்றைக்காவது ஒரு நாள் இந்த உலகத்தை விட்டு எல்லாரும் போக வேண்டியதுதானே. அண்ணா! ஆனால், எனக்கு என்ன பயம் தெரியுமா? நான் அனாதை. திக்கில்லாதவள். இவனையும் இப்படி விட்டுச் சென்று விடுவேனோ என்று பயம் வந்து விட்டது.''

அவள் நீட்டிய கையைத் தொடர்ந்து, அவன் கண்கள் சென்றன. அந்தச் சிறுவனைப் பார்த்தான் அடியான். 'ஆகா, இவன்தான் பள்ளிப்படையில் முடிசூட்டப்பட்ட பாண்டிய மகராஜாவா?' என்று வியந்தான்.

நந்தினி தொடர்ந்தாள்: ''உலகமாளப் பிறந்தவனை எப்படி வளர்க்கிறேன், பார்!'' என்று சொல்லிக், கலகலவென்று கண்ணீரைப் பொழிந்தாள். மொத்தத்தில் வாழ்க்கை நரக வாழ்க்கையாகிவிட்டது இருவருக்கும் என்று தெரிந்து கொண்டான் அடியான்.

''இவன் பிறந்த குலத்துக்கேற்ப இவனுக்கு ஓர் ஏற்பாடு செய்ய வேண்டியதுதானே ?'' என்றான் அடியான்

''அது இன்றைய நிலையில் எப்படியண்ணா சாத்தியம்?'' என்றாள் நந்தினி.

''நீயே அரசியல் சாதுர்யத்தில் கைதேர்ந்தவள். உனக்குத் தெரியாததா நந்தினி?'' என்றான் அடியான்

''இன்னும் நான் கற்றுக்கொள்ளப் பல விஷயங்களிருக்கின்றன, அண்ணா. நாம் ரொம்ப நல்லவர்கள் என்று எண்ணிக்கொண் டிருப்பவர்கள் பொல்லாதவர்களாகி விடுகிறார்கள். பொல்லாத வர்கள் என்று நினைத்தால் நல்லவர்களாகி விடுகிறார்கள்'' என்றாள். ''மும்மூர்த்திகளில் முதலாமானவரான பிரம்மா தலையில் எழுதியதை யார் மாற்றி எழுத முடியும்? ஆனால், நடந்து போன நாட்களெல்லாம் வேறு விதமாய் நடந்திருக்கக் கூடாதா என்று தினந்தோறும் தோன்றும். அதுவும் ஒரு கற்பனை, இனி எதிர்காலம் எப்படி நடக்க வேண்டும் என்று யோசிப்பதும் கற்பனையே. இப்படி நிகழ்காலத்தை அந்தக் கற்பனைப் பனி மூட்டம் மூடுகிறது, திடமாய் நிற்கும் மலையை மூடும் மேகக் கூட்டம் போல. இந்தக் கஷ்டமெல்லாம் என்னத்திற்காக, எப்போது முடியப் போகிறது என்று தெரியவில்லை. எல்லாம் என்னுடைய துரதிருஷ்டந்தான், அண்ணா!'' என்று ஒரே மூச்சில் கொட்டித் தீர்த்தாள்.

நந்தினி சில நொடிகளில் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''ஆனால், அண்ணா! எனக்கு ஆறுதல் சொல்ல நீ வரவில்லையென எனக்குத் தோன்றுகிறது. என்ன வேலையாய் வந்தாய்?''

''தங்காய்! உன்னைப் பார்க்க அண்ணன் வரக் கூடாதா?''

''ஐந்தாண்டுகளாக வந்தாயா? இல்லை, என்றாவது இப்பேர்ப் பட்ட மலையில் மூச்சிரைக்க ஏறி வந்திருக்கிறாயா? உண்மையைச் சொல். வேறென்னவோ நோக்கத்துக்காகத்தான் வந்திருக்கிறாய். நம்முடைய ராமாயணத்தை அப்புறம் வைத்துக் கொள்ளலாமே, இப்போது நீ வந்த வேலையைச் சொல்'' என்றாள்.

பெருமூச்சுடன் தொடங்கினான் அடியான். ''உன்னை மீண்டும் வைணவப் பிரசாரத்துக்கு அழைத்துச் செல்லத்தான் வந்தேன்'' என்றான்.

நந்தினி சிரித்தாள். ''உனக்கென்ன பைத்தியமா அண்ணா? என் கடமைச் சுமையைப் பற்றி அறியாதவனா நீ? ஆனால், ஒன்று அண்ணா. வைணவத்தைப் பரப்பி ஊர் ஊராய்ச் சென்று வந்தோமே. அந்தக் காலம் எவ்வளவு இனிமையானது. தினம் தினம் அதை நினைத்து ஆனந்திப்பேன்'' என்றாள். ''உண்மையைச் சொல்லப் போனால், இன்று கூடத் திரும்பிச் சென்று அந்த வாழ்க்கையைத் தொடரலாம் என்று ஆசை எழும்.''



''என் முடியாது நந்தினி?'' என்றான் அடியான். ''தங்காய் நீ படுகிற கஷ்டத்தை நினைத்தால் எனக்கு இதயம் வெடித்து விடும் போலிருக்கிறது. நீ நினைத்தால் மீண்டும் வைணவப் பிரசார வாழ்க்கையை மேற்கொள்ளலாம். இந்தச் சிறுவனை மீண்டும் அரசாள வைத்து விட்டால் நீ வைணவ சேவைக்கு வருகிறாயா?'' என்றான். அவள் சற்றும் எதிர்பாராதபோது வந்த விஷயத்தைப் போட்டு உடைத்து விட்டான்.

''என்ன அண்ணா, கட்சி மாறுகிறாயா? நம்ப முடியவில்லை.''

''இல்லையம்மா. இந்தச் சிறுவனுக்கு முடிசூட்டி மதுரைக்கு விடுதலையான தேசம் என்ற அந்தஸ்தைக் கொடுக்கச் சோழர்கள் சித்தமாயிருக்கிறார்கள்.''

நந்தினியின் முகத்தில் ஒரு மாறுதல் காணப்பட்டது. அவள் முகம் சட்டென்று சுருங்கிற்று. பெரிய சந்தேகப்பிராணி ஆயிற்றே!

''அதற்குப் பதிலாக என்ன எதிர்பார்க்கிறான், சோழன்?''

''வெளிப்படையாக ஏதுமில்லை. மற்ற சிற்றசர்கள் கொடுக்கும் திறையை நீரும் செலுத்தும்படி நேரும்.''

''ஆகா, அதைத்தானே பார்த்தேன். சும்மா ஆடாதே சோழியன் குடுமி!'' என்றாள் நந்தினி.

அடியானுக்குக் கோபம் வந்தது. ''உனக்கென்ன புத்தி தடுமாறி விட்டதா, நந்தினி? சிறு பிள்ளை போல் பேசுகிறாய். இந்த நிலையில் பாண்டியர் போராட்டம் தொடர்ந்தால் இனி ஓராயிர மாண்டுகள் மதுரை வானில் மீன் கொடி பறக்க வாய்ப்பில்லை.''

பின்பு சற்று யோசித்துவிட்டு, ''ஒரு வேளை கடம்பூரில் கரிகால னைக் கொன்ற நாளன்று நீர் திட்டமிட்டது போலத் தஞ்சையில் சுந்தரச் சோழரும், திருவாரூரில் பொன்னியின் செல்வரும் மரண மடைந்திருந்தால் கயல் கொண்ட கொடி மதுரை வானில் பறந்திருக்கும். ஆனால், இனி அதற்கு வாய்ப்பில்லை. மதுரையே இன்று அவன் கையில். அவன் உம்முடன் எந்த ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டாலும் அவனுக்கு நஷ்டம்தான்'' என்றான்.

''சோழன் எங்கள் நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டான். அவன் தயவு எங்களுக்கு எதற்கு?'' நந்தினியும் சீறினாள்.

''தயவல்ல. அரசியல் சாதுர்யம் என்று வைத்துக் கொள். இதனால் பாண்டிய நாட்டுக்கும் நல்லது. சோழருக்கும் நல்லது. மொத்தத்தில் தமிழ்ச் சமுதாயத்துக்கே நல்ல திட்டமிது!'' என்று எடுத்துக் கூறினான் அடியான். ''நந்தினி! நிதானமாக நினைத்துப்

பார். பாண்டிய வம்சத்தைச் சோழன் வேரோடு அழிக்க நினைக்க வில்லை.''

''ஆனால், அடிமைச் சிற்றரசராய் வாழ் என்று கேட்கிறான், சோழன்.''

''அவன் கேட்க வேண்டிய அவசியமே இல்லை என்பதைப் புரிந்து கொள். சிற்றரசன் என்றால் என்ன உனக்கு அவ்வளவு இளக்காரமா? சோழர் இருக்கவில்லையா நானூறு ஆண்டு களுக்குச் சிற்றசராய். அக்கினி தேவனுக்கு இரையானது கடம்பூர். இன்று பார், சிற்றரசன் சம்புவராயன் எழுந்து நிற்கவில்லையா?''

''எனக்கு ஒன்றும் புரியவில்லை, அண்ணா'' என்றாள் நந்தினி. உண்மையில் அவள் குழம்பிப் போயிருந்தாள்.

குரலைத் தாழ்த்திச் சிறுபிள்ளைக்கு எடுத்துச் சொல்வது போலச் சொன்னான் அடியான். ''விதி விட்ட வழியாகக் காட்டில் வாழ்ந்து மாண்டு போய் அனாதைப் பிணமாய் இருந்தாலும் இருப்போம் என்கிறாய். ஆனால், திறை செலுத்தும் சிற்றசர் பதவி உமக்கு வேண்டாம் அல்லவா? மதுரை உமதாகவேண்டும் என்ற வெறி இருக்கிறது. போராட்டம் என்று மேலே ஏறி உட்கார்ந்து விட்டீர்கள். சற்று இறங்கித்தான் வாருங்களேன்'' என்றான் அடியான். பின்பு வானை நோக்கி, ''எம்பெருமானே! இந்தப் பாண்டிய குலத்தை மட்டும் ஏன் பொறுமையில்லாமல் படைத்து விட்டாய்?'' என்று முறையிட்டான்.

''அவனைத்தான் போய்க் கேட்கவேண்டும்'' என்றாள் நந்தினி புன்னகைத்துவிட்டு.

அவளுக்கு முடிவெடுக்கும் அளவுக்கு விஷயம் புரியவில்லை. ''அண்ணா! என் போராட்டத்தைக் கைவிடச் சொல்கிறயா? சோழரிடம் சென்று மண்டியிட்டுப் புலம்பச் சொல்கிறாயா?''

அடியானுக்குப் புரிந்தது. அவள் மறந்தாலும் அவள் உடம்பில் ஓடும் இரத்தம் அவளை மறக்க விடுவதில்லை. மீனாட்சியும், வரகுணனும், மங்கையர்க்கரசியும் அவளுடைய இரத்தத்திலேயும், சதையிலேயும், எலும்பிலேயும் கலந்திருந்தார்கள்.

ஆனால், அவளுக்கு இந்தத் திட்டத்தில் ஓர் ஆர்வம் பிறந்து விட்டது. ''அண்ணா! என் நலனில் நாட்டம் கொண்டவன் நீ. சோழன் ஏன் இறங்கி வருகிறான் என்று எனக்குச் சொல்'' என்றாள்.

அடியான் விளக்கினான். ''உமது நோக்கத்தில் இதுவரை வளர்ச்சி ஒன்றுமில்லை. சோழரின் அடித்தளம் மிகவும்



ஆழமானது. அகன்று விரிந்தது. அதை உங்களால் ஆட்டி அசைக்க முடியுமா என்று யோசித்துப் பார்த்திருக்க வேண்டாமா? இன்னும் பலவாண்டுகள் ஆட்சி செய்தால் சோழர்களின் வலிமை நூறு மடங்கு பெருகி விடும். அதற்குப் பின் அவனை நீர் ஒன்றும் செய்ய முடியாது. அதற்குள் உமது பலமும் குறையும். ஆனால், சோழர் இப்போது தமிழக நிம்மதியை வேண்டித் தனி நாட்டைக் கொடுக்க விரும்புகிறார்கள் என்று நினைக்கிறேன்'' என்றான்.

பேசியதுதான் அவன். ஆனால், அவன் சொல் ஒவ்வொன்றும் அநிருத்தர் பேசும் சொல் போலவே இருந்தது அவளுக்கு.

''விடுதலைப் போராட்டத்தைப் பரிதவிக்க விட்டுத் தனியாய் வரச் சொல்கிறீர்கள். என்னால் முடியாது, அண்ணா.''

''அது உன் இஷ்டம், தங்காய். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் உன் உசிதம் போலச் செய். ஆனால், சந்தர்ப்பம் எந்த வழியிலும் வரும். எந்தக் கதவையும் தட்டும். ஆனால், வரும்போது அதைக் கைப்பற்றத் தயாராயிருக்க வேண்டும். நீ தயாரா?''

''என்னை என்ன செய்யச் சொல்கிறாய், அண்ணா?''

''சோழர்களை வென்று பாண்டிய நாட்டை ஆள்வதைக் காட்டிலும் அவர்களைச் சிநேகமாக வைத்துக் கொள்வதுதான் உனக்கு அனுகூலம். தங்காய், உலகத்தில் எதுவும் நிரந்தரமில்லை. இன்றைக்குப் பட்டம் பதவியில் இருப்பவர்கள் நாளைக்கும் இருப்பார்கள் என்று எண்ணவோ திடமில்லையே!''

அவளுக்குத் தூபம் போட்டான். ''இன்று மதுரையை மட்டும் பிடித்துக் கொள். உன் சந்ததியர் பின்னர் பார்த்துக் கொள்ளட்டும்'' என்றான். ''இன்று உனக்கெனக் கிடைப்பது கையளவே நாடென்றா லும் அது பாண்டிய நாடல்லவா? அது உன் அதிகாரத்துக்கு உட்படுமென்று நீ கனவிலே கூட இதுவரை எண்ணியிருக்க முடியாது'' என்றான்.

ஆனால், வேறு கவலை தரக் கூடிய விஷயம் நந்தினியிடம் இருந்தது. ''சேர்ந்தே போராடினோம். இப்போது பிரிந்து போராடுகிறோம். ஆனால், நான் மட்டும் ஆட்சியைப் பிடித்தால் மக்கள் ஏற்றுக் கொள்வார்களா?''

''ஏற்றுக் கொள்ளும் பொருள் ஒன்று இருக்கிறது.''

''என்ன அண்ணா, மூடு மந்திரமாய்ப் பேசுகிறாய்?''

''சோழர் கையில் ஒரு பொருள் அகப்பட்டுள்ளது.''

''என்ன?''

''அது உன்னுடையதுதான்.''

சிரித்தாள் நந்தினி ''என்னுடையதா. எனக்கென்று பொருள் சேர்க்க வேண்டுமென்று எண்ணியிருந்தால், இந்தப் பரத கண்டத்தில் பாதி என்னுடையதாய் இருக்கும். நான் ஒன்றும் இல்லாத பரதேசி. எனினும் ஆவலைத் தூண்டிவிட்டாய். அது என்ன பொருள்?''

''பாண்டியரின் புராதனக் கிரீடமும், ரத்தின ஹாரமும் கிடைத்து விட்டன!''

'ஆகா! தஞ்சைக்கு அடியிலிருந்த பாதாள அறையில் அதைக் கண்டு பிடித்து விட்டார்கள் போல' என்று நினைத்துக் கொண்டாள், நந்தினி.

''அதை என்ன செய்யப் போகிறார்கள்?''

''உன்னிடம் கொடுக்கப் போகிறார்கள்.''

சிரித்தாள். ''தப்பாக ஈழம் சென்று தேடி உயிரைத் தொலைத்தவர் எத்தனை சோழர்! அதையெல்லாம் மறந்து விட்டு என்னிடம் ஒப்படைப்பதா?''

''அவை எங்கேயிருந்தனவென்று உனக்கு ஏற்கெனவே தெரியுமா?'' என்று வியந்தான் அடியான். குகைக்குள் அண்ணனைக் கூட்டிச்சென்று சுவர்மீது இருந்த படத்தையும் அந்தக் கிரீடத்தின் அருகே வீரபாண்டியன் கிறுக்கியிருந்ததையும் காட்டினாள். அந்த படத்தைப் பார்த்தவுடன் அதே அரசவையில் அந்தச் சிறுவனைக் கற்பனை செய்து கொண்டாள். பின் ஒரு முடிவுக்குள் வந்தாள்.

''அண்ணா! என் மனதை மாற்றி விட்டாய். நீ நல்லவன்தான். எனினும் உனக்குச் சோழ நாட்டில் அவ்வளவு அதிகாரம் இருக்கிறதா என்று எனக்குத் தெரியவில்லை. உன்னை விட மேல் அதிகாரத்திலிருந்து எனக்கு உத்தரவாதம் வர வேண்டும்'' என்றாள்

''ஆம், தங்காய். நீ பாண்டி மாதேவி, நான் வெறும் ஒற்றன் தானே. பரவாயில்லை. சோழ நாட்டுப் பிரதமர் சொன்னால் போதுமா? உத்தரவு கொடுத்தால் போதுமா?''

''போதும். ஆனால், அவரைக் காண நான் தஞ்சைக்கு வர மாட்டேன்'' என்றாள்.

''நீ வர வேண்டாம். அவர் உன்னைக் காண வரட்டும்.''

''எப்போது வருவார்?''

''நேற்று.''

''நாளை என்று சொல்கிறாயா?''



''இல்லை, நேற்றே மலையடிவாரத்தில் வந்து தண்டு இறக்கி விட்டார்'' என்று சொல்லி அவள் முகத்தின் ஆச்சரியத்தைக் கண்டு ரசித்தான், அடியான்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று நான்கு

## பிரதமரின் போராட்டம்

இரவெல்லாம் அரசியல் பேசியதில் நேரம் சென்றதே தெரியவில்லை அண்ணனுக்கும் தங்கைக்கும். கடைசியாகத்தான் அடியான் அநிருத்தர் மலையடிவாரத்தில் நந்தினியைக் காணக் காத்திருக்கிறார் என்று சொன்னான். அந்தச் சமயத்தில் சரியாகப் பொழுதும் விடிந்தது. மலையின் பின்னிருந்து சூரியன் எட்டிப் பார்த்தான்.

தனக்காக ஓர் இரவு பேய் சூழ்ந்த சேலூர்ப் போர்க்களத்தில் காத்திருந்தார் கிழவர் என்றவுடன் நந்தினிக்குச் சிரிப்பே வந்தது. அடியானின் மேல் கோபமும் வந்தது. பிரதமர் அவளுக்காக இரவெல்லாம் மலையடிவாரத்தில் காத்திருக்கிறாரென்று சொன்னவுடன், நந்தினி சற்றும் எதிர்பாராத விதமாகப் பேசினாள். ''அடப்பாவி பிராமணா! மனதில் சற்றும் ஈவிரக்கமின்றி அந்தக் கிழவரைச் சேலூர்ப் போர்க்களத்தில் விட்டு வந்தாயா? நல்ல சிஷ்யன் அப்பா நீ! வா, சீக்கிரம் சென்று அவர் கதியை என்னவென்று பார்ப்போம்'' என்றாள்.

''சேலூரைப் பற்றி எல்லாரும் சொல்வதெல்லாம் நிஜமா, நந்தினி?'' என்று வினவிய அடியானின் குரலில் அளவிலாத பீதி தொனித்தது. உடலும் நடுங்கிற்று ''ஆகா, குருநாதரின் நிலை என்னவாயிருக்குமோ?''

''எல்லாம் உண்மைதான். அதில் சந்தேகம் என்ன? என்ன காரியம் செய்தாய்? சேலூரில் கிழவரை இரவைக் கழிக்க விட்டாயே. அங்கு அற்பாயுளில் மாண்டவர்கள் ஆவி உயிரோடிருப்பவர்களை வந்து சுற்றுமென்று தெரியாதா? நானே இரவுக்குள் மலையேறி விடுவேன்'' என்றாள்.

இருவருமாய் மலையிலிருந்து அவசர அவசரமாய் இறங்கினார்கள். பிரதமர் அநிருத்தர் மேல் நந்தினிக்குத் தனி மதிப்பு. அவர் சந்நிதானத்தில் இருக்க ஆயிரம் பேர் விரும்புவார்கள் என்று

அவளுக்குத் தெரியும். அவரே இவளைத் தேடி வந்துவிட்டார். "இப்படி இந்தப் பெரியவரே கிளம்பி வருவதின் நோக்கம்தான் என்ன? தன்னை மனம் மாற்றவா?" என்று வியந்தாள்.

ஏதோ விசித்திரமான கனவு காண்கிறோம் என்று எண்ணிக் கொண்டு மலையின் கீழ் இறங்கினாள். மலை அடிவாரத்தில் ஒருவர் மட்டும் இரவில் படுக்கும் அளவுக்குக் கூடாரம் அமைக்கப் பெற்றிருந்தது. நல்ல வேளை, ஒரு தனி மனிதர் வெளியே நின்று எழுகின்ற சூரியனை நமஸ்காரம் செய்து கொண்டிருந்தார்.

குருநாதரை அடியானும் பார்த்து விட்டான். தஞ்சையிலிருந்து கிளம்பும் முன், "குருநாதா! நீர் வர வேண்டாம்" என்று எவ்வளவோ வற்புறுத்திப் பார்த்தான் அடியான். 'இல்லை'யென்று வந்தார்.

அவரோ, "திருமலை, உன்னைக் கூட்டி வந்த முக்கியக் காரணம் நந்தினியின் மேல் நீ வைத்திருந்த உண்மை அன்பு. அவளை வளர்த்த பாசம். அவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைத்துக் கொடுத்தால்தான் உன் மனம் நிம்மதி அடையும் என்று அவளுக்கு நன்றாய்த் தெரியும். அதனால் நீ சொல்வதைக் காது கொடுத்துக் கேட்பாளென்று எனக்குத் தெரியும். ஆனால், சோழர்கள் சென்றதையெல்லாம் மறந்துவிடத் தயாராயிருப்பதாக அவள் புரிந்து கொள்ளவேண்டும். அதற்கு நான் வந்தால்தான் அவளுக்கு நம்பிக்கை வரும்" என்றார்.

அது போலவே, இதில் ஏதோ வஞ்சகச் சூழ்ச்சி இருக்க வேண்டு மென்று கூட நினைத்தவளுக்கு பிரதமரைப் பார்த்தபின் நம்பிக்கை பிறந்தது. அடியான் வெறும் ஆழம் பார்க்கத்தான் வந்திருக்கிறா னென்று நந்தினி இரவு கணக்கிட்டாள். இப்போது திருமலை இரவு சொன்னதெல்லாம் உண்மைதான் என்று புரிந்துகொண்டாள்.

"அவள் ஒருத்தி மட்டும் சம்மதித்தால் போதாது. ரவிதாசனும் அவன் கட்சியும் இந்த அமைப்பை எதிர்த்தால் என்ன ஆகும்? தேசமெல்லாம் பெருங்குழப்பமாகி விடும். அதை நினைத்து அவள் பயப்படுவாளல்லவா?" என்று பிரதமரிடம் வினவினான் அடியான் கிளம்புமுன்.

"ரவிதாசனின் பலத்தைக் குறைப்பதற்குத்தான் இந்தக் கிரீடம் எனக்குத் தேவையாயிருக்கிறது. அது என்னிடமிருக்கிறது என்று தெரிந்தவுடன் அவள் நம்முடன் வரச் சம்மதிப்பாள்" என்றார் கிழவர் உறுதியாக.



"அவரது யுக்தி இவ்வளவு நன்றாகப் பலிக்கும் என்று நாம் கூட எதிர்பார்க்கவில்லையே!" என்று நினைத்துக் கொண்டான் அடியான்.

உண்மையில் இரவில் பிரதமர் படாத பாடு பட்டிருந்தார். இருட்டியவுடன் தூங்கப் பிரயத்தனம் செய்தார் பிரதமர். அர்த்த ராத்திரியில் திடீரென்று தூக்கத்திலிருந்து எழுந்து உட்கார்ந்து விட்டார். ஏதோ வெளியே ஒரே காற்றும் புயலும் அடிப்பது போல ஒருணர்வு. பயங்கரமான சத்தங்கள் உருவெடுத்தன. குதிரைகளும் அமைதியாய் இல்லை. கனைத்தன. கயிற்றை அறுத்துக் கொண்டு தலைதெறிக்க ஓட நினைத்தன.

ஆனால், அவர் வெளியே எட்டிப் பார்த்தாலோ மயான அமைதி. இரவே மிகப் பயங்கரமாயிருந்தது. வாயில்லா ஜீவன்கள் அந்த இரண்டு குதிரைகளும் மிரண்டு போய் அவரைப் பார்த்தன. குதிரைகள் பயந்து போயிருந்தன என்று அறிந்த அவர், வெளியே சென்று அவற்றைத் தடவிக் கொடுத்துவிட்டுக் கூடாரத்துக்குள் வந்தார்.

காரணத்தை ஒருவாறு யூகித்த அநிருத்தர் அதிகம் சலனமடைய வில்லை. மலைக்கு அப்பால் நெடுந்தூரம் பரந்து கிடந்த இட மெல்லாம் கோரமான போர் ஒரு காலத்தில் நடந்திருந்தது.

வேறு மனிதன் என்றால் தைரியம் குலைந்து போயிருக்கும். ஆனால், எந்த துஷ்ட ஜீவனாயிருந்தாலும் தன்னை ஒன்றும் செய்ய முடியாது என்று அவருக்குத் தெரியும். தான் செய்த பூஜாபலம் மிக அதிகம். இந்தத் துயரமும் வெகு நேரமில்லை என்று தெரியும் அவருக்கு. பொழுது விடிந்தவுடன் துஷ்டஜீவன்களெல்லாம் பெட்டியைக் கட்டிகொண்டு, பாயைச் சுருட்டிக் கொண்டு போக வேண்டியதுதான்.

இரண்டாம் முறை படுத்த பிறகு வெகு நேரம் பெரியவருக்குத் தூக்கம் வரவில்லை. ஏதேதோ சப்தங்களினால் அவருடைய உள்ளம் வெகுவாகக் குழம்பிக் கொண்டிருந்தது. நாலாம் ஜாமத் தின் ஆரம்பத்திலேதான் தூங்கினார். உறக்கமெல்லாம் கெட்ட கெட்ட கனவுகள் வந்து ஆக்கிரமித்தன.

கடைசியாகப் பொழுது விடிந்தது. படுக்கையை விட்டு எழுந்து வெளியே வந்தார். அமைதியாய் இருந்தது. இரண்டு குதிரைகளும் பட்டிருந்த கஷ்டங்கள் கண்களுக்குப் புலப்பட்டன. இரவில் இரண்டும் தப்பிக்கப் பெரியதொரு முயற்சி செய்திருக்க வேண்டும். அவற்றின் குளம்படிகள் சுற்றிய இடமெல்லாம் பள்ளமாய் இருந்தது.

பொழுது விடிந்தவுடன் அநிருத்தருக்கு இருப்புக் கொள்ள வில்லை. அவ்வப்போது மலைக்கு மேலே பார்த்தார். ஐயத் துடனேயே காத்திருந்தார். ஆனால், பயந்தது முட்டாள் தனம். சென்றது திருமலை அல்லவா? கையில் தடியுடன் ஒரு மனிதன் முன்னால் வர, அவனைத் தொடர்ந்து ஒரு பெண் கீழறங்கி வருகிறாள் என்பதைக் கண்டார். எதிர்பார்த்தது வீண் போக வில்லை. மேலே ஒருவனாய்ச் சென்றவன் இருவராய் வந்தார்கள். மூவராய் வந்தால் அடியானே காரியத்தை முடித்துவிட்டான் என்று யூகிக்கலாம். அவரது நரைத்த புருவங்கள் நன்றாய் நெரிந்தன. பேச்சுவார்த்தை இன்னும் முடியவில்லையென யூகித்தார். இருவ ராய் வந்ததால் தானும் நந்தினியுடன் பேச வேண்டியிருக்கு மென்று தெரிந்து கொண்டார். அதற்கு ஆயத்தமானார்.

தான் சேலூருக்கு வந்ததுதான் சரி என்று புரிந்தது. பாண்டியர்கள் விடாப்பிடியாகப் போராடுவார்கள் என்று நந்தினியின் நிலையைக் கண்டு தெரிந்து கொண்டார். பாண்டியர் குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதில் இவர்கள் எவ்வளவு துடிப்புடன் இருக்கிறார்கள் என்றும் வியந்தார். பிராணத்தியாகம் செய்யத் தயாராயிருந்தனர். பேய்கள் சூழ்ந்த மலைக் குகையில் வாழச் சம்மதித்தனர். ஆனால், பாவம்! சுதந்திர நாட்டை நிர்மாணிக்க வழி வகை தெரியவில்லை. பல காரணங்களினால் உத்தேசித்த காரியத்தை நிறைவேற்ற முடியவில்லை.

மலையிலிருந்து மெல்ல அடியான் கீழிறங்கி வந்தான். அவன் பின்னால் ஒரு பெண் உருவம் வந்தது. பிரதமரின் கண்பார்வை மங்கிவிட்டது. கிட்டே வந்தவுடன் தான் அவர் மனதில் கற்பனை செய்து வைத்திருந்த எழில் நிறைந்த நந்தினி இவளல்ல எனத் தெரிந்து கொண்டார். நளினத்துக்கு நந்தினி என்று ஒரு காலத்தில் சொல்லப்படும். பிரதமர் சற்று நேரம் நந்தினியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். முதலில் முகம் சுருங்கிற்று. தலைவிரி கோலமாய் மலையின் கீழிறங்கி ஊமை நாச்சியார் வருகிறார் என்பதே அவர் முதல் எண்ணம். 'இது என்ன? கனவா இல்லை மாயஜாலமா?' என்று முதலில் வியந்தார்.

அவளை வேறு விதமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த பிரதமர் அசந்தே போனார். 'அந்த அழகியா இது? அடையாளம் கூடத் தெரியவில்லையே? அழகு எவ்வளவு நிரந்தரமற்றது' என்றும் தெரிந்தது. 'மூப்பு இவளையும் ஆக்கிரமித்துவிட்டது' எனப் புரிந்தது.



பாம்பாட்டியின் மகுடி வாத்தியத்திலே மயங்கிப் படமெடுத் தாடும் சர்ப்பத்தைப் போல், அவள் சொற்களுக்கு அந்தச் சோழ நாடே ஒரு காலத்தில் ஆடியது. நந்தினியின் முகத்தில் முன் போல மோகனப் புன்னகை தவழக் காணமுடியுமா? அந்தப் புன்னகை யில் சொக்கிப் போன ஆண்கள்தான் எத்தனைபேர்! அழகும் அறிவும் கொண்ட பெண்மணி எப்படியெல்லாம் தனக்கென ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருக்க முடியும்! ஆனால், சீரழிந்து போனது, இவள் வாழ்க்கை.

அவள் நடந்து கொண்ட தோரணை இயற்கை அவளுக்குக் கொடுத்திருந்த வனப்புக்கு அதிக மெருகூட்டியது. இந்த இரண்டும் கூடிய போது பார்க்கும் ஆண்களுக்கெல்லாம் அவளைத் தங்களுக்கே உரியவளாக்கிவிட வேண்டுமென்ற வெறி வந்தது. ஆனால், அவளைக் கண்டால் ஒரு வகை அச்சமும் அவர்களுக்கு வந்ததனால் சற்று மரியாதையுடன் தள்ளியே இருந்தனர். அவளை நெருங்கிக் காதலைச் சொல்லக் கூடியவர் இருவர்தாம். ஒருவர், ஆதித்த கரிகாலன். மற்றும் ஒருவர் பெரிய பழுவேட்டரையர். போர்க்களங்களில் பாதி வாழ்க்கையைக் கழித்தவர்களுக்கே அவளை நெருங்கிக் காதலைச் சொல்லும் தைரியம் வரும் என்பது போல. ஆனால், அவர்களையும் பம்பரமாய்ச் சுழலவிட்டு வேடிக்கை பார்த்தது அவள் மோகனம்.

'இவள் நிலையை நினைத்தால் எதிரியின் சபையில் இருக்கும் நமக்கே கொஞ்சங்கூடச் சகிக்கவில்லை. வாழ்க்கையில் உயர்ந் திருந்தவர் தாழ்ந்தால் எதிரிக்குக் கூட மனதில் வேதனை ஏற்படும். இந்த அபலைப் பெண்ணை இப்படிக் காண நேர்ந்ததே!' என்று வருந்தப்பட்டார். ஆனால், அனுதாபப்படுவது அவளுக்குப் பிடிக் காது என்று பிரதமருக்குத் தெரியும்.

''நந்தினியாரே! நீர்தானா?'' என்றார் தனது ஆச்சரியத்தைச் சமாளிக்க ''கண் பார்வை துல்லியமாக இல்லை. வயதாகி விட்ட தல்லவா?'' என்றார்

தன்னைப் பார்த்துப் பரிதாபம் கொள்கிறார் பெரியவர் என்று நந்தினி தெரிந்து கொண்டாள். அவள் தோற்றம் அவரை அதிர்ச்சி யடையச் செய்திருந்தது கண்கூடாக அவளுக்குத் தெரிந்திருந்தது.

''ஐயனே! நான் நானேதான். வருக! வருக! தங்கள் வரவு நல்வரவாகுக'' என்றாள்

''நந்தினி தேவியாரே, வயதாகி விட்டது. இல்லையென்றால் மலையேறி வந்திருப்பேன், உம் வாசஸ்தலத்துக்கு'' என்றார்.

''ஐயோ அந்தப் பாவத்துக்கெல்லாம் நான் ஆளாக விரும்பவில்லை. நீர் வந்ததையே தமையன் சற்று நேரத்திற்கு முன்புதான் சொன்னார். அதுதான் தாமதம்'' என்றாள். ''இரவை எப்படிக் கழித்தீர்கள்? சமீப காலங்களில் சேவூரில் இரவைக் கழித்துக் காலையில் ஆரோக்கியத்துடன் எழுந்த முதல் நபர் நீர்தான்!'' என்றாள்.

''தாயே! நான் பிறந்து வளர்ந்த அன்பில் எனும் ஊரில் இரு கோயில்கள். பெருமாளும் உண்டு, சிவனும் உண்டு. இரண்டுக்கும் முறையே ஆழ்வார்களும் நாயன்மார்களும் வந்து பாடியிருக்கிறார்கள். அவ்விரண்டு கோயில்களுக்கும் நினைவு தெரிந்த நாளிலிருந்து சென்று வந்தேன். அதனால் எந்த வித ஆபத்தும் எனக்கு வந்துவிடாது'' என்றார் பிரதமர் பிரம்மராயர்.

பிரதமர் அடியானைப் பார்த்தார். அவன் முகத்தில் பெரிய காரியத்தைச் சாதித்த பெருமை ஒளிவிட்டது. நந்தினி கீழே இறங்கி வரச் சம்மதித்துவிட்டாள். மலையிலிருந்து மட்டுமல்ல. அவளது பிடிவாதத்திலிருந்தும் கூட இறங்கி வரச் சம்மதித்துவிட்டாள் என்ற மகிழ்ச்சி.

ஆனால், இன்னமும் பிரதமருக்குச் சந்தேகம். நந்தினி என்ன சொல்லப் போகிறாள்? முடிவுடன்தான் கீழறங்கி வந்திருக்கிறாளா? இல்லை, நலம் விசாரிக்க வந்துவிட்டு நாளை இருப்பிடத்தை மாற்றிவிடுவாளோ?''

அடியான் மலை மேல் போகும் போதே, ''அதிகம் பேசாதே, திருமலை. வீண் விவாதமும் செய்யாதே!'' என்று சொல்லி அனுப்பினார். நந்தினியின் மறுப்பை உறுதிப்படுத்திவிட அவர் விரும்பவில்லை. அவள் கண்டிப்பாக முடியாது என்று சொல்லிவிட்டால்...?

''என்னைப் பற்றி இவ்வளவு தூரம் ஞாபகம் வைத்துக் கொண்டு, வந்ததற்கு வந்தனம்'' என்றாள் நந்தினி. ''ஆனால், பெரியவர் நீங்கள் என்னைத் தேடி இவ்வளவு தூரம் வரக் காரணம்...?'' என்று மீண்டும் இழுத்தாள். அடியான் சொன்னதை இவர் வாயால் கேட்க வேண்டுமென்று விருப்பப்படுகிறாளென்று தெரிந்து கொண்டார்.

தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''தாயே! தமிழினத்தின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு மதிப்பெல்லாம் நான் பார்க்கவில்லை. எதிரியாய் வரவில்லை. நண்பனாய் வந்தேன். அம்மா! உனக்கும் எனக்கும் என்ன? வெகு நாள் ஆசை. என் வாழ்வில் நடக்குமா என்றே தெரியவில்லை. ஆனால், இளம் சம்புவராயனது



அதிபுத்திசாலித்தனத்தால் பிற்காலத்துக்கென வைத்திருந்த யுக்திகளையெல்லாம் சற்று முன்பே செய்துவிட வேண்டியிருக்கிறது'' என்றார்.

தலை அசைத்தாள் நந்தினி.

''அம்மா! உன் அண்ணன் உன்னிடம் இரவு விளக்கியிருப்பானென்று நினைக்கிறேன். அதைப் பற்றி உன் கருத்தைத் தெரிவித்தால் நல்லது'' என்றார்.

நந்தினியும் நேராகக் காரியத்துக்கு வந்தாள். ''இவ்வளவு காலமாக இல்லாமல் இன்று ஏன் என்றுதான் கேட்கிறேன்?''

''உலகத்தின் இயல்பே மாறுதல்தானே. மாற்றத்தைத் தவிர நிரந்தரமானது ஏதுமில்லை. தாயே! எல்லாரும் மாறித்தான் ஆக வேண்டும். ஆனால், என் விஜயத்துக்கு முக்கியத் தூண்டுதல் சோழர்களிடம் பாண்டியரின் புராதனக் கிரீடம் கிடைத்துவிட்டது என்பதுதான்.''

கிரீடம் கிடைத்தவுடன் முதலில் நந்தினியைக் காட்டு வாசத்தை விட்டுத் தஞ்சைக்கு அழைத்து வரத் தீர்மானித்தார் பிரதமர். மற்றவர்கள் இதற்கு ஆட்சேபணைகள் சொல்லாமலில்லை. ''நம் வீட்டுப் பிள்ளைகள் உயிர்த் தியாகம் செய்து பாண்டிய நாட்டைப் பிடித்திருக்கிறார்கள். அதையே விட்டுக் கொடுக்க வேண்டுமா?'' என்றனர்.

''இன்னும் நம் வீட்டுப் பிள்ளைகள் தொடர்ந்து உயிர்த் தியாகம் செய்யாமலிருக்கத்தான் இது'' என்றார் அவர். ''பாண்டியர் போராட்டத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது.''

மற்றவர்களின் ஆட்சேபணைகளை ஏற்க மறுத்த அரசர், பெரியவரின் யோசனைக்கு முழு ஒத்துழைப்புக் கொடுத்தார்.

''தாயே! இதுவரை யார் செய்தது சரி, யார் செய்தது தவறு என்று விதண்டா வாதம் செய்ய நான் வரவில்லை. என் வயதில் நான் கழிக்க கூடியது இன்னும் சொற்பமே. அதில் இதுவும் ஒன்றாக இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். ஒருவரை ஒருவர் கொன்று மடிவதில் என்ன லாபமிருக்கிறது?'' என்றார், அநிருத்தர்.

''அமைதி வேண்டும். ஒரு சொட்டு இரத்தம் இதன் பேரில் இனிச் சிந்தச் சம்மதிக்கக்கூடாது. இந்த யுத்தத்துக்கு ஒரு முடிவு வேண்டும். அதற்காகச் சோழர் இப்போது என்ன விலை வேண்டுமானாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்'' என்று உறுதி அளித்தார்.

''என்ன விலை வேண்டுமானாலுமா?'' என்று வியந்தாள் நந்தினி.

''ஆம். சுதந்திரப் பாண்டிய நாட்டை அங்கீகரிப்பது உட்பட'' என்றார் அநிருத்தர். ''என்னுடைய யுக்தி பலித்தால் உமது ஆசைகள் நிறைவேறும், அம்மா. பாண்டிய நாடும் அதில் வாழும் ஜனங்களும் ஒரு துன்பமும் இன்றிச் செழித்து வாழட்டும்.''

நந்தினி ஆழ்ந்த யோசனையில் இறங்கினாள். ''குறுகிச் சிறுத்துப் போயிருந்தாலும் தனி நாடு தனி நாடுதான்.'' அவளால் வானளாவிய மதுரையின் மாடங்களில் கயல் கொடி பறப்பதைக் கற்பனை செய்து பார்க்க முடிந்தது. அதனால் குலத்தின் பழைய பெருமையை நிலை நாட்ட வாய்ப்புக் கிடைக்கும். 'போர்த் திறமையாலோ சூழ்ச்சியாலோ மதுரையைக் கைப்பற்ற முடியாதென்று கிழவர் சொல்லாமல் சொல்கிறார். அவர் அறிவுத் திறனை உலகமே மெச்சியது. நாமும் அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.'

'சோழக் குலத்தைப் பழிவாங்க எத்தனை கெடு வைத்திருந்தார்கள்! ஒவ்வொன்றிலும் அவர்கள் மீண்டு வரவில்லையா? வெறும் கர்சுவருடன் மோதி மோதித் தலையை உடைத்துக் கொள்வதைப் புத்திசாலித்தனம் என்று சொல்ல முடியுமா? இதற்கு நான் செவி கொடாமலிருந்தால் பாண்டியர் குலத்துக்கே நான் செய்யும் பெரும் துரோகம்' என்று முடிவெடுத்தாள்.

அவள் மனதைப் புரிந்து கொண்ட அநிருத்தர் சரியாக அந்த நொடியில் ''பாண்டியத் தாய்த் திருநாட்டில் உமக்குப் பிற்காலத்தில் வாழையடி வாழையாக ஆயிரங் காலத்துக்கு வரப்போகும் சந்ததிகளின் நலனைக் கருதியே முடிவுகளை நீர் செய்ய வேண்டியிருக்கிறது'' என்றார்.

''நான் உம்முடன் வந்தால் சில அனர்த்தங்கள் விளையக் கூடுமல்லவா?''

''எனக்கு ஒன்றும் விளங்கவில்லை'' என்றார் பிரதமர்.

''எதிரியுடன் கைகோக்கத் துணிந்து விட்டாள் நந்தினி என்று எதிர்காலத்தில் யாரும் அவதூறு சொல்லிவிடக் கூடாது.''

''உன்னை அரசியாக்கும் எண்ணமில்லையே, தாயே. அந்தச் சிறுவனையே பாண்டிய சாம்ராஜ்யத்தின் அரசனாக்க நினைக்கிறோம். நீ சில நாட்களுக்கு வெளியுலகுக்கே வர வேண்டாம்.''

''நான் வரச் சம்மதித்தேன் என்று வைத்துக்கொள்வோம். அடுத்த கட்ட நடவடிக்கை என்ன?'' ரவிதாசனின் ஆக்கிரத்திலிருந்து தன்னையும் அந்தச் சிறுவனையும் காத்துக் கொள்ள வேண்டுமென பயந்தாள் நந்தினி.



''மூடு பல்லக்கில் இரண்டு பக்கத்திலும் திரையிட்டுக் கொண்டு பிரயாணம் செய்து உம்மை அழைத்துச் சென்று விடுவோம். தஞ்சையில் உமக்கென ஒரு அரண்மனை ஒதுக்கப்படும். மழபாடியில் கும்பாபிஷேகம் செய்ய அரசர் ஏற்பாடு செய்திருக்கிறார். அது முடிந்தவுடன் சுதந்திரப் பாண்டிய நாடு உருவாகும்.''

''இன்னொரு ராஜாவுக்கோ சக்கரவர்த்திக்கோ கப்பம் செலுத்த முடியாது. சுதந்திர நாட்டுக்குத்தான் பாண்டியன் அரசனாயிருப்பான் என்றெல்லாம் பிடிவாதம் பிடிக்கும் நிலையில் நாங்கள் இல்லை. அதனால் இதற்கு ஒப்புக்கொள்ளும் நிர்பந்தம் எனக்கு. ஐயா! உம்மை நான் பரிபூரணமாக நம்புகிறேன். எங்களுக்கு நியாயமான ஏற்பாடு செய்வீரென்று நம்புகிறேன்'' என்றாள் நந்தினி

''நிச்சயமாக தாயே. உம் திருப்திக்கு நான் செயல்படுவேன்'' என்றார்.

''வாருங்கள், கிளம்புவோம். கூடிய சீக்கிரத்தில் மதுரையில் முடிசூட்டு விழா நடத்துவது பற்றியும் யோசனை செய்ய வேண்டும்'' என்றான், அதுவரை மௌனம் காத்த அடியான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று ஐந்து
## மலையின் மீது மர்மம் தீர்ந்தது

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். துல்லியமாய் யோசிப்பவனுக்குத் துரும்பும் துப்புத்தான். நாமக்கட்டி கிடைத்ததிலிருந்து [illegible] யாரென்று ரவிதாசன் கண்டு பிடித்து விட்டான். அவன் பின்னிருந்து செயல்பட்ட ராஜதந்திரி யாரென்றும் உறுதியாகத் தெரிந்து விட்டது.

யார் கண்ணிலும் பட்டுவிடக்கூடாதென்று வாழ்ந்தவள் எதிரியுடன் கைகோத்தாளோ என்ற மர்மத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறியவனுக்குப் பதில் கிடைத்தது.

சூரியன் மறைந்தவுடன், வானத்து நட்சத்திரங்கள் அதி பிரகாசமாக மலை மேல் ஒளிர்ந்தன. மயங்கிய அந்திமாலையின்

வெளிச்சத்தில் மலைக்குமேல் மனோரம்யமாக இருந்தது. ஆனால், அதை ரசிக்கும் நிலையில் மலைமேலிருந்த இருவருமேயில்லை.

காற்றெனப் பயணித்து மலைமேல் வந்தால் அந்த குகை காலியாயிருந்தது. ஏமாற்றம்தான், பெரும் ஏமாற்றம்.

"நமது உன்னதப் போராட்டத்தைச் சரித்திரம் பரிகசிக்கும்படி செய்துவிட்டாளே, நந்தினி. எப்படி ரவிதாசா? ஏன் அவள் மாறினாள்?" என்றான் பரமேசுவரன். "நான் என் வழியே செல்வேன். நீ உன்னிஷ்டம் போல் போகலாமென்று சொல்வதற்கு இது என்ன சாதாரணப் பிரயாணமா?" என்றான்.

"அவள் என்ன செய்வாள்? ஆண்டியை அரசனாக மாற்றலாம் அந்தப் பாண்டிய மணிமகுடத்தின் அசுர சக்தியால் என்று அவர்கள் எடுத்துச் சொல்லியிருப்பார்கள். அவர்களின் விருப்பத்தின்படி நடந்தால் பாண்டிய நாட்டுக்கு அளவான விடுதலை தருவதாகவும் சொல்லியிருப்பார்கள். பாதாள லோகத்திலிருந்து சொர்க்க லோகத்துக்குப் பதவி உயர்வா என்று பூரித்துப் போயிருப்பாள்" என்றான் ரவிதாசன்.

சோகத்துடன் இதைச் சொன்ன ரவிதாசனைப் பரமேசுவரன் உற்றுப்பார்த்தான். தீப்பிழம்பு போன்று எப்போதும் இருக்கும் கண்கள் இப்போது ஒளியிழந்து காணப்பட்டன. அவனது முறுக்கி விடப்பட்ட மீசை காடு போல் வளர்ந்திருந்த தாடியுடன் ஒன்றிப் போய்த் தன் வீரத்தை இப்போது வெளிக்காட்டவில்லை. இதில் ஆங்காங்கே நரைத்த முடி வேறு. யூகித்த செய்தியுடன் சேர்ந்து அவன் வயதை அது பன்மடங்கு உயர்த்தியது.

ரவிதாசன் புரிந்து கொண்டான். கிரீடம் சோழர் கையில் கிட்டியது உண்மைதான். கிரீடம் கிடைத்தவுடன் ஒரு நொடி கூடச் சோழன் தாமதிக்கவில்லை. அதி வேகத்தில் அநிருத்தன் தன் கைவரிசையைக் காட்டி விட்டான். இந்த மாதிரிச் சந்தர்ப்பம் அநிருத்தனுக்கு அவன் ஆயுளில் கிடைக்குமா, செயல்படுத்தாமல் விட்டுவிட?

பரமேசுவரன், "அவள் மட்டும் என் முன் கிடைத்தால் பெண் பாவத்தையும் பொருட்படுத்தாமல், கத்தி எடுக்க வேண்டிய அவசியமும் இல்லாமல், அவள் கழுத்தை நெறித்துக் கொன்று விடுவேன்!" என்று சபதம் செய்தான். "எல்லாப் பாண்டியப் போராளிகளுக்கும் இது பாடமாய் இருக்க வேண்டும்."

இப்படிப் பல நாழிகை நேரம் பரமேசுவரன் வீண் சபதங்கள் செய்து கொண்டிருந்தான்.அவன் பேசியதில் பல ரவிதாசன் காதில் விழவேயில்லை. விழுந்தவை எரிச்சலூட்டின. ரவிதாசனுக்கு



உண்டான அருவருப்பினால் மறுமொழி சொல்லாமலே இருந்து விட்டான்.

ரவிதாசன் மனம் எங்கெல்லாமோ சென்று சஞ்சரித்துக் கொண்டிருந்தது. எண்ணவோட்டத்தின் வேகமே அவனைப் பைத்தியம் பிடிக்க வைத்து விடும் போலிருந்தது. ஆனால், அந்த எண்ண ஓட்டத்தைத் தடை செய்ய அவன் விரும்பவில்லை. அதனால் பரமேசுவரன் அவ்வப்போது செய்த இந்த ஆவேசம் நிறைந்த சபதங்களில் குறுக்கிடவும் அவனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவன் வாயை அடைக்க முடிவெடுத்தான்.

"ஆமாம், ஆமாம்! விட்டால் உன் கண் பார்வையினாலேயே அவளைச் சுட்டெரித்து விடுவாய்!" என்றான் ரவிதாசன். பரமேசுவரன் மேல் அளவு கடந்த கோபம். எல்லாம் இவனால் வந்தது. பழுவூர்ப் பெண்ணைப் பாதுகாக்கத் தவறியவன் இவன். அதனால் தான் சோழர்களுக்குப் பாண்டியக் கிரீடமே கிடைத்தது. அதனால் தான் நந்தினி இன்று எதிரணியில் கைகோத்தபடி நிற்கிறாள்.

அதற்குப் பின்னும் பல யோசனைகள் சொல்ல வேண்டுமென்று பரமேசுவரனுக்குத் தோன்றியது. ஆனால், ரவிதாசனின் முகத்தையும் அதில் தெறித்த கோபத்தையும் பார்த்த பின் வார்த்தைகள் எல்லாம் வாய்க்குள்ளேயே அடங்கி விட்டன. முணுமுணுத்த படி குகை வாசலருகே சென்று அமர்ந்து கொண்டான். அவன் கண்களை ரவிதாசன் மேலிருந்து எடுக்காமல்.

இரவில் தூக்கம் வராமல் வெகு நேரம் பாறையின் மேல் அமர்ந்த ரவிதாசன், அசையக்கூட இல்லை. இருளில் பயமாக இருந்தது, பரமேசுவரனுக்கு. "சிலையாகி விட்டானா என்ன?" என்று கூடத் தோன்றியது.

பாவம், பரமேசுவரனும் என்ன செய்வான்? பழுவூர் இளவரசி ஓடிப் போனதும், வேண்டுமெனவே வீர வைணவன் எதிர்த் திசையில் ஓடினான். ஓடிச் சென்று அவனைப் பிடித்தனர் பாண்டியர். பிறகுதான் தெரிந்தது, அவன் வேண்டுமெனத்தான் பிடிபட்டான் என்று.

கட்டிப் போட்டனர். விசாரித்தனர். திசைத் திருப்ப வேண்டுமென்றே இருவரும் சென்றது என்று பொய்யான திசையைச் சொன்னான். அவன் சொன்ன திக்கிலெல்லாம் இரண்டு நாட்கள் தேடினார்கள். இரு நாட்களுக்கு உணவு இல்லாமல் அடியானைப் பட்டினி போட்டார்கள். அதில் மெலிந்து போனவன் இரவோடு இரவாகக் கட்டிலிருந்து நழுவித் தப்பி விட்டான். எல்லாம் விதி.

ரவிதாசன் இல்லாதபோது நடந்ததால் பழி தன் தலையில் விழுந்தது என்று நொந்துகொண்டான், பரமேசுவரன்.

மலை மேலிருந்த இருவருமே பழைய நினைவுகளுக்குப் போனார்கள். இருவரும் ஒருவருக்கொருவர் வார்த்தைகளைப் பரிமாறிக்கொள்ளாதது சூனியமான மலை இன்னமும் அதி சூனியமாகஆனது போல தெரிந்தது. குளிர் காற்று மட்டும் ஊளையிட்டுக்கொண்டு இங்குமங்குமாய் மலை மேல் திரிந்தது.

திடீரெனப் பாறையின் மேலிருந்து குதித்தான் ரவிதாசன். ''வா, கிளம்புவோம்'' என்றான். '' போகும் பாதை நெடியது.''

பரமேசுவரனுக்கு உடனே பயம் வந்தது. அஸ்தமித்த பின் போகும் இடமில்லை சேலூர். இருட்டிய பின் நிச்சயமாகக் கடக்கும் பாதை யில்லையது. ''இரவு இருந்து விட்டுப் போவோம், ரவிதாசா'' என்று வற்புறுத்தினான் பரமேசுவரன். ''இருட்டில் எப்படிக் கீழிறங்குவது. இன்றிரவு குகையில் படுதுறங்கிவிட்டுக் காலை புறப்படுவோம்'' என்று மன்றாடினான்.

நந்தினியெனும் அந்தத் துரோகி வாழ்ந்த குகையில் ஓரிரவு என்றாலும் படுக்க வெறுப்பாய் இருந்தது ரவிதாசனுக்கு. எனினும் அவனுக்கும் ஆற அமர யோசிக்க வேண்டுமெனத் தோன்றியது. காட்டுக்குச் சென்றுவிட்டால் முடியாது. அவனுக்கும் ஓய்வு தேவைப்பட்டது, மனது சோர்ந்து போயிருந்தது. பரமேசுவரனின் விருப்பத்துக்கு இணங்கினான்.

பரமேசுவரனுக்கு ஓர் ஆறுதல். உடனே கீழே இறங்க வேண்டு மென்று அடம் பிடிக்கவில்லை, ரவிதாசன். மீண்டும் போய்ப் பாறை மீது அமர்ந்து விட்டான்.

பாறையின் மேலமர்ந்த ரவிதாசன் தான் பாண்டிய நாட்டுக் காகத் தியாகப் பிரயாணம் தொடங்கியதிலிருந்து நிகழ்ந்த சம்பவங் களையெல்லாம் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தான். அலை மோதிய சந்தர்ப்பங்களில் களைத்துப் போகாமல் போராடிய காலங்கள் அவை. மந்திர தந்திரங்கள், சூழ்ச்சிகள், வேஷங்கள் என்று பலவற்றால் அவனிடம் இல்லாத ஆள்பலத்தை ஈடு செய்யக் கூடியவன் ரவிதாசன். எல்லாம் அவன் தேசப்பற்றினால். அது பலரிடம் இல்லாததால்தான் பாண்டிய இராஜ்யம் இன்றைக்கு இந்தக் கதியை அடைந்திருக்கிறது என்று வருத்தப்பட்டான்.

ரவிதாசனுக்கு எதிர்காலத்தைப் பற்றிப் பல கவலைகள். அதில் அவன் உடல் சற்றும் அசையக்கூட மறந்தது போலும். காட்டி லிருந்து கிளம்பும் போதே சந்தேகத்துடன்தான் கிளம்பினான், ரவிதாசன். ஆனால், முழு விஷயம் தெரியும்வரை தன் மனத்துக்கு



அரண் போட்டிருந்தான். ஆனால், இனி வேறு விதமாகச் செயல்பட வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான்.

சோழருக்கு விரோதமாக அவன் ஈடுபட்டிருக்கும் இரகசிய முயற்சியைப் பற்றி நந்தினிக்கு முழுமையாகத் தெரியும். துரோகம் செய்ய எண்ணினாளென்றால் இன்னும் தங்களுக்கெல்லாம் ஆபத்து. வீர பாண்டியனுடைய ஆபத்துதவிச் சேவகர்கள் சோழ குலத்தைக் கருவறுக்கச் சபதம் செய்திருக்கிறார்களென்று சோழர் பழுத்து காலம் போகும். இன்னும் ஒன்று, பாண்டியப் புராதனக் கிரீடம் கொண்டு அந்தச் சிறுவனுக்கு மதுரையில் மகுடாபிஷேகம் நடத்தினால், பின் பாண்டியர் போராட்டமே அழிந்ததென்று அவனுக்குத் தெரியும். பாண்டியப் பேரரசுக்குப் பாத்தியதை கொண்டாட இரண்டு பேர் என்று வந்தால் போராட்டத்தின் விசுவாசிகளிடம் பெரும் குழப்பம் நேரிடும். அன்றைய தினம் சேலூரில் சோழர் சாம்ராஜ்யத்தின் மூர்க்கத் தனத்தை அனுபவித் [illegible]ார்கள். வெளியே தலை காட்டத் துணியவில்லை. இப்போது ஒருவன் பாண்டிய நாட்டரசனாகிவிட்டால் இனி என்றைக்கும் அவர்களுக்கிடையே கோஷ்டிப் பூசல்தான்.

பகைவர்கள் படையெடுத்து விட்டார்கள். ஆனால், வாளாலும் வேலாலும் அல்ல. நம் பொருளைக் கொண்டே நம்மைக் கழுத் தறுக்கப் பார்க்கிறார்கள். ஆனால், சோழன் திடீரென ஏன் இறங்கி வர வேண்டுமென்று யோசித்தவனுக்குப் பதிலும் கிடைத்தது.

சோழன் இராஜ்யத்தை விஸ்தரிக்கத் தொடங்கிவிட்டான். ஆனால், பாண்டிய நாட்டில் மட்டும் முடிவான வெற்றி காண முடியவில்லை. அதனால் பெயருக்கு விடுதலை கொடுத்துவிட்டு, வேறெங்காவது தன் வீரத்தை வெளிப்படுத்தலாமென்று முடிவு செய்தானோ? சமுத்திரம் போன்ற சைனியத்தை நிறுத்தி வைத்திருந்தான் சோழன் மதுரையில். இப்போது அதை வேறு இடத்துக்கு மாற்றலாம் அல்லவா?

அவன் கூட்டத்திலேயே இது பூகம்பத்தை ஏற்படுத்தும். அவன் தலைமைக்கு எதிர்க் குரல் ஏற்படும். இது நாள் வரை போராடியது பலனில்லாமல் போகும். ஏற்கனவே பாண்டியப் போராட்டத் தைப் பொறுத்தவரையில் இந்த ஐந்தாண்டுகள் ஐந்து யுகம் போலத் தோன்றியது. கொஞ்சம் கூட முன்னேற்றமில்லை.

ஒருவருக்கு யுத்தத்தில் வெற்றியடையாமல் சிம்மாசனம் கிடைத் தால் இரு குழுக்களுக்கும் சண்டை வரும். ஒருவர் மீது ஒருவர் பொறாமை கொண்டு அடித்துக் கொள்வார்கள். அதுமட்டுமல்ல. ரவிதாசன் இப்போது சோழர்களுக்கு எதிராக மட்டும் போராட

மாட்டான். மதுரையில் அரசாட்சி செய்யும் இன்னுமொரு பாண்டியனையும் எதிர்க்க வேண்டும். அதனால் மக்கள் கண்ணில் அவனது மாட்சிமை குறையும்

கடந்த காலத்தில், மதுரைக்குப் பலமுறை இவன் ஆதரவு திரட்டச் சென்றபோது, ''வேலையற்ற வீணர்களே விடுதலை என்று பேசுகிறார்கள். மதுரையில் மீண்டும் நம் நாட்டு மக்களே எதிரியுடன் கைகோர்த்து வாழ்க்கை நடத்தவில்லையா?'' என்று பலரும் இவனைக் கேட்டது நினைவுக்கு வந்தது.

''மனித ஜன்மம் எடுத்துவிட்டு மற்றவர்களுக்கு அடிமையாய் இருப்பதில் என்ன பயன்? மாடு, ஆடு போல. அப்படிப்பட்ட ஜன்மமும் ஒரு ஜன்மமா?'' என்று ரவிதாசன் அவர்களைத் திரும்பக் கேட்பான். இனிப் பாண்டிய அரசன் ஒருவன் அரியணையில் இருந்தால், அதெல்லாம் செல்லாது.

விடுதலைப் போருக்குக் காலவரம்பை நிர்ணயிக்கமுடியுமா? பொறுமையிழந்தால் எப்படி? பாண்டியருக்குள் கொஞ்சம் மனத் தாங்கல் ஏற்பட்டிருந்தது. அதற்காக எதிரியுடன் கைகோப்பதா? கிரீடத்தினைக் காட்டியவுடன் நடையைக் கட்டி விட்டாள் நந்தினி. அப்படியென்றால் மனப்பூர்வமாக அவள் என்றுமே போராட வில்லையோ? அவளுக்கு நல்ல புத்தி கற்பித்து விட்டு வர வேண்டுமென்று இரத்தம் கொதித்தது.

ராட்சதப் பகைவனோடு நேருக்கு நேர் நின்று சண்டை போடுவது சாத்தியமில்லை. அதற்காகச் சோழ மன்னர்களுடன் சிநேகமாயிருக்க வேண்டுமென்றாலும் ரவிதாசனால் முடிய வில்லை. மதுரையில் அவர்கள் அரங்கேற்றிய கோரக் காட்சிகள் கண்ணுக்கு முன்னால் வருகின்றன. நந்தினி மட்டும் எப்படி நட்பு ஏற்படுத்திக் கொண்டாள்? பாண்டிய நாட்டில் ஊரூராய்ப் பற்றி எரிந்ததை மறந்து விட்டாளே!

நந்தினிக்குப் பதவியாசையைத் தவிர வேறெதிலும் சிரத்தை கிடையாது போல. சிறுவனுக்குப் பட்டம் சூட்டிவிட்டு அவனைப் பார்த்துக் கொள்ளும் பாவனையில் தானே மதுரையை ஆட்சி நடத்துவாள். தக்ஷிண தேசத்தின் ஏகச் சக்ராதிபதியாகச் சோழன் இருக்கிறான். அவனே முன் வந்து சிறுவனுக்கு மதுரையில் பட்டாபிஷேகம் செய்து வைப்பதாகச் சொன்னால் நந்தினி போகாமலிருப்பாளா? கள்ளங் கபடமற்ற அந்தச் சிறுவனின் மனதையும் கலைத்துவிடுவாள். இப்போது மதுரையில் இருக்கும் வளமையில் கப்பம் கட்டுவது ஒன்றும் பெரிதில்லை. அதைத் தவிர இப்போதைய சோழர் சக்கரவர்த்தினி பூங்குழலி இவளுக்கு உறவு வேறு.



சோழர்களின் இந்த வெற்றியைத் தொடரவிடக் கூடாது. அந்தக் நாட்டில் கிடைத்த ஆதாயத்தை வளரவிடக்கூடாது என்று முடிவு கட்டினான். பாண்டியர் அரசரை யார் தேர்ந்தெடுப்பது? சோழனா? கூடவே கூடாது. இதை முளையிலேயே கிள்ளிவிட வேண்டும்?

குன்றின் மேலிருந்த குகையில் குளிருக்கு ஒதுங்கினார்கள். போன முறை மலையேறிவந்த போது குகையின் உட்புறத்தை ரவிதாசன் கவனிக்கவில்லை. இப்போது பார்த்தான். அந்த குகை ஒளிந்து கொள்ள ஒரு வசதியான இடம். இரு தலைமுறைக் காலமாக வனவாசத்தில் பாண்டிய அரசகுலம் வாழ்ந்த குகை. இது பதுங்குவதற்கு ஏற்ற இடம், பதுங்கியே வாழ்நாளைக் கழிக்க மனமிருந்தால்.

பரமேசுவரன் சுற்றிக் கிடந்த விறகை யெல்லாம் எடுத்து வந்து தீ மூட்டினான். ஆங்காங்கு வெளிச்சத்தைப் பரப்பியது தீ. கொந்தளித்த மனதில் ஆக்கபூர்வமான யோசனைகள் வராது என்று அறிந்த ரவிதாசனும் படுத்தான்.

படுத்த மாத்திரத்திலேயே இருவரும் உறங்கி விட்டனர். ரவிதாசன் அரைத் தூக்கத்தில் இருந்தபோது ஒரு கம்பீரக் குரல் கேட்டது ''ரவிதாசா! என் மகன் என் ஜன்ம விரோதியுடன் வாடுகிறான். அவனை மீட்டு வா, ரவிதாசா, அவனை அவர்கள் அழித்து விடுவார்கள்'' என்றது.

மிகவும் தத்ரூபமான குரல் கேட்டவுடன் ரவிதாசன் பயந்து போய்க் கண் விழித்தான். எழுந்து உட்கார்ந்து குகைக்குள் பரமேசுவரனைத் தேடினான். அருகில் உறங்கிக் கொண்டிருந்தான், பரமேசுவரன். அவன் பேச வில்லை. அப்போது கேட்டது கனவில் வந்த வீரபாண்டியனின் குரல்தானா?

அருகிலிருந்த பரமேசுவரனைத் தட்டி எழுப்பினான். ''வா, பரமேசுவரா. கீழே இறங்குவோம்.''

''உனக்கு என்ன, பித்தா? நடு இரவு. சூரியன் வரட்டும்'' என்று சொல்லித் திரும்பிப் படுத்தான் பரமேசுவரன்

வீரபாண்டியனின் குரலைக் கனவில் கேட்டவுடன் ரவிதாசனுக்குத் தூக்கம் வரவில்லை. பாண்டியர் படங்களைப் பார்த்துக் கொண்டு படுத்திருந்தான். தீயின் ஒளியில் சுவரின் மீதிருந்த படங்கள் தெரிந்தன. வெளிச்சத்தில் பாண்டியர் படம் உயிர் பெற்றது. பழைய காலத்துச் சிற்ப ஓவிய அதிசயங்களைப் பார்த்தபடி ரசித்திருந்தான் ரவிதாசன். அந்தப் படம் கண்ணையும்

கவனத்தையும் கவர்ந்தது. சந்தேகமில்லாமல் சமணர்கள் வரைந்த படம்தான்.

"ஆகா! பாண்டிய சபை. அரசன் என்னவோ கட்டளை யிடுகிறான். யாரைப் பார்த்து? ஒரு புறம் நிர்வாணமாகச் சமணர்கள் சிலர். மற்றும் ஒரு புறம் குழந்தையாகச் சம்பந்தர். மன்னனின் நீட்டிய கை சமணர்களை நோக்குகிறது. தீவர்த்தி தீபம் அசைந்ததில் இந்த ஓவியம் உயிர் பெற்றது போல ஓர் எண்ணம் ரவிதாசனுக்கு.

மன்னன் என்ன அணிந்திருக்கிறானென்று உற்றுப் பார்த்தான். நெடுமாறன் அணிந்த கிரீடத்துக்கு அருகே ஒரு கிறுக்கல். பாண் டியன் சிரசுக்கு நேரே ஒரு கீறல். முதலில் தெரிந்தது அந்த மெல்லிய கீறலின் நிழல்தான். அந்த கீறலின் நிழல் மேலும் கீழுமாய்ச் செல்வது போல் உணர்வு ஏற்பட்டவுடன் எழுந்து ஆடிய தீப ஒளியில் பார்த்தான். பாண்டியனின் தலைக்கு அருகில் கிறுக்கப் பட்டிருந்தன, சில வார்த்தைகள்.

அருகே சென்று பார்த்தான். "தஞ்சைக்கு அடியில் இருக்கும் சுரங்கத்தில்தான் பாண்டியப் புராதனப் பொக்கிஷம் இருக்கிறது. சுரங்கத்துக்கு வழி ஒரு புறம் ஐயனார் கோயிலிலும் மறுபுறம் பழுவூர் மாளிகையிலிருந்தும் உள்ளன" என்று கிறுக்கியிருந்தது. பெரும்பாலும் இந்த குகையில் மறைந்திருந்த வீரபாண்டியர் கிறுக்கிவிட்டுச் சென்றிருக்க வேண்டும்.

திருமகள் விலாசத்துடன் விளங்கிய நகரம் தஞ்சை. அதன் கீழே மீனாட்சியின் ஆபரணங்கள் இருப்பது பொருத்தம்தான். அந்தக் கிரீடம் ஒளித்துவைக்கப்பட்டது சம்பந்தமாக மர்மமாகவும், விளங்காமலும் இருந்த சில விஷயங்களை அவன் திரும்பத் திரும்ப யோசித்திருந்தான். பின்தான் அவனுக்கும் புரிந்தது. ராஜசிம்ஹன் ஒளித்து வைக்கவில்லை. கவிதை மட்டும்தான் எழுதி வைத்தான்.

பல்லவருக்குப் பயந்து முத்தரையர் கையிலிருந்த தஞ்சைக்குக் கீழே, பொக்கிஷத்தை ஒளித்து வைத்திருந்தனர், பாண்டியர். அப்போதுதான் விதி விளையாடியது. பல்லவரை அடியோடு ஒழித்துவிட்டுக் கிரீடத்தைத் தேடும் சோழருக்கே அதன் மறை விடத்தின் மேலிருந்த தஞ்சையையும் கொடுத்துவிட்டது.

'இன்று வந்த நாமே இந்தக் கிறுக்கலைக் கண்டுவிட்டோம். நந்தினி இதைப் பார்க்காமல் இருந்திருக்க மாட்டாள். நம்மிடம் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் முயற்சி செய்து கண்டு பிடித் திருப்போம் அல்லவா?' என்று தோன்றியது ரவிதாசனுக்கு.



அன்றிரவு மூன்றாம் ஜாமத்திற்கும் தூங்கவில்லை, ரவிதாசன். பல கேள்விகள் அவனைத் தாக்கின. "ஒரு வேளை அவளுக்கென அதை விட்டு வைத்தாளோ? ஒருவேளை அவள் கூடச் சதிக்கு உடந்தையாயிருந்திருப்பாளோ? சோழர் கையில் அந்தக் கிரீடம் அகப்படும் வண்ணம் சூழ்ச்சி செய்தவள் அவள்தானோ? எதிரி யுடன் கைகோத்துத் தன்னை வஞ்சித்து விட்டாளோ? ஆஹா! இது என்ன சதிகார உலகம்! துரோகமும், தீவினையும் நிறைந்த சதிகார உலகம்!" என்று ஆதங்கப்பட்டான்.

"பரமேசுவரா! எழுந்திரு. இதைப் பார்" என்று தூங்கியவனை எழுப்பி விட்டான்.

பின்னர் மனதிலிருந்த ஆதங்கத்தையெல்லாம் கொட்டித் தீர்த் தான். நிமிடத்துக்கு நிமிடம் அவனுடைய உள்ளத்தில் ஆவேசமும் அவன் குரலில் ஆத்திரமும் பெருகிக் கொண்டிருந்தன. போன முறை அவன் வந்தபோது மனத்தில் வஞ்சம் வைத்துக் கொண்டு இனிமையாகப் பேசி அனுப்பிவிட்டாளே. அதற்குப் பின் விடு தலைப் போராட்டத்துக்கே பங்கம் விளைவிக்கக்கூடிய செயலைச் செய்துவிட்டாளே. நந்தினிக்குத் தக்க பாடம் கற்பிக்க வேண்டு மென்று தீர்மானித்துக் கொண்டான் ரவிதாசன்.

சோழர் குலத்தையே வேரோடு அழிக்க, அடக்க முடியாத ஆசை எழுந்தது ரவிதாசன் மனதில். ஆனால், அது வீண் சபல மென்று முடிவு கட்டினான். அது இப்போது முக்கியமல்ல. முதலில் ராஜாவை மீட்கவேண்டும். ஆனால், அதுவும் அவ்வளவு சுலபமில்லை. அதைத்தான் பாண்டியர் முயற்சிப்பார்கள் என்று அநிருத்தனுக்கு நன்கு தெரியும். அதி பயங்கரக் காவலில் வைத்திருப்பான் சிறுவனை.

காட்டில் வேலையின்றிப் போராளிகள் இருந்து கொண் டிருக்கும்போது மதுரையில் மகுடாபிஷேகம் முடிந்து விடும். விரைவில் அந்த அறிவிப்பை எதிர்பார்க்கலாம். தண்டோரா அடித்து மதுரைக்கு ஒரு புது மகாராஜா வரப்போகிறார் என்பார்கள். அதற்குள்ளாகச் செயல்பட வேண்டுமென்று பரமேசு வரனிடம் சொன்னான்.

"ரவிதாசா! உண்மையாகவே அந்தச் சிறுவனைச் சோழர் பிடியி லிருந்து மீட்கப் போகிறீரா?" என்று கேட்டான், பரமேசுவரன்.

"ஆமாம், இரண்டு முக்கியக் காரணங்களுக்காக அவரை அழைத்து வரப் போகிறேன். அவரைக் கண்டு போராளிகள் மன உறுதி கொள்வார்கள். அவருக்காகப் போராட வேண்டுமென்று

தோன்றும். நந்தினி செத்தொழிந்தாலும் கவலையில்லை. மஹாராஜாவை மீட்க வேண்டும்.''

''ஆனால், மஹாராஜாவை எங்கே வைத்திருப்பார்கள்?''

''ரகசியமாகத்தான் இருக்கும். ஆனால், எளிதில் கண்டு பிடித்து விடலாம். நம்மால் பெருஞ்சேனை திரட்டிக் கொண்டு படையெடுத்துச் செல்ல இயலாது. ஒரு நூறாண்டுக்குச் செல்ல இயலாது. எப்படியாவது தந்திரமாகத்தான் மீட்க வேண்டும்.''

பின்னர் யோசித்துவிட்டு, ''ஒருவேளை அவரை உயிரோடு மீட்க முடியாவிட்டால், அவரைக் கொல்வதும் நம் கடமை. பழியைச் சோழரின் மேல் போட்டு, மக்களின் அனுதாபத்தைத் தேடலாம்'' என்றான், ரவிதாசன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று ஆறு
## 'வேளக்காரப் படை வந்தது'

கோட்டைக் கதவுகள் தாழிடப்பட்டிருந்தன என்று படைத் தலைவன் வெகு தூரத்திலிருந்து பார்த்து விட்டான். சுவர்களுக்கு அப்பால் மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும், படை வீடுகளும் சிவாலயக் கற்றளிகளும், திருமாலுக்குரிய விண்ணகரங்களும் அந்தப் படைத் தலைவன் கண்ணுக்குப் புலனாயின. பிரமிப்பும் பெருமிதமும் கைகோத்து அவனை மூழ்கடித்தன. அருகில் வர வர ஒன்றொன்றாய்க் கட்டடங்கள் எல்லாம் கோட்டைச் சுவரின் பின் மறைந்தன. இப்போது கோட்டைச் சுவர்கள் மட்டுமே அவன் முன் பிரமாண்டமாய் நின்றன. மண்ணுக்குள் ஆயிரம் அடி தோண்டினாலும் கருங்கல்லே கிடைக்காத பிரதேசத்தில் இப்பேர்ப்பட்ட கோட்டையா என்று படைத் தலைவன் பிரமித்தான். ஆளுயரம் தோண்டினால் நீர் ஊற்றெடுக்கும் பிரதேசத்தில் இதற்கு எப்படி அஸ்திவாரம் இட்டனர் என்றும் வியந்தான்.

பல முறை இந்த நகருக்குள் விஜயம் செய்தவன்தான். இந்த நகரே இப்போது அவன் வாசஸ்தலம் வேறு. எனினும் இந்தப் படையைச் செலுத்தி இந்த நகருக்கு முதல் முறையாய்ச் செல்லும் போது அவனுக்கு உடல் சிலிர்த்தது.



கோட்டைக்கு வெகு அருகில் வந்து விட்டான். ஆனால் இன்னும் கதவுகள் திறக்கவில்லை என்று தெரிந்தது. எனினும் நடை தளராமல் புரவியை செலுத்தினான். அவன் பின்னால் ஆயிரம் பேர் கொண்ட படையும் தொடர்ந்தது.

கோட்டைக்கு இன்னும் அருகில் வந்தது படை. அகழியைக் கடந்து பாலத்தின் மீது அவனது புரவி நடைபோட்டது. அப்போது ஏதோ கற்பனைக் கதைகளில் வரும் மிருகம் உறுமுவது போல ஒரு சத்தம் கேட்டது.

கோட்டை வாசலின் மேல்மாடத்தில் இரு வீரர்கள் தங்கள் தோளில் தொங்கிய கொம்பை எடுத்து ''பூம்,பூம்'' என்று ஊதினார்கள். அடுத்த கணம் உட்புறத்தில் இரும்புத் தாழ்களும் பூட்டுகளும் திறக்கப்படும் சத்தம் கேட்டது. பின்னர் அந்தப் பிரம்மாண்டமான கோட்டைக் கதவுகள், கடகடவென்றும் படபடவென்றும் சத்தம் செய்துகொண்டு திறந்து, வந்தவர்களுக்கு வழி விட்டன. தஞ்சைக் கோட்டைக் கதவுகள் வேளக்காரப் படைக்காகத் திறக்கப்பட்டன. தஞ்சைக் கோட்டையின் உட்புற தரிசனம் அவர்களுக்கு அப்போது கிடைத்தது .

தஞ்சாபுரி- சோழ மன்னர்களின் தலைநகர்! பூம்புகாரை கடலுக்குப் பலிகொடுத்து, உறையூரை மணல் மழைக்குப் பறிகொடுத்து பின்னர் பழையாறை நகர் தான் தலை நகர் என்றிருந்த சோழருக்கு அது கூட ஏற்றதல்ல எங்கள் பரம்பரைக்கு என்று எதிரியிடம் கைப்பற்றிக் கொண்ட தஞ்சை நகர் இது தான்.

கதவுகள் திறந்ததுதான் தாமதம். வீர நடை போட்டு வந்த படை வீரர்கள் பலவகைக் கோஷங்களை எழுப்பினார்கள்.

''உத்தம சோழ மன்னர் வாழ்க!'' ''வாழ்க! வாழ்க!''

''சோழ வேந்தர் வாழ்க!'' ''வாழ்க! வாழ்க!''

''தஞ்சையர் கோன் வாழ்க!'' ''வாழ்க! வாழ்க!''

இவ்வகைக் கோஷங்களைக் கேட்பவருக்கு வந்த படை சோழப் பரம்பரையின் மேல் அபார விசுவாசம் கொண்ட படையென்று தெரிகிறது.

கோட்டைக்குள் நுழைந்தவுடன், படை அணிவகுப்பில் சில மாற்றங்கள் நடந்தன. அதுவரை வெண் புரவியின் மேல் கம்பீரமாகத் தலைமை தாங்கி வந்த வீரன் ஊர்வலத்தில் தன் முதன்மையை விட்டுக் கொடுத்து ஒதுங்கி நின்றான். சொல்லி வைத்தாற்போல் படையின் கொடிகளைப் பிடித்த இரு வீரர்களும் அவனுக்கு முன்னால் சென்றனர். கொடி தாங்கிய குதிரை வீரர்களுக்குப் பின்னால் ஒரு பெரிய ரிஷபம் இரண்டு பேரிகைகளைச்

சுமந்து கொண்டு சென்றது. அதன் இருபுறமும் இரண்டு ஆட்கள் நடந்து கொண்டே பேரிகைகளை மாற்றி மாற்றி முழங்கினார்கள்.

ரிஷபத்துக்குப் பின்னால் சுமார் ஐம்பது வீரர்கள் சிறுபறை, பெரும்பறை, தம்பட்டம் ஆகியவற்றை முழக்கிக் கொண்டு சென்றார்கள். அவர்களைத் தொடர்ந்து பத்துப் பதினைந்து பேர் நீண்டு வளைந்த கொம்புகளை ஊதிக் கொண்டு வந்தார்கள். அவர்களுக்கும் பின்னால் வந்த வீரர்கள் ஆயிரம் பேர் இருக்கவாம். அவர்களின் தலைமையில் வெண் புரவியின் மேல் படைத் தலைவன் வந்தான்.

சோழ அரச குலத்தின் மீது தஞ்சை வாசிகள் தனிப்பட்ட அபிமானம் வைத்திருந்தார்கள். அந்தப் பழைய நகருக்குப் புதிய பெருமையும் செல்வாக்கும் அளித்தவர்கள் சோழர்கள் அல்லவா? அவர்களைக் காப்பதற்கே சபதம் பூண்ட வீரன் ஊர்வலமாய் வருகிறான் என்றால் விடுவார்களா?

வேளக்காரப்படையின் பவனி என்றால், எந்த நாளிலும் ஜனங்களுக்கு வேடிக்கை பார்ப்பதில் குதூகலந்தான். அதுவும் வெகு நாள் கழித்துப் புதுத் தலைவன் முன்வர, முதன் முறையாக அரசரைத் தரிசனம் செய்ய வருகிறது வேளக்காரப் படை என்றால் ஆனந்தத்துக்குக் கேட்கவா வேண்டும்? தஞ்சைக் கோட்டைக்குள் இட்டுச்செல்லும் பிரதான சாலையின் இருபுறமும் மக்கள் நின்றிருந்தனர்.

ஊர்வலத்தில் முதலில் இரண்டு குதிரை வீரர்கள் வருவது தெரிந்தது. வெள்ளைப் புரவிகள் அரபு நாட்டிலிருந்து வந்தவை என்று தெரிந்தது. குதிரை வீரர்கள் அவர்கள் தங்களது வலக்கையில் உயரப் பறந்த கொடிகளைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் படையின் பிரத்யேகக் கொடி அது.

கொடியானது திறந்த கோட்டை வாசல் வழியாகக் குபுகுபு வென்று புகுந்து அடித்த வாடைக் காற்றில் சடசடவென்று சப்தித்துக் கொண்டு ஆடியது. மற்றக் கொடிகள் போலல்ல அந்தக் கொடி. அந்தக் கொடியின் தோற்றம் விசித்திரமாக இருந்தது. கொடியைப் பார்க்கச் சிறிது பயங்கரமாகவும் இருந்தது. கொடியைப் பார்த்த பல சிறுவர்களும் கண்களை மூடிக் கொண்டனர். சிலருக்குக் கைகளில் ரோமங்கள் சிலிர்த்தன.

செந்நிறமான அக்கொடியில் மேலே ஒரு புலி சித்திரிக்கப் பட்டிருந்தது. புலிக்கு அடியில் கிரீடமும் சித்திரிக்கப்பட்டிருந்தது. அதனால் சோழர்கள் சேவையில் ஈடுபட்ட படையின் கொடியிது என்று பார்ப்பவர்கள் யூகிக்கலாம். ஆனால், அதற்கும் மேலாக



உற்றுப் பார்த்தால் கிரீடத்துக்கு அடியில் ஒரு பலிபீடமும், கழுத்து அறுபட்ட ஒரு தலையும், அந்த தலையைத் துண்டித்த ஒரு பெரிய பளிச் கத்தியும் கொடியில் காட்சி அளித்தன.

தமிழக அரசர்கள் தங்கள் கொடிகளை வெவ்வேறு விதமாகச் சித்திரிப்பது வழக்கம். சோழனுக்கு வேங்கையென்றும், பாண்டியனுக்கு மீன் என்றும், சேரனுக்கு வில்லென்றும் கொடியில் பொறிக்கப்பட்டிருந்தன. ரிஷபமாய் இருந்த பல்லவர் சின்னம், பின் சிங்கமாகவும் மாற்றப்பட்டது. சிற்றரசர்களும் வெவ்வேறு கொடிகளை வைத்திருப்பார்கள். பழுவூர் அரசரின் பனை மரக்கொடி பிரசித்தம். ஆனால், இந்தக் கொடியைப் போல வேறெங்கும் காண முடியாது.

சாம்ராஜ்யங்கள் விஸ்தரிக்கப்பட்டபோது ஆளும் அரச குடும்பத்தில் சில மாற்றங்கள் ஏற்படுவது வழக்கம். அளவுக்கு மீறிய அதிகாரம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருக்கும் அரசனிடம் இருக்கும். அதனால் அவனைப் பாதுகாக்கும் கடமை சாம்ராஜ்யத்தின் நலனுடன் பின்னிப் பிணைந்துவிடும். அது போலவே சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கும் போது பல நாடுகளை முரட்டுத் தனமாகக் கைப்பற்ற நேரிடும். அந்த நாடுகளில் பல குடும்பங்கள் அழிந்தே போகும். அவர்களிடமிருந்து அரசனுக்கு எதிரிகளும் அவர்களால் ஆபத்தும் பல மடங்கு கூடும். அதனால் மிகவும் நம்பிக்கைக்குரிய வீரர்களையே அரசர்கள் பாதுகாப்புப் படையில் சேர்த்தனர்.

பாதுகாப்புப் படையிலும் எதிரி ஊடுருவலாம் என்ற பயமும் அரசர்களுக்கு இருந்தது. அதைக் தடுப்பதற்கும், அவர்கள் செயலாற்றும் கடமையின் முக்கியத்துவத்தை எப்போதும் மனதில் வைத்திருக்கும் வண்ணமும் ஏற்பாடு செய்திருந்தனர். சோழர்கள் அப்படி அமைத்த படையின் பெயர் வேளக்காரப் படை.

''வேளக்காரர்'' என்பவர் அவ்வப்போது அரசு புரிந்த மன்னருக்கு மெய்க்காப்பாளர் போன்றவர். ஆனால், மற்ற சாதாரண மெய்க்காப்பாளருக்கும் இவர்களுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. இவர்கள் ''எங்கள் உயிரைக் கொடுத்தாவது அரசரின் உயிரைப் பாதுகாப்போம்!'' என்று சபதம் செய்தவர்கள். அத்தகைய கடூரச் சபதம் எடுத்துக் கொண்ட வீரர்கள். சோழர் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஆபத்து வருங்காலத்தில் காப்பாற்ற முடியாவிட்டால் தங்கள் தலைகளைத் தாங்களே வெட்டிக்கொண்டு உயிர் விடுவோம் எனப் பிரதிக்ஞை செய்த படையிது. அரசனின் வாழ்க்கை தங்கள் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்திருந்ததால் தங்கள் உயிரைக் கொடுத்துக் காப்பாற்றுவார்கள் இவர்கள். போர்க்களங்

களிலும் அமைதிக் காலங்களிலும் அவர்களை மீறி ஓர் ஆபத்தும் அரசரை நெருங்காது. அதையே அவர்கள் கொடியிலும் சித்திரித் தனர்.

பழந்தமிழ் நாட்டில், முக்கியமாகச் சோழ நாட்டில், இது முக்கிய ஸ்தாபனமாக இருந்து வந்தது. தமிழ் நாட்டின் தெய்வமான முருகனுக்கு ''வேளக்காரன்'' என்று ஒரு பெயர் உண்டு. ''பக்தர் களைக் காப்பாற்றுவதாகச் சபதம் பூண்ட தெய்வம் என்பதால் முருகனுக்கு அப்பெயர் வந்தது. தன் குல தெய்வமான முருக வேளின் பெயரைக் கொண்ட படைக்குத்தான் தலைவனானதைக் கருதிப் பெருமிதம் கொண்டான் புதிய படைத் தலைவன். அவனுக்கும் முருகவேளின் பெயர்தான் என்ற பொருத்தத்தைப் பலரும் கவனிக்கத் தவறவில்லை.

முக்கியமாகச் சோழச் சக்கரவர்த்தியே அந்தப் பொருத்தத்தைக் கவனித்தார். ஒரு வார காலத்துக்கு முன் சோழச் சக்கரவர்த்தி மாறனை அழைத்திருந்தார். கையில் பட்ட கத்திக் காயம் சரியான தும் தன்னை வந்து பார்க்குமாறு சொல்லியனுப்பியிருந்தார். விஜயாலய சோழீசரக் காட்டிலிருந்து அடிபட்டு வந்ததிலிருந்து மாறன் கையில் கட்டுப் போட்டுக் கொண்டு, தனது தஞ்சை மாளிகையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தான்.

சோம்பிப் படுக்கப் பிடிக்காதவனுக்கு நோயாளியைப் போலத் தன்னை பாவித்துக் கொண்டிருக்க முக்கியக் காரணம் இருந்தது. அவன் உடல் நலக் குறைவைக் காரணமாய் வைத்துப் பழுவூர் இளவரசி லோகா தினம் ஒருமுறையாவது அவனைப் பார்க்க வந்து விடுவாள். தன்னைப் பாண்டியரிடமிருந்து காப்பாற்றியவனுக்கு நன்றி செலுத்துவதற்காகத் தினமும் ஏதேனும் பொருட்களை எடுத்து வருவாள்.

மாறனுக்குக் காயம் என்னவோ ஆறிவிட்டது. ஆனால், அதைச் சொன்னால் அவள் வருவதை நிறுத்தி விடுவாள் என்ற பயம் அவனுக்கு. காயம் இன்னமும் ஆழமாகப் படவில்லையே என்று சில சமயம் வருத்தம் கூடப் பட்டான். ஆனால், அரசர் கூப்பிட்டு விட்டவுடன் கட்டைப் பிரித்து எறிந்து விட்டு ஓடாத குறையாக அவர் மாளிகைக்குச் சென்றான்.

அன்று மாலை, தினம் வரும் வைத்தியரும் சரி, பழுவூர் இளவரசியும் சரி, அதிசயித்துப் போவது நிச்சயம். 'இப்படி அசுர வேகத்தில் காயம் ஆறிவிட்டதாவென்று?'

முதலில் அரசர் அவன் உடல் நிலை பற்றி விசாரித்தார். பின்பு ''சம்புவராயரே! உமது நடவடிக்கைகளைக் கவனித்து வருகிறேன்.



உமது வெற்றிகளைக் கண்டு மிகவும் சந்தோஷம் கொள்கிறேன். அது மட்டுமல்ல. சம்புவராயரே! உங்களுக்குச் சந்தோஷமளிக்கக் [illegible] வேறு ஒரு முக்கிய விஷயம் சொல்லப் போகிறேன்.'' என்று சொல்லி ஒரு நொடி நிறுத்தினார். அது ஒரு யுகம் போலத் தோன்றி [illegible] மாறனுக்கு. ''வேளக்காரப் படைத் தலைவனின் பதவிக்கு உம்மை நியமிக்க முடிவு செய்துள்ளேன்'' என்றார் அரசர்.

அரசன் அழைத்து, இந்தப் பதவியை அவனுக்குக் கொடுத்த போது, பலரும் வியந்தனர். அதில் அதிகமாய் வியந்தது பதவியைப் பெற்றவன்தான். முதலில் பேச்சே வரவில்லை. ''ஈழம் முதல் விந்திய மலைவரை ஆளும் அரசனுக்குப் பாது காவல் நான். என்னால் நம்ப முடியவில்லை!'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். ''ஐயனே! எனக்கா இந்த உயர் பதவி! அரசே! எனக்கு வயது போதுமா? எனக்கு என்ன தெரியும்?'' என்றான்.

அரசர் சிரித்தார். ''சம்புவராயரே! எனக்கு என்ன தெரியும்? யுத்த தந்திரம் தெரிந்திருக்க வேண்டும், நாட்டைத் தக்க வைத்துக் கொள்ள ராஜ தந்திரம் தெரிந்திருக்க வேண்டும், பெரிய சாம்ராஜ்[illegible] நடத்திச் செல்ல. எனக்கு என்ன தெரியும்? நன்றாய்த் தேவாரம் பாடுவேன். நன்றாய்ப் பூப்பறித்து மாலை கட்டுவேன். நானே இந்த அரண்மனையில் அமர்ந்து திருபுவனச் சக்கரவர்த்தி என்று பெயரெடுக்கும் போது உம்மால் இந்த வேலையைச் சரிவரச் செய்ய முடியும்'' என்றார். ''எதற்கும் நல்ல நாளும் வர வேண்டும். உனக்கு அது வந்து விட்டது.''

அடுத்துப் பிரதமர் அறிவுரை கூறினார்! ''இளம் சம்புவராயரே! நீ சுத்த வீரன் என்பதை நன்கு அறிவேன். அத்துடன் நீ நல்ல அறிவாளி என்று நம்பி இந்த மாபெரும் பொறுப்பை உன்னிடம் அரசர் ஒப்படைக்கிறார். நாட்டில் அமைதி நிலவுகிறது என்பதால் அரசனுக்கு ஆபத்து இல்லை என்று அர்த்தமில்லை. அது எந்த நேரமும் நேரிடலாம்'' என்றார் பிரதமர்.

''என் உயிரைக் கொடுத்து அரசரைக் காப்பேன்!'' என்று உறுதியளித்தான் மாறன். அன்று மாலை அவனைப் பார்க்க வந்த லோகா பலவகை உணவுகளையும் பழங்களையும் கொண்டு வந்தாள். மாறன் அதி வேகமாகக் குணமடைந்ததைக் கண்டு வியந்தாள். நேற்று வந்தபோது கூட கையில் வலி தாங்கவில்லை என்று முனகியவன், இன்று கட்டை அவிழ்த்து விட்டெறிந்துவிட்டு [illegible] ஆடாத குறையாக மாளிகையில் சுற்றி வருகிறானே என்று.

வேளக்காரப் படையின் புதுத் தலைவர் சபதம் ஏற்கும் நிகழ்ச்சி துர்க்கையம்மன் கோயிலில் நடந்தது. அந்தக் கோயில், கோட்டைக்

குள்ளேதான் ஒரு மூலையில் இருந்தது. அதற்குப் படையினர் அனைவரும் சென்றனர். பலரும் இந்தப் படையில் சேர்ந்த பின் ஒரு தலைவரை அறிந்ததில்லை. பழுவேட்டரையர் காலத்துக்குப் பின் இந்தப் படைக்குத் தலைவரே இருந்ததில்லை. அதனால் அவர்கள் முகமெல்லாம் புதுப் பொலிவுடன் இருந்தது.

சபதம் ஏற்கும் விழா நள்ளிரவுதான் நடந்தது. கோயில் விழாவுக்கு ஏற்ப அலங்கரிக்கப் பட்டிருந்தது. சுவர்களெங்கும் தீப்பந்தங்கள் செருகியிருந்தனர். முன்னால் வந்த மாறனுக்குக் கோயில் பூசாரி பரிவட்டம் கட்டிக் கோயிலுக்குள் அழைத்துச் சென்றார். மற்ற எல்லாரும் வெளியிலேயே நின்றார்கள்.

கொஞ்சகாலமாகத் தஞ்சையில் துர்க்கையம்மன் கோவிலுக்குத்தான் மகிமை அதிகம். அங்கேதான் பூஜை, பொங்கல், பலி, திருவிழா ஆர்ப்பாட்டங்கள் அதிகம். அரச குடும்பத்தாரும், பழுவேட்டரையர் போன்ற உயர்குடி மக்களும் துர்கை அம்மன் கோவிலுக்குத்தான் அதிகமாகச் சென்று வந்ததே அதற்குக் காரணம்.

மாறன் கோயிலின் கர்ப்பகிரஹத்தை கவனித்தான். துர்க்கை போருக்குப் புறப்படும் வீராங்கனைபோல அலங்கரிக்கப்பட்டிருந்தாள். சிவந்த உடை உடுத்தியிருந்தாள். கையில் பெரியதோர் வாளை வைத்திருந்தாள். விளக்கின் தீபம் ஆடியதில் அதன் தீட்டப்பட்ட ஓரங்கள் ஜொலித்தன. அவளது கண்களோ கோபாவேசத்தில் இருப்பது போல இங்கும் அங்குமாய்ப் பாய்ந்தன. துர்க்கையின் காலடியில் இரண்டு ஆட்டுத் தலைகள் இருந்தன. சற்று முன்பு தான் அவை பலி கொடுக்கப் பட்டிருக்க வேண்டும். வெட்டப்பெற்ற கழுத்திலிருந்து இன்னும் ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது.

பூஜாரி ஏதோ புரியாத மந்திரங்களை உச்சரித்துக் கொண்டிருந்தார். மாறனும் கண்களை மூடிப் பிரார்த்தனை செய்தான். "தாயே! உன்னை நம்பியே இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். எனக்கு வயதோ அனுபவமோ போதாது. நீயே என் அருகிலிருந்து உதவ வேண்டும்!" என்று வேண்டினான்.

பின்னர் பூஜாரியின் மந்திரங்களின் உச்சரிப்புச் சப்தம் கூடியதால் கண்ணைத் திடுக்கிட்டுத் திறந்தான். துர்க்கையம்மன் கையிலிருந்த வாள் இப்போது பூஜாரியின் கையிலிருந்தது. வாளின் கூர்மையான பக்கம் மேலிருக்கும்படி முன் நீட்டினார். அவர் எதை எதிர்பார்க்கிறார் என்று தெரிந்து வாளின் கூர்மையான பகுதியில் தன் வலது கையைப் பதித்தான்.



"சோழச் சக்கரவர்த்தியை என் உயிரையும் கொடுத்துப் பாதுகாப்பேன். என் அஜாக்கிரதையினாலோ, என்னை மீறியோ, அரசர் உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால், துர்க்கையின் சந்நிதியில் என் தலையை என் கையினாலேயே வெட்டிக் கொண்டு பலி தருவேன்!" என்று சபதம் எடுத்துக் கொண்டான் மாறன். சபதம் எடுக்கும் போது உணர்ச்சி வசப்பட்டதால் அவனது கையின் விரல்கள் வாளை அழுத்தி அதில் ரத்தம் வந்தது.

பூஜாரி சில மந்திரங்களை ஓதி வாளைத் துர்க்கையின் மடியில் மீண்டும் வைத்துவிட்டுப் புதிய வேளக்காரப்படைத் தலைவரை வெளியே அழைத்து வந்தார்.

அப்போது படையினர், "துர்க்கை மாகாளி, பராத்பரி பராசக்தி வெல்க! வெல்க! வெல்க!" என்று எந்தத் தெய்வத்தின் முன் சபதம் செய்தார்களோ அவளைப் பாராட்டினர்.

அடுத்து, "வேளக்காரப் படையின் தலைவர் கந்த மாற வேள் வெல்க! வெல்க! வெல்க!" என்று புதிய தலைவனை வாழ்த்தினர். பூஜை நடந்த பின் படையினர் கோட்டைக்கு வெளியே சென்றனர்.

அதற்குப் பின் இப்போது தான் அரண்மனையை நோக்கி ஊர்வலமாய்ச் சென்றனர். வேளக்காரப் படை வீரர்களும் அரசரைத் தினந்தோறும் வந்து தரிசித்து விட்டுப் போவது இராஜ்ஜியத்தின் நன்மைக்கு அவசியமாயிருந்தது. புதுத் தலைவருடன் வருவதால், இன்று வீரர்களுக்குப் பலத்த விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அவர்கள் ஊர்வலமாய் ஊருக்குள் வரும்போது, கோட்டைக்கு உட்புறத்தில் பெரிய ஆர்ப்பாட்ட ஆரவாரங்கள் கேட்டன. நகரா முழங்கும் சத்தம், பறைகள் கொட்டும் சத்தம், கொம்புகள் ஊதும் சத்தம் இவற்றுடன் பல நூறு மனிதர் குரல்களிலிருந்து எழுந்த வாழ்த்தொலிகளும் கலந்து எதிரொலி செய்தன. நூற்றுக்கணக்கான வலிமையுள்ள குரல்களிலிருந்து எழுந்த மேற்படிக் கோஷங்கள் கேட்போரை மெய் சிலிர்க்கச் செய்தன. அரசரின் பாதுகாவலுக்கே தன்னை அர்ப்பணம் செய்து கொண்ட படையென்பதால் மக்களுக்கு அவர்களின் மேல் அபிமானம் உண்டு. வீதி ஓரங்களில் நின்ற மக்களில் பலரும் கோஷத்தில் கலந்து கொண்டார்கள்.

தலை நரைத்த கிழவர்களுக்கு மட்டும்தான் கிடைக்கும் என்றிருந்த பதவி ஓர் இளைஞனுக்கு இன்று கொடுக்கப்பட்டிருந்தது நாட்டில் பெரும் ஆச்சரியத்தைக் கிளப்பியது. தஞ்சையில் இதைத் தவிர வேறு பேச்சே இல்லாமல் போய்விட்டது.

குடிமக்களின் நாவிலும், போர் வீரர்களின் உள்ளத்திலும் இன்று மாறனைப் பற்றிய பேச்சும் நினைவுகளும்தான். தீரமான காரியம் செய்து தன் குலத்தின் மேன்மையை நிலைநாட்டி விட்டான் இளம் சம்புவராயன் என்று பேசிக் கொண்டனர்.

நாடு நகரமெல்லாம் மக்கள் எந்த வீர இளைஞரின் வீரப் பிரதாபங்களையும், குணாதிசயங்களையும் பாடிப் புகழ்ந்து கொண்டிருந்தார்களோ, அந்த அரசிளங்குமாரரே இப்போது ஊர்வலமாய் வந்து கொண்டிருந்தார். அதனால் இன்று வீதியின் இரு புறங்களிலும் ஜனங்கள் திரண்டு நின்று வேடிக்கை பார்த்தார்கள். ஜய கோஷம் செய்தார்கள். வாழ்த்துக் கூறினார்கள். பூமாரியும், பொரி மழையும் பொழிந்தார்கள்.

தஞ்சையில் தானிய லட்சுமியே இஷ்ட தெய்வம். இங்கு இப்போது வீர லட்சுமியும், ஜெயலட்சுமியும் அவளுடன் போட்டி போட்டுக்கொண்டு குடியேறிவிட்டார்கள். அதற்கு முதல் காரணம் அங்கு வசித்த வீராதி வீரர்கள். அதில் முதன்மையானவன் இவன் என்று போகுமிடமெல்லாம் பூத் தூவினார்கள்.

ஊருக்குள் ஊர்வலம் வர வர, மாளிகைகளிலிருந்து பெண்கள் வெளி வந்து ஆரத்தி யெடுத்தனர். மாறனுக்கு நெற்றியில் திலக மிட்டனர். தலைக்கு மேல் பூ இதழ்களைத் தூவினர்.

பழுவூர் அரண்மனை வாசலிலும் லோகா வந்து ஆரத்தி எடுத்தாள். மாறன் தலையில் ஏற்கனவே பலர் தூவிய பூ இதழ்கள் இருந்தன. அவளுடைய முகம் சட்டென மாறியது. கோபத்தில் சிவந்தது. அவன் தலை மேலிருந்த பூக்களை அகற்றிவிட்டாள்.

"சம்புவராயரே! இப்படித் தினம் தினம் நீர் வரும்போது மற்ற வீட்டுப் பெண்களெல்லாம் பூத் தூவ மாட்டார்கள். ஆரத்தி எடுக்க மாட்டார்கள். இன்றைக்கு மட்டும்தான் இந்த ஆர்ப்பாட்ட மெல்லாம். அதனால் வீண் கற்பனையை வளர்த்துக் கொள்ளாதீர்கள்!" என்று எச்சரித்தாள்.

மாறன் சிரித்துவிட்டு, அரண்மனையை நோக்கிச் சென்றான்.

❖ ❖ ❖



## அத்தியாயம் நூற்று ஏழு
## உத்தமரின் முன்னிலையில்...

ஒரு காலத்தில் வேளக்காரப் படை அரசரைத் தரிசனம் [illegible] கோட்டைக்குள் வரப் போகிறது என்றால் அதற்காக [illegible] ஜனங்களும் ஒதுங்கி நிற்பார்கள். அவர்களுடைய [illegible] நம்மீது விழாமல் ஒதுங்கி நிற்க வேண்டும் என்று எல்லார் [illegible] தோன்றும்.

[illegible] வேளக்காரப் படையார் வைத்ததே இந்த நகரில் சட்டம் [illegible], அவர்களைக் கேள்வி கேட்பார் கிடையாது என்றும், [illegible] தெரியும். பழுவேட்டரையர்கள் போன்ற பெரிய [illegible] கூட வேளக்காரப்படை விஷயத்தில் தலையிடுவது [illegible] யாது. தங்கள் உயிரைப் பணயம் வைத்து மன்னரைக் [illegible] படைக்கு மற்றவர்களுக்கு இல்லாத சில சலுகைகள் [illegible] இயல்புதானே?அதுவே வேளக்காரப் படைக்குக் [illegible] திருந்தது.

ஒரு காலத்தில் வேளக்காரப் படை வீரர் பெரிய கடைவீதியின் [illegible] போனதென்றால் அவ்வளவுதான். அந்தப் படையில் [illegible] வீரர்கள் கடைத் தெருவில் திருவிளையாடல்களைப் புரியா [illegible] தான் அதிசயம். ஒருவன் பட்சணக் கடையில் புகுந்து [illegible] நிறைய அதிரசத்தை எடுத்துக் கொண்டு வந்து மற்ற [illegible] விநியோகிப்பான். பின் வெறும் கூடையைக் கடைக் [illegible] தலையிலே கவிழ்த்துவிட்டு இரைந்து சிரிப்பான்.

[illegible] யினர் பலரும் தெருவில் இருக்கும் வாயில்லா ஜீவன் [illegible] குதிரைகளையும் மாட்டையும் அவிழ்த்து விட்டுப் பயமும் [illegible] தலை தெறிக்க ஓடவிட்டு வேடிக்கை பார்ப்பார்கள். [illegible] படை கடந்து சென்ற பின் சாலையில் புயல் அடித்து [illegible] போயிருக்கும். அவர்களுடைய விளையாட்டு மற்றவர் [illegible] வினையாக இருக்கிறது என்று என்றுமே அவர்கள் [illegible] வே மாட்டார்கள்.

இதையெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு தஞ்சையின் [illegible] வேளக்காரப் படையின் அணிவகுப்பைப் பார்வை [illegible] னர். ஆனால் அவர்களுக்கு அதிசயம். வேளக்காரப் படை வீரர்கள் இதுவரை ஒழுங்காய் அணிவகுத்துச் சென்றார்கள் [illegible], எப்போதும் இல்லை. குதித்தும் சிரித்தும் கும்மாள [illegible] செல்வார்கள். ஆனால், இன்றோ சிராகப் பேரிகையின்

ஒலிக்கு ஏற்ப நடை போட்டனர். அவர்கள் கண்கள் கூட இப்படி அப்படித் திரும்பவில்லை.

இந்த மாற்றத்துக்கெல்லாம் காரணம் அதன் புதுத் தலைவன் கந்தமாற வேள்தான். வேளக்காரப் படை கண்ணியத்துடனும் ஒழுக்கத்துடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பதில் அதன் தலைவன் கவனமாக இருந்தான்.

பழுவூராரின் தேக அசௌகர்யத்தை முன்னிட்டு அவர் வேளக்காரப் படைத் தலைவரின் பதவியை வெகு நாட்களாக வகிக்கவில்லை. அவருக்குப் பின் அந்த இடத்தைக் காலியாகவே வைத்திருந்தனர். இதுவரை தலைவர் இல்லாமல் இருந்த சேனை கடிவாளம் இல்லா மிருகம் போல வளர்ந்துவிட்டது. அன்பால் அடக்கிச் சரி செய்ய வேண்டும் என்று முடிவெடுத்தான் மாறன். இப்பேர்ப்பட்ட முரட்டுப் படையைக் கட்டுப்படுத்துவது இயலாத காரியமென அவன் நினைக்கவில்லை.

அதுவும், சோழரின் சக்தி அதிகரித்தவுடன், பகைவர்கள் அருகில் நெருங்க யோசித்தனர். வேளக்காரப் படைக்கோ அதனால் வேலை குறைந்தது. 'ஏன் ஆனந்தமாய்க் காலங் கழிக்கக் கூடாது?' என்று இருந்து விட்டது வேளக்காரப் படை. 'எதற்காகக் கையில் வாளும் வேலும் ஏந்திக் கொண்டு காவல் காக்க வேண்டும்?' என்று சோம்பித் திரியத் தொடங்கிவிட்டனர். இரவெல்லாம் குடித்துக் கூத்தடித்துவிட்டுக் காலையில் எழுந் திருக்க மனம் வராமல் படுத்திருந்தார்கள்.

தலைவரில்லாமல் இருந்த வேளக்காரப் படை திசை தெரியாக் கப்பலைப் போல் செயல்பட்டது என்றவுடன் அதன் விளைவு தெரிந்து விட்டது. தஞ்சைக் கோட்டைக்குள் பாண்டிய ஆபத்துத விகள் வந்து அரண்மனைக்குள் புகுந்து சுந்தர சோழர் மீது வேல் எறியும் வரை இவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

மாறன் வேளக்காரப் படையில் உள்ள குற்றங்குறைகளை ஆராய்ந்தான். எப்படியெல்லாம் இந்தப் படையைச் சீரமைக்க வேண்டும் என்று முன்னமேயே தீர்மானித்திருந்தான். தன் நண்பன் வந்தியத் தேவனிடமும் ஆலோசனை கேட்டான்.

படையினர் எல்லாரையும் ஒன்றாய் அமர வைத்துப் புதிய தலைவன், ''விளையாட்டுத் தனத்துக்கு இடம் கொடுக்கும் வேலையிலா நீங்கள் இருக்கிறீர்கள்? நீங்கள் செய்து கொடுத்த கொடூர சபதத்தின் பேரில் உமக்குப் பல சலுகைகள் உள்ளன. அதனால் தான் உமது லீலைகளைக் கண்டும் காணாததுமாய் அரசாங்கம் சென்று விடுகிறது. அதற்காக உங்களுக்கென ஒரு



...ளோடு வேண்டாமா?'' என்று வினவினான். எல்லாரும் ...குனிந்தபடியே கேட்டனர். சென்ற நாள் தவறுகளை ...ர்கள். பின் மாறன் வேளக்காரச் சேனா வீரர்களுக்கு பொது ...ளிடம் எவ்வளவு பவ்யமாகப் பழகவேண்டும் என்று ...றுத்தினான்.

...று அந்த அறிவுரைக்கு ஏற்ப நடந்து கொண்டனர் படை ...கள். சந்தையைக் கடக்கும் போது கடைகளில் நாவிலே எச்சில் ...செய்த பலகாரங்கள் கூடை கூடையாக இருந்தன. ஆனால், ...ம் தொடக்கூட இல்லை. ஆப்பம், அதிரசம் முதலிய தின் ...களும் வாழைப் பழங்களும் வேறு பலவிதக் கனிகளும் ... மலையாகக் குவிந்து கிடந்தன. ஆனால், வேளக்காரப் ...யில் ஒருவன் கூட அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்ப ...லை. ஒரு காலத்தில் சாலையோரக் கடைகளிலிருந்த பண்டங் ...யெல்லாம் இலவசமாய் எடுத்துக் கொள்வார்கள் வேளக் ... படையினர். ''அரசரின் மெய்க்காவல் படையின் தரங் ... செய்கையைப் பார்த்தாயா?'' என்று மனதுக்குள் கோபம் ...ண்டோரெல்லாம் இன்று வாயடைத்துப் போனார்கள்.

வேளக்காரப் படையின் ஊர்வலம் தஞ்சைக் கோட்டையின் ...கள் வழியாக மக்களின் வாழ்த்தையெல்லாம் ஏற்றுக் ...ண்டு உத்தம சோழரின் மாளிகைக்கு வந்து சேர்ந்தது.

தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்களை எட்டுத் திசையும் ...ரும்படி முழங்கிக் கொண்டு வேளக்காரப் படையினர் அரண்மனைக்குள் வந்தார்கள். அரண்மனை வாசலின் முன்னே ... வீரர்கள் வாள்களையும், வேல்களையும் சுழற்றி ''டணார் ...'' என்று சத்தப்படுத்திக் கொண்டு வந்தார்கள். அரசர் ...யே வந்தார். அவரைக் கண்டதும் படையினர் பெரும் ...த்தில் இருந்தார்கள். சிலர் வாள்களை வானில் விட் ...ந்து கீழே விழும் போது சரியாகக் கைப்பிடியில் பிடித்தனர்.

...வற்றையும் பார்த்துக் கொண்டு தம் அரண்மனை ஆசார ...சலில் வேளக்காரப் படையினருக்குத் தரிசனம் கொடுத்துக் கொண்டிருந்தார் உத்தமசோழர். ஒருவகை அமைதியை ஏற்படுத்தி ...டு, வேளக்காரப் படைத் தலைவன் இரண்டடி முன்னால் அடியெடுத்து நின்றான். சபதம் ஏற்ற பின் முதல் முறையாக அவன் அரசனைக் காண வந்திருந்தான். எப்பேர்ப்பட்ட சபதம்! அரசர் ...ம் தன் வாழ்க்கையை ஒன்றாய்ப் பிணைத்த சபதம். பார்க்கப் போனால் இனி இரண்டு உடல்களும் ஒருயிர் போல வாழ வேண்டும்.

மாறன் உரத்த குரலில், ''தஞ்சையர் கோன் வாழ்க! மாமன்ன ரைப் பாதுகாக்கச் சபதம் பூண்ட படையே உங்கள் முன் நிற்கிறது. உம் நலன் காண வந்திருக்கிறது'' என்றான். இது வேளக்காரப் படையின் சம்பிரதாயம். படையின் ஒரு பகுதி அரசரை எப்போதும் பாதுகாக்கும். ஒவ்வொரு நாளும் எல்லாருமாக வந்து அரசர் நலமுடன் இருக்கிறாரா என்று தரிசனம் செய்துவிட்டுச் செல்ல வேண்டும். பாதுகாப்புத் தருவோரைத் தவிர மற்றவர் எல்லாரும் கோட்டைக்கு வெளியே சென்றவுடன் கோட்டைக் கதவுகள் மூடப்படும். பின் மிக முக்கியமானவர்களே உள்ளே வர அனுமதிக்கப்படுவார்கள்.

அரசர் முதலில் படை வீரர்களுடன் பேசினார். ''வீரர்களே! தமிழகத்தின் பழங்குடியான சோழர்குடியைப் பாதுகாக்கும் பிரத்யேகப் படை நீங்கள். கரிகால் வளவன் திருக்குலம் நீடூழி வாழ உம்மைப் போன்ற வீரர்களே உறுதுணையாய் நிற்கிறார்கள். வெகு நாட்களாய் உமக்கு ஒரு தலைவன் இல்லாத குறையை நான் இன்று தீர்த்துவிட்டேன். இனி உங்கள் கடமைகளை நீங்கள் சீராகச் செய்யலாம்'' என்றார் உத்தமர். அவரது குரலோ மெல்லிய குரல். ஆனால், அரசர் பேசும் வரை பலர் மூச்சு விடுவதைக் கூட மறந்துவிட்டனர் போலும். அவ்வளவு அமைதி நிலவியது.

அவர் பேசி முடித்தார் என்றதும், ''வெற்றிவேல்! வீர வேல்! உத்தம சோழர் வாழ்க! மதுரையும், ஈழமும், தொண்டை மண்டலமும், கொண்ட கோ இராஜகேசரி வாழ்க!'' என்று பல நூறு மனிதர் குரல்களிலிருந்து எழுந்த வாழ்த்தொலிகளும், அதனுடன் அரண்மனைச் சுவர்களில் அந்தக் கோஷங்கள் உண்டாக்கிய பிரதித்வனிகளும் சேர்ந்து கொண்டன. கேட்பவருக்கெல்லாம் புல்லரிப்பு ஏற்பட்டது. அங்கிருந்தவருடைய உள்ளங்களில் எல்லாம் ஒரு விதமான வீரம் நிறைந்த உணர்ச்சிகளை உண்டாக்கியது.

கூவி முடித்தவுடன் அரண்மனையின் வெளிப்புறத்தில் பெரிய ஆர்ப்பாட்ட ஆரவாரங்கள் கேட்டன. நகரா முழங்கும் சத்தம், பறைகள் கொட்டும் சத்தம், கொம்புகள் ஊதும் சத்தம் எல்லாம் கேட்டன. பின் படை கலைந்து சென்றது அவர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விருந்துக்குச் சென்றனர்.

அரசர் செல்ல, அவரைப் பின் தொடர்ந்து சபையோரும் மாறனும் அரண்மனைக்குள் சென்றனர். உள்ளே நுழைந்த மாறனுக்கு ஆச்சரியம். மண்டபம் முழுவதும் ஆட்கள். சபையே நிறைந்து வழிந்தது. முக்கியமானவர்கள் பலரும் வெகு தூரத்தி



[illegible]கெல்லாம் வந்திருந்தார்கள். அவர்களில், சோழச் சக்கர [illegible] ஆட்சிக்கடங்கித் தத்தம் எல்லைக்குள் அதிகாரம் [illegible] வந்த சிற்றரசர்களில் பலர்.

[illegible] போன்றவர்களுக்குச் சோழப் பேரரசில் பெருந்தரத்து [illegible] அதிகாரிகளாகவும் பதவி வகிக்க வாய்ப்புக் கிடைக்கு [illegible] அவர்களுக்குத் தெரியும். ஆனால், இவ்வளவு இளைய [illegible] உன்னதப் பதவி கிடைப்பது அரிது. அப்படிப் பதவிக்கு [illegible] எல்லாரும் பார்க்க ஆவலாய் இருந்தனர்.

[illegible] காலத்தில் மாறன் இள வயதில் மிகவும் முதிர்ச்சி [illegible] செயல்படுவான். அவன் வயதுக்கும் திறமைக்கும் [illegible]வே எல்லாவற்றிலும் ஈடுபடுவான். அதனால் முந்தைய [illegible]களில் மாறனைப் பார்த்தவர்களுக்கு அவ்வளவு உயர்ந்த [illegible] கிடையாது. ஆனால், அவனது சமீப காலச் [illegible] செவி வழியாகக் கேட்டபின் அவனைக் காணும் [illegible] வந்திருக்க வேண்டும். தங்கள் குடும்பங்களுடன் [illegible] எல்லாரும் வந்தது வியப்பொன்றும் இல்லை. [illegible] இன்னும் திருமணம் ஆகாதது தெரிந்ததே. அரசியலில் [illegible] பெறும் சம்புவராயர் குலத்தில் சம்பந்தம் செய்ய அரசர்கள் [illegible] விரும்பினார்கள்.

[illegible]வர்த்தி அரியணையில் அமர்ந்தார். சக்கரவர்த்தி அமர்ந்த [illegible] அமைதி ஏற்பட்டது. மன்னனுக்கு நேர் எதிரே மாறன் தலை [illegible] நின்றான். அவனுக்கு வாகான தேகத்தைப் போர்ப் [illegible] கொடுத்திருந்தது. களையான முகத்தை அவன் அரச குல [illegible] கொடுத்திருந்தது. சமீப வெற்றிகள் அவன் முகத்தில் ஒரு [illegible] ஏற்றியிருந்தன. அவற்றையெல்லாம் விடத் தன் காதலி [illegible] சபையில் இருக்கிறாள் என்பது நாணத்தையும் கொடுத்து [illegible] முகத்தை மெருகூட்டியிருந்தது.

[illegible] பெண்கள் பகுதியில் லோகா முதல் வரிசையில் அமர்ந் [illegible] சோழப் பேரரசில் வாழ்ந்த முக்கியமானவர்கள் பலரும் [illegible] கூடியிருந்தனர். எனினும் வலது பக்கமாக அமர்ந்திருந்த [illegible] பெண்களில் லோகாவும் அமர்ந்து தன்னையே வைத்த [illegible] வாங்காமல் பார்த்தது அவனுக்குப் பெரும் மகிழ்ச்சியைத் [illegible].

[illegible]ருக்கு அருகில் எல்லாம் அறிந்த புத்திமான் அநிருத்தர் [illegible]ந்திருந்தார். அநிருத்தரின் முகத்தில் கம்பீர தேஜஸ் குடி [illegible]கொண்டிருந்தது. மாறனுக்கு இந்தப் பதவி கிடைக்க முக்கியக் [illegible] அவர்தான். தன் தேர்வு சரிதான் என்று தன்னைத்

தானே மெச்சிக் கொண்டிருந்தார். 'இளமையின் படபடப்பும், முரட்டுத்தனமும் இல்லாமல் இருக்கிறான் கந்தமாறன். இவனே இந்தப் பதவிக்குச் சரியானவன். அவனது செயல்களில் அவனது வைர நெஞ்சத்தின் உறுதி தெரியவில்லையா? பாண்டியரின் பொக்கிஷத்தைக் கண்டெடுத்தது, காயமின்றிப் பழுவூர் இளவரசியை மீட்டது போன்ற காரியங்களை அவன் திறம்படச் செய்திருந்தான்' என்று நினைத்தார். அதற்குப் பரிசாக இந்தப் பதவி கொடுக்கப்பட்டிருந்தது.

அது மட்டுமல்ல. அநிருத்தரின் செயல்பாட்டுக்கு எப்போதுமே பல முகங்கள் இருக்கும். மாறனுக்கு இந்த வேலை கிடைப்பது இன்னும் ஒரு முக்கியக் காரணத்தினால். சோழர் தேசத்தின் வடக்கு வாசலாய்த் திகழ்ந்தது சம்புவராயர் ஆண்ட பிரதேசம். அவர்களை ஆதரித்து நல்ல உறவு முறையில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று சோழர்கள் விரும்பினார்கள்.

ஆனால், இதற்கு முன் ஆண்ட சுந்தர சோழரின் ஆட்சியின் அந்திமக் காலத்தில் பல கசப்பான நிகழ்வுகள் நடந்து அரங்கேறின. சம்புவராயர் வீட்டில் யுவராஜன் ஆதித்த கரிகாலன் மாண்டதும், அதற்குப் பொறுப்பைத் செங்கண்ணர் சம்புவராயர் தலைமேல் சுமத்திப் பாதாளச் சிறையில் அவரை அடைத்ததும் நிகழ்ந்தன.

அந்த ஆண்டு அடித்த அரசியல் புயலில் சம்புவராயர் வீடு சின்னா பின்ன மடைந்திருந்தது. அன்றிலிருந்து சம்புவராயர் கீர்த்தியை நீடித்த கிரகணம் பிடித்திருந்தது. காலகாலமாக சோழருக்கு நெருக்கமாயிருந்த சம்புவராயர் குலம் ஒதுக்கி வைக்கப்பட்டது. அதற்குப் பின் இரு குலங்களும் ஒன்றுடன் ஒன்று சுமுகமாக உறவுடன் இருக்கவேயில்லை. இனி அதெல்லாம் பழைய கதை. சோழ நாட்டுப் பெருங்குடித் தலைவர்களில் செங்கண்ணர் சம்புவரையர் ஒருவர். இன்று அவர் மீண்டும் பெருமைக்குரிய நிலையில் இருந்தார். அவரது மகன் இன்று வேளக்காரப்படையின் தலைவன்.

சபையில் நிலவிய அமைதியை உடைத்துகொண்டு அரசர் பெருமான் முதலில் பேசினார். ''இவருடைய அனுமதி இல்லாமல் யமன்கூட இனிமேல் தஞ்சைக் கோட்டைக்குள் நுழைய முடியாது!'' என்றார் உத்தம சோழர்.

அரசரின் நகைச்சுவையைக் கேட்டு எல்லாரும் சிரித்தார்கள். மாறனுக்குப் பெருமையும் நாணமும் சேர்ந்து வந்தன.

அரசர் மேலும், ''என்ன வேளக்காரப்படைத் தலைவரே! நான் நலமாய் இருக்கிறேனா என்று பார்க்கும் வேலை இனி உமக்குத்



[illegible]ன்!'' என்று சொல்லி நகைத்தார். ''தினம் தினம் வந்து என் [illegible] கண்ட பின்தான் நீர் வீட்டுக்கே செல்ல முடியும். இந்த [illegible]ண்டுகளில் எவ்வளவு முறை உம்மைக் கடம்பூரிலிருந்து [illegible]சொல்லி ஆள் விட்டிருப்பேன். நீர் வரவில்லை. அதற்குதான் [illegible] இந்தத் தண்டனை!'' என்றார்.

'[illegible]னே! இது என் பாக்கியம் என்று கருதுகிறேன்'' என்றான் இளம் சம்புவராயன்.

மாறனின் தந்தை இதைக் கேட்டவுடன் பெருமிதம் [illegible]ார். இப்போது சபையோருக்கெல்லாம் நன்கு தெரியும். இத்தனை காலமும் அரசரிடம் வரவொட்டாமல் சம்புவராயர் [illegible]களைத் தடை செய்து வைக்கவில்லை. அவர்களாக ஒதுங்கி [illegible]. அரசர் அழைக்காமல் இல்லை. எனினும் செல்ல [illegible]. இன்று அவர் உயிரின் பாதுகாப்பையே அவர்களிடமே [illegible]த்துவிட்டார்.'' என்று.

தந்தையும் தனயனும் இனிச் சுமுகமான உறவு கொள்வார்கள். [illegible] நினைத்ததை விட அதிக உயரத்தில் ஏறிய மகனைக் கண்டு [illegible]த்துக் கொண்டார் செங்கண்ணார் சம்புவராயர்.

மாறனது சமீப காலச் சாதனைகளைப் பாராட்டினார் அரசர். [illegible] ஆமோதித்தனர். ''மகா புருஷர்கள் கட்டிக் காத்த பெயரை [illegible] காக்க வேண்டும்'' என்றவுடன், முக்கியமாகச் சின்ன பழு[illegible]டரையர் ஆமோதிக்கிறாரா என்று மாறன் ஓரக்கண்ணால் [illegible]ட்டம் விட்டான்.

ஆனால் எல்லோரும் சந்தோஷம் கொள்ளவில்லை. கேட்பா[illegible] கிடந்த சம்புவராயர் குலத்துக்கா இவ்வளவு மரியாதை [illegible]ர் கண்ணும் பட்டன. சம்புவராயருடன் சின்னப் பழு[illegible]டரையர் ஏதோ ரஸமான சம்பாஷணையில் ஆழ்ந்திருந்தார். அந்நியோன்யமாகக் காட்சி தந்தனர் இருவரும். பெண்கள் அமர்ந்திருந்த பகுதியிலிருந்து அதைக் குந்தவை பார்த்தாள். [illegible]வராயர் அவர் காதுபடச் சொல்லச் சொல்லப் பழுவேட்டரை[illegible] தலை அசைத்துச் சிரித்துக் கொண்டிருந்தார். குந்தவை மனதில் [illegible] பாவியது. மாறனின் வெற்றிகளை ஒப்புக்கொள்ள அவள் [illegible] இணங்கவில்லை.

குந்தவைக்கு முகம் முகமாக இல்லை. அவ்வப்போது அவள் [illegible]யில் திரும்பி அதைக் கண்டு வந்தியத் தேவன் ரசித்தான். ஆனால், தன்னுடைய சூழ்ச்சியால் அது நடந்தது என்று சொல்ல [illegible]மல் இயற்கையாகவே மாறனின் கையோங்கியது என்பதில் [illegible] அவனுக்குத் திருப்தி.

இந்தத் திருச் சபையில் இல்லாதவர் பொன்னியின் செல்வ மட்டும்தான் என்று குந்தவையின் காது பட எல்லாரும் பேசி கொண்டனர். குந்தவைக்கு அழுகையே வந்தது. குந்தவை தோல் யுற்றுப் பழகாதவள். "தன் தம்பிக்கு உபத்திரவமாய் வந்தவ வாழ்க்கைப் படியில் ஏறிக் கொண்டே இருக்கிறான்" என் கோபம் கொண்டாள்.

மாறனுக்கு அவன் சேவையை மெச்சி நல்லதொரு பதவியு கொடுக்கப்பட்டது. சோழர் பிரதேசத்திலேயே எப்பேர்ப்பட் அதிமுக்கியமான பதவி! சக்கரவர்த்தியுடன் மிகவும் நெருங் யிருக்கக்கூடிய பதவி. முன்பொரு காலத்தில் பழுவேட்டரையர்க வகித்த பதவி. அதனால்தான் கடைசிவரை சுந்தர சோழர் அவர்க பேச்சைத் தட்டுவதே இல்லை. பின்னால் உள்ள அரசிய வாழ்க்கைக்கு ஏற்ற ஏணி. அந்தப் பதவி ஏணியின் முதல் பட இதுதான். இதை வைத்துத்தான் பழுவேட்டரையர்கள் அதிகா மரத்தின் உச்சாணிக் கிளைக்கே ஏறினார்கள்.

வேோகா மாறன் இருவருக்கும் திருமணம் செய்து வைக்க பிரயத்தனம் நடக்கப் போகிறது என்று குந்தவை உணர்ந்தாள். "சோழ குலத் தோன்றலின் ஆசைக்கு அப்போது மதிப்பே இல்லையா? உலகத்தில் எத்தனையோ இராஜ குலங்களில் எவ் வளவோ புகழ் பெற்ற கன்னிகைகள் உண்டு. இவளொருத்திக்கு இப்படிப் போட்டி ஏற்படவேண்டுமா?" என்று ஆதங்கம் கொண்டாள்.

புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி பழுவேட்டரையர் குலத்தில் பெண் கொண்டார். பின் வந்த அரிஞ்சயர் கொடும்பாளூர்ப் பெண்ணை மணந்து கொண்டார். இரண்டையும் சேர்த்து என் தம்பி செய்வான் என்று மாம்தட்டிச் சென்ற குந்தவைக்கு அதிர்ச்சி. தங்கள் வசமே இருந்த விதி இப்போது கட்சி மாறுகிறதா என்று கூடத் தோன்றியது.

இப்போது ஏறக்குறைய பொன்னியின் செல்வருடன் சரி சமச் சமர் புரிய ஆயத்தமாகி யிருந்தான் மாறன் என்பதை உணர்ந்த குந்தவைக்குத்தான் தோல்வியைத் தழுவியதாகவே தோன்றியது.

தம்பியிடம் என்ன சொல்வது எனச் சிந்திக்கத் தொடங்கினாள்.

"உன்னுடைய பரிசுத்தமான அன்புக்கு அவள் ஏற்றவள் அல்லவே!" என்று சமாதானம் சொல்ல வேண்டியதுதான்.

❖ ❖ ❖



## அத்தியாயம் நூற்று எட்டு
## பழுவூர் அரண்மனையில்!

வேளக்காரப் படையின் தலைவர் பதவி யென்பது மிக [illegible]மான பதவி. சோழநாட்டுச் சக்கரவர்த்தியுடன் நெருங்கிய [illegible] ஏற்படுத்திக் கொள்ளும் பதவிகூட. தினந்தோறும் [illegible] வேலை நிமித்தமாக சந்திக்கும் படைத்தலைவன், சில [illegible]ளிலேயே சாம்ராஜ்யத்தில் மிகவும் சக்தி வாய்ந்தவனாகி [illegible]. அது மட்டுமல்ல, அரசர் தன் சாம்ராஜ்யத்தைச் சுற்றிப் [illegible] செல்லும் போதெல்லாம், அவருடன் கூடவே செல்லும் [illegible]ம் கிட்டும். அரசரின் நிழல் போல நாட்டு மக்கள் [illegible]ம் அவனைப் பார்ப்பார்கள், பாவிப்பார்கள்.

[illegible] வயதில் மிகப் பெரிய பதவியேற்றவுடன், மாறன் [illegible] பெரியோர்களின் மனம் கோணாமல் நடந்து கொள்ள [illegible]ம் என்று பிரதமர் நினைத்தார். அவர் ஆசைப்படி [illegible] நிமித்தமாகச் சோழ நாட்டின் முக்கியமானவர்களைச் [illegible] அவரவர் வீட்டில் சந்தித்தான் மாறன். அவன் முதலில் [illegible]டது பொன்னியின் செல்வரைப் பார்க்க வேண்டும் [illegible] அவரிடம் ஆசி பெற வேண்டும் என்றுதான். ஆனால், [illegible]னியின் செல்வர் எங்கு சென்றார் என்றே யாருக்கும் தெரிய [illegible] அதனால் முதலில் பிரதமர் அநிருத்தரைச் சந்தித்தான்.

[illegible] அவனை அமர வைத்துப் பல அறிவுரைகள் [illegible]. "கனவிலும் சோழருக்குக் கெடுதல் எண்ண [illegible] என்று உன் தந்தை எப்படி அரசியலில் ஈடும் இணையும் [illegible] பெருமை வாய்ந்தவரோ, அதே போல் நீயும் சிறந்து [illegible]. மிக்க சந்தோஷம். உன்னுடைய வீரசாகசங்கள் [illegible] மகோன்னதத்தை அடைந்து விட்டன என்றுதான் உயர் [illegible]வெல்லாம் உன்னைத் தேடி வருகின்றன!" என்றார்.

[illegible], "தற்போது வேளக்காரப் படைத் தலைவனாய் நீ [illegible] மகத்தான பிரம்மாண்டமான காரியங்கள் [illegible] என்று நீ அடிமனதில் நினைக்கலாம். அதன் காரணம் [illegible] நாட்டில் அளவில்லா அமைதி நிலவுகிறது என்பதுதான். [illegible] பதவியைத் தற்காலிகமானதாக ஏற்றுக்கொள். பின் இதை [illegible] பெரிய பதவிகள் உனக்காகக் காத்திருக்கின்றன. அது [illegible], வேளக்காரப் படையில் இரண்டு லாபங்கள். சக்கர [illegible]டன் அந்தரங்கம் ஏற்படும். நாட்டின் பார்வையும், படை [illegible] மரியாதையும் கிட்டும்!" என்றார்.

எனினும் ஒரு வார்த்தை எச்சரித்தார். "எதிரியை அடியோடு அழித்தாகிவிட்டது என்ற மெத்தனம் இருக்கக் கூடாது. பாண்டியரால் இனி என்ன அபாயம் என்று இருந்துவிடக்கூடாது. வேளக்காரப்படைத் தலைவருக்கு எப்போதும் கண்ணும், காதும் திறந்திருக்க வேண்டும். யுத்த காலத்தில் மட்டுமல்ல, மற்றக் காலங்களிலும் இது மிகவும் அவசியம்" என்றார்

அடுத்தபடியாகத் தஞ்சையில் இருந்த மற்ற, சிற்றரசர்களையும் சென்று தரிசித்தான் மாறன். அரசனின் மாமன், தென்னவன் மழவராயர், குன்றத்தூர்க் கிழார், வணங்காமுடி முனையரையர், அஞ்சாத சிங்க முத்தரையர், இரட்டைக் குடை ராஜாளியார் - இவர்கள் எல்லாரும் மாறனின் பதவியேற்பையொட்டித் தஞ்சைக்கு வந்திருந்தார்கள் என மாறனுக்குத் தெரியும். அனைவரும் சம்புவராயர் குலத்தின் நெடுநாள் நண்பர்கள்.

சீரழிந்தது நண்பர் குலம் என்று வருத்தப்பட்ட அனைவரும் மீண்டும் சம்புவராயர் குலம் சமுதாய ஏணியில் ஏறியதை நேரில் காணத் தஞ்சைக்கு விரைந்தோடி வந்தனர். விழா முடிந்தவுடன் தஞ்சையிலிருந்த அவரவர் மாளிகைகளில் தங்கினர்.

அனைவரையும் சென்று பார்த்தான் மாறன். ஆசிர்வாதம் பெற்றான். மரியாதை செலுத்தச் சென்ற எல்லாச் சிற்றசர்களின் வீடுகளிலும் சகல விதமான ராஜோபசாரங்களும் அவனுக்கு நடைபெற்றன. ஆனால், முக்கியமாக எல்லார் வீட்டிலும் ஒரு ஒற்றுமை. தற்செயலாகராந்த வீட்டிலிருந்த வயதுப் பெண்களெல்லாம் அவன் கண்களில் படும்படி நேர்ந்தது.

எல்லாருமே பழமையான அரச குலத்துடன் திருமண சம்பந்தம் செய்து கொள்ள விரும்புவார்கள் அல்லவா? அதுவும் அந்தக் குலத்தில் பெரும் பதவி ஏற்றிருக்கும் இளவரசனுக்குத் தம் வீட்டுப் பெண்ணைத் திருமணம் செய்து வைக்க மிகவும் ஆசை கொள்வார்கள். மாறனே வீட்டு மாப்பிள்ளையாய் வரவேண்டும் என்று பல சிற்றசர்களுக்கு ஆசை. அந்த மனோரதம் நிறைவேறும் என்ற நம்பிக்கை பலருக்கு.

போதாத காலம் என்பதால் இவ்வளவு நாள் கஷ்டப்பட்டான். நல்ல நேரம் வந்தவுடன், மிக அரிய ஆற்றல்கள் படைக்கக் கூடியவன் என்று நிரூபித்துவிட்டான். இப்படி அதி வேகத்தில் அரசியல் ஏணியில் கிடு கிடுவென்று ஏறி வேளக்காரப்படைத் தலைவராய் வருவதென்பது சாமான்யமான காரியமா? எல்லாருக்கும் பொதுவான சவாலாய் அரை நூற்றாண்டாக இருந்த காரியத்தை வேறு செய்து முடித்தவன் மாறன். பிரம்மப் பிரயத்தன



[illegible] காரியம் என்று நினைத்ததைச் சாதித்து இன்று சரித்திரத்தை [illegible]யிருக்கிறான். பழுவூர்ப் பெண்ணைக் காப்பாற்றும் சாக்கில் பாண்டியர் பொக்கிஷத்தையுமல்லவா கண்டுபிடித்து விட்டான்! அதற்கு, எத்தனை பலம் வேண்டும்! எத்தனை வீரம் வேண்டும்! இனி இன்னும் பல பெரும் பதவிகளுக்கு இவன் போவான் என்ற [illegible] போட்டனர்.

ஆனால், மாறனின் மனதில் அந்த மாளிகைகளில் நடந்தவை எதுவும் பதியவே யில்லை. காலையில் கிளம்பும் போதே [illegible]யாகத்தான் பழுவூர் அரண்மனைக்குச் செல்வதென்று முடிவு செய்திருந்தான். மாலையில் பழுவேட்டரையரைத் தரிசிக்க [illegible] என்ற அவன் முடிவுக்கு வேறு காரணமும் நாம் கற்பிக்கலாம்.

திட்டத்தின்படி மாலையில் பழுவூர் அரண்மனைக்குச் சென்றான் மாறன். புரவியிலிருந்து கீழிறங்கும் போதே கட்டடத்தின் மேல் பனை மரக் கொடி பறந்து கொண்டிருந்தது அவன் கண்களில் பட்டது. அது போலவே வாசற் கதவின் மேல் தங்கத்தில் [illegible] பூசியிருந்த கையளவு பனைமரம் ஒன்றுமிருந்தது.

இவற்றைப் பார்த்தவுடன் போன முறை இந்த அரண்மனைக்கு வந்ததை நினைத்துக் கொண்டான் மாறன். அப்போது, பழுவேட்டரையரும் அவனும் ஒருவர் மீது ஒருவர் விழுந்து [illegible]டிக்கொள்ளத்தான் இல்லை.

"இப்போது எப்படி நடந்து கொள்வாரோ?" என்று நினைத்தான்.

[illegible] சேவகர்கள் உள்ளே மரியாதையுடன் அழைத்துச் சென்றனர். பெரியவர் வெகு நேரமாக அவனுக்காகக் காத்திருந்தது போலத் தோன்றியது.

"இளவரசே! வர வேண்டும். அப்பாவையும் கூட்டி வந்திருக்கலாம் அல்லவா?" என்றார்.

"இல்லை, ஐயா, அப்பா உடனே ஊர் சென்று விட்டார்" என்றான் மாறன், அவனுக்காகக் கொடுக்கப்பட்ட இருக்கையில் அமர்ந்தபடி.

மாறன் நுழைந்ததும் குற்றேவல் செய்யும் பெண்கள் பெரும் பரபரப்புடன் இங்கும் அங்குமாய் ஓடினர். அரண்மனையே ஒரே [illegible]டைந்திருந்தது. இளவரசியைக் காப்பாற்றிய இந்த [illegible] விரைவில் வீட்டின் மாப்பிள்ளையாக வரப் போகிறார் என்று அநேகமாக எல்லாருக்கும் தோன்றிவிட்டது. இனித் தடை [illegible] சம்புவராயருக்கு அவர்கள் எஜமானியை மணம் செய்து கொடுக்க அரசர் இசையலாம் என்று யூகித்து விட்டனர். அதனால்

தான் ஒரே பரபரப்பு. ஆனால், இங்கும் அங்குமாய்ப் பாய்ந்த மாறனின் கண்களுக்கு லோகா மட்டும் தென்படவேயில்லை.

வெகு நேரம் பழுவேட்டரையர் தன் பேச்சை நிறுத்தவே யில்லை. "விந்திய மலை வரை வியாபித்திருந்த சோழ தேசத்தின் அதிபதி உத்தமர். அவருக்குக் காவல் நீர். ஒரு காலத்தில் என் அண்ணன் வகுத்த பதவி. அது நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் இருக்கிறது" என்றார்.

"இந்த வேளக்காரப் படைத் தலைவர் பதவியைக் குறித்துப் பேசும் போது எவ்வளவு பெருமிதத்துடன் பேசுகிறார்! அவர் குரல் எப்படித் தழுதழுத்து உருக்கம் பெறுகிறது!......" என்றெல்லாம் மாறனுக்குத் தோன்றவேயில்லை. பழுவேட்டரையருடைய பேச்சைக் கேட்கும் போது கடை கண்ணால் அவர் மகளைத் தேடினான். பழுவூராரின் பேச்சுக்கு அவ்வப்போது தலையை மட்டும் அசைத்து வைத்தான்.

திடீரென அவனுக்கு ஒரு பழைய நினைவு மனதின் ஓரமாக எழுந்து நின்றது. மாறன் போன முறை இந்த மாளிகைக்கு வந்ததை நினைவு கொண்டான். அன்று பழுவூர்க் குலத்தின் மீது அவன் ரௌத்ராகாரமான கோபம் கொண்டிருந்தான். அப்போதுதான் அகல் விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் கோயில் விக்கிரகங்களை யொத்த அவளுடைய காட்சியைக் கண்டு சிறிது நேரம் பிரமித்துப் போனான். அவளை விளக்கொளியில் கண்டபின்பே சாந்த மடைந்தான். அவள் தந்தையின் பேரிலே அவனுக்கிருந்த கோபத் தைக் குறைத்தது அவள் அங்கிருந்ததே.

அது மட்டுமல்ல, மாய ரூப மோஹினி போல் கதவின் ஓரம் நின்றிருந்த அவளைக் கண்டவுடன்தான் முக்கிய முடிவெடுத் தான். இனித் தஞ்சையை விட்டுச் செல்வதில்லையென்று. அவளைக் கதவோரம் அகல் விளக்கின் ஒளியில் பார்த்தது நேற்று நடந்ததுபோல் ஞாபகம் வந்தது. உடனே அதே இடத்தை இன்றும் நோக்கினான். அவன் நினைத்ததும் சரியே! லோகா இன்றும் அதே இடத்தில்தான் நின்றாள். அவன் திடீரென அவள் பக்கம் திரும்பியவுடன் அவளுடைய செவ்விதழ்களில் விரிந்த புன்னகை அவள் மனதிலிருந்த தன் பிரியத்தைக் காட்டுவதாய் இருந்தது.

அதற்குப் பின் மாறனின் செவிகளில் பழுவேட்டரையரின் வார்த்தைகள் பலவும் புகவே யில்லை. அவனுடைய கண்களும் கருத்தும் முழுவதும் காதலியின் முகத்திலேயே லயித்திருந்தன. அவன் கண்கள் லோகாவின் கண்களுடன் அந்தரங்கம் பேசுவதி லேயே பெரிதும் ஈடுபட்டிருந்தன.



[illegible] கொண்ட பெண்களுக்குத் தனியாக ஒரு சோபை வந்து [illegible]து என்று பெண்குலத்தை நன்றாய்க் கவனிப்பவருக்குத் [illegible]யும். நாணத்தில் தலை குனிந்திருந்த லோகாவைப் பார்த்த [illegible] பலவகை ஞாபகங்கள் மாறனுக்கு வந்தன. இவளுக்காகக் [illegible] சென்று அவளை மீட்ட பின், கத்திக் குத்துப் பெற்றது. [illegible]று வெள்ளத்திலிருந்து ஒதுங்கிக் கிடந்தபோது தன்னை [illegible] வந்து காப்பாற்றியது, பின் சுரங்கத்தில் இருவருமாய்ச் [illegible]து பாண்டியப் பொக்கிஷத்தைக் கண்டுபிடித்தது. 'இவ்வள [illegible] விதியின் விளையாடல்களா? இல்லை, தோர்வையாய் [illegible]படும் என் வாழ்க்கையின் பாதையா?' என்று தன்னைத் [illegible] வினவினான்.

[illegible] பேசுவதற்கெல்லாம் இவன் சும்மா தலையாட்டுகிறானே [illegible] மனம் ஒன்றி கவனிக்கவில்லை என்று பெரியவர் புரிந்து [illegible]டார் போலும். அவன் நினைவுகளைக் கலைக்கும் [illegible] "அம்மா லோகா, சம்புவராயர் வந்திருக்கிறார்!" என்று [illegible] கத்தினார் பழுவேட்டரையர்.

[illegible] அதற்காகவே காத்திருந்தது போல ஓடி வந்தாள் லோகா. [illegible]து சலங்கை யொலி காதில் இனிய சங்கீதம் போல [illegible]க்கு இருந்தது. தன் தந்தையின் அருகே வந்து நின்றவள் [illegible]லால் நிமிர்ந்துகூடப் பார்க்க முடியாதவள் போலத் [illegible] பார்த்துக் கொண்டு நின்றாள்.

"[illegible]! இரவெல்லாம் என் மடியில் படுத்து உறங்கிவிட்டு இன்று [illegible]யின் அருகில் போலி நாணத்தைப் பார்!' என்று சொல்ல [illegible]த்தான்.

"சரி அம்மா, உள்ளே சென்று சம்புவராயர் பருக ஏதாவது [illegible] வா" என்றார் அரசர்.

"இல்லை ஐயா, நான் கிளம்புகிறேன்" என்றான் மாறன்.

"[illegible] இளவரசே, நீர் சாப்பிடாமல் சென்றால் அப்பாவுக்கு [illegible] நொந்துவிடும்" என்றாள் லோகா கள்ளச் சிரிப்புடன்.

"அதற்கென்ன இளவரசி, ஒரு நாள் வந்து விருந்தே [illegible]கிறேன்!" என்று மர்மப் பார்வை கொண்டு லோகாவைப் [illegible]தான் அவன். லோகா வெட்கித் தலை குனிந்தாள்.

இருவரின் மறைமுக மொழி புரியாமல் பழுவேட்டரையர் [illegible] மட்டும் ஆட்டினார்.

இரு கை கூப்பி வணக்கம் செலுத்திவிட்டு எழுந்தான் மாறன். பழுவேட்டரையரும் எழுந்தார்.

எழுந்தவுடன் அவரை நோக்கிப் பேசினான் மாறன், "ஐயா உமது விட்டுத்தோட்டத்தில் வந்து முடியும் சுரங்கத்தின் வாயினை மூடியாயிற்று என்று பிரதமர் சொன்னார். கோட்டைக்கு வெளி விருந்து வரும் சுரங்கம் என்பதால் அதனை நான் சோதனையி வேண்டுமே!" என்றான்.

"அதற்கென்ன, நானும் உம்முடன் வருகிறேன். இல்லை யாரையாவது உடன் அனுப்புகிறேன்!" என்றார் அரசர்.

பதற்றம் கொண்டான் மாறன். "இல்லை ஐயா, வேண்டா அதைச் சோதனை செய்ய இன்னும் ஒருவரை அங்கு வர சொல்லியிருக்கிறேன்" என்று ஒரு அர்த்தமுள்ள பார்வையுட லோகாவைப் பார்த்தான்.

லோகாவுக்கு ஆனந்தம். ஆனால், அதை விடச் சிரிப் காதலிக்கும் போது பிள்ளைகள் பெற்றோரை ஏமாற்றுவதை பேரானந்தமாகக் கொள்வது இயல்புதானே. அவளுக்குப் புரிந்த தன்னை அங்கு வரும்படி சம்புவராயன் குறிப்புக் கொடுக்கிறா என்று.

கிளம்பும் மாறனைப் பார்த்து, "தம்பி! நீ நீடூழி வாழ வேண்டும்!" என்று வாழ்த்தினார் பழுவூரார். அரசரின் உள்ளத்தி அடியிலிருந்து வரும் உண்மைகள் அவ்வாழ்த்துக்கள் என்று தெரிந்து கொண்டான் மாறன்.

அந்த தீரக்கிழவர் பெரிய பழுவேட்டரையர் உபயோகித் கத்தியொன்றையும் எடுத்து வைத்ததாகச் சொன்னார். "கொல்ல ஷிடம் அனுப்பியிருக்கிறேன். வந்தவுடன் கொடுத்து அனுப் கிறேன். அதை வைத்துக் கொள்ள நீயே தகுதியானவன்!" என்றார்.

அரண்மனையை விட்டு வெளிவந்த மாறன் பழுவூர் தோட்டத்தைச் சுற்றிப் பார்ப்பது போல உள்ளே நுழைந்தான், நேராக சுரங்க வாசலருகே சென்றான். அதனருகே மண்டபம் இருந்தது. அதில் அமர்ந்தான்.

மடலவிழ்ந்து மணம் விரித்த மலர்கள் நிறைந்த நந்தவனம் நடுவே அவர்கள் இருவரும் வெளிவந்த சுரங்கப் பாதை இருந்தது. சோழ நாட்டு அதிகாரிகள் சுரங்கத்துக்குள் சென்று எல்லாச் செல்வங்களையும் மீட்டு வந்து விட்டனர். இரு புறமும் சுரங்க வழியை மண் கொட்டி, எதிரி இனி உபயோகிக்காமல் மூடி விட்டனர். அது மட்டுமல்ல பழுவூர் அரண்மனைச் சுரங்க வாசல் இப்போது சுண்ணாம்பு வைத்துப் பூசப்பெற்றிருந்தது.

நிச்சயமாக இந்த இடத்தில்தான் அவன் அமர்ந்திருப்பான் என்று அவளுக்குத் தெரியும். அதனால், சுரங்கத்தின் ஓரமாகக் காத்திருந்



[illegible] மாறன். பாதச் சலங்கை ஒலி எப்போது கேட்கும் என்று [illegible] காத்துக் கொண்டிருந்தான். லோகா வராமலிருந்து [illegible]ளோ என்ற பயமும் அவனுடைய மனத்தில் அடிக்கடி [illegible]க் கொண்டிருந்தது.

[illegible] ஏற்பட்ட பதற்றத்தைத் தணிக்க நந்தவனத்தைக் [illegible]தான். சுற்றிலும் இருந்த புது மலர்களின் நறுமணம் பரவி [illegible] தலையைக் கிறுகிறுக்கச் செய்தது. இயற்கையன்னை அந்தத் [illegible]த்தை ஆசையாசையாய் அலங்கரித்திருந்தாள். அந்தத் [illegible]த்துக்குத்தான் எத்தனை அழகிய பச்சைப் புடைவைகளை [illegible]யிருந்தாள்! எப்படியெல்லாம் வண்ண மலர்களைச் [illegible]ளாள்! எவ்விதமெல்லாம் பரிமள சுகந்தங்களைச் செடி [illegible] நடுவே ஒளித்து வைத்திருந்தாள்!

[illegible]வனத்தில் ஒரு நீர்த் தேக்கம். அதில் தங்க நிற மீன்கள் [illegible]மாய் நீந்திக் கொண்டிருந்தன. குளத்தில் விழுந்த [illegible]ளியில் ஜொலித்தன. கரையில் இருப்பவர்களைப் பற்றிக் [illegible]யில்லாமல் அவை மிகக் குதூகலமாய் இருப்பதாகத் [illegible] முதலில், இதையெல்லாம் மாறனால் ரசிக்காமல் இருக்க [illegible]வில்லை. பின் திடீரென இந்த தாவரங்களையும் மீன்களை [illegible] ரசிக்கவா இங்கு வந்தோம் என்ற சலிப்புத் தட்டியது.

[illegible]காரத் தோட்டத்தில் ஒவ்வொரு செடியாய் உற்றுப் [illegible] சலித்துப் போனது மாறனுக்கு. குயிலுக்கு யாழினும் [illegible] குரலுண்டு. எனினும் அதை எவ்வளவு நேரம் ரசிக்க [illegible]? இயற்கையை ரசிக்கத் தெரிந்தவன்தான். ஆனால், [illegible] தருணமா இது?

'[illegible] போன்றவள் வர மாட்டாளோ?' என்ற சந்தேகம் [illegible] வந்தது.

[illegible] சமீபத்தில் காலடிச் சப்தம் கேட்டவுடன் நினைவுகள் [illegible]. மெல்ல மெல்லத் திரும்பிப் பார்த்துக் கொண்டே [illegible] வந்தாள்.

[illegible] நடந்த போதெல்லாம் அவளுடைய காற்சிலம்பு "[illegible] கலீர்" என்று சப்தித்தது. கை வளையல்கள் குலுங்கும் சப்த [illegible] கேட்டது. அந்தத் திசையை நோக்கித் திரும்பினான் இளம் [illegible]ராயன். சற்று நேரத்துக்கெல்லாம் காதலனைக் காக்கவிட்டு [illegible]விட்டாள் காதலி.

[illegible] தெரியாத ஆனந்தம் ஏற்பட்டது மாறனுக்கு. இரு [illegible] தன் வாழ்வை ஒளிமயமாக்க வந்தவள் இவள். அவள் [illegible]தான் என்ன மந்தகாசம்? அவளுடைய சௌந்தரியம்

முன்னைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகமாயிருப்பது எப்படி? காதலினாலா?

காதல் அவனுக்கு அதுவரையில் அனுபவித்தறியாத ஓர் அதிசயமான உவகை உணர்ச்சியை அளித்துக் கொண்டிருந்தது. காதலில் இருப்பவருக்கு இந்த மானிட உலகிலிருந்து வேறோர் அற்புதமான சொப்பனலோகத்துக்குப் போனது போலிருக்கும். விஸ்தாரமான இந்த உலகில், அதில் சுற்றித் திரியும் ஜனக் கூட்டத்தின் நடுவே, நமக்கென ஒருத்தி பிறந்து வளர்ந்து சரியான நேரத்தில் கண்ணில் படுகிறாளே. ஆகா! விதியின் விளையாட்டே அபூர்வமானது என்று நினைக்கத் தோன்றும்.

மாறனது கண்ணுக்கு எட்டிய தூரம் இன்பமான வாழ்க்கைதான் தெரிந்தது. நியாயம்தானே. படவேண்டிய கஷ்டமெல்லாம் ஐந்து ஆண்டுகளாகப் பட்டாயிற்று.

செடிகளுக்கு நடுவே காந்திமயமான ஒரு பெண்ணின் முகம் தெரிந்தது. மேகத் திரை விலகியதும் பளீரென்று ஒளி வீசுவது போல் ஒரு புன்னகை பூத்தாள். புன்சிரிப்பில் பற்களெல்லாம் நிலவொளியில் நல்முத்துக்களைப் போல் பிரகாசித்தன. தன் மீது சற்றுக் கோபமாய் இருந்தான் காதலன் என்று அறிந்து கொண்டாள்.

''என்ன வேளக்காரப் படைத் தலைவரே! ஒரு செய்தி கேள்விப்பட்டேனே! சம்புவராயனுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்று சிற்றரசர் வீட்டுப் பெண்களெல்லாம் துடியாய்த் துடிக்கின்றனராம்!'' என்று கேலி செய்தாள்.

''ஒரு சிற்றரசனின் பெண்ணுடன் சிநேகம் கொள்வதே இவ்வளவு கஷ்டமாயிருக்கிறது!'' என்று அவன் சலித்துக் கொண்டான்.

''அப்படி என்ன கஷ்டமாம்?'' புன்னகையுடன் வினவினாள்.

''இப்படிக் காக்க வைத்து விட்டாயே!''

''பாவம்! புதுப் பதவி அடைந்து, ஓயாமல் உழைக்கப் போகிறார். சற்று ஆறுதலாய்ப் பேசிவிட்டு வருவோம் என்றுதான் நினைத்தேன். அதனால்தான் உமது சமிக்ஞைக்கும் செய்திக்கும் மாறு சொல்ல மனமின்றி வந்தேன்'' என்றாள்.

''பின் ஏன் தாமதம்?'' என்றான்.

''நீர் சென்றவுடன் இளம் சம்புவராயனின் சரித்திரத்தைப் பாடத் தொடங்கி விட்டார் அப்பா. இன்னும் கொஞ்ச நேரம் அவருடன் நீர் இருந்திருக்கலாம் என்று வருத்தப்பட்டார். வாருங்கள் தந்தையே, நமது தோட்டத்தில் புதர் மறைவில்தான் அவர்



[illegible]க்கிறார். அவர் இதைக் கேட்க சந்தோஷப்படுவார் என்று [illegible] அவரையும் அழைத்து வந்திருக்க வேண்டும்'' என்று [illegible] சிரித்தாள் லோகமாதேவி.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று ஒன்பது

## சிருங்காரத் தோட்டத்தில் சந்திப்பு

தோட்டத்தில் ஒளிந்திருந்த காதலனைக் காண தன் தந்தை [illegible] அழைத்து வந்திருப்பேன் என்று வேடிக்கையாக மிரட்டி [illegible] காதலி நகைத்தாள்.

[illegible]ளநங்கையின் இளநகையால் அந்த இருட்டுப் பிரதேசம் [illegible] போலிருந்தது. இரவில் மலரும் பூக்களின் இனிய [illegible] போல அவள் புன்னகை அபூர்வ சுகமயக்கத்தை மாறனுக்கு [illegible]கியது.

[illegible]முத்தை வென்ற அவள் இதழ்கள் திறந்து முத்துசரத்தை [illegible] புன்னகை ஒன்று ஏற்பட்டது என்று கவிதை எழுதலாம் [illegible] ரசனையில் திளைத்த மாறனுக்கு. அவனைச் [illegible] குற்றமில்லை. ரசிகத் தன்மையுள்ளவர்கள் மட்டுமே [illegible]ளாக ஆக முடியும் என்று எழுதாத சட்டம் ஒன்று உண்டு. [illegible]வனின் படைப்பிலே.

[illegible] நயமாக பேச்சைத் தொடரலாம் என்றிருந்தான் மாறன். [illegible] மாறனுக்கு அதற்குமுன்னால் முக்கியமாக வேறு விஷயம் [illegible] தெரிய வேண்டியிருந்தது. சற்று நேரத்துக்கு முன் தன்னைச் [illegible] பழுவேட்டரையர் தன் மேல் என்ன அபிப்பிராயம் [illegible] என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டான். பழு[illegible]ரையரின் அபிப்பிராயம் அவன் காதல் எண்ணம் நிறை[illegible] பாலமாயும் இருக்கலாம், பாதையில் பாராங்கல்லாகவும் [illegible]லாம் என்று தெரியும் அவனுக்கு.

''[illegible] அப்பா என்ன சொன்னார் ?'' என்றான்.

''[illegible] பதவிக்கு தகுதிவாய்ந்தவர் இளம் சம்புவராயனை [illegible] வேறு யாரும் இல்லை'' என்றார்.

''[illegible] பதவி?''

''ஏன்? வேளக்காரப் படைத் தலைவர் பதவிதான். வேறென்ன பதவி வேண்டுமாம் சம்புவராயருக்கு?'' என்றாள், முகத்தில் கேள்விக்குறியுடன்.

''இல்லை, மாப்பிள்ளைப் பதவியைப் பற்றிப் பேசினாரோ என்று நினைத்தேன்'' என முணுமுணுத்தான் மாறன். உண்மை தான். இந்த அபூர்வமான தேவகன்னிகையின் உள்ளத்தில் ஒரு இடம் கிட்டுமானால், இப்போது கிடைத்த வேளகாரப்படையின் தலைவர் பதவி கூட அவ்வளவாக அவனுக்கு இனிக்கவில்லை.

''சரி, இப்போது என்னை எதற்காக வரச்சொன்னீர்?'' வினவினாள் பழுவூர் இளவரசி பொய்க் கோபத்துடன்.

''உன்னைப் பார்த்துப் பல யுகம் ஆகிவிட்ட மாதிரிதான் தோன்றியது. அதற்காகத்தான்'' என்றான் மாறன்.

''நேற்றுக்கு முன் தினம் என்னைத் தளிக்குலத்தார் ஆலயத்தில் பார்த்தீர்கள். நேற்று அரசவையில் என்னைப் பார்த்தீர்கள். இப்போதுதான் என் வீட்டுக்கு வந்து என்னை என் தந்தையுடன் பார்த்தீர். இது போதாதா?'' என்று சொல்லிச் சிரித்தாள்.

''ஓகோ அப்படியா? ஆனாலும், நான் என்ன செய்ய முடியும்! உன்னுடனேயே இருக்க வேண்டும் போலிருக்கிறதே'' என்று சமாளித்தான் சம்புவராயன்.

''இருப்பீர்கள், இருப்பீர்கள்'' என்று ஏளனமாய் சொல்லிவிட்டு அமர்ந்த இடத்தைச் சுற்றிப்பார்த்தாள் லோகா. காதலன் சுரங்கத்தின் ஓரமாகக் காத்திருந்தான் என்பதைக் கண்டபின் அவளுக்கு வாய் கொள்ளாச் சிரிப்பு.

''என்ன சம்புவராயரே, இந்தச் சுரங்கத்தை விடுவதாய் இல்லை நீர்'' என்றாள். ''தெரியாதா? உள்ளே ஒன்றும் இல்லை. இந்தச் சுரங்கத்துக்குள் சென்று தங்கத்தையும் வைரத்தையும் மற்ற விலையுயர்ந்த பொருட்களையும் மீட்டு வந்துவிட்டனர் சோழ நாட்டு அதிகாரிகள்'' என்றாள்.

''வெளியே எடுத்து வரும் போது யாரையும் பார்க்க அனுமதிக்கவில்லை. எனினும் என் தோழி ஒரு மரத்தின் பின் ஒளிந்திருந்து இருபது கூடைகள் நிறையப் பொக்கிஷம் வந்தது என்று கணக்கிட்டாள்''

சோழ நாட்டில் ஒரு சட்டம் உண்டு. தரைக்கடியில் புதையலைக் கண்டு பிடிப்பவருக்குப் பாதிக்குப் பாதி கொடுத்துவிட்டு அரசனுக்கு மீதியென்று இருந்தது. ஆனால் அரசியல் முக்கியத்துவத்தைக் கருதி இந்த முறை அந்தச் சட்டம் கடைபிடிக்கப்படவில்லை. மாறனுக்கு அனைத்தும் தெரியும்.



[illegible]னால் தனக்கு வந்த புகழும் பதவியும் அதை ஈடு செய்து [illegible] மாறனுக்கு. ஆனால், முக்கியமாக லோகா உதவியில்லை [illegible] அதைச் சாதித்திருக்க முடியாது என்று அவனுக்குத் [illegible] முதலில் இவள் காட்டுக்கு கடத்தப்பட்டது, பின் அவன் [illegible]மாய் குற்றுயிராய் கிடந்தப் போது வந்து அவள் [illegible] காப்பாற்றியது, பின் பாண்டியரிடம் தப்பிவந்தபோது [illegible] கோயிலில் குழிக்குள் அவள் விழுந்தது, கடைசியாக [illegible]ற்றிற்கும் மகுடம் சூட்டுவது போல அந்த அபூர்வ [illegible] உடைத்தெறிந்ததும் அவளே, என்று எல்லாம் [illegible] தான் நடந்தது.

[illegible] இந்த கிரீடம் விஷயத்தில் முடிச்சைக் கட்டவிழ்த்தாய். [illegible] வரவேண்டிய புகழெல்லாம் எனக்கு இப்போது [illegible]'' என்றான்.

[illegible], நடந்தது வெளியே தெரிந்திருந்தால் என்னை வேளக் [illegible]டைத் தலைவியாய் நியமித்துப் புரட்சிச் செய்திருப்பார் [illegible] விட்டுத் தள்ளுங்கள் சம்புவராயரே! உமக்கு வந்தால் [illegible] எனக்கு வந்தால் என்ன? மொத்தத்தில் கிரீடத்தையும் மற்ற [illegible]களையும் நமக்குக் கொடுக்கவில்லை. அதில் பாதிப் பங்கு [illegible] கேட்டுவோம் என்று பயந்து இந்தப் பெரும் பதவியை [illegible] கொடுத்துவிட்டார்கள் போல'' என்றுச் சொல்லிச் [illegible]தாள்.

[illegible]அந்தக் கிரீடத்துக்கு வேறு வேலை வரப் போகிறது. அரசல் [illegible] கேள்விப்பட்டேன். அதற்கு உரியவரிடம் அது சென்ற [illegible] போகிறது என்று பேச்சு அடிபடுகிறது '' என்றான் மாறன்.

[illegible] கண்ணுடன் அவனைப் பார்த்தாள் லோகா.

[illegible] மேல் என்னிடம் கேட்காதே. அவர்கள் நினைப்பது [illegible] என்று தெரியவில்லை. ஆனால் என் நோக்கம் எளிதில் [illegible] அந்த கிரீடத்தினால்'' என்றான்.

[illegible] கடம்பூர்க் கிரீடம் அவ்வளவு அழகாக இருக்குமா? [illegible] கேட்கிறாய் ?''

''இல்லை, தெரிந்து கொள்ளலாம் என்றுதான்'' என்றாள், சட் [illegible] பேச்சை மாற்றி ''எப்படியோ. இந்தச் சுரங்கத்துக்கு இனிப் [illegible] இல்லை'' என்றாள். ''வேணும் என்றால் இங்குதான் [illegible] மணி மகுடம் கிடைக்கப்பெற்றது என்று செதுக்கி [illegible]லாம். எதிர்காலத்து சந்ததியர் வந்து அதைப் பார்த்து அறிந்து [illegible]'' என்றான் சிரித்துக் கொண்டே.

உடனே மாறன் நகைத்தான் "வேறு பல விஷயங்கள் கூட அச்செய்தியில் செதுக்கலாம் " என்றான்.

"வேறு என்ன விஷயம்?" என்றாள் சற்றுச் சந்தேகத்துடன். "அப்படி ஒன்றும் நடக்கவில்லையே?"

"சரி, அதை விடு. நீயும் நானும் பாதாளத்தில் இருந்ததைப் பற்றி உன் தோழிகள் என்ன சொல்கிறார்கள்" மாறன் ஆர்வத்துடன் வினவினான்.

"தோழிகளில் பாதிப் பேர் சம்புவராயர் எப்போதும் முகத்தை உம்மென்று தொங்கப்போட்டுக் கொண்டிருப்பார். எப்படிப் பாதாளத்தில் உமக்குப் பொழுது போனது என்றார்கள். மீதிப் பேரோ 'அய்யய்யோ! கடம்பூர் இளவரசனா? வெகு நாளாக ஸ்த்ரீ ஸ்னேகமற்றவனாயிற்றே. உம்மை ஒன்றும் செய்யவில்லையே?' என்று வருத்தத்துடன் கேட்டார்கள்" என்றாள்.

பூரண சந்திரனை ஒத்த முககாந்தியையுடைய பெண் பேசும் போது அவன் செவிகளில் வார்த்தைகள் பலவும் புகவேயில்லை. புகுந்த வார்த்தைகளில் பலவும் புரியவும் இல்லை. அவனுடைய கண்களும் கருத்தும் முழுவதும் அவள் முகத்திலேயே ஈடுபட்டிருந்தன. அச்சமயம் பால் நிலவிலிருந்து முத்துச் சரம் போலக் கிரணங்கள் எழுந்தன. அதில் லோகாவின் முகம் ஜொலித்தது. ஆனால் அந்த வெளிச் சோலைக்குத்தான் நிலவும் அதன் ஒளியும் காரணம். காதல் கொண்ட பெண்களுக்குத் தனியாக ஒரு சோபை வருவது போல அவளுக்கும் வந்திருந்தது.

அவளையே உற்றுப் பார்த்துவிட்டு மாறன் பேசத்தொடங்கினான் "உன்னைப் பார்க்க ஆண்டவன் இரண்டே கண்களைக் கொடுத்துத் தன் கஞ்சதனத்தைக் காட்டிவிட்டானே என்று கோபப்பட்டேன். ஆனால் ஒன்று. உன்னைப் போல் ஒருத்தியைப் படைத்துவிட்டு நிறுத்தினானே. உலகம் தப்பியது" என்றான்.

"இவ்வளவு கவிதை நயமாகப் பேச எங்குதான் கற்றீர்கள்? முக்கியமாக இன்னமும் எவ்வளவு பெண்களிடம் இப்படிப் பேசிப் பயின்றீர்கள்?" என்றாள். "இல்லை, சம்புவராயருக்குக் கவிஞராகலாம் என்ற அபிப்பிராயம் வேறெல்லாம் உண்டா?" என வினவினாள்.

"நீ அருகில் இருந்தால் அது இல்லாமல் முடியுமா! அருவி போலக் கவிதை பொங்குமே?" என்று இன்னமும் புகழ்ந்தான்.

"ஆகா, உமதுப் புகழ்ச்சியைக் கேட்க இரண்டு காதுகளுடன் கடவுள் என் படைப்பை நிறுத்திக் கொண்டானே என்று



சங்கோஜப்படுகிறேன்" என்று சொல்லி நாணத்தை மறைக்கத் தரையை நோக்கினாள்.

நாணத்தில் தலை குனிந்த அவள் முகவாயைத் தூக்கிக் கண் [illegible] நேரே பார்த்தான். தலைவன் பார்வையைப் பொறுத்துக் [illegible]முடியாமல் மீண்டும் தலை குனிந்தாள்.

"ஏன் கண்மணி, என்னைப் பார்க்கவே சங்கோஜப்படுகிறாயே. பின் எப்படி வந்து தினம் தினம் என்னுடன் வாழ்க்கை நடத்தப் போகிறாய்?" என்று கேட்டான் மாறன்.

போலி அதிர்ச்சியுடன் அவள் "வாழ்க்கை நடத்தப் போகிறேனா? யார் சொன்னது? அவ்வப்போது வந்து என்னைப் [illegible]டையரிடமிருந்து காப்பாற்றியதற்கு நன்றிச் சொல்லிவிட்டுச் செல்வேன். அவ்வளவுதான். நீர்பாட்டுக்குக் கற்பனை உலகத்தில் சஞ்சரிக்காதீர்" என்று விளக்கினாள்.

புரியாமல் விழித்த அவனைப் பார்த்து "பேதைப் பெண்ணைத் தனியே அழைத்துக் காதலென்றும் கத்திரிக்காயென்றும் பேசுகிறீர். இது தர்மமா. சோழன் ஆட்சியில் இது அடுக்குமா?" என்றாள்.

அவனுக்கும் ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது "ஆமாம், இதுவரை என்னோடு நீ தனியாக இருந்ததேயில்லை."

அதற்கு பதில் சொல்லாமல் வேறு விஷயத்தைச் சுட்டிக் காட்டினாள். "இப்படிப் பழுவூர் அரண்மனைச் சுவர் ஏறிக் குதித்து வேளக்காரப்படைத்தலைவர் வருகிறார் என்று வெளியே தெரிந்தால் ஊர் சிரிக்கும்" என்றாள்.

"சிரித்தால் சிரிக்கட்டும். சுவரென்ன, உனக்காக இமயமலை மீது கூட ஏறுவேன்" என்றான் மாறன்.

சிரித்துவிட்டு அவன் கன்னத்தை அவளது மிருதுவான கையை [illegible] ஆசையாய் ஒரு தட்டுத் தட்டினாள் லோகா.

உடனே "ஸ்மரணையற்று கீழே விழுந்துவிடுவேன் போலிருக்கிறது. என் கையைப்பிடித்துக் கொள்" என்றான் மாறன் துடிப்பது போல நடித்து.

"ஆகா சமர்த்தனடா எனக்குக் கிட்டியவன்" என்று மெச்சியவள் சிரித்துக் கொண்டே. "இப்படியொரு சாக்குப் போக்கா?" என்றும் சொல்லிவிட்டுச் சற்று தள்ளி அமர்ந்தாள்.

சந்திரன் வானில் ஏற ஏற இருவருக்கும் பிரிந்து செல்லும் எண்ணமும் குறைந்தது. ஆனால் அன்னியோன்னியம் அதிகம் வளராமல், லோகா பார்த்துக்கொண்டாள்.

மாறன் வைத்த கண் வாங்காமல் அவள் முகத்தை ரசித்துக் கொண்டிருந்தான். அவன் உற்றுப் பார்த்ததைப் பொறுக்க முடியாமல் அவளும் "என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் ?" என்றாள்.

"ஒன்றும் இல்லை" என்று விஷயத்தைச் சொன்னான். "கரு வண்டு நிகர்த்த கண்கள் என்பார்கள் புலவர்கள். இவை தானா அவை. செந்தாமரை முகத்தைச் சுற்றி வரும் என்றும் சொல் வார்கள். நீ ஆச்சரியத்தில் கண் சிமிட்டுவதைப் பார்த்தால் அப்படியே தோன்றுகிறதே" என்று வியந்தான்.

"வாளை விட்டெறிந்துவிட்டு எழுது கோலைக் கையில் எடுத்து விடுவீர்கள் போல. ஐயா! புலவர்களுக்கு எல்லாம் பொருளாதாரப் பிரச்சனையிருக்கும். நீர் வேறு குடும்பஸ்தர் ஆகப்போகிறீர்" என்றாள்.

மாறன் விடுவதாய் இல்லை "இந்தத் தோட்டத்தில் பிரகாசிப் பது வெண்ணிலவின் ஒளியா. இல்லை உன் முகத்தில் வீசும் ஒளியா?" என்று வியந்தான்.

"என் முகத்தில் ஒளிவீசுமானால், நாம் ஏன் தீப்பந்தம் அணைந்து சுரங்கத்தில் தவித்தோம்?" என்று அவள் கேட்டுவிட்டு "அய்யா சம்புவராயரே. காதல் வந்தால் கவிதையும் கூட வரவேண்டும் என்றுச் சட்டமா? ஏன் உளறுகிறீர்கள்" என்றாள். ஆனால் மனதுக்குள் அவளுக்கு ஆனந்தம். பேரானந்தம்.

அவன் புகழுரையைத் தொடர்ந்தான் "கதைகளிலும், காவியங் களிலும் எத்தனையோ தேவலோகக் கன்னியரைப் பற்றி நான் கேட்டிருக்கிறேன், அவர்களில் யாரும் உனக்கு இணையாக மாட்டார்கள். உன்னைப் பார்க்கும் போதெல்லாம் உன்னை அப்படியே கண்களால் விழுங்கி விடவேண்டும் என்று எனக்கு பேராவல் உண்டாகும்" என்றான்.

"இந்தப் புகழுரைகளுக்கு நான் மயங்குபவள் அல்ல. அல்லவே அல்ல!"

"வெகு விரைவில் உன்னை அக்கினி சாட்சியாக மணந்த பின் மயங்கித்தான் ஆகவேண்டும்" என்றான்.

"அப்பப்பா அவசரத்தை பார். இப்போது தான் சம்புவராய ருக்குப் பார்ப்பதற்கு வேலை கிடைத்திருக்கிறது. அதற்குள் மணவாழ்க்கைக்கு ஆசைப்படுகிறார்" என்றாள்.

"உன்னைப் பட்டமகிஷியாகப் பெறுவதற்கு நான் எவ்வளவோ ஜன்மங்களில் பாக்கியம் செய்திருக்க வேண்டும் லோகா! " என்றான். இப்போதே லோகாவின் தந்த வர்ணக் கழுத்தில்



மாங்கல்யத்தைக் கட்டி கடம்பூர் அழைத்துச் செல்லவேண்டும் போல இருந்தது மாறனுக்கு

ஆனால் வம்புக்காகக் கேட்டான் "இப்படி என்னையே இழுத்து காலங்கழித்து வருகிறாயே. வா இப்போதே என் வீட்டுக்கு என்னுடன்" என்றான்.

"நன்றாய் இருக்கிறதே? எல்லாம் முறைப்படி தான் நடக்க வேண்டும். சர்வ லட்சணங்களும் பொருந்திய சம்புவராயர் குலத் தோன்றலே வந்து சகலரும் அறிய சம்பிரதாயமாக என்னை அழைத்து செல்ல வேண்டும். அப்புறம் தான் மற்றவையெல்லாம்" என்றாள்.

"நமக்கு எது தான் முறைப்படி நடந்தது. காதல் கூடப் பாதாளத்தில்" என்றான்

"ஐயா! சம்புவராயரே நான் முக்கியமாக எதற்காக வந்தேனோ, அந்தக் காரியத்தை இன்னும் சொல்லவில்லை."

"காரியம் எப்படி கூடியும்? காயா, பழமா?" என்று சிறுப் பிள்ளை போலக் காத்திருக்க வேண்டியிருக்கிறது. அதனால் கடம்பூர் சென்றவுடன். உமது பெற்றோரிடம் ஒரு வினாடியும் தாமதியாமல் திருமணத்துக்கு ஒப்புதல் வாங்கி வாருங்கள்" என்றாள். "நல்ல செய்திக்கு நான் காத்திருப்பேன்."

"அம்மணி! தங்களுடைய சித்தம் என்னுடையப் பாக்கியம்" என்றான். தன் தந்தை தாயிடம் ஒப்புதல் வாங்க எந்தக் கஷ்டமும் இராது என அவனுக்குத் தெரியும்.

"உன் அப்பாவை எப்படி சமாளிப்போம்?" என்றான்.

"அவருக்குத்தான் உம் மீது இப்போது நல்ல அபிப்பிராயம் வந்து விட்டதே! மகளைப் பத்திரமாகக் காப்பாற்றி அழைத்து வந்தீ இல்லவா? அவரே இப்போது உம்மை எப்படிச் சமாளிப்பது என்று யோசித்துக்கொண்டிருக்கிறார்" என்றாள்.

பழுவேட்டரையர் இன்று வீசும் காற்றோடு கப்பல் விட நினைக்கிறார். வெற்றிமாலை சூடி வந்தவனுக்குத் தன் பெண்ணைக் கொடுத்து அந்தப் பெருமையில் ஒரு பங்கைத் தன் குலத்துக்குச் சேர்க்க நினைக்கிறார் என்று புரிந்து கொண்டிருந்தனர் இருவரும்.

இன்பகரமான கனவாய் இருந்தது லோகாவுக்கு எல்லாம். தன் மனதுக்கு உகந்த மணாளனை அடையும் எந்தப் பெண்ணும் பாக்கியசாலிதான். மிக மகிழ்ச்சியுடன் இருந்தாள். சம்புவ ராயனை மணந்தால் கடம்பூர் செல்ல அவசியமில்லை. இங்கேயே

தஞ்சையில் இருக்கலாம். அப்பாவையு கவனித்துக் கொள்ளலாம். அதைப் போல அந்தச் சிறுவன் ரராஜேந்திரனையும் தினம் தினம் பார்க்கலாம்.

அப்போது திடீரென மாறனின் முகம் மாறியது. தனக்கு இவ்வளவு சுமுகமாக சமீபத்தில் எந்த காரியமும் நடைபெறாதே! லேசாக ஒரு பய ரேகை ஓடியது அவன் முகத்தில். ஒரு நடுக்கம் தெரிந்தது அவன் குரலில். "லோகா இதுவெல்லாம் சுமுகமாய் நடந்துவிடும் அல்லவா? உன்னிடம் நான் கொண்ட காதல் நிறை வேறாமல் போனால் எனக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்து விடும்" என்றான்.

அவன் உதடுகளின்மேல் அவள் தன் மெல்லிய விரலை வைத்தாள். "அபசகுனமாய்ப் பேசாதீர். நம்மை எந்த சக்தியாலும் பிரிக்க முடியாது." அவளுக்குத் தெரியும். தோல்வியையே சதா சந்தித்துக் கொண்டிருக்கும் அவன் இயற்கையான பயம் கொள்வது நியாயம் தானே?

கிழ் வான முகட்டில் பொற் குடத்தைப் போல் ஆதவன் உதய மாகும் நேரம் நெருங்கிக்கொண்டே வந்தது. மாறனுக்கு விடிந்த பின்னும் இடைவிடாமல் பேசிக்கொண்டே இருக்க வேண்டும் போலிருந்தது. அவளுக்கும் அப்படித்தான். ஆனால் கிளம்பும் நேரம் வந்தது.

மலரை விட்டு வண்டு அகலுமா? போகமாட்டேன் என்று அடம் பிடிக்காத குறையாக இருந்தான் மாறன். "போய் தாய் தந்தையரைப் பார்த்து வாருங்கள். என்னைப் பற்றிச் சொல்லுங்கள். நாம் இணைய வாய்ப்புகள் மிகவும் அதிகரித்துவிட்டன" என்றாள்.

"கடம்பூர் சிம்மாசனத்தில் என் அருகில் நீயும் வீற்றிருப்பாய். சொர்க்கலோகத்து தேவ சபையில் தேவேந்திரனும் இந்திராணியும் கொலு வீற்றிருப்பதைப் போல் இருக்கும்" என்றான் மாறன்.

"கடம்பூர் சிம்மாசனத்தில் மட்டுமல்ல. நான் தான் தங்களுடைய இதய சிம்மாசனத்திலும் வீற்றிருக்கும் பட்டமகிஷி" என்று ஆதரவாய்ப் பேசினாள்.

பிரியும் சமயம் என்றவுடன் கட்டுப்பாடில் வைத்திருந்த உணர்வு களெல்லாம் பொங்கி வெளிவந்துவிடும் போலிருந்தது மாறனுக்கு. உள்ளத்தில் பொங்கிய ஆர்வ மிகுதியால் தனது நாணமெனும் அணை தகர்த்தெறியப்படாமல் பார்த்துக் கொண்டாள் லோகா. காதலனை அணைத்துக் கொள்ள ஆசை உண்டானது. ஆனால் பெண்ணின் இயற்கையான நாணம் தடுத்தது .



அது போலவே, கிளம்பும் முன் ஒரு முறை அவளைக் கட்டி அணைத்து மகிழ்வோம் என்ற எண்ணத்தில் இருந்தான் மாறன். இருவருக்கும் இடையில் புகுந்து பார்க்க தோட்டத்தின் மலர் மணம் கொண்ட தென்றல் முயற்சிக்கவேண்டும். முடியாமல் தலை குனியவேண்டும் என்று எண்ணினான்.

பெண்ணின் உடம்பு ஒரு யாழ் போன்றது. தலைவன் அணைப் பில் அவள் இருக்கும் போது அவளுடைய உடல் நரம்புகள் எல்லாம் யாழின் நரம்புகள் ஆகிவிடும். அவனது வாள் பிடித்த விரல்கள் அந்த நரம்புகளை மீட்டித் தேவகானத்திலும் இனிய இசையை எழுப்பும் என்று சங்க காலக் கவிதைகள் சொல்லி வைத்திருந்தான். ஆனால் அவள் அனுமதிக்க மாட்டாள் என்று அவனுக்குத் தெரியும். பெரு மூச்சு ஒன்றை விட்டான் மாறன். அப்படியே ஏதேனும் முயற்சித்து அவளுடன் ஊடல் வந்து விடக்கூடாது என்று கவனமாய் இருந்தான்.

இருவரும் பேசாமல் அருகருகே அமர்ந்து இருந்தார்கள். அவன் அருகே இருக்கும் போது தொடர்ச்சியாய் வெளிவந்த புதுப்புது உணர்வுகளினால் அவ்வப்போது அவளுக்குப் பெருமூச்சு வாங் கியது. அவனுக்கோ அவள் இதுவரை பேசிய சொற்கள் தேனிற் குழைத்து போலிருந்தது. ஆனால் அமைதியில் அவளது மூச்சு ஏதோ அமிழ்தம் போலிருந்தன. வார்த்தைகளின்றி இருவரும் ஒரு கரையில்லாத பாசத்தைப் பரிமாறிக்கொண்டனர். ஏழேழு ஜென்மமும் தொடரும் அன்பு தான் இவ்வளவு ஆழமாயிருக்கும். தரையிலே நிற்கிறோமா, வானவெளியில் மிதக்கிறோமா என்று தெரியாத நிலையை இருவரும் அடைந்தார்கள். திக்கு முக்காடிப் போனார்கள். இதுவரை கண்டிராத ரஸமான கனவு அது. அதுவும் நினைவில் நடக்கிறது.

வானத்தையும் பூமியையும் பொன்னொளி மயமாக்கிச் சந்திரன் மரக்கிளைகள் வழியாய்க் காதலர்களை நோட்டம் விட்டான். ஏதேனும் சுவாரசியமாய் நடக்கும் என்று நினைத்த நிலவுக்கு பெரும் ஏமாற்றம் தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப் பத்து
## கடம்பூரில் வரவேற்பு

திடீரெனக் கடம்பூர் நகர மாந்தர்கள் இரவெல்லாம் கண் விழித்து வீதிகளையும், தங்கள் வீட்டு வாசல்களையும் அலங்காரம் செய்தார்கள்.

பார்ப்பவருக்கெல்லாம் பார்த்த மாத்திரத்தில் நாவூறவைக்கும் பழத்தார்களையுடைய வாழை மரங்களை வயல்களிலிருந்து வெட்டி எடுத்து வந்தனர். போர்க்கள நிறத்தில் செவ்விளநீர்க் குலைகளைத் தென்னை மரத்தில் ஏறிப் பறித்தனர். ஏறியது தான் ஏறிவிட்டோமே என்று, இன்னமும் தான் பச்சை நிறமா, தந்த நிறமா என்று முடிவு செய்ய முடியாமல் தவித்த தென்னந் தோரணங்களையும், குருத்துக் கூந்தல்களையும் கீறிறக்கினார்கள்.

வாழை மரத்தை வீதியோரமாகக் கட்டினார்கள். பின் மற்ற வற்றையெல்லாம் எங்கெங்கும் தொங்க விட்டார்கள். அவற்றுடன் செக்கச் சிவந்த மலர்க் கொத்துக்களோடு கூடிய கொடிகளைக் கட்டுக் கட்டாய்க் கொண்டு வந்து வழி நெடுகிலும் கட்டி விட்டார்கள். அலங்கார வேலையெல்லாம் முடிந்த பின் காலை சூர்யோதயத்திலிருந்தே கையில் பவர் மலர் மாலைகளைவைத்துக் கொண்டு சாலையோரமாகக் காத்திருந்தார்கள்.

மனிதர்கள் மட்டுமா காத்திருந்தனர்? கடம்பூர் அரசருடைய லாயத்திலிருந்த பல குதிரைகளும் பொறுமையுடன் காத்திருந்தன. அவற்றுக்கு அணிவித்திருந்த ஆபரணங்களுக்கு மெருகு கொடுத்துப் பளபளக்கச் செய்து பூட்டி விட்டிருந்தனர். உதய ஞாயிற்றின் ஒளியில் அவை மின்னின. சிறுசிறு குன்றுகளை யொத்த யானைகளும் வந்திருந்தன. நூற்றுக்கணக்கான காலாட் படைகளும் அணிவகுத்து நின்றனர்.

அது மட்டுமா? தில்லைக் கோயிலிலிருந்து தீட்சிதர்கள் வந்திருந் தார்கள். அருகில் உள்ளக் கடம்பூர்ச் சிவன் கோயில், வீர நாராயணப் பெருமாள் கோயில் பட்டர்களும் மரியாதை செய்யக் காத்திருந்தார்கள்.

எல்லாவற்றிற்கும் மெருகு சேர்ப்பது போலக் கடம்பூர் அரசரே வந்திருந்தார். செங்கண்ணார் சம்புவராயர் ராஜ கோலத்தில் பொறுமையாகச் சாலையோரமாக நின்றிருந்தார். அவரைப் பார்த்தால், ஐந்தாண்டுக் காலமாகத் தேக உபாதையினால் கஷ்டப் படுகிறவர் போலக் காணப்படவில்லை. இன்று தனித் தெம்புடன்



பார்ப்பவர்கள் எல்லாரும் வியக்கும் வண்ணம் அவரே வந்து விட்டார். தும்பைப் பூப் போன்ற தலை சம்புவராயரது. வயதால் நரைக்கவில்லை. கவலையால் நரைத்தது என்பது பலரது எண்ணம். ஆனால், இன்று அந்த நரைத்த முடியே அவருக்கு ஒரு கம்பீரத்தைக் கொடுத்தது. இன்று எல்லாரும் பழையதை மறக்கும் வண்ணம் ஆஜானுபாகுவாக வந்து நின்றார்.

அப்படி யாரைத்தான் வரவேற்க எல்லாருமாக நின்றனர்? வரவேற்பு ஏற்பாடுகளைப் பார்த்தால் சோழ நாட்டுச் சக்கரவர்த்தியே கடம்பூருக்கு விஜயம் செய்கிறாரா என்றுகூட எண்ணத்தோன்றும். இல்லை, இல்லை. இந்த மண்ணின் மைந்தன் சோழ நாட்டில் பெரும் பதவியைப் பிடித்திருந்தான். அவன் தாய் நாட்டுக்கு விஜயம் செய்யும் பொருட்டே இவ்வளவு வரவேற்பு ஏற்பாடுகளும் என்று அவ்வப்போது நினைவு படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது.

தன் தாய் நாட்டுக்குச் செல்ல மகத்தான கொள்ளிட நதியை மாறன் கடக்க வேண்டியிருந்தது. சமுத்திரத்திற்கு நிகரான கொள்ளிட நதியைக் கடந்த பின்னே, அவனை வடகரையில் சந்தித்த கடம்பூர் வீரர்கள் சட்டென்று குதிரையிலிருந்து இறங்கிச் சாலை ஓரமாக அடக்க ஒடுக்கத்துடன் நின்றார்கள். அவர்கள் எல்லாரும் முன் செல்ல, மாறன் தன் புரவியின் மீது பின் தொடர்ந்தான். கடம்பூருக்குள் விஜயம் செய்த மாறனுக்கு ஊர் எல்லையில் மகத்தான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. ஊர் மக்களெலாம் ஒன்று கூடி வீரநாராயண ஏரியையொட்டியே நின்றிருந்தனர்.

முதல் குதிரையின் மீது மாறன் கம்பீரமாக வந்தான். அவனைக் கண்டவுடன் கூட்டத்தில் கரகோஷம் எழுந்தது. பலரும் "வெற்றி வேல்! வீர வேல்!" என்றும், "சோழம், சோழம்" என்றும் ஜய கோஷம் எழுப்பினார்கள். அத்தகைய வரவேற்பை மாறன் சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பது அவன் முகக் குறியில் தெரியவந்தது.

வியப்பில் ஆழ்ந்தான். "பெரும் ஜனக் கூட்டம் சேர்ந்திருந்தது. தம்மை வரவேற்கவா?" என்று கூட்டம் அருகில் வந்தபோது அவனுக்கு இன்னமும் ஆச்சரியம். அதன் தலைமையில் நிற்பது யார்? "அப்பா போல இருக்கிறதே?" என்று நினைத்தான்.

தன் தந்தைதான் நிற்கிறார் என்று ஊர்ஜிதமானவுடன், மாறன் குதிரையிலிருந்து தாவிக் கீழே குதித்தான். ஓடி வந்து தந்தையின் காலடியில் சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கி ஆசி பெற்றான்.

எழுந்த பின், "அப்பா! என்னை வரவேற்கத் தாங்கள் வரலாமா?" என்றான்.

''வேளக்காரப் படைத் தலைவர் என் நாட்டுக்கு வந்திருக்கிறார். அவரை அவமதித்தால், சோழச் சக்கரவர்த்தியை அவமதிப்பது போலாகும் என்றுதான் வந்தேன்!'' இனிமையும் சாந்தமும் நிறைந்த குரலில் சம்புவராயர் இதைச் சொல்லி வாய்மூடு முன்னே, சுற்றியிருந்தவர் எல்லாரும் சிரித்துவிட்டனர். சுற்றியிருந்தவர் களைச் சிரிக்க வைத்துவிட்டு மகனைக் கட்டித் தழுவினார்.

சொர்க்கத்தில் இடம் கிடைத்தாலும் அரசர் அவையில் இடம் கிடைப்பதில்லை என்று பல சிற்றரசர்கள் வருத்தப்பட்ட காலத்தில் தானாக ஒரு பெரும் பதவியைத் தன் மகன் பெற்றிருந்தான் என்ற பூரிப்பு அவருக்கு. சோழ நாட்டின் புதிய வேளக்காரப் படையின் தளபதியென்ற பதவி அவனுக்கு வழங்கப்பட்டிருந்தது. எப்பேர்ப் பட்ட வீரர்கள் இந்தப் பதவியை அவனுக்கு முன் வகித்திருந் தார்கள் என்று நினைத்த சம்புவராயர் பெருமை கொண்டதில் தவறேதும் இல்லை. அதில் தலைக் கனமும் இல்லை.

'தான் உருப்படாமல் போனது மட்டுமல்லாமல், சம்புவராயர் குலத்தையே சீரழித்தவன் என்று அப்பா எவ்வளவு நாள் திட்டி யிருப்பார்! இன்று வாயார வாழ்த்துகிறார்!' என்று மாறனால் நம்பவே முடியவில்லை. தந்தையின் தழுவலிலிருந்து விடுபட்ட மாறன் கூட்டத்தாரைக் கையெடுத்துக் கும்பிட்டான்.

பெருமையுடன் வாழ்விலுயர்ந்த தங்கள் இளவரசனைக் கண்டு கடம்பூர் மக்கள் பெருமைப்பட்டனர். சில மாதங்களுக்கு முன் தஞ்சைக்குச் சென்ற நம் இளவரசனா இது என மக்கள் வியந்தனர். அப்படியொரு மாற்றம் மாறனின் நடையுடை பாவனையில். முறுக்கி விட்ட மீசையும், திப் பிழம்பு போன்ற கண்களும் அவன் முகத்தைப் பார்ப்பவருக்கு மீண்டும் ஒரு முறை பார்க்கத் தூண்டியது. அவன் நடையிலும் தோற்றத்திலும் என்றுமில்லாத மிடுக்கும் கம்பீரமும் காணப்பட்டன.

சம்புவராயர் குலம் நசிந்துவிடும் என்று நினைத்து வருந்திய குடிமக்களுக்கு, இப்படியொரு திருப்பம் ஏற்பட்டதில் பெரும் மகிழ்ச்சி. சோழச் சக்கரவர்த்தியைப் பாதுகாக்கும் படைக்குத் தலைவன் ஒரு கடம்பூர் இளவரசன் என்று பரவசமடைந்தனர்.

மாறன் அப்போது ஏழாவது சொர்க்கலோகத்தில்தான் இருந்தான். சில காலம் முன்னர் வரை நாடே அவனை ஏற இறங்க இளக்காரமாகப் பார்த்த வண்ணம் இருந்தது. 'இனி இவன் எதற்கும் உதவ மாட்டான்' என்று பலர் நினைத்தனர். இன்றோ அவனை ஒரு புது மனிதனாக எல்லாரும் பார்க்கத்தொடங்கினர். இந்த ஊரை விட்டு தான் சென்ற ஒரு வருடத்தில் அதல



பாதாளத்திலிருந்து ஒரே அடியாகச் சொர்க்கத்துக்குத் தாவி வந்துவிட்டதாகவே அவனுக்குத் தோன்றியது.

எதிரிகளிடமிருந்து காதலியைக் காப்பாற்றி அழைத்து வந்தது, பாண்டியர் பொக்கிஷத்தைக் கொண்டு வந்தது என்று அவனுக்கு எல்லையில்லாத உள்ளக் களிப்பை அளித்திருந்தது. சோழர் பிர தேசத்தில் உயர் பதவி கிடைத்துவிட்டது. எப்பேப்பட்ட பதவி! சோழர் சக்கரவர்த்தியே தன் உயிரைப் பாதுகாக்கும் பொறுப்பை இவனிடம் ஒப்படைத்திருந்தார். திவ்யமோகன ரூபங் கொண்ட பெண் தனக்கே தனக்குச் சொந்தமாகப் போகிறாள். எல்லா வற்றிற்கும் மேலாக இப்போது யாரிடம் நல்ல பெயரே எடுக்க முடியாதென்று நினைத்தானோ அவர் உள்ளம் மகிழ வைத்தாயிற்று.

மாறனை வரவேற்ற உற்சாகத்தில் மற்ற விருந்தினர்களை எல்லாரும் மறந்தே போனார்கள். இரண்டு குதிரைகள் கொஞ்சம் தள்ளிப் பின்னால் வந்தன. அவற்றின் மேல் சோழர் வீட்டு மாப்பிள்ளையாம் வல்லத்து அரசர் வந்தியத் தேவர் வந்தார். வீர வைணவரும் வந்தார். இதற்குள் அவர்கள் தத்தம் குதிரைகளி லிருந்து இறங்கியிருந்தார்கள். இருவரும் இறங்கிச் சற்று ஓரமாய் நின்றனர். மண்ணின் மைந்தனாம் மாறனை மக்கள் எல்லாரும் ஆராதனை செய்யட்டும் என்று காத்திருந்தனர். வரவேற்பெல்லாம் முடியும் தறுவாயில் மாறன் திரும்பித் தன்னுடன் வந்தவர்களைப் பார்த்தான்.

அவர்களையும் முக மலர்ந்து வரவேற்றார் சம்புவராயர். இருவரும் வந்ததற்கு வெவ்வேறு காரணங்கள். அடியானோ சில வைணவத் தலங்களைப் பார்த்துவிட்டுச் செல்லலாம் என்று வந்தான். வந்தியத்தேவனுக்கோ தஞ்சையில் மூச்சு முட்டியது. வீட்டில் ஏகப்பட்ட பிரச்சனைகள். தன்னால் நிகழாத பல விஷயங் களுக்குத் தன்னை ஒரு விதப் பொறுப்பாய்ப் பார்த்தாள் காதல் மனைவி குந்தவை. பழுவூர் இளவரசியை பற்றிய மாறனின் மனோ நிலையைத் தெரிந்து கொண்ட குந்தவைக்குக் கோபமென்றால் கோபம். மெல்ல மெல்ல அவள் கண் முன்னே மாறனின் கையோங்கியதும் அவளுக்கு எல்லாம் தோல்வியாய்த் தெரிந்தது.

சமீப காலமாகக் குந்தவைக்கும் அவனுக்கும் ஏற்பட்ட மனக் கசப்புகள் ஏராளம். மனைவியின் கர்வ பங்கத்தினால் விளையக் கூடிய வினைகளை நினைத்துப் பார்த்தான் வந்தியத் தேவன். குந்தவை பழுவூர்ப் பெண்ணை தன் தம்பிக்குப் பெண் கேட்கப் போகிறேன் என்று கூறியதிலிருந்து தன் மனம் நிம்மதியில்லாமல் அலைப்புறுவதை நினைத்தான். ''பொன்னியின் செல்வர் மாறன்

இருவருக்கும் சரி சமமாக வாய்ப்புத் தர வேண்டும். அந்தப் பெண்ணின் இஷ்டப்படியே மற்றவர் நடக்க வேண்டும்'' என்று வந்தியத் தேவன் சொன்னது குந்தவைக்குக் குற்றமாய்ப் பட்டது.

அப்பாப்பா! குந்தவை முகத்தில் கோபம் எப்படிக் கொதித்தது! அடுத்துக் குந்தவை மாறனைப் பற்றி நாலு பேர் முன்னிலையில் பகிரங்கமாக அவதூறு சொல்லவும், பரிகாசமாய்ப் பேசவும் ஆரம்பிப்பாள். இன்னும் என்னவெல்லாமோ நடக்கப் போகிறது. இதையெல்லாம் தெரிந்து கொண்ட வந்தியத் தேவன் மனதுக்குள் இன்னும் ஒரு கவலை. இந்தப் பிரச்சனையை எப்படித் தீர்க்கப் போகிறோம். தன் இரு நண்பர்களில் ஒருவர் பாதிக்கப்படுவது உறுதி. அதற்கு மேல் தன் மணவாழ்க்கையையும் இது பாதிக்கும் என்று பயந்தான்.

காதலி ஒருவராயும், மணம் செய்து கொண்டபின் அவளே இன்னொருவராயும் இருக்கும் அளவுக்கு ஒரே பெண்ணில் மாற்றங்களைக் காண்பது ஆண் மக்களுக்கு என்ன புதிதா? எனினும், குந்தவை இப்படி மாறியதை அளவில்லாத வியப் புடனும் திகைப்புடனும் உற்றுக் கவனித்தான். அதனால்தான் வந்தியத் தேவன் தடுமாறினான். தஞ்சையிலிருப்பது மூச்சு முட்டு வது போலிருந்தது. அதனால் கடம்பூருக்குக் கிளம்பி வந்தான்.

தன் நினைவுகளிலிருந்து விடுபட்டுக்கொண்ட வந்தியத் தேவன் சுற்றிலும் நிகழ்வதைக் கவனித்தான். மாறனைத் தக்க முறையில் வரவேற்றுக் கொண்டிருந்தனர் எல்லாரும். தங்கள் நாட்டு வீரன் என்பதை மறந்து உபசாரம் செய்தனர். கோயில் பிரமுகர்கள் வேளக்காரப் படைத் தலைவரை அணுகிப் பயபக்தி யுடன் நின்று பூரண கும்ப மரியாதை கொடுத்தனர். வந்தியத் தேவனுக்கு மனதுக்குள் மகிழ்ச்சி. தன் நண்பனுக்கு மீண்டும் ஓர் உயரிய வாழ்வு அமைந்துவிட்டது என்று.

பின் செங்கண்ணாரும் ஒரு குதிரையில் ஏறிக்கொண்டார். எல்லாருமாகக் கடம்பூர்க் கோட்டைக்கு ஊர்வலமாய்ச் சென்றனர். போகும் பாதையின் இருபுறமும் வளமை தாண்டவ மாடியது. எங்கும் எதிலும் வளமை. சமுதாயத்தின் அடிமட்டம் வரை அந்த வளமை பரவியிருந்தது. எல்லாம் ஒரு வருடத்துக்குள் ஏற்பட்டிருந்த மாற்றம்!

இவ்வூரில் நான்கு ஆண்டுகளாய் மாறுதல் ஒன்றுமே யில்லை. மழை வருமா என்று தினந்தோறும் வானத்தைப் பாரத்துப் பார்த்து நொந்து போயிருந்தது இந்த நாடு. மேகங்களின் கர்ஜனையை



மறந்து போன குடியானவர்கள் இன்று மூன்று போகம் விளையும் தங்கள் நிலத்தில் சந்தோஷமாய் இருந்தனர்.

ஏற்கெனவே பாதிக்கு மேல் அழிந்து போயிருக்கும் இந்தப் புராதனமான கோட்டைக்குப் பஞ்சமும் வந்து விட்டால் என்ன கதி ஆவது? மிச்சமிருக்கும் ஜனங்களும் இங்கிருந்து ஓட வேண்டியதுதான் என்ற நிலை. ஐந்தாண்டுகளாக மழையின்றித் தவித்த கடம்பூர் வாசிகள் அக்கம் பக்க நாடுகளுக்குச் சென்று பல தாழ்பட்ட வேலைகளைச் செய்து வந்தனர். அரசரே தம்முடைய சொந்தக் கஷ்டத்தில் இருந்ததால், தங்கள் கஷ்டத்தைக் கவனிக்க மாட்டார் என்று நினைத்தார்கள்.

இன்றோ எங்கும் பசுமை. எதிலும் வளமை. மக்களும் தங்கள் நாட்டின் வளமையும் அரச குடும்பத்தின் மரியாதையும் ஒரே சமயத்தில் உயர்ந்ததைக் கண்டு பெரும் மகிழ்ச்சி கொண்டனர். மாறனுக்கும் அந்த உணர்வு உண்டு. பாழடைந்த பிரதேசம் பன்னிரண்டு மாதத்துக்கெல்லாம் பசுமை நிலமாய் மாறியது எப்படி? தன் வாழ்க்கைப் பாதையும், கடம்பூர் நாட்டின் நிலையும் ஒன்றோடு ஒன்று பிணைந்திருந்தது போல மேலே செல்வதும் ஒன்றாய்க் கீழே செல்வதும் என்று ஒத்துப் போயின என அறிந் திருந்தான்.

விரைவாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டு சென்று தன் கோட்டையை அடைந்தான். வாசலில் நின்ற ஏவலாளர்களிடம் குதிரையைக் கொடுத்து விட்டு, அங்கிருந்து கால்நடையாகக் கோட்டைக்குள் சென்றான் மாறன்.

ஆனால், வீட்டை நெருங்க நெருங்க மனத்தில் மின்னலைப் போல் ஒரு பயம் உதித்தது. இப்போது இருக்கும் சந்தோஷ மெல்லாம் இடிந்து, கருகிப்போன அவன் கோட்டையைப் பார்த்தால் துக்கமாக மாறிவிடுமோ என்று பயந்தான். மீண்டும் பழையதெல்லாம் நினைவு வந்து அவனை மூழ்கடிக்கப் பார்க்குமா என்று. அந்த ஐந்தாண்டுகளில் அனுபவித்த இயலாமை மீண்டும் வந்துவிடுமோ என்ற பயம் துளிர்த்தது. இலேசில் மறக்க முடிகிற காரியமாயில்லை. தஞ்சையில் இருக்கும் போது கூட அடிக்கடி கோட்டை எரிகின்ற காட்சி அவன் மனக் கண்ணின் முன்பு வந்து கொண்டிருந்தது. பகற் கனவுகளிலும் வந்தது. இராத்திரியில் கண்ட கனவுகளிலும் வந்தது.

கருகிய கடம்பூர்க் கோட்டைச் சுவர்கள் இடிந்து போய்க் கிடந்தன. இராஜரீகத்தில் பயங்கரமான சூழ்ச்சிகளும், சதிகளும் நடைபெற்ற இடம் போல இப்போது தெரியவில்லை.

ஆனால், அவன் பயந்த அளவுக்கு அந்த இடிந்த கோட்டை உற்சாகக் குறைவைக் கொடுக்கவில்லை. கோட்டையை நெருங்கியதும் மாறனின் வேகம் குறைந்தது. பல நாளாய் நடந்த துக்ககரமான சம்பவங்களின் நினைவுகளை இந்தக் கொத்தளங்கள் கொடுத்தன.

எனினும் அதையெல்லாம் ஓரம் தள்ளினான். அதை மீண்டும் கட்டிவிட முடியும் என்ற ஆக்கபூர்வமான எண்ணம் வந்தது. எப்படியெல்லாம் அவற்றைச் சீர் செய்ய வேண்டும் என்று யோசித்தான். இடிந்து கிடந்த மச்சுக்கள் மீண்டும் கட்டப்பட வேண்டும். மாட மாளிகைகள் மீண்டும் உயர வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக வானில் சம்புவராயரின் கொடி பறக்க வேண்டும் என்ற ஆசை வந்தது. 'இந்தக் கோட்டையையெல்லாம் மீண்டும் கட்டிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கப் போகிறேன்' என்று உறுதி பூண்டான்.

வந்தியத் தேவனை நோக்கி, ''வல்லா. சேர்ந்தாற்போல் சில நாட்கள் இங்கே இருந்தால் மனிதனுக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்துவிடலாம் என்கிற இடத்தில் இவ்வளவு ஆண்டுகள் இருந்துவிட்டேன்'' என்றான்.

முழுவதுமாய் ஒப்புக்கொண்டான் வல்லவராயன். உரிய காலத்தில் மாறனுக்குத் தமது மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கான சந்தர்ப்பம் கிடைத்தது அவனுக்குப் பெரும் மகிழ்ச்சி. இன்னும் ஓரிராண்டுகள் போயிருந்தால் மாறனை இந்தப் பாழுங்கோட்டையை விட்டு அசைத்திருக்க முடியாது. நாலுபேர் முன்னிலையில் பரிகாசமாகப் போயிருக்கும் அவன் சங்கதி!

கோட்டையை அடைந்தவுடன் கடம்பூர் அரசியே பணிப் பெண்களுடன் வெளிவந்து ஆரத்தி எடுத்தார். கண்ணீர் பெருக ''குழந்தாய்! நூறு ஆண்டு காலமாக வாழையடி வாழையாக வந்திருக்கும் இந்தச் சம்புவராயர் குலம், இனி உன் கையில்!'' என்றாள்

அம்மாவின் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் பொழியலாயிற்று. ஆனந்த அருவியாக அது தாயின் கன்னங்களில் வழிந்தது.

''அம்மா! நீ கண்ணீர் விடுவதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. அது ஆனந்தக் கண்ணீரென்றாலும் பரவாயில்லை. இனி உன் கண்கள் நீர் கசியக் கனவிலும் ஆகாது. கண்களைத் துடை. பார், யாரெல்லாம் வந்திருக்கிறார்கள்!'' என்று மற்றவரைச் சுட்டிக் காட்டினான்.



சம்புவராயர் அரசி பின் மற்ற விருந்தாளிகளையும் வரவேற்றார். வந்தியத் தேவனை வரவேற்கும் போது துடைத்துக் கொண்ட கண்களிலிருந்து நீர் மீண்டும் வந்தது. தன் ஆசை மகள் மணிமேகலை இவனையே தன் கணவனாய்ப் பாவித்து வாழ்ந்தவள். அதற்குத் தகுந்தாற் போல் வந்தியத் தேவனின் மடியிலேயே தான் உயிர்விட்டாள்.

''தம்பி! வரவேண்டும். வீட்டில் இளவரசியார் நலமா?'' என்றார்.

வந்தியத் தேவனுக்கும் பழையதெல்லாம் ஞாபகம் வந்தது. வாயில் வார்த்தை வரவில்லை. தலையசைத்தான்.

பின், அடுத்து நின்ற அடியானைப் பார்த்து விட்டாள் அரசி. சோழ சாம்ராஜ்யத்தின் மகா சதுரனான ஒற்றன் அந்த வைணவன் முன் வந்தான். அடியானைப் பார்த்தவுடன் அரசிக்கு முகம் மலர்ந்தது. பயந்த சுபாவமுடையவன் போல வேஷம் போட்டு, ஒற்றன் வேலையில் அவனை மிஞ்சுகிறவர் எவரும் இல்லை என்று பிறர் சொல்லிக் கேட்டிருந்தாள். எனினும் அவனிடம் பெரியதொரு நன்றிக் கடன் இருந்தது அவளுக்கு.

''ஐயனே! வரவேண்டும். போன முறை நீர் என் மகனை அழைத்துச் சென்ற போது உமது மகிமை எனக்குத் தெரியவில்லை. போகும் முன் மகன் என் மடியில் படுத்துக் கொண்டு அழுதான். அம்மா, கடம்பூரை விட்டுப் போகட்டுமா? அதை நினைத்தால், இதோ பாருங்கள், இப்போது கூட என் தேகமெல்லாம் சிலிர்த்திருப்பதை...!'' என்று முன் கையில் ஏற்பட்டிருந்த ரோமச் சிலிர்ப்பைச் சுட்டிக் காட்டினாள்.

''கடம்பூர்ச் சம்புவராயர் குலத்துக்கு ஏற்பட்ட அவமானத்தையும் பழியையும் துடைக்க வேண்டும் என்று இளவரசர் உழைப்பது அவர் கடமையாயிற்றே!'' என்றான் தன்னடக்கத்துடன் அடியான்.

''கடமையை நிறைவேற்றுவதற்கு அவனும் எந்த வகை முயற்சியும் செய்யாமல் இருந்தான். நீர் வந்ததுதான் தாமதம். எல்லாம் என் குலத்துக்கு நிறைவேறின. வேலை வெட்டியில்லாமல் இருந்தவனை இன்று உயரிய வேளக்காரப் படைத் தளபதியாக ஆக்கி விட்டீர். உமக்கு என்றென்றும் இந்தச் சம்புவராயர் குலம் கடன் பட்டிருக்கும்!'' என்றாள் கடம்பூர் அரசி.

''கடவுள்தான் என் மகனுடைய மனக் கசப்பைப் போக்கி அமைதி அளித்து அருள வேண்டும் என்றிருந்தேன். அதற்காக நான் அல்லும் பகலும் பிரார்த்தனை செய்து வந்தேன். தொடர் தோல்வி

களால் உந்தப்பட்டவனாய் இருந்த என் மகன் தன் சொந்த உழைப்பில் இந்தப் பதவியைப் பெற்றான்'' என்றாள்.

ஆனால், அதைக் கேட்ட மாறனோ தனக்குக் கிடைத்த பெரும் பதவி தனியொரு நிகழ்வு என்று நினைக்கவில்லை. அவனது சாதனைகள். விதி வசத்தால் தன்னைச் சமுதாயத்தின் ஏணியின் மேல் ஏற்றியபோது பழுவூர் இளவரசி தனக்குக் கிடைக்கும் பொருட்டே இப்படியெல்லாம் நடக்கிறது என்று நினைத்தான். அவளை நினைத்து நினைத்து ஆனந்தித்துக் கொண்டே இருந்தான்.

இந்தப் பேச்சின் போதெல்லாம் வந்தியத் தேவன் மௌன மானான். அந்த அம்மையார் பேசியது வந்தியத் தேவனுக்குப் பிடிக்கவில்லை என்று அவனுடைய முகக் குறி காட்டியது.

அதைப் பற்றி மாலையில் ஓய்வெடுக்கும் போது, சற்றுத் தாழ்ந்த குரலில், அடியான் கேட்டான். ''வல்லவராயரே, கடம்பூர் அரசி பேசியபோது ஏன் மௌனம் காத்தீர்?''

''முன்பொரு நாள் நான் இங்கு திடீரென விஜயம் செய்தேன். இந்தக் குலமே அதற்குப் பின் சனி பிடித்தாற்போல் மங்கிப் போனது. மீண்டும் நீர் வந்து அதைக் கைதூக்கி விட்டீர் போல'' என்றான் வந்தியத் தேவன்.

''ஐயோ! அதைப் பற்றி ஏன் கவலை கொள்கிறாய். நேரமும் காலமும் நம் கையில் எங்கே இருக்கின்றன? சிலர் வந்தால் நன்மையென்றும், சிலர் வந்தால் கஷ்டம் என்றும் பார்ப்பது பார்ப்பவர் மனதில்தான் இருக்கிறது. சரி, இப்போது நாம் இருவருமே தான் வந்திருக்கிறோம். என்னவாகும்?'' என்றான் அடியான்.

''அது தான் என் கவலையும்'' என்றான் வந்தியத் தேவன். அவன் மனதுக்குள் மாறனிடம் அவன் காதலைப் பற்றிய முழு விவரங் களையும் இந்த முறை பேசிவிட வேண்டும் என்ற முடிவு இருந்தது.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப் பதினொன்று
## ''அந்த வசீகரன் நீதான்''

திருப்பாற்கடலில் நாராயண மூர்த்தி நீரில் பள்ளிகொண்டு நீர்மயமாக இருப்பவர் அல்லவா? எனவே, வீர நாராயண ஏரியினைக் காத்தருளுவதற்காக, ஏரிக் கரையை யொட்டி



வீரநாராயணபுர விண்ணகரத்தில் பெருமாளைப் பொருத்தமாக ஒரு கோயிலில் எழுந்தருளச் செய்திருந்தனர்.

மாறனும் வந்தியத் தேவனும் வீர நாராயணபுர விண்ணகரக் கோயிலைச் சுற்றியுள்ள மாமரத் தோப்புகளில் அமர்ந்திருந்தனர். இருவரும் சுவாமி தரிசனம் முடித்து கோயில் பட்டர்களின் மரியாதைகளை ஏற்றுக் கொண்டு வெளிவந்து விட்டனர். அடியான் இன்னமும் பாடிவிட்டு வரட்டும் எனக் காத்திருந்தனர்.

அடியான் இப்போதைக்கு வெளியே வருவதாகத் தெரிய வில்லை. உடம்பெல்லாம் ஊர்த்வ புண்டரிகமாகச் சந்தனம் அணிந்து தலையில் முன் குடுமி வைத்திருந்த வைஷ்ணவ பக்த கொமணி கோயிலுக்குள் திவ்யப் பிரபந்தத்தைப் பாடிக் கொண் டிருந்தார். அவர் பாடுவதைக் கேட்க ஒரு கூட்டம் கூடிவிட்டது. வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார் பாசுரங்களில் சில அரிய பாடல்கள் அடியானுக்குத் தெரியும். அதன் தேன் மதுர இசை யினில் மெய் மயங்கிப் பலரும் நின்றனர்.

இந்தக் கோயிலில் ஈசுவர முனிகள் என்ற பட்டர், பெரு மாளுக்குக் கைங்கரியம் செய்து வந்தார். அடியானைத் தட்டிக் கொடுத்து அந்தப் பாடல்களை அரங்கேற்றும் திறமையும் ஈசுவர முனிகளுக்கு உண்டு. அவர் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி வெகு நேரமாகப் பாடினான். இனிய குரலையுடைய அடியான் பாடுவதைக் காது கொடுத்து எல்லாரும் கேட்டனர். அந்த ஒலி தேவகானமாகவே அவர்கள் காதில் பட்டது. செவிகளில் இன்ப வெள்ளமாகப் பாய்ந்த பாடல்களுக்கு ஆமோதித்து அவ்வப்போது, ''ஆ! ஆ!'' என்று கோஷித்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

பக்தர்களின் செவி குளிரப் பாடினான். பெருமானின் மனது குளிரும் அளவுக்குப் பாடினான். தோப்பு வரை அதன் எதிரொலி கேட்டது.

இருவரும் அமர்ந்திருந்த தோப்பின் ஒருபுறம் ஏரியின் நீர் நன்றாய் நீல நிறத்தில் தெரிந்தது. அந்த ஆனந்தக் காட்சியை இருவரும் சில நொடிகள் ரசித்தனர். ஏரிக் கரையிலிருந்து சிறிது தூரம் வரையில் ஏரியின் உட்புறம் படுகையாக அமைந்திருந்தது. கரைக்குச் சேதம் உண்டாகாமலிருக்கும் பொருட்டு அந்தப் படுகையில் கருவேல மரங்களையும் விளா மரங்களையும் நட்டு வளர்த்திருந்தார்கள்.

தோப்பிலிருந்து பார்க்கையில் மேல் வானத்தின் அடிப்புறத்தில் உருக்கிய பொன்னைப் போல் ஒளிர்ந்து கொண்டிருந்தது ஞாயிறு.

திருமாலின் கோயிலிலிருந்து வெளி வந்திருந்ததால் அது அவருடைய சக்ராயுதத்தைப்போல் ''தகதக''வென்று சுழன்று கொண்டிருந்ததாகத் தெரிந்தது. அதன் செங்கிரணங்களினால் மேல் வானமெல்லாம் செக்கர் படர்ந்திருந்தது. சூரியனும் அஸ்த மிக்கத் தொடங்கினான். மெல்ல மெல்ல ஏகாந்த வேளையானது. ஏரியின் மேல் ஆகாச மார்க்கமாகப் பறவைகளெல்லாம் கூடுகளுக் குத் திரும்பிக் கொண்டிருந்தன.

அங்கே ஆருயிர் நண்பர்கள் இருவரும் அமர்ந்திருந்தார்கள். மாறன் வந்தியத் தேவனை நோக்கி, ''ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் இந்தப் பிரதேசம் எவ்வளவு கலகலப்பாயிருக்கும். நினைவிருக் கிறதா, வல்லா? எப்போதும் விருந்தினர்கள். மேள வாத்தியங்கள். திருவிழாக்கள். குரவைக்கூத்துகள்! அந்தக் காலத்துக்கு முற்றிலும் மாறாக இருந்தது இந்த ஐந்தாண்டுகள். இன்று தான் அதை மீண்டும் கண்டேன்'' என்றான்

ஒப்புக் கொண்டது போலத் தலையசைத்தான் வந்தியத் தேவன்.

மேலும் தொடர்ந்தான் மாறன். ''என் குலம் அழிந்தது என்ற மாயை என்னைச் சூழ்ந்து கொண்டது- மார்கழிப் பனிபோல. சந்தோஷமாய் இருக்கும் சோழர் பிரதேசத்துக்கு முற்றிலும் மாறுபட்ட வேறு லோகம் போலானது என் நாடு. இந்த இடத்தை விட்டுப் போக மனமில்லாமல் நானும் இங்கேயே இருந்து விட்டேன். ஆனால், பூர்வ சரித்திரத்தை மறக்கும்படியிருக்கிறது எனது தற்போதைய வெற்றிகள். இன்னமும் கொஞ்ச நாளில் தெளிவில்லாத ஒரு பழைய கனவைப் போலாகிவிடும் நாங்கள் பட்ட கஷ்டங்களெல்லாம்!'' என்று நம்பிக்கையும் தெரிவித்தான்.

வல்லவராயனுக்கு நன்கு தெரியும். ஒரு காலத்தில் வறுமையும் பசியும் பிணியுமாய் இருந்தது இந்த ஊர். இனிமேல் கடம்பூர் தேசத்தைப் போலச் சௌக்கியமாக வாழ்வதற்கு இடம் பூலோகத் திலேயே கிடையாது என்றும் அவனுக்குத் தெரியும்.

''வல்லா, விதி யென்பதற்கு உருவமில்லை என்பார்கள் அறிஞர்கள். அப்படி உருவம் இருந்தால் அது சக்கரம் போலச் சுழல்வதாகத்தான் நிச்சயம் இருக்கும். அதன் சுழற்சியில் சரித்திரத்தில் எனக்கும் இடமுண்டு என்று சந்தேகமற உணர்ந் தேன்'' என்றான் மாறன்.

''மாறா! இதை யெல்லாம் நீ சொல்லி எனக்குத் தெரிய வேண்டியதில்லை. நானும் உனது வாழ்வின் மாற்றங்களைக் கவனித்துத்தான் வருகிறேன்'' என்றான் வல்லவராயன். ''உனது



வளர்ச்சி இன்று அசுர வேகத்தில் இருப்பதைக் கண்டு மன மகிழ்ந்தேன்'' என்றான்.

''ஆமாம், வல்லா. வேகம் வேண்டும். வாழ்க்கையில் சாதிக்க வேண்டிய அவகாசம் இருக்கிறது என்று காத்திருக்க முடியாது. அரசியல் மாறுகிறது. நாடு மாறுகிறது. ஏன், நாமே மாறுகிறோம். ஐந்தாண்டுகள் சோம்பித் திரிந்துவிட்டு மீண்டும் வாளேந்துவது கூடக் கஷ்டம். ஆனால், என்னால் முடிந்தது. வயதானதும் மீதி வாழ்நாளுக்கு நம்முடைய வீரப் பிரதாபங்களை அளந்து கொண்டு இருக்க வேண்டியதுதான். முதலில் பலரும் அதைக் கேட்பார்கள். பின் அதே கதையை எவ்வளவு நாள்தான் கேட்பார்கள்? செவி சாய்ப்பவர் மெல்லக் குறைந்துவிடுவார்கள். அதனால் வயதாகு முன் பலவற்றையும் சாதிக்க வேண்டும். இப்போதெல்லாம் எனக்கு அசாத்தியமாக தைரியம் வந்துவிட்டது. தெரியுமா? சாதிக்க முடியும் என்று நம்பிக்கையும் வந்துவிட்டது. நான் வேறு மனிதனாக உருவெடுத்து விட்டேனா என்றே எனக்குத் தோன்று கிறது, வல்லா!'' என்றான் மாறன்.

''நீ மட்டுமல்ல. உன் குடும்பமே மாறி விட்டது'' என்றான் வல்லவராயன்.

''ஆமாம். நான் மட்டுமல்ல, அப்பாவும் இப்போது வீட்டுக்குள் முடங்கிக் கிடப்பதில்லை. நாட்டைச் சுற்றுகிறார். திருவிழாவுக்குத் தில்லை சென்று பரிவட்டம் கட்டிக் கொள்கிறார். மாதம் ஒரு முறை விபூதி ருத்ராட்சம் தரித்த சிவயோகியான நம்பியடிகளைக் காணத் திருநாரையூர் சென்றுவிடுவார். துக்க மிகுதியினால் தவித்து வந்த அம்மாவும் மணிமேகலையின் பிரிவை மறக்கத் தொடங்கி விட்டாள்'' என்றான்.

மணிமேகலையைப் பற்றிப் பேசியவுடன் வல்லவராயன் மீது ஒரு வகைச் சோகத்தின் நிழல் பரவியது.

அதைக் கவனிக்காத மாறன், ''நான் பட்ட கஷ்டமெல்லாம் அதோ அந்தக் ஏரிக்குப் பகவான் பேசும் சக்தியை மட்டும் அளித் திருந்தால், அது சொல்லும். என் சோகத்தில் அது வற்றியே போனது. அதன் உச்ச கட்டமாக என் தங்கையின் தகனக் கிரியையை இந்த ஏரியின் கரையில்தான் செய்தோம்'' என்றான்.

வந்தியத் தேவனுக்கு ஞாபகம் இருந்தது. அவன் மடியில்தானே உயிர் விட்டாள் மணிமேகலை? மண்ணுடல் தீக்கிரையாகிப் போக வேண்டியதுதான். எல்லாருக்கும், அரை நாழிகை நேரத்தில் மிச்சம் இருக்கப் போவது ஒரு பிடி சாம்பல்தான். ஆனால், அவன்

அவ்வளவு சீக்கிரம் சென்றதே தன்னால்தான், தன் மேல் வைத்த காதலினால்தான் என்று அவனுக்குத் தெரியும்.

அருகிலிருந்த பெருமாள் கோயிலில் மாறி மாறித் திவ்யப் பிரபந்தமும் சேமங்கல ஓசையும் கேட்டன. அதைக் கேட்டுவிட்டு மாறன், "சற்றுக் காலம் முன்னால் என் குலம் திக்குத் திசை புரியாத தாய்ப் படுபாதாளத்தின் தரையில் கிடந்தது. இப்போது நாம் ஆகாச வெளியில் மிதந்து கொண்டிருக்கிறோம். எல்லாவற்றிற்கும் தூண்டுகோலாய் இருந்தது அந்த வீர வைணவர்தான். ஒரு நாள் இதே நேரம், இதே வீர நாராயண ஏரியின் கரையில் உம் என்று முகத்தை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தேன். உள்ளே பாடிக் கொண்டிருக்கிறாரே, அந்த வீர வைணவர் வந்தார். அவரை வா என்று முகமன் கூட நான் சொல்லவில்லை. ஆனால், அன்றுதான் என் வாழ்க்கை மாறியது" என்றான்.

"அவர் சொல்லைக் கேட்டுத் தஞ்சைக்குள் வரவே எனக்கு மனம் இல்லை. எங்களைப் பற்றி இல்லாததும் பொல்லாதுமாய்ச் சொல்லித் தஞ்சைக்குள் வர முடியாதபடி செய்துவிட்டனர் எதிரிகள். யாரும் என்னைச் சீண்டக்கூட யோசித்தார்கள் ஐந் தாண்டுகளாய். எப்படியொரு பாதாளத்தில் இருந்தேன் தெரியுமா? நாம் கூட ஒருவர் மீது ஒருவர் பாயும் அளவுக்கு விதி கொண்டு வந்து நிறுத்தியது." என்று ஆதங்கப்பட்டான்.

"மாறா! பழையதையெல்லாம் இப்போது எதற்காக நினைவூட்டுகிறாய்?" என்று வந்தியத் தேவன் கேட்டான்.

யௌவனப் பிராயத்தில் உண்மையாக உள்ளம் ஒன்றுபட்ட ஒரு நட்புக் கிடைத்தது. பின் இருவரும் எதிரணியில் இருந்தனர்- ஒருவர் மேல் ஒருவர் கொலைப்பழி சுமத்திக்கொண்டு. மீண்டும் இணைந்த காலத்தில் பழையதைப் பற்றிப் பேச வல்லவராயனுக்கு இஷ்டமில்லை. நல்ல நண்பன் கிடைப்பது அருமையாகிவிட்டது. அதுவும் இழந்துவிட்டோம் என்று நினைத்த நட்பு மீண்டும் துளிர்விட்டது. யௌவனத்துச் சிநேகம் என்பது ஆழமானது என்பதை நிரூபித்தது அந்த மறுமலர்சி.

"இல்லை, வல்லா. பழையதை மறக்கக் கூடாது. நல்லதோ கெட்டதோ, நினைவில் வைக்க வேண்டும். இல்லை, அதே அனுபவங்களைத் திரும்பத் திரும்ப நிகழ்த்தும்படி ஆகிவிடும்" என்றான்.

"ஆமாம், உன்னை மீண்டும் பகைத்துக் கொள்ளக் கூடாது. இன்று உத்தமரைப் பார்க்க வேண்டுமென்றால் என் பாடே



கொஞ்சம் திண்டாட்டமாகத்தான் இருக்கும். உன் தயவு வேண்டும்!" என்று சொல்லிச் சிரித்தான் வல்லவராயன்.

கூடச் சிரித்துவிட்டு, மாறன், "வல்லா! எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறேன், தெரியுமா? என்னை ஏற்றுக் கொண்ட சமுதாயம் என்னை ஆராதனை செய்கிறது. விதி என் வழியில் பெரிய வேலைகளை இட்டு நான் முடிக்கும்வரை அருகில் நிற்கிறது. எல்லாரும் எனக்காக உதவக் காத்திருக்கிறார்கள். நீ கூட எனக்குப் பெண் கேட்க மனைவியை அனுப்புகிறேன் என்று கூறினாய். என் நண்பனுக்கோ ஞாபக மறதி அதிகரித்தது" என்று குத்திக் காட்டினான்.

வல்லவராயனுக்குத் தூக்கி வாரிப் போட்டது போலொரு எண்ணம். வந்தியத் தேவன் ஈழத்திலிருந்து திரும்பி வரும்போது மாறனுக்கு லோகாவை மணமுடித்து வைப்பதாக உறுதி அளித்திருந்தான். பழுவூர்ப் பெண்ணைப் பற்றிய புது நிகழ்வுகளைப் பற்றிப் பேசிவிட வேண்டும் என்றுதான் கடம்பூருக்கு வந்தான். ஆனால், மாறன் இவ்வளவு சந்தோஷமாக இருக்கும்போது அதைப் பற்றிய பேச்செடுக்க வேண்டாம் என்று நினைத்து அமைதி காத்தான்.

மாறனோ, "நான் விளையாட்டுக்குச் சொன்னேன், வல்லா. எனக்கு நல்லது செய்வாய் எனப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது" என்றான். "இன்று புவன சுந்தரியின் காதல் கண்கள் என் மேல் பட்டிருக்கின்றன. என் வாழ்க்கை முழுமையாக மாற இன்னும் அந்த ஒரு காரியம்தான் பாக்கி. நீ இந்தத் திருமணத்தை முடித்து வைத்தால் அதைவிட எனக்கு மகிழ்ச்சி அளிப்பது வேறொன்றும் இல்லை, வல்லா!" என்றான்

"நேரம் வரட்டும். செய்துவிடலாம்" என்றான் வல்லவராயன். கவலையெல்லாம் தீர்ந்தது என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகிறான் மாறன். அவனிடம் எப்படிச் சொல்ல வந்த செய்தியைச் சொல்வது என்று தடுமாறினான் வந்தியத் தேவன். அவனுடைய மனத்தைக் கவர்ந்த மங்கையின் மனதை நாடி இன்னுமொருவர், தன்னை விடச் சமுதாய ஏணியில் மிக உயர்ந்தவர் இருக்கிறார் என்று தெரிந்தால் எப்படிபட்ட மனத் துன்பம் இவனுக்கு ஏற்படும் என்று யூகிக்க முடியவில்லை. காதலைக்காட்டிலும் ஒருவனைப் பரவசப்படுத்தக் கூடியது வேறு என்ன உண்டு? அது போலவே அதில் தோல்வியைக் காட்டிலும் தளர்ச்சி கொடுப்பது ஏதும் இல்லை.

வந்தியத் தேவன் திரும்பித் தன் நண்பனைப் பார்த்தான். இந்த தர்மசங்கடமான சிக்கலிலிருந்து தன் இரு நண்பர்களையும்

விடுவிக்க வேண்டிய பொறுப்புத் தன் தலையில் சுமந்திருக்கிறது என்பதையும் அறிந்தான். ஆனால், புத்திசாலித்தனமாகச் செயல் பட்டால் இருவருக்கும் மனக்கஷ்டம் இல்லாமல் வெளிக் கொணர லாம். ஆனால், அதற்கு, எத்தனையோ அபாயங்களிலிருந்து தன்னைத் தப்புவித்த அதிர்ஷ்டம் உதவ வேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

முதலில் பேச்சை எப்படி எடுப்பது என்று தெரியாமல் திணறி யவன், பொதுவாக ஆரம்பித்தான்.

''மாறா! உனக்கு உன் புது வேலை பிடித்திருக்கிறதா?'' என்று விசாரித்தான் வந்தியத் தேவன்.

''வல்லா! அலுப்புத் தட்டி விட்ட என் வாழ்வில் இது ஒரு மறு மலர்ச்சி. சோழர் பரம்பரைக்குச் சேவை செய்வது என் மனதைப் பெரிதும் கவர்ந்து விட்டது. ஆனால், ஒன்று. நிகழும் அமைதியில் என்னவோ சோழர் சேனா வீரர்களின் கையில் வேல்களும் வாள் களும் துருப்பிடித்து வருகின்றன. அதனால் புதுப் புது நாடுகளைப் பிடிக்க வேண்டும் என்று சோழர்கள் அதி சீக்கிரத்தில் நினைப் பார்கள். அப்போது இந்தக் காவல் வேலை என்னை ஒரே ஊரில் கட்டிப்போட்டுவிடும் என்று யோசனைதான் வருத்தம் தருகிறது'' என்றான் மாறன்.

''ஏன், அரசருடன் நீயும் போர்க்களம் செல்வாயல்லவா?''

''யுத்த காலத்தில் சர்வ ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அரசனைப் பாதுகாக்க வேண்டும். என்று எனக்கும் தெரியும். ஆனால், உத்தமர் போருக்குச் செல்லவே மாட்டார் என்பதே என் எண்ணம். அதெல்லாம் போர் வரும் போது பார்த்துக் கொள்ள லாம். இப்போதுகூட எனக்கு ஒரு வேலையும் இல்லை. அரசர் என்ன சொல்லி அனுப்பினார் தெரியுமா? இந்த ஒரு வார காலம் நான் என்னை நன்றாய்ப் பார்த்துக் கொள்கிறேன். அதனால் எனக்கு ஒரு ஆபத்தும் வராது. நீ சென்று உன் தந்தை தாயைத் தரிசனம் செய்துவிட்டு வா!'' என்றார்.

தலையசைத்து ஒப்புக் கொண்டான் வந்தியத் தேவன். ''நாடு மிகவும் அமைதியாய்த்தான் இருக்கிறது. சோழரின் அரசாட்சியின் கீழ் ராஜபாட்டையில் இரவு பகல் எந்த நேரத்திலும் பயமின்றிப் பிரயாணம் செய்யலாம் என்று பறையறைந்து சொல்லப்பட்டிருக் கிறது. வழிப்பறி என்பதே கிடையாது. இப்போது கடல் கடந்து பொன்னியின் செல்வர் சென்று கடல்வழிகளையும் அவ்விதமே பாதுக்காப்பாக்கி விட்டார்'' என்றான்.



பொன்னியின் செல்வரைப் பற்றிப் பேச்செடுத்தவுடன் மாறன், ''நீ கொடுத்து வைத்தவன், வல்லா. ஏற்கெனவே அவருடன் சென்று பல சாகசங்கள் புரிந்து விட்டாய். எனக்கு அந்த வாய்ப்பே கிடைக்கவில்லை'' என்றான் மாறன். ''பொன்னியின் செல்வ ருடன் சேர்ந்து நான் பல சாகசங்கள் புரிய வேண்டும் என்பதே என் ஆசை. அவர் எங்கோ, நான் எங்கோ என்று இருந்த நிலை மாறி, விதியின் கடைக்கண் பார்வையால் நான் முன்னேறி வந்தவுடன் அவர் இப்படி ஊர் விட்டு ஊர் போய்விட்டார்!'' என்று வருத்தப்பட்டான்.

ஒரு நொடி மௌனம் காத்தபின், ''ஆனால், வல்லா! இதிலே ஏதோ மர்மம் இருக்கிறது!'' என்றான் குரலைத் தாழ்த்தி. ''ராஜரீகக் காரியங்களில் பல நாட்களாய் அவர் கலந்து கொள்வதில்லை. அரசருடன் மனஸ்தாபமா? எங்கேயாவது கண் காணாத தேசத் துக்கு அந்தக் கோமகன் போகக் காரணம்தான் என்ன? அரசருடன் ஏதேனும் சர்ச்சையா?'' என்று வினவினான்.

வந்தியத் தேவன் அதை மறுத்தான். ''அரசருடன் சண்டை என்று சொல்வது மட்டும் பிசகு. அவ்விதம் பொன்னியின் செல்வர் ஒரு நாளும் செய்வதில்லை...'' என்று சொல்லி முடிப்பதற்குள், ''அப்படியானால், இன்னும் ஒரே ஒரு சந்தேகத்தை மட்டும் நிவர்த்தி செய்யும்படி வல்லவராயரை வேண்டிக் கொள்கிறேன். தஞ்சையை விட்டுப் பொன்னியின் செல்வர் ஏன் சென்றார்?'' என்றான் மாறன்.

தான் தள்ளிப்போட்டதைக்கூட விதி கொண்டு வந்து வாசலில் நிறுத்துகிறது என்று வருத்தப்பட்டான் வல்லவராயன். ஆனாலும், 'ஆகா! சந்தர்ப்பம் தானாக எழுகிறது. இனிமேல் பேச்சை வேக மாகச் செலுத்திக் கொண்டுப் போக வேண்டியதுதானே?' என்றும் நினைத்தான். அவன் மனத்திற்குள் புதைந்து கொண்டிருந்த உண்மையையும் சொல்லிவிட வேண்டும்.

''முதலில் பொன்னியின் செல்வர் இப்படி மாறியது எனக்குச் சிறிது வியப்பை அளித்தது. பின்தான் காரணம் தெரிகிறது. அவர் சென்றது ஒரு பெண்ணுக்காக!'' என்றான் வந்தியத் தேவன்.

''ஆகா! அதுதான் விஷயமா? எனக்கு ஏற்கெனவே தெரியுமே!'' என்றான் மாறன்.

'என்ன. உனக்குத் தெரியுமா? அட. எவ்வளவு கல் நெஞ்சக் காரனடா நீ!' என்று நினைத்துக் கொண்டான் வந்தியத் தேவன்.

''ஆம். நீங்கள் இருவரும் கொள்ளையர் தீவிலிருந்த போது அவர் கனவில் வந்தாளாம்'' என்றான் மாறன்.

"அந்தக் கனவைப் பற்றி உன்னிடம் சொன்னாரா?....." என்று இழுத்தான் வந்தியத் தேவன். விதி எப்படியெல்லாம் விளையாடிப் பார்க்கிறது என்று வியந்தான். "காதலிக்கும் பெண் கிடைக்காவிட்டால் எப்பேர்ப்பட்ட நரக வேதனை அனுபவிக்க வேண்டும் என்று தெரியுமா?"

"அப்படியொரு நிலை வருமெனக் கனவிலும் நான் எண்ண மாட்டேன்" என்றான் மாறன்.

"அத்தகைய துர்கதிக்கு நீ ஆளாகாதபடி கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும். ஆனால், பொன்னியின் செல்வர் அந்த வேதனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்."

"கனவில் வந்த பெண்ணுக்காக மனம் உடைய வேண்டுமா? பெண்ணாய்ப் பிறந்தவள் அவருக்காகப் பிறந்திருந்தால் முன்னால் வர மாட்டாளா?" என்றான் மாறன்.

சிரித்தான் வந்தியத் தேவன். "பிழையெல்லாம் விதியின் பேரில்தான், மாறா. அவள் அவர் முன் வந்தாள்."

"பின் என்ன கஷ்டம்?"

"அவள் வேறொருவனைக் காதலிக்கிறாள் என்ற செய்தி பொன்னியின் செல்வருக்குத் தெரிந்துவிட்டது" என்றான் வந்தியத் தேவன்.

மாறனால் நம்பமுடியவில்லை, "இந்த உலகத்தில் சில அதிசயப் பிறவிகளான வீரர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் ஏதோ ஓர் அபூர்வமான சக்தி இருக்கிறது. அப்படிப்பட்ட வசீகர சக்தியுடைய அவருக்கே இந்த விஷயத்தில் தோல்வி. பொன்னியின் செல்வரிடம் அப்படி என்னதான் ஆகர்ஷண சக்தி இருக்குமோ, தெரியவில்லை என்று எல்லாரும் வியக்கிறார்கள். அவரை ஒரு முறை பார்த்தவர்கள்கூடப் பரவசமாகி விடுகிறார்களே! அப்படிப் பட்டவரை விட்டு இன்னொருவனை விரும்புகிறாள் அந்தப் பெண் என்றால், அவள் குருடாய் இருக்க வேண்டும். இல்லையென்றால் அவள் காதலிக்கும் ஆண்மகனின் வசீகர சக்தி அபாரமாய் இருக்க வேண்டும்" என்றான் மாறன்.

"உண்மைதான் மாறா. அவனது வசீகரம் அபாரமானது!"

"புதிர் போடாதே, நண்பா. விவரமாய்ச் சொல்."

'புதிரல்ல. புற்றிலிருந்து கிளம்பும் பூகம்பம்!' என்று நினைத்துக் கொண்டு வந்தியத் தேவன். "அவன் வசீகரன்தான். இல்லையென்றால் இவ்வளவு சண்டை பிடித்த பின்னும் உன்னைத் தேடி நான் வந்து கொண்டிருப்பேனா?"



"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? என்னதான் சொல்கிறாய்?"

"ஆம், மாறா, உன்னிடம்தான் எல்லாரையும் கவர்ந்திழுக்கும் அந்த வசீகர சக்தி யிருக்கிறது. அந்தப் பெண்ணை வசீகரித்தது நீ!" என்றான் வந்தியத் தேவன்.

வார்த்தைகள் வெளியே வந்தவுடன் தன் மனதில் பாரம் குறைந்தது போல உணர்ந்தான் வந்தியத் தேவன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப் பன்னிரண்டு
## வந்தியத் தேவனின் கவலை!

அந்த ஏரிக்கரையில் ஒரு விசித்திரமான நிசப்தம் நிலவிற்று.

பொங்கிய புது வெள்ளம் போன்ற ஆச்சரியத்தின் அறிகுறி மாறனின் முகத்தில் தெரிந்தது. அந்த வியப்புக் கடலில் மூழ்கியிருந்த மாறனுக்கு வல்லவராயன் சொன்ன வார்த்தைகள் காதில் சரியாக விழவில்லையா? இல்லை, விழுந்தும் மனத்தில் நன்கு அர்த்தம் பதியவில்லையா என்று முதலில் தெரியவில்லை. ஆனால், ஒன்று. ஏரிக் கரையோரமாகக் கல்லாய்ச் சமைந்திருந்தான் மாறன்.

இதுவரை தான் அறிந்திராத விஷயத்தைக் கேள்விப்பட்ட மாறனின் உடலில் ஓடும் ரத்தமெல்லாம் திகைப்படைந்து செயவிழந்து நின்றது. அவனுடைய உள்ளம் திக்பிரமை கொண்டது. 'ஐயோ! இது என்ன புதுப் பிரச்சனை?' தன்னைப் போலப் பொன்னியின் செல்வரும் லோகாவை உயிருக்கு உயிராக விரும்புகிறார் என்று அறிந்தது முதல் பரபரப்பு அடைந்து தத்தளித்துக் கொண்டிருந்தான் மாறன். அந்த விசித்திரமான கனவு தன்னையுமல்லவா சம்பந்தப்படுத்திவிட்டது. அங்கே வைத்து இங்கே வைத்துக் கடைசியில் தன் தலையில் கையை வைத்து விட்டதே விதி.

ஆனால், வந்தியத் தேவன் பேச்சில் அவநம்பிக்கை கொள்ளக் காரணம் இல்லை மாறனுக்கு. "அவன் சொல்வதெல்லாம் கோர்வையாய்த் தானிருந்தன. இதுவரையில் எனக்கு அர்த்தமாகாத விஷயங்கள் பல இப்போது அர்த்தமாகின்றன. வல்லவராயன் மனைவி குந்தவை என்னுடன் சரியாகப் பேசாதது முதல்,

பொன்னியின் செல்வர் ஊரை விட்டுச் சென்றது வரை எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாய்ப் பிணைந்த நிகழ்வுகள்தாம்.'' முக்கியமான ஒரு விஷயத்தை இதுவரை சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ என்று தோன்றியது மாறனுக்கு.

எப்படியெல்லாம் கடம்பூர் இளவரசன் மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தான். அந்த மனக்கோட்டைகளுக்கு இடையிடையே நிஜம் இப்போது குறுக்கிட்டுவிட்டது. சில நாட்களாய்த் தானும் லோகாவும் மட்டுமே இந்தப் பூவுலகில் தனித்து வாழ்வது போல நினைத்து வந்தான். இப்போது நினைத்துப் பார்த்தால் அது மூடத்தனம் என்று தோன்றியது. ''எப்பேர்ப்பட்ட தேவலோகத்து மோகினியும் அழகுக்கு இவளிடம் பிச்சை வாங்க வேண்டும் என்று பெருமிதம் கொண்டேனே. அப்பேர்ப்பட்டவள் நம் கண்ணில் மட்டும்தான் படுவாள் என்ற எண்ணம் எவ்வளவு அபத்தமானது!'' என்று தோன்றியது. பழுவூர்க் குலத்தில் பிறந்த அந்த இணையில்லாப் பெண்ணரசியின் எழிலைத் தான் மட்டும் தான் ரசித்தோம் என்று நினைத்தது பிழை. அத்தகைய அதிசய அரசகுமாரியைப் பெறப் போகும் பாக்கியசாலியாயிருக்கப் பலரும் விரும்புவார்கள்தானே?

செய்தியைக் கேட்ட பின் மாறனின் நாவும் தொண்டையும் ஒரு நொடியில் வறண்டு விட்டன. உடனே பேச மாறனுக்குத் துணிவு ஏற்படவில்லை. ஆனால், இந்தப் பிரச்சனையின் பல கோணங்களையும் சிந்தித்தான். அருள்மொழியின் அறிவும், அழகும் இகர உயர்வுகளும் நாடே அறிந்தவை அல்லவா? அதை விட ''ஏக அந்தஸ்தில் திருமணம் செய்வதைவிடச் சமுதாய ஏணியில் தங்களைவிட உயர்ந்த குடும்பத்தில் சம்பந்தம் செய்யவே எல்லாரும் பிரியப்படுவார்கள். பழுவேட்டரையர் மட்டும் அதற்கு விதிவிலக்கா என்ன?'' என்ற பயம் அவனுக்கு ஏற்பட்டது.

சோழர் குலத்தில் தங்கள் இல்லத்தில் பிறந்த பெண்களை மண முடிக்கச் சுற்றுப்புறமுள்ள குறுநில மன்னர்கள் எல்லாரும் ஆவலாயிருக்கிறார்கள். ஒரு காலத்தில் தன் தங்கையை அந்தக் குலத்தில் திருமணம் செய்ய வேண்டும் என்று தானே ஒற்றைக் காலில் நிற்கவில்லையா? அதுவும் பழுவேட்டரையர் குலத்துடன் சோழர்கள் நெருங்கிய உறவு பூண்டவர்கள். அவர்களோடு சோழருக்கு உறவு ஆறு தலைமுறையாகத் தொடர்ந்து வந்திருக்கிறது. பரம்பரை பரம்பரையாக இங்கு அவர்கள் பெண் எடுக்கிறார்கள். புகழ் பெற்ற பராந்தகச் சக்கரவர்த்தியே பழுவேட்டரையர் குலத்தில் பெண் கொண்டவர்தான்.



தலையைக் கீழிலிருந்து உயர்த்தவில்லை மாறன். மனதின் ஐயங்களைத் தீர்த்துக் கொள்ளும் முயற்சியில் சம்புவராயரின் உதடுகள் ஏதோ முணுமுணுத்தன. ஆனால், வல்லவராயனுக்கு வார்த்தை ஒன்றும் கேட்கவில்லை. ''இதெல்லாம் உண்மை தானா?'' என்று கேட்பதற்குக் கூட அவனுக்கு நா எழவில்லை. எனவே வல்லவராயன்தான் மீண்டும் பேசும்படியாக நேர்ந்தது.

வந்தியத் தேவன் ஒரு விரல் கொண்டு மாறனின் முகத்தை நிமிர்த்தி, ''பின்னால் வேறு யாரிடமாவது இச்செய்தியைக் கேட்க நேரிட்டால் வருத்தப்படுவாய் என்றுதான் நானே சொல்கிறேன்'' என்றான். பொன்னியின் செல்வரும் எப்படியும் ஒருநாள் தஞ்சைக்குத் திரும்பி வந்து, அந்தப் பெண்ணை அடைய முயல்வார் என்று வந்தியத் தேவனுக்குத் தெரியும். அதற்குள்ளாக மாறனுக்கு இந்த விஷயமாவது தெரிய வேண்டும் என்று நினைத்தான். ஏதேதோ ஆகாசக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருப்பவன். அதனால், தோல்வி எனும் செய்தி தீவிரமாக இருக்கும். வாழ்க்கையில் பற்றை இழந்துவிடுவான். எவ்வளவு கசப்பாய் இருந்தாலும், இந்த விஷயத்தைச் சொல்வதும், மாறனின் ஆகாசக் கோட்டையை தகர்ப்பதுவும்தான், வந்தியத் தேவன் கடம்பூர் கிளம்பி வந்ததின் முக்கிய நோக்கம்.

வந்தியத் தேவனின் முகத்தைப் பார்த்து பார்த்தபடியே திகைத்துப் போய் அமர்ந்திருந்தான் மாறன். நீண்ட பெரு மூச்சுகளுக்கு இடையே இருவரின் பேச்சும் தொடர்ந்தது.

மாறன் மனம் அதிவேகத்தில் செயல்பட்டது. ''ஏதாவது வழி செய்ய வேண்டாமா?'' என்று துடித்தது. லோகாவைக் கூட்டிக் கொண்டு இந்தச் சோழர் ஆளும் பிரதேசத்தை அன்றைய இரவுக்கிரவே எப்படியாவது தாண்டிப் போய்விட வேண்டும் என்றுகூடத் தோன்றியது. ''தூர தூர தேசங்கள் இல்லாமல் இல்லையே. அங்கெங்காவது அவளுடன் சென்று விடவேண்டும். ஆனால், அதை எப்படிச் செய்வது?'' என்று குழம்பினான்.

தக்க முறையில் அவன் செயலை அங்கீகரித்து அரசன் பதவி கொடுத்திருக்கிறான். இப்போது பார்த்து இந்தப் போட்டியா? ஓடிப் போகலாம் என்றால் இப்போதுப் பார்த்து உயர் பதவி வந்து தன் தலை மேல் திணிக்கப்பட்டது. முதல் முறையாகத் தனக்குக் கிடைத்த பதவியை வெறுத்தான் மாறன்.

வந்தியத் தேவனிடம் பேசிப் பார்த்தான். ''அவளை அழைத்துக் கொண்டு வேறேதாவது நாட்டுக்குச் சென்று காந்தர்வ மணம் புரிந்து கொள்வது நல்லது என நினைக்கிறேன்'' என்றான் மாறன்.

அதைக் கேட்டுவிட்டு அடக்க முடியாமல் சிரித்தான் வந்தியத் தேவன்.

"இது என்ன பைத்தியக்கார எண்ணம் உனக்குத் தோன்றியது? ஓடிப் போவதா? நாடே உன்னை அங்கீகரித்து வாழ்த்துகிறது. இப்போது பார்த்து ஊரை விட்டு ஓடும் ஒரே வேளக்காரப்படைத் தளபதி நீயாகத்தான் இருப்பாய்!" என்றான்.

"கேட்கப் பைத்தியக்கார எண்ணம் போல் தோன்றுவதை ஏன் உண்மையாயிருக்கக் கூடாது என்று தோன்றுகிறது. எல்லாவற்றை யும் விட எனக்கு அவளே முக்கியம்" என்று சாதித்தான் மாறன்.

"புரியாமல் பேசாதே. நீ உன் தந்தை, தாயை விட்டுச் செல்வாயா? இல்லை, அவள்தான் தந்தையை விட்டு வருவாளா? இவர்கள் அனைவரையும் கூட்டிக் கொண்டு ஓடுவது சாத்திய மில்லையே, மாறா!" என்று வந்தியத் தேவன் சிரித்தான்.

"வல்லா! சிரிக்கும் விஷயம் அன்று இது" என்றான் புண்பட்ட மாறன்.

"அப்படி ஏதும் செய்யக்கூடாது" என்றான் வந்தியத் தேவன். அவ்விதமே மாறனிடம் வாக்குறுதி யொன்றையும் பெற்றுக் கொண்டான்.

நிகழும் விஷயங்கள் எல்லாம் தன் நண்பனுடைய மனதை நோகடிக்கக் கூடாது என்று வந்தியத் தேவன் ஆண்டவனை வேண்டிக் கொண்டான். தான் என்ன செய்தாலும் முடிவு தோல்வி தானே என்ற மாறனின் அலட்சியம் நீங்கி ஆக்கபூர்வமாக மாறி யிருந்த காலமிது. அதற்குப் பழுவூர்ப் பெண்ணின் மேல் வைத்த காதல் உரமாக இருந்தது பற்றி சந்தேகமேயில்லை. எவ்வளவு காலம் எவ்வித நோக்கமும் இன்றி அலைந்தான். எல்லாம் ஒரு பயத்தால்தான். மறுபடியும் அதே பயம் சூழ்ந்திருப்பது போன்றே வந்தியத் தேவனுக்குத் தோன்றியது.

"மாறா! எதற்காக இவ்வளவு பதற்றப்படுகிறாய்? இப்போது என்ன முழுகிப் போய்விட்டது?" என்று வந்தியத் தேவன் கேட்டான்.

"எனக்கு கஷ்டமெல்லாம் முடிந்ததென்று எண்ணியிருந்தேன். சிக்கல்கள் தொடர்கின்றனவே" என்றான் மாறன்.

"இதிலென்ன சிக்கல், நண்பா? உனக்கு அற்புதமான காலம் வந்துவிட்டது. அந்தப் பழுவூர்ப் பெண்ணும் உன்னை நேசித்தால் இந்தப் பயத்துக்குக் காரணமில்லை யென்று தோன்றுகிறது. அப்படி உன்னை உதறித் தள்ளிவிட்டு அவள் சென்றுவிடுவாளா



என்ன?" என்றான். "ஒவ்வொரு பெண்ணுக்கும் தன் மனதுக் கிசைந்த புருஷனை மணக்க உரிமை இருக்கிறதல்லவா இந்தச் சோழ நாட்டில்?" என்றான். பின் சற்றுத் தணிந்த குரலில், "அந்தப் பெண் யாரை விரும்புகிறாள் என்பதே முக்கியம்" என்றான்.

"நண்பா, காதல் என்பது இரு உள்ளங்களின் சங்கமம் என்று இந்தச் சமுதாயம் கருதுகிறதா? அந்தஸ்து என்பது குறுக்கிடுகிறதே!" என்று தன் ஆதங்கத்தைத் தெரிவித்தான் மாறன்.

"என்ன அந்தஸ்து? உன்னை விட அந்தஸ்து இந்தப் பிரதேசத் தில் யாருக்கு இருக்கிறது?"

"மன்னன் உயர்ந்தவன்தான். ஆனால், அவனை விடச் சக்கர வர்த்தி உயர்ந்தவன் என்று பழுவேட்டரையர் நினைக்கலாம் அல்லவா?" என்று விளக்கினான் மாறன்.

பதில் சொல்லத் தாமதமானது வந்தியத் தேவனுக்கு. தன் நண்பனின் இக்கட்டான நிலையினைக் கண்டு பரிதாபித்தான். தன் இயலாமையைக் கண்டு பரிதவித்தான்.

மாறனுக்குத் தைரியம் சொல்பவன்போல் வந்தியத் தேவன் கூறினான்: "நண்பா! வடிவுடைய பெண்ணென்றால் எவருமே கண்ணையும் கருத்தையும் பறிகொடுப்பது இயற்கைதான். மெய்ம்மறந்து விடுவது வழக்கம். உனது காதலியைத் தேர்ந்தெடுக்க உனக்குப் பாத்தியதை உண்டு. இப்போது தான் நீ உன்னையே கேட்டுக் கொள்ள வேண்டும். ஒளிவு மறைவின்றிக் கூறு. உண்மை யில் அவளை எவ்வளவு காதலிக்கிறாய்?" என்றான்.

"அவளை மறப்பதென்றால் என்னால் கனவில் கூட நினைத்துப் பார்க்கமுடியவில்லையே. அவள் பெயரைக் கேட்டவுடனே எனது மனம் கனிந்து உருகுகிறது. அவள் எனக்கே பிறந்திருக்கிறாள் என்று நினைத்தேன். இதுவரை நடந்து வந்த காரியங்களும் அதையே உறுதிப் படுத்தின. ஆனால், இப்போது நான் என்ன செய்வது என்று எனக்கே தெரியவில்லை" என்று தன் இயலாமையை எடுத்துச் சொன்னான் மாறன்.

"அந்தப் பெண் வேறொருவனைக் காதலிக்கிறாள் என்று தெரிந்த அருள் மொழி வர்மரோ ஊரை விட்டே வெளியேறி யிருக்கிறார்" என்றான், வந்தியத் தேவன்.

"அதற்காக நான் என்ன செய்ய முடியும்?"

"இல்லை. உன் போட்டியின் அளவைத் தெரிந்து கொள்."

"அந்தப் பெண் அவரைக் காதலிக்கவில்லை யென்றால் அதற்கு நானா பொறுப்பாளி?"

''ஆமாம், அதைத்தான் நானும் சொல்கிறேன். அவருடன் எல்லா வகையிலும் போட்டியிடக் கூடிய சிறப்புகளும் உனக்குண்டு.''

''வாழையடி வாழையாய் வந்த சோழர் வம்சத்துடன் நம்மால் போட்டி போட முடியுமா?''

''உன்னைத் தவிர வேறு கதியில்லை என்று அந்தப் பெண் நினைத்தால்?''

லோகா நினைப்பாள் என்று தன்னைத் தானே மாறன் தேற்றிக் கொண்டான். ஆனால், அது மட்டுமல்ல. லோகாவுக்கு இதைத் தீர்மானிப்பதில் எவ்வளவு பங்குண்டு என்று அவனுக்குத் தெரியவில்லை. பழந்தமிழ் நாட்டின் மன்னர் குலத்தில் பிறந்த மாதரசிகள் மிகவும் கௌரவிக்கப்பட்டார்கள். ஆனால், இந்தத் திருமண விஷயத்தில் மட்டும் அவர்கள் இஷ்டப்படி நடக்க முடியாது என்பது அவர்கள் சாபக்கேடு.

''சலசல''வென்று சத்தத்துடன் ஓடிய தெளிந்த நீரையுடைய சின்னஞ்சிறு கால்வாயின் அருகேதான் இருவரும் உட்கார்ந்திருந்தார்கள். மாறன் எழுந்து, ஏரியின் கீழ் இறங்கிக் குளிர்ந்த தண்ணீரினால் முகத்தை நன்றாய் அலம்பிக் கொண்ட பிறகு, தலையிலும் தண்ணீரை வாரிவாரி ஊற்றிக் கொண்டான்.

பின் கரையில் அமர்ந்திருந்த வந்தியத்தேவனைப் பார்த்து, ''நண்பா! என் உள்ளத்தில் நிம்மதி இல்லை. இனந்தெரியாத அபாயம் ஏதோ என் காதலை நெருங்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. எனக்குத் தனிமை தேவை. உன்னைப் பின்பு சந்திக்கிறேன்'' என்று சொல்லி நடந்தான்

ஒரு பத்து அடிகளுக்குப் பின் நின்றான். ''போகும் முன் ஒரு கேள்வி'' என்றான். ''லோகாவுக்கு இந்த விஷயம் தெரியுமா?''

''இதுவரை தெரியாது என்று நினைக்கிறேன்'' என்று பதிலளித்தான் வந்தியத் தேவன். ''நண்பா! உனக்கு அறிவுரை சொல்ல இதை நான் சொல்லவில்லை. நாட்டு நடப்புகள் உனக்குத் தெரிய வேண்டும் என்றுதான் சொல்கிறேன். என் நிலையையும் நீ புரிந்து கொள்ள வேண்டும்'' என்றான்.

''நீ என்ன சொல்கிறாய், வல்லா ?''

''இது என்ன போரா, இரு நண்பர்களுக்குள் ஒருவரைத் தேர்ந்தெடுத்து நான் ஆதரிக்க? அந்தப் பெண் யாரை விரும்புகிறாளோ அவனைத் திருமணம் செய்து கொள்ளட்டும். நீயும், பொன்னியின் செல்வரும் எனக்கு இரு கண்கள் போன்றவர்கள்'' என்றான்.



''வல்லா, உன் நிலைமை எனக்குப் புரிகிறது'' என்றான் மாறன். அதன் பின்னர் திரும்பாமல் நடந்தான். சற்றுத் தூரத்தில் இடிந்து கிடந்த கோட்டைக்குள்ளே புகுந்தான். இடிந்த பாழுஞ் சுவர்களின் நடுவே ஒற்றையடிப் பாதையில் நடந்தான். எங்கும் இடிபாடுகள். 'ஒரு காலத்தில் எவ்வளவு ஓவியமாய் இருந்த இடம். மீண்டும் லோகாவின் காலடி பட்டு மலரப் போகிறது என்று கனவுக் கோட்டை கட்டினோமே!' என்று ஆதங்கப்பட்டான்.

'என் வாழ்க்கையில் நான் அனுபவித்ததெல்லாம் போதாதா?' என்று நினைத்தவனுக்கு அவன் எதிர்பார்த்தது போல் காரியங்கள் இனிமேல் சுமுகமாக நடக்காது என்று மனதினுள் தோன்றியது. மெல்ல விதி தன் பிடியைத் தளர்த்தியது என்று எண்ணினால், மூச்சு விட நேரம் கொடுத்து, மீண்டும் அதன் இரும்புப் பிடியில் அகப்பட்டுக் கொண்டான். எதிரி போல விடாப்பிடியாகத் தன்னைத் துரத்திக் கொண்டு வந்த விதியிடம் எதிர்த்து நின்று ஒருவனுக்கு ஒருவனாகப் போரிட்டு வெற்றி காண வேண்டும் என்ற ஆர்வம் வந்தது.

சோழரின் சாதிக்கும் தன்மை அவனுக்கு நினைவில் இருந்தது. ஆனால், போராடாமல் இதை விடக்கூடாது என்று முடிவெடுத்தான். ஓடிப்போவோம் என்ற சிந்தனை கொண்டதற்கு வெட்கப்பட்டான். அச் செயலை யோசித்துப் பார்த்தால் அசட்டுத்தனமாகத்தான் இருந்தது. பிறகு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, தன் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு போகும் வழியெல்லாம் சிந்தித்தபடி சென்றான். ஆனால், தன் மனதுக்குள் சொல்லிக் கொண்ட ஆறுதல் எதுவாயிருந்தாலும் மனத்தில் தோன்றிய பீதி என்னவோ உண்மையாயிருந்தது.

ஏரிக் கரையில் தனியே அமர்ந்திருந்த வந்தியத் தேவனுக்குக் குழப்பம். 'அவசரப்பட்டு இன்று சொல்லியிருக்க வேண்டாமோ?' என்று கூடத் தோன்றியது. நேற்றுவரை, பலகாலம் கழித்து மாறனின் முகத்தில் புதுச் சோபை ஒளிர்ந்தது. ஆனால், அது இனி எத்தனை நாளுக்கு நீடிக்கும் என்று தெரியவில்லை என்று நினைத்து நினைத்து இவ்வளவு நாள் சொல்லாமல் இருந்து விட்டான்.

ஆனால், சொல்லியதும் சரிதான். மாறன் தனக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்று போட்டியிலிருந்து விலக மாட்டான். நிச்சயம் போராடுவான். போராடிப் பழகியவன் மாறன்.

இந்தச் செய்திகள் எல்லாம் கடம்பூரில் மாறனுக்குத் தெரிய வந்தபோது, அந்த வாலிபனின் துயரும் பன்மடங்கு அதிகமாயிற்று.

அதைப் போல வல்லவராயனுக்கும்தான். அடியான் தேடி வந்த போது வந்தியத் தேவன் மட்டும் ஏரிக்கரையில் அமர்ந்திருந்தான். பாடி முடித்துவிட்டு வந்த அடியானிடம் கூட அவன் பேசவில்லை.

நண்பர்களுக்கு இடையே மீண்டும் சண்டை மூண்டு விட்டதோ என்று அடியான் பயந்தான். தர்ம சங்கடத்தில் சிக்கிய வந்தியத் தேவனுக்கு இன்று பேச்சே வரவில்லை. தன் ஆருயிர் நண்பனிடம் ''உனக்குப் பக்கபலமாக நான் இருக்கிறேன் என்று சொல்ல முடியவில்லையே. எது நடக்குமோ அது நடக்கட்டும் என்று சொல்லும் நிலையில்தான் இருக்கிறேன்'' என்றல்லவா சொல்ல வேண்டியிருந்தது!

மாறனின் நிலை இப்படி யென்றால் பொன்னியின் செல்வருடைய கதி என்ன ஆயிற்றோ என்ற கவலையும் அவனைப் பிடுங்கித் தின்று கொண்டிருந்தது. மாளிகையின் சுக சௌகரியங்களை விட்டு விட்டுக் காட்டில் ஏதோ மண் தரையில் துவண்டு கிடக்கும் நண்பன் ஒரு பக்கம். தான் விரும்பி, தன்னையும் விரும்பும் பெண்ணை அடைய முடியுமா என்ற சந்தேகம் கொண்ட நண்பன் ஒரு புறம். என்ன செய்வது. இவ்வுலகமே பெரும் நாடக மேடை. எல்லாரும் வேடம் பூண்டு தான் நடிக்க வேண்டியிருக்கிறது என்று ஆறுதல் சொல்லிக் கொண்டான்.

இரு நண்பர்களுக்கும் யாதொரு சிரமமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்றால் முடியாது. காதலில் இன்பமும் குதூகலமும் எத்தனை உண்டோ, அதை விட அதிகமான துன்பமும் வேதனையும் உண்டு. இரு நண்பர்களுக்கும் இடையே நடக்கப்போகும் மறைமுக யுத்தத்தைத் தவிர்க்க வழியில்லாமல் தடுமாறினான். நிலைமைகளை சகிக்கமுடியவில்லை. இந்த விஷயத்தில் இரு நண்பர்களுள் ஒருவனாவது புண்படாமல் இருப்பது இயலாத காரியம். இதில் தோல்வியுறுபவன் தப்பிச் செல்வது எப்படி?

வந்தியத் தேவனுக்குக் கடம்பூரில் செலவழிக்கும் ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாகக் கழிந்து கொண்டு இருந்தது. இவ்விதம் உள்ளம் அங்குமிங்கும் அப்படியும் இப்படியும் ஊசலாட, சீக்கிரம் தஞ்சைக்குத் திரும்ப வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது.

ஒரு வாரம் தங்குவது என்ற முடிவுடன் வந்த மூவரும் மூன்று நாட்களில் தஞ்சையை நோக்கி நகர்ந்தார்கள். வரும்போது இருந்த குதூகலம் போகும்போது இல்லை. ஊமைகள் போலப் பயணித்தனர் வல்லவராயனும் மாறனும். நடுவில் அகப்பட்ட அடியானுக்கு ஒன்றும் புரியவில்லை. கட்டைப் பிரமச்சாரியான



அவனுக்குக் காதலும் அதையொட்டி வரும் கோப தாபங்களும் புரியாமல் இருந்ததில் அதிசயம் இல்லையே.

வந்தியத் தேவன் உள்ளத்தின் அந்தரங்கத்தில், 'ஒருவேளை எப்படியாவது இந்த இருவரில் ஒருவர் அந்தப் பெண்ணை வெறுக்கும் சந்தர்ப்பம் ஏற்படாதா?' என்ற எண்ணம் தோன்றியது. 'வீணாசை!' என்று அவனே தன்னைத் தான் திருத்திக் கொண்டான். ஒருவருக்கு அது கைகூடாத ஆசையாகப் போகிறது என்பது நிச்சயம். விதி தான் அமைத்த நாடக மேடையை அவ்வளவு எளிதில் கலைத்து விடுமா என்ன?

ஒரு புது ஆர்வம் மாறனின் மனதிலும் இருந்தது. சாதனை களுக்கு நிச்சயமாகப் பலனுண்டு என்று அறிந்திருந்தான். அதனால் திருப்பிக் களம் இறங்க வேண்டும். எல்லாரும் மூக்கின் மேல் விரல் வைக்கும் அளவுக்குச் சாதனைகள் புரியவேண்டும். தான் தேடிய பழம் தன் மடியில் தானாக வந்து விழ வேண்டும் என்று உறுதி கொண்டான்.

வந்தியத் தேவன் மற்றொரு நண்பனின் நிலையைப் பற்றிச் சிந்தித்தான். பொன்னியின் செல்வருக்கோ எதிலும் பற்றுதலற்ற நிலை. காதலை நினைத்து ஊரை விட்டு உறவினரை விட்டுக் காலங் கழிப்பது சரியா என்று கேட்டால் வந்தியத் தேவன் இல்லை யென்பான். ஆனால், அவரது காதலின் ஆழம் தெரிந்துவிட்டது. துன்பத்தின் நிழல் கூட விழாமல் வாழ்ந்துவிட்டதனால்தான் இப்படி முடிவு எடுக்கிறார் போல. ''இல்லை, மாமனிதன் அந்தப் பொன்னியின் செல்வர். ஒருவேளை மாறன் வழியில் குறுக்கிட வேண்டாம் என்றுதான் சென்றாரோ?'' என்று கூடத் தோன்றியது.

ஆழ்ந்து யோசித்தால் அதிலும் உண்மையிருக்கலாம் என்று தோன்றியது. பொன்னியின் செல்வருக்கு மாறனின் காதலைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். அவருக்கு மாறனின் மீது விவரமில்லாத ஆத்திரம் ஏற்படவில்லை. அவர் ஒதுங்க நினைத்தாரோ என்னவோ? அப்படியென்றால் அவர் திரும்பும் முன் இவர்கள் இருவருக்கும் திருமணத்தை முடித்துவிடலாமே என்று தோன்றியது.

அப்படியென்றால் மாறனுக்குக் கஷ்டமேதும் இல்லை. அது போலக் கஷ்டமேதும் இல்லாமல் பொன்னியின் செல்வரும் தஞ்சை திரும்பிவிட்டால் இந்தக் கதைக்குச் சுமுகமான முடிவு தான். ஆனால், தஞ்சையை நெருங்க நெருங்க வந்தியத் தேவனுக்குக் கவலை அதிகரித்தது.

''பொன்னியின் செல்வர் எங்கிருக்கிறாரோ?''

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்றுப் பதின்மூன்று

## அருள்மொழியின் பயணம்

அருள்மொழி நடந்து கொண்டிருந்தார். அவர் தலைக்கு மேல் மேகமில்லாத நீல வானத்தின் வெய்யில் சுட்டெரித்தது. அதன் வெப்பத்தை உதயத்திலிருந்து தேக்கிவைத்திருந்த சுற்றுப்புறமும் தன் பங்குக்குச் சுட்டெரித்தது. சூடான வெப்ப அலைகள் சாலையின் எதிரே தெரிந்த காட்சிகளையெல்லாம் நடனமாடச்செய்தது. இருவகைத் தாக்குதலும் அவர் உடலைத் தளர வைத்தன. மனம் என்னவோ ஏற்கெனவே அவருக்குத் தளர்ந்துதான் போயிருந்தது.

அவ்வப்போது மர நிழலில் ஒதுங்கலாம் என்று அவர் உடல் கெஞ்சியது. ஆனால், எல்லா மரத்தடியிலும் ஆட்கள் ஏற்கெனவே வெய்யில் தணியட்டும் என்று அமர்ந்திருந்தார்கள். தனி ஒருவனுக்கு இடமில்லாமலும் இல்லை. நிழலில் ஏற்கெனவே இருந்த அவர்களும் அவரை வரவேற்காமலில்லை. தமிழகத்துக்கே உரிய விருந்தோம்பலைக் கடைப்பிடித்தனர்.

''வா தம்பி, களைப்பாறிவிட்டுப் போ. உனக்கும் கட்டுச் சாதம் உள்ளது. உண்டு விட்டுப் போ!'' என்று சொன்னவர் பலர். பலரும் கட்டுச்சாதம் இருந்த தூக்குப்பாத்திரத்தை உயர்த்திக் காட்டி விட்டுத் தாம் உட்கார்ந்திருந்த மரத்தடியை நோக்கினார்கள். சிலர் குளிர்ந்த நீர் இருந்த சுரை ஓடுகளைத் தூக்கிக் காண்பித்தனர்.

அவரோ இல்லையென்பது போலத் தலையசைத்தார். சிலவிடங்களில் நன்றியுடன் கையெடுத்து அவர்களைக் கும்பிட்டார். ஆனால், எங்கும் நிற்கவில்லை.

தன்னை யாரென்று அவர்கள் அடையாளம் கண்டு கொண்டால் பின் பிரச்சனை என்று நினைத்தாரோ? இல்லை, மனிதரே இல்லாத இடத்தைத் தேடிச் சென்று கொண்டிருந்தாரோ?

ஆனால், சட்டென யாரும் அவரை அடையாளம் கண்டு கொண்டிருக்க முடியாது. ஒரு மாத காலத்திற்குள்ளே அவரிடம் காணப்பட்ட மாறுதலானது மிக்க அதிசயமாயிருந்தது. முகம் முழுவதும் 'கருகரு' என்று முடி வளர்ந்திருந்தது. ஒரு போர் வீரனின் தீப்பிழம்பு போல இருக்கும் கண்களின் ஒளி கூட மங்கிப் போயிருந்தது. கண்களில் உலக அனுபவத்தினால் மட்டுமே ஏற்படும் முதிர்ச்சி காணப்பட்டது. சாந்த சுவரூபியாய்த் தோற்ற மளித்தார்.



அது மட்டுமல்ல. சோழ நாட்டின் செல்லப் பிள்ளையாம் பொன்னியின் செல்வர் இப்படிப் பரதேசிபோல ராஜபாட்டையின் ஓரத்தில் நடந்து செல்வார் என்று யாருமே கனவில் கூட எதிர்பார்க்க மாட்டார்கள்.

நாமும் எதிர்பார்க்கவில்லை. இப்படி நாட்டை விட்டு நடையைக் கட்ட அவருக்கு என்னதான் அப்படி நிர்பந்தம்?

எங்கு செல்கிறோம் என்பது மட்டுமல்ல, ஏன் செல்கிறோம் என்பதைப் பற்றிக்கூட அதிகமாகக் கவலைப்படாத அருள்மொழி, அதி சீக்கிரத்தில் சோழ நாட்டு எல்லையைக் கடந்துவிட வேண்டுமென்று தீர்மானித்து விரைவாகச் சென்றார்.

கிளம்பும்முன் அவருடைய மனதில் இன்னதென்று சொல்ல முடியாத ஒரு சோர்வு உண்டாகியிருந்தது. சமீபத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியை மீறிக்கொண்டு மற்றோர் எண்ணமும் மேலெழுந்தது. தனக்குப் பிடிக்காத நிகழ்ச்சி நடந்த இடத்தை விட்டுச் சீக்கிரம் அகல வேண்டும் என்ற ஆவல் அவருடைய கால்களுக்கு ஒன்றுக்கு மூன்று மடங்கு சக்தியையும், விரைவையும் அளித்தது. இப்போது அவருக்கு வேண்டியதெல்லாம் தனிமை, தனிமை.முற்றிலும் தனிமை.

வெற்றி வேந்தன் என்று சரித்திரம் சுட்டிக்காட்டும் சிலரது வாழ்விலும் சிற்சில இடங்களில் தோல்வி தலையைக் காண்பிக்கின்றது. ஆனால், அதுவே மனதை முழுவதுமாய் ஆக்கிரமித்து, அதுவரை பெற்ற எல்லா வெற்றிகளையும் அடித்து விரட்டி விடுகிறது.

தோல்வி யென்றால் போர்க்களத்தில் ஏற்பட்டதல்ல. காதலியிடம் மனதைப் பறிகொடுத்துவிட்டு, அவள் வேறொருவனுக்கு என்று விதி திரும்பத் திரும்பச் சொல்லுவதை அவரால் பொறுத்துக் கொள்ளமுடியவில்லை. இந்த ஊரில் இருந்தபடி அவர்கள் இருவரும் சதா கைகோத்துக் கொண்டு இருப்பதைப் பார்க்கவும் பிடிக்கவில்லை. ஊரை விட்டு வெளியேறுவதைத் தவிரவேறு வழி தெரியவில்லை. போர் என்று சாக்குச் சொல்லிப் படையை அழைத்துச் செல்லலாம் என்றால், எதிரியோடு போராடும் அளவுக்கு அவர் மனதில் தெம்பில்லை. மொத்தத்தில் வெற்றியைத் தவிர வேறெதற்கும் ஒப்புக்கொள்ளாத பொன்னியின் செல்வரா இது? இல்லை.

''நான் எதற்கும் மனங் கலங்க மாட்டேன்!'' என்றிருந்தவருக்கு, அவர் தாங்கக் கூடிய சக்திக்கு அப்பாற்பட்ட ஓர் அடி. ''பல தினங்கள். ஏன் பல ஆண்டுகள் சந்தோஷமாக இருந்ததற்குப்

பதிலாக இப்போது வட்டி சேர்த்துக் கஷ்டப்படுகிறோம் என்பது போல் இருக்கிறது'' என்று எண்ணினார்.

ஆனால், ஒன்று. பொன்னியின் செல்வர் நன்றாய்ப் புரிந்து கொண்டார். இது வெறும் காதலோ பெண்ணோ சம்பந்தபட்ட விஷயம்மட்டுமன்று. அதற்கும் அப்பாற்பட்டது. வெற்றியைத் தவிர வேறேதும் சுவைக்காத அவருக்கு உருவமற்ற உணர்வு அது. அவருக்கு ஆதரவாய் வீசும் காற்றுத் திரும்பிக் கொண்டு எதிர்த் திசையில் வீசுகிறதோ? 'இனி நடக்கப் போவதெல்லாம் தோல்விதானோ' என்று அடிமனதில் பயம்.

''ஜெயலட்சுமியுடன் கைகோத்து இருக்கும்போதுதான், நான் நானாக இருக்க முடியும். அருள்மொழி பொன்னியின் செல்வனாக இருக்க முடியும். தோல்வியுடன் என்னை உலகம் எப்படிப் பார்க்கும்? நானே என்னை எப்படிப் பார்ப்பேன்?'' என்ற கேள்விகள் அவரைச் சரமாரியாகத் தாக்கின.

இதற்கு மாறாக இன்னொரு விதச் சிந்தனையும் உண்டாயிற்று. 'இது எப்படி வேணுமானாலும் நடக்கட்டும். காதலில் தோல்வி யென்றால் அபகீர்த்தி, அவமானம் ஏற்படாது. இது சகஜம் என்று எடுத்துக் கொண்டு வாழ்க்கையைத் தொடரலாம் அல்லவா?' என்று உள் மனதில் ஒரு குரல் கேட்டது.

ஆனால், பிடிக்காத இடம் இது. வேறெங்காவது செல்ல வேண்டும். போகுமிடம் சொர்க்கமாக இருக்காது; ஆனால், தினம் தினம் நரகத்தை அனுபவிக்கவேண்டாமல்லவா? சில நாள் இவ்வூரை விட்டுத் தள்ளியேயிருப்போம் என்று முடிவெடுத்தார். இந்தச் சிக்கல்கள் எல்லாம் தீரும் வரையில் தஞ்சையின் சமீபத் தைத் தவிர்க்கவேண்டும். அதனால் விரைவில் வெளியேற வேண்டும் என்றே அவரது நினைப்பு.

தஞ்சையை விட்டு இரவோடு இரவாக அகலும்போது குதிரையை எடுத்துச் சென்றார். குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு போய் அதிவேகமாகத் தெற்கே நகர்ந்தார். தன்னைப் பார்த்தவர்கள் அடையாளம் கண்டு கொள்ளத் தஞ்சைக்கு அருகே அதிக வாய்புள்ளது என்பது அவருக்குத்தான் தெரியும்.

இரவு முழுவதும் பயணித்துவிட்டு, அதிகாலையில் ஒரு குளத்தங் கரையில் குதிரையை நிறுத்தினார் பொன்னியின் செல்வர். குதிரை யின் கடிவாளத்தைப் பிடித்தபடி சாலைக்கு அருகே கீழிறங்கி தண்ணீரிடம் சென்றார். இளவரசரும் குதிரையும் ஒரே சமயத்தில் நீர் பருகினர். பின் குதிரை அதுவாக மேலேறிச் சாலையில் செல்ல வேண்டிய திக்கை நோக்கி நின்றது. பயணிக்க அது தயார் என்று



சொல்லாமல் சொல்லியது. ஆனால், அதற்குள்ளாகப் பொன்னி யின் செல்வர் மனதை மாற்றிக் கொண்டார்.

சற்று முன்வரை நெடுந்தூரம் பிரயாணம் செய்து அலுத்துக் களைத்திருந்த அவருடைய குதிரை மெல்ல மெல்ல நடந்து சென்று கொண்டிருந்தது. அதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அதற்குப் பயணம் முடிந்துவிட்டது. தனக்கோ இப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது.

அவர் தன் மீது ஏறுவார் என்று ஆயத்தமாய் நின்ற குதிரையைத் தட்டிக் கொடுத்து, ''நீ இங்கேயே இரு. நான் சற்றுத் தூரம் சென்று வருகிறேன்'' என்றார். அந்த ஐந்தறிவு ஜீவனுக்கே புரிந்து விட்டது, பொய் சொல்கிறான் எஜமானன் என்று.

பொன்னியின் செல்வர் நடக்கத் தொடங்கினார். குதிரையும் பின் தொடர்ந்தது. பலமுறை விரட்டியும் அந்த நன்றியுள்ள ஜீவன் அவரைத் தொடர்ந்து தொடர்ந்து நடந்து வந்தது. எஜமானரை விட்டு அகல மனம் வரவில்லை. இப்படி ஓர் ஆளுக்குப் பின் உயர் ஜாதிக் குதிரை தொடர்ந்து வருவது இன்னும் அதிக விளம்பரத் தைத் தேடித்தந்துவிடும் என்று ஒரு இடத்தில் அதை மரத்துடன் சேர்த்துக் கட்டிவிட்டு நடையைக் கட்டினார். மிருகமோ முரண்டு பிடித்தது. வெகு தூரம்வரை அது சோகத்தில் கனைத்தது அவருக்குக் கேட்டது. அதனால் நடை வேகத்தை அதிகரித்தார்.

பின்னர் தெற்கே நடக்கத் தொடங்கினார். நேராக மதுரை. பின்னர் சேது. அதன்பின் கடல் கடந்து ஈழம் என்று பயணத் திட்டக்கை முடிவெடுத்திருந்தார். சாம்ராஜ்யத்தின் கோடிக்கே சென்றுவிட வேண்டும். பல நாடுகள் கடந்து ஒரு கடலையும் கடந்து சென்றால்தான் தான் யாரென்று அவருக்கே தெரியும்.

விதியின் விளையாடல்களை முழுவதுமாய்ப் புரிந்து கொள்ள முடியவில்லை பொன்னியின் செல்வரால். கொள்ளையர் தீவில் முதலில் அந்தப் பெண்ணைக் கனவில் கண்டார். அவளுடன் ஆயிர மாயிரம் ஆண்டுகள் கலந்து பழகியது போலொரு எண்ணத்தை ஏற்படுத்தியது அந்தக் கனவு. பின் தினம் தினம் அவளுடைய முகம் தத்ரூபமாகக் கனவிலும் நினைவிலும் தோன்றும். போர்க்களத் திலும் தோன்றும், கடற் பிரயாணத்தின் போதும் தோன்றும்.

பின்னர் விதி வசத்தால் அவளை நிஜத்தில் பார்த்தவுடன் மனதில் ஆயிரமாயிரம் இன்பக் கனவுகள் பூத்துக் குலுங்கின. எல்லாம் கைகூடப் போகிறது என்ற எண்ணம் உதித்தது. விதியின் விரல் வரைந்து கொண்டிருந்த வட்டம் ஒன்று முடிவுக்கு வருவது போலொரு உணர்வு. வரைபடம் ஆரம்பித்த இடத்துக்கே முடிய

வந்தது. முழுமையை அடைய விருப்பப்பட்டது விதி. வட்டத்துக்குள் அவரும் பழுவூர் இளவரசியும் ஒருங்கிணையப் போகிறார்கள் என்று எண்ணினார்.

பின்பு திடீரெனத் தில்லையில் மாறனுடன் அந்தப் பெண்ணைப் பார்த்தவர் தோல்வியுணர்ச்சியைச் சந்தித்தார். 'தோல்வியென்றால் இவ்வளவு கசக்குமா என்ன?' என யோசிக்க வைத்தது அந்தச் சம்பவம். தான் நினைப்பதெல்லாம் கிடைக்கும் என்று பழக்கப்பட்ட அவர், இது மாதிரி ஏமாற்றத்தை அதுவரை சந்தித்ததே இல்லை.

பின்பு அந்தப் பெண்ணைப் பாண்டியர் கடத்திச் சென்று, தன்னந்தனியாக மாறன் சென்று அவளை மீட்டு வந்து, அத்துடன் கூடுதல் பரிசாய்ப் பாண்டியப் பொக்கிஷத்தையும் கண்டெடுத்து வந்தபோதுதான், அந்தப் பெண்ணையும் சுற்றி விதி வேறொரு வளையத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்ததை உணர்ந்தார் பொன்னியின் செல்வர். ஆனால், அது மாறனுக்காக வரையப் பட்ட வட்டம்.

''இந்த ஏக்கம் என்னத்திற்காக வந்தது?'' என்ற எண்ணமும் அவருடைய உள்ளத்தில் தோன்றியது. 'நான் பாட்டுக்கு வீடு, மனைவி, மக்களென்றிந்தேன். எனக்குத் தெரிந்து நினைவில்கூட வானதியைத் தவிர வேறெந்தப் பெண்ணையும் நோக்கவில்லையே. இப்படிக் கனவில் என்னுள் புகுந்து கஷ்டத்தை ஏற்படுத்திவிட்டாளே. இதில் வேடிக்கை என்னவென்றால் அந்தப் பெண் கனவில் வரவில்லையென்றால் அவளை நிஜ உலகில் திரும்பிக்கூடப் பார்த்திருக்கமாட்டேன். அந்த ஒரு சொப்பனமில்லையென்றால் எங்கள் இருவரின் பாதையும் ஓரிடத்தில் கூடச் சேர்ந்திருக்காதே? நேரே பார்த்திருந்தால் அவள் மேல் காதல் கொண்டிருப்பேனா என்பதே கூட ஐயமாயிற்றே!' என்று ஆதங்கப்பட்டார்.

ஆனால், அந்தப் பெண்ணின் நினைவை முழுவதுமாய் அகற்றவும் முடியவில்லை. அவர் இவ்வளவு தூரம் இடிந்து போனதே அந்தப் பெண்ணின் மீது அவர் வைத்திருந்த அன்பை மெய்ப்பித்தது. எவ்வளவு தூரம் அவளை நேசித்தார் என்று எப்போது அவருக்கே தெரிந்தது என்றால், தன் உயிரினும் மேலான தஞ்சையை விட்டு வெளியேறி வாழவேண்டும் என்று தோன்றிய போது தான்.

பொன்னியின் செல்வருக்கு மனதில் ஆதங்கம்: 'உணர்ச்சி வேகத்தினால் தூண்டப்பட்டு ஆசைக் கோட்டையைக்



கட்டினேன். அது சுக்கு நூறாயிற்று. சாமானியரெல்லாம் காதல் நிறைவேறிச் சந்தோஷமாய் இருந்தனர். எனக்கு மட்டும் ஏன் இப்படி?' யாரிடமாவது இதைப் பற்றிச் சொன்னால் என்ன சமாதானம் சொல்லுவார்கள்? 'காதல் கை நழுவிப் போனால் என்ன? அத்தோடு உலகம் அஸ்தமித்துப் போய்விடுமா?' என்பார்கள்.

அதனால், தம்மைப் புரிந்தவரிடம் மட்டும் தான் சொல்ல வேண்டும். அப்போது தான் தக்க ஆறுதல் கிடைக்கும் என்று எண்ணினார் பொன்னியின் செல்வர். அந்தக் காதல் காரியத்தில் தனக்கு உதவி புரியும்படி தான் அக்காவிடம் கேட்பதெல்லாம் இழுக்கு. எனினும் தன் மனதை வேறு யாரிடமும் திறக்க முடியாது. வந்தியத் தேவருக்கோ, மாறனும் தானும் இருவருமே நண்பர்கள். அதனால் அவர் மனதைப் புண்படுத்தக்கூடாது. அக்காவிடம் கூடத் தேச யாத்திரை செல்கிறேன் என்றுதான் சொல்லவேண்டும் என்ற முடிவுடன் சென்றான்.

பொன்னியின் செல்வர் தன்னைப் பார்க்க வருகிறேன் என்று சொன்னவுடன் அதன் காரணம் என்னவென்பது குந்தவைக்கு உடனே புலனாகவில்லை. சமீப காலமாக அவன் பேச்சிலும், செயலிலும் மறைபொருள் ஏதேனும் இருக்குமோ என்று தினம் தினம் எண்ணினாள். இது நாள்வரை அவன் இப்படிச் சோர்வாய் இருந்ததை அவள் பார்த்ததில்லை.

வந்து அமர்ந்தவனை உற்றுக் கவனித்தாள் தமக்கை. ஏனோ தெரியவில்லை. தம்பியைப் பார்த்தவுடன் அவளுக்கு லோகாவின் ஞாபகம் தான் முதலில் வந்தது.

காணாமல் போன பழுவூர் இளவரசி கிடைத்துவிட்டாள் என்று தெரிந்த குந்தவைக்கு மகா சந்தோஷம். ''மீண்டும் நல்ல நாள் பார்த்துப் போய்ப் பெண் கேட்க வேண்டும். நல்ல காரியங்கள் எல்லாம் முதலில் தடைப்படுவது இயற்கைதானே. அபசகுனம் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது'' என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டாள்.

அப்போது ஆனந்தமாய் அரண்மனைக்குள் வந்த வந்தியத் தேவன் லோகா தஞ்சை திரும்பியதைப் பற்றிக் கூறினான். அவன் கூறக் கூறத் தோல்வியின் பிடியிலிருந்து வெற்றியைப் பிடுங்கி தக்க வைத்துக்கொண்டவன் மாறன் என்று குந்தவை அறிந்து கொண்டிருந்தாள். இவ்வாறு கணவன் வந்து முறையிட்டது குந்தவையின் மனக் குழப்பத்தை அதிகமாக்கிற்று. பலவந்தமாகப் பிடித்துச் சென்ற பெண்ணைத் தனியே படையின்றி மீட்டு வந்து விட்டானா? வேறொரு சந்தர்ப்பம் என்றால் மாறனுக்காகப்

பெருமை கொண்டிருப்பாள். ஆனால், இந்த நிலையில் அது முடியாது.

ஆனால், ஒன்று. மாறனின் வெற்றியை நேரே அவனுடன் இருந்து கண்கூடாகப் பார்த்திருந்தாள் அந்தப் பழுவூர்ப் பெண். போர்க்களத்தில் நடக்கும் அபார வாள் வீச்சைக் கேள்விப்பட்டே வீரர்களை அக்காலப் பெண்கள் காதலிப்பதுண்டு. நேரில் பார்த்துவிட்டால் கேட்கவே வேண்டாம்.

பெண் கேட்டுச் செல்ல இது தக்க தருணம் இல்லையென அதைத் தள்ளிப்போட்டாள். நடந்திருக்கக் கூடியதையும் நடக்காமற் போனதையும் நினைத்து நினைத்துக் கோபம் கொண்டாள் குந்தவை. பொன்னியின் செல்வர் பெற வேண்டிய இடத்தை மாறன் அபகரிக்க விரும்புவதாகவே அவள் எண்ணினாள். மாறனுக்கு ஆதரவாய்ப் பேசிய வந்தியத்தேவருக்கு அறிவு பேதலித்து விட்டதென்றும் நண்பனின் மேல் கொண்ட அன்பு, நியாயத்தை மறைக்கின்றதென்றும் குற்றம் சாட்டினாள்.

வந்தியத் தேவருக்கோ முகத்தில் வெற்றிச் சிரிப்பு- குந்தவை தான் நினைத்ததைச் சாதிக்க முடியாத ஒரு சந்தர்ப்பம் எழுந்தது என்று. அதுவும் ஊரெல்லாம் இன்று பேச்சு. மாறன் எப்படித் தனியாய்ச் சென்று பழுவூர் இளவரசியைப் பாண்டியரிடமிருந்து மீட்டு வந்தான் என்று. தன்னுடைய தலையெழுத்தையோ லோகாவின் பாதுகாப்பையோ அவன் மாற்றவில்லை. எதிர்காலச் சரித்திரத்தை கூட அல்லவா மாற்றி அமைத்துவிட்டான்!

பொன்னியின் செல்வரைப் பார்த்தவுடன் இவையெல்லாம் குந்தவையின் மனதில் ஓடியது. பொன்னியின் செல்வர் சொல்ல வந்ததை வெளியிட்டான் "அக்கா! நான் சில நாள் தஞ்சையை விட்டு வெளியேறுகிறேன்" என்றார்.

குந்தவை எல்லை கடந்த துயரத்தில் மூழ்கியிருந்தாள். கண்ணீர் தாரை தாரையாகப் பொழிந்தது. சிவந்த கன்னங்களில் வழிந்தது.

சோழ இளவரசனுக்குப் பதினாறு பிராயம் பூர்த்தியானவுடன் நல்ல தளபதியுடன், தேச யாத்திரைக்கு அழைத்துச் செல்வது வழக்கம். சோழரின் வேங்கைக் கொடி பறக்கும் தேசங்கள் எல்லாவற்றைப் பற்றியும் இளவரசன் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே தேச யாத்திரையின் நோக்கம்.

ஆனால், அது அக்கால வழக்கம். இன்றைய நிலையில் சோழர்களின் அகண்ட நாட்டில் தேச யாத்திரை செய்வதென்றால் இளம் வயதினருக்கே முதுமை வந்துவிடும் அதை முடிப்பதற்குள். அதனால் நேரடியாகப் போர்க்களத்துக்கு அனுப்பிவைத்தார்கள்



இளவரசர்களை. அப்படித்தான் பதினாறு பிராயம் முடிவதற்குள் தேசங்களைப் பார்ப்பது மட்டுமில்லை, தேசங்களையே கைப் பற்றினான் ஆதித்தன்.

இப்போது பொன்னியின் செல்வனோ அந்த தேச யாத்திரையைச் செய்து முடிக்க ஆசைப்படுகிறார் என்றால், அது தன் நாட்டு மக்களைக் கண்டு பேசிப் பழகச் செல்கிறார் என்று தஞ்சையில் யாரும் நினைக்க மாட்டார்கள்; அவளும் அப்படி நினைக்கவில்லை.

இதைக் கேட்டதும் குந்தவையின் உள்ளத்தில் பெரும் வேதனை உண்டானது. எவ்வளவு அடக்கப் பார்த்தும் முடியாமல் தேம்பலும் விம்மலும் பொங்கி வந்தன. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு. "தம்பி! முடிசூட்டி உன்னைப் பார்க்கமுடியவில்லை. இப்படி நாடு விட்டு நாடு மாறுவேடத்தில் செல்ல வேண்டும் என்று துடிக்கிறாயே. என்ன நோக்கம்? இந்தப் பயணம் எதற்காக அருள் மொழி? எங்கள் மேல் ஏதாவது கோபமா? வேண்டாம், தம்பி. வேண்டாம். நீ வேறு வழியில் சென்று விடுவாயோ என்று பயம் கொள்கிறேன்" என்றாள் தமக்கை.

"இல்லை, அக்கா. முதலில் நான் சோழ தேசம் எங்கும் மாறு வேடத்தில் பயணிக்கலாம் என்று நினைக்கிறேன். வந்த பிறகு மனத் தெளிவுடன் யோசிக்கலாம்" என்றார்.

அதி வேகத்தில் காரியங்கள் நடப்பதைக் கண்டு குந்தவைக்கு அதிர்ச்சி. தன் மனதில் இருந்ததையும் சொல்லிவிடலாம் என்று எண்ணினாள். "தம்பி! இப்போது பார்த்து ஊரைவிட்டுச் செல்கிறேன் என்கிறாயே. உனக்கு இன்னொரு திருமணம் செய்து வைக்க வானதியும் நானும் முடிவு செய்திருந்தோமே" என்றாள்.

ஆச்சரியப் பட்டார் பொன்னியின் செல்வர். "திருமணமா? எனக்கா? யாருடன்?" என்றான்.

"பழுவூர் இளவரசி லோகாமா தேவியைத்தான் உனக்கென வானதியும் நானும் சென்று பெண் கேட்கப் போகிறோம்" என்றாள் குந்தவை.

தன் சோகத்தையும் மீறிச் சிரித்து விட்டார் பொன்னியின் செல்வர். சோகத்தில் அகப்பட்டுக் கொண்ட சிரிப்பொலிகள் சற்று நேரம் குந்தவையின் அறையில் எதிரொலித்தன.

அந்த நொடியில் பொன்னியின் செல்வர் முழுவதுமாய் மனம் திறப்பதென்று முடிவெடுத்தார். தனது உள்ளக் கிடக்கையை வெளியே சொல்லத் தமக்கையின்றி உற்றவர் வேறு யாருமில்லை. மற்ற எல்லாருடனும் ஒரு திரை விழுந்தாற்போல உணர்வு

அவருக்கு. தம் ஆசையை அவளாகவே புரிந்து கொண்டு தனக்காகத் தூது செல்ல நினைக்கும் அக்கா. இவள்தான் தன் எண்ணங்களுக்கு வடிகால்.

''அக்கா! உன்னிடம் எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை. எப்படி மறைப்பதென்றும் தெரியவில்லை. என்னைப் பெற்ற தாயைவிட உன்னையே தாயென்று நினைத்து வாழ்ந்துவிட்டேன். அக்கா, இப்போது நான் உன்னிடம் முழுவதுமாகப் பேசிவிடுவது தான் நல்லது'' என்றார்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப் பதினான்கு
## மனம் திறந்தார் இளங்கோ!

தன் மனதை முழுவதுமாய்த் திறக்கப் போகிறேன் என்று தம்பி சொன்னவுடன், குந்தவைக்கு இருவகை எண்ணம். 'என்ன கஷ்டம் என்று புரிந்து விட்டால் அதையும் சமாளிக்கலாம்' என்று தோன்றியது.

மற்றும் ஒன்று. 'இதுவரை பிரச்சனை என்று பொன்னியின் செல்வர் வந்ததே யில்லையே! நம்மால் முடிவுக்குக் கொண்டு வர முடியாத பிரச்சனை ஏதாவது இருக்குமோ?'

எப்படி ஆரம்பிப்பது என்று பொன்னியின் செல்வர் சற்றுத் தடுமாறினார். மௌனம் ஒரு நொடி தான் என்றாலும், குந்தவைக்கு அது ஒரு யுகம் போலிருந்தது.

''அக்கா! இதுவரை என் வாழ்வில் ஒரு குறையுமின்றி நீ செய்து வந்தாய். நீ என்று தனிப்பட்ட முறையில் உன்னைச் சொன்னாலும், நம் சோழர் குடும்பமே அப்படித்தான். இதுவரை நான் எண்ணியதெல்லாம் இறைவன் அருளால் முற்றிலும் நிறைவேறின. அரியணை எனக்கு வேண்டாமென்று நான் சொன்னேன். அதை அரசியலில் தோல்வி என்று யாரும் எண்ணவில்லை. சராசரித் தந்தை போல என்னுடைய சந்ததியர்கள் தான் சோழ நாட்டை ஆண்டு வரவேண்டும் என்று நான் நினைக்கவில்லையே என்பதால் அதைத் தியாகம் என்றே பலரும் பேசினார்கள். அரசியல் சாதுர்யம் என்று பலரும் பேசினார்கள். அதற்குப் பின் எனக்குப் பிடித்த போர்க்களத்தில் தடையின்றி என்னால் இறங்க முடிந்தது.''



''சமீபத்தில் எனக்கு நடந்தது எப்பேர்ப்பட்ட நிகழ்வு என எனக்கே இன்னமும் புரியவில்லை. வெற்றியே பெற்று வந்தவனுக்கு அதன் அருமை தெரியும் பொருட்டு இயற்கை கொடுக்கும் தோல்வியா? ஒரு பிறவியில் வெறும் வெற்றியாய்ப் பெற்றுக் கொண்டிருந்தால் எனக்குச் சலிப்புத் தட்டிவிடும் என்று ஏற்பட்ட மனக்கசப்பா?''

''உனக்கென்ன தோல்வி, தம்பி? இவ்வுலகில் பிறந்த எந்த ஆணும் உன்னை வென்றுவிட முடியாதே!'' குந்தவை வினவினாள்.

''அக்கா! தகர்த்துத் தள்ள இது என்ன எதிரியின் கோட்டையா? இல்லையே. நான் தோற்றது ஒரு பெண்ணிடம்.''

''கேட்கிறேன் என்று தவறாக நினைக்காதே அருள் மொழி. என்னிடம் சொல்வதில் உனக்குக் கஷ்டமிருக்கக்கூடாது. உன்னைத் தாய்போல வளர்த்தவள் நான். உனக்கு இஷ்டமான பொருள் ஏதேனும் உனக்குக் கிடைக்கவில்லையா?''

அருள்மொழிக்கு இராஜ்ய ஆசையே கிடையாது. சோழர் மணி மகுடத்தைப் போல இலங்கை மணி மகுடத்தையும் அவருக்கு ஒரு காலத்தில் கொடுத்தார்கள். அதையும் அவர் வேண்டாம் என்று மறுத்தளித்து விட்டான். அப்படிப்பட்டவனா இன்று ஏதோ கிடைக்கவில்லை என்று இடிந்து போவது?

பொன்னியின் செல்வருக்குப் பதில் சொல்ல ஒரு நொடி பிடித்திருக்கும். ஆனால், குந்தவை நன்கு புரிந்து கொண்டு விட்டாள். இருவரும் ஒரே பெண்ணைப்பற்றித்தான் நினைத்திருந்தார்கள். அவன் மனதை அப்படியே படிக்கக் கற்றிருந்தாள் குந்தவை. அவனது சோகச் சிரிப்பே அவளுக்கு அதை எடுத்துக் காட்டிவிட்டது. அதுவும் மாறன் வெற்றியுடன் திரும்பி வந்த பிறகே அருள்மொழியின் நடவடிக்கைகளில் பெரும் மாற்றம்.

அருள் மொழி அக்காவிடம் முழுக் கதையையும் சொன்னார். தான் கொள்ளையர் தீவில் கரை ஒதுங்கியது. எலும்புக்கூடுகளுக்கு இடையே கிடந்தது. சோர்வில் மயங்கியபோது கனவில் வந்த பெண்ணைப் பார்த்தது. இப்படி அவர் அடுக்கிக் கொண்டே போனார். ''அவள் நிகரில்லாத சௌந்தரியம் வாய்ந்த பெண். ஆனால், நிச்சயமாக நேரேயோ சித்திரத்திலோ பார்த்திருந்தால் கூடக் காதல் வயப்பட்டிருக்க மாட்டேன். கனவில் வந்ததால்தான் என்னவள் என்று நினைத்து விட்டேன்''என்றார்.

குந்தவை தமது செவிகளையே நம்ப முடியாதவளாய் பிரமித்துப் போய் நின்றாள். விதி மீண்டும் தன் குடும்பத்தில்

விளையாடிப் பார்க்கிறது. எப்பேர்ப்பட்ட விளையாட்டு! இவனைப் பதியாக அடைந்தவள் பாக்கியசாலி. எத்தனையோ ஜன்மங்களில் இவனை அடைய அவள் தவம் செய்திருக்க வேண்டும் என்று எந்தப் பெண்ணும் எண்ணும் நேரத்தில் இவள் ஒருத்தி மட்டும், முக்கியமாக அவன் விரும்பிய இவள் ஒருத்தி மட்டும் அவனைக் கவனிக்கக் கூட இல்லை. 'இவனுடைய வீரதீர பராக்கிரமங்களைப் பற்றியும் இவனுடைய அரும்பெருங் குணாதி சயங்களைப் பற்றியுமே கவலைக் கொள்ளாமல் எப்படியொரு பெண் மற்றுமொருவனைக் காதலிக்க முடியும்?' என்ற ஆதங்கம் அவளுக்கு.

குந்தவை நினைத்துக் கொண்டாள், "எவ்வளவு நல்லவன் இவன்! தோற்றது மாறனிடம் என்று சொல்லவில்லையே! அந்தப் பெண்ணின் முன் தோற்றோம் என்று தான் சொல்கிறான். மாறனுடன் விரோதம் பாராட்டவில்லையே!"

"அக்கா! என் விருப்பத்தை நிறைவேற்ற ஆயிரம் பேர். என் ஆசைக்கு எவ்வித இடையூறும் நேரிடக் கூடாதென்று லட்சம் பேர் எண்ணினார்கள். அப்படி யென்றால் அதுவெல்லாம் நிலையான தல்லவே? நான் எனக்கெனக் கொண்ட ஓர் ஆசையில் விதி மண்ணை வாரி எறிந்தபோது என்னால் ஒன்றும் செய்ய முடிய வில்லையே! என் சாதனைகளையெல்லாம் ஒருவேளை சரித்திரம், எனது தனிப்பட்ட சாதனைகள் என்று கூறும் வாய்ப்புண்டு. ஆனால், அவை என் தனிபட்ட சாதனைகள் அல்லவே. நான் அனுராதபுர நகரைக் கைப்பற்றினேன் என்றால், என் பின்னே உயிரை விடவும் தயங்காத ஆயிரமாயிரம் சோழ வீரர்கள் இருந்தார்கள். சூடாமணி விகாரத்தைச் சீரமைத்துக் கட்டித் தந்ததோ, ஊமை நாச்சியாருக்குக் கோயில் கட்டியதோ என்னால் ஒரு சாமானியனாய் இருந்திருந் தால் முடியுமா? அதற்குப் பின்னும் அரச குலத்தின் ஆள் பலமும், ஆதிக்க பலமும் இருந்ததல்லவா?"

"ஆம்" என்பது போல் குந்தவை தலையசைத்தாள்.

"ஒரு பெண் கிடைக்கவில்லை யென்றால் அடியற்ற மரம் போல் தரையில் விழுந்து விடுவோமா என்று புரியவில்லை. அவ்வளவு வலிமையற்றவனா நான்? நான் காதலிக்கும் பெண்ணை நானே பெற முயற்சிக்க வேண்டாமா? அதற்கும் எனக்கொரு ஆள் தேவைப்படுகிறதே. அப்போது என்னைச் சுற்றி நிற்கும் பல மெல்லாம் போனால் நான் யார்? அதை நான் கண்டறிய வேண்டாமா? 'இதுவரை நீ ஜெயித்ததெல்லாம் உன்னுடைய செயல் அல்ல. ஏதோ ஜெயலட்சுமி உன் பக்கமாய் வீசிய அனுதாபப் பரிசுகள்' என்று விதி சொல்வது போலிருக்கிறது.



அதனால் எனக்குள் எழும் கேள்வி ஒன்று. உண்மையான அருள் மொழி யார்? நான் யார் என்று எனக்குத் தெரிய வேண்டும். இந்தப் பயணத்தின் முடிவில் நிச்சயம் நான் யாரென்று முழுமை யாக அறிந்து கொண்டு வந்து விடுவேன்" என்றார்.

குந்தவைக்கு மனம் குமுறியது. 'அவள் கிடைக்காமல் போனது பெண்ணான நம் நெஞ்சையே இரண்டாகப் பிளக்கப் பார்க்கிறது. அவளைக் காதலித்த இவன் எப்படிக் கஷ்டப்படுவான்! கண்மூடித் திறக்கும் நேரத்தில் காரியம் கெட்டுப் போனது. தஞ்சை எங்கும் சம்புவராயன் புகழைப் பாடுகிறது. எவ்வளவோ முயற்சிகள் செய்து கடைசியில் காரியம் சித்தியாகும் தருணத்தில் இந்தச் சம்புவராயன் சாதனைகள் பலவும் புரிந்து விதியின் வசத்தைத் தன் வசமாக்கி விட்டானே!' என்ற கோபத்தில் அழுகையே வந்தது.

அக்கா அழுததைக் கண்டு அவர் கண்களும் கலங்கின. இன்னும் கொஞ்ச நேரம் இருந்தால் நினைவு தடுமாறிப் போகும். கட்டுக் கடங்காத துயர் மனிதனைப் பைத்தியமாக ஆக்கிவிடும் என எழுந்தார் இளவரசர். போவதற்கு ஆயத்தமாகி விட்டார்.

அவரைப் போக விடாமல் இறுகப்பற்றிக் கொள்ள வேண்டும் போலிருந்தது குந்தவைக்கு. ஆனால், அதுவே சிறுபிள்ளைத்தன மாகவும் தோன்றியது. தன் வார்த்தைக்கு மறு வார்த்தை கூற மாட்டான் என்பதை யெல்லாம் இப்போது சோதித்துப் பார்க்கக் கூடாது. "எவ்வளவு நாள்தான் அவனுக்கு முடிவுகளை நீ எடுக்கப் போகிறாய்?" என்று விதி அவளைக் கேட்டுக் கேலி செய்தது போலொரு எண்ணம்.

ஆனால், ஒரு வகையில் பார்த்தால் அவன் சொல்வதிலும் உண்மையிருக்கிறது. நாடு வேண்டாமென்றான். அவன் ஆசைப் பட்டால் தானாகவே அவனுடைய வீரவாளின் உதவியைக் கொண்டு பெரிய இராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொள்ளக் கூடியவன் அல்லவா? ஆனால், பெண் விஷயத்தில் எப்படி முடியும்? இதைத்தான் அவன் தோல்வியெனக் கருத நியாயம் இருந்தது.

ஆனால், இதுவும் ஒரு வகையில் நல்லதுதான். அவனுக்கோ இராஜ்யம் ஆளும் ஆசை இல்லை. இப்போது இராஜரீகக் காரியங் களில் பற்றுதலும் இல்லை. இங்கிருந்தே தேய்ந்து போவதைவிட வேறு எங்காவது சென்று மனதைத் தேற்றித் திரும்பலாம்.

கூண்டில் புலியை அடைத்து வைத்தால் காலையிலிருந்து இரவு வரை குறுக்கும் நெடுக்குமாக நடக்கும். அது போலத்தான் இவன் தஞ்சையில் இருந்தால், விதியமைத்த கூண்டில் இருப்பவனுக்கு விடுதலை கொடுத்தபின் இஷ்டம் போலச் செல்லலாம் அல்லவா?

புலி போல உறுமவும் வீர சாகசம் புரியவும் வேறொரு சந்தர்ப்பம் கிட்டுமல்லவா?

தன் துயர் தீரவே அழுதாள் குந்தவை. குந்தவைக்குத் தெரியும். எவ்வளவு நேரம் அவள் வாதங்கள் செய்தாலும் அது இளவரசனின் மனத்தை ஓரளவும் மாற்றாது. இளவரசன் ஒன்று செய்ய நினைத்து விட்டால், அதை மாற்றுவது எளிதன்று. ஆதித்த கரிகாலனின் பாதிப் பிடிவாதம் இவனுக்கு உண்டு. அண்ணன் தம்பிகளின் இயல்பை நன்றாய் அறிந்து கொண்டிருந்தாள் குந்தவை.

சிறிது நேரத்துக்குப் பிறகு, ''அப்படியே செல். நீ வரும் முன் உன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றாள்.

ஆச்சரியத்துடன் பார்த்தார். ''ஆனால், அது எப்படிச் சாத்தியம்?'' என்று கேட்பது போல ஒரு சோகமான முறுவல் அவர் முகத்தில் பரவியது.

குந்தவை அவனிடம் தழுதழுத்த மெல்லிய குரலில், ''தம்பி! இந்தத் தடவை காரியம் ஜெயமாகவில்லை. வெறுங் கையுடனே தான் உன்னை அனுப்பி வைக்கிறேன். ஆனால், என்றைக்காவது ஒரு நாள் நிச்சயமாக அப்பெண்ணை உனக்கே பெற்றுத் தருவேன். தம்பி! நீ நினைக்கும் காரியத்தைச் செயல்படுத்திக் காட்டுகிறேன்'' என்று உறுதியளித்தாள்.

வாய்ப்பேச்சுக்காகக் குந்தவை சொல்லவில்லை. அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். இது தோல்வியென்றால் பொன்னியின் செல்வருக்கு மட்டும் தோல்வியல்லவே. தனக்கும் தானே. தோல்வியென்பது குந்தவைக்குப் பிடிக்காதது. இந்த ஒரு விஷயத்தில் தான் தோற்று விடுவோமோ என்ற பயம்.

தம்பியைப் பார்த்து, ''கவலைப் படாதே. நீ சென்று மனதைத் தேற்றித் திரும்ப வா. அதற்குள் நான் முடிந்ததைச் செய்து பார்க்கிறேன். நம்பிக்கை நசித்துப் போகாமல் செல். தம்பி! நீ திரும்பி வரும் முன் நல்லது நடக்கும்'' என்று உறுதி அளித்தாள். ''ஆனால், அதற்கு ஒரு நிபந்தனை இருக்கிறது'' என்றாள். ''இன்னமும் ஆறு மாத காலத்தில் மழபாடியில் நன்னீராட்டு விழா எடுக்கிறார் சக்கரவர்த்தி. அதற்கு நீ வருகிறேன் என்று சத்தியம் செய்து விட்டுச் செல்'' என்றாள்.

''அக்கா! அவ்வளவு நாளெல்லாம் ஆகாது. அதற்குள்ளாக வந்து விடுவேன்.''

''சத்தியம் செய்து கொடு!'' என்று கடுமையான குரலில் அக்கா வலியுறுத்தினாள். அவரும் அவள் கரம் பிடித்து அவ்வாறே செய்தார்.



''அக்கா! சீக்கிரம் வந்து விடுவேன். இன்றிரவே கிளம்புகிறேன். வானதியிடம் அரசியல் வேலையாகச் செல்கிறேன் என்று சொல்லி விட்டேன்'' என்றார். குந்தவைக்குத் தெரியும், வானதி எதிர்க் கேள்வி கூடக் கேட்டிருக்க மாட்டாள் என்று.

விடைபெற்று அவர் சென்றவுடன் அவள் நெஞ்சில் ஈட்டியைச் செலுத்துவது போலிருந்தது. ''தந்தைக்குப் பிறகு மகன்'' என்ற நியதிப்படி எனக்கு இந்த ராஜ்யத்தின் பேரில் பூரண உரிமை இருந்தாலும் அதை விட்டுக் கொடுத்து விடுகிறேன் என்று சிரிப்புடன் சொன்னவனா இவன்? அவன் விட்டுக் கொடுத்தது பரத கண்டத்தில் பாதியை. இவன் சென்ற வழியிலிருந்த கோட்டைகளெல்லாம் ஒரு காலத்தில் தரை மட்டமாகின. ஒரு பெண்ணின் மனக் கோட்டைக்குள் புக இவனுக்கு என்ன கஷ்டம்? ஆனால், இருந்ததே. அது தான் விதி. இது என்ன இளம் பிள்ளைகளின் காதல் விளையாட்டா? இல்லை, நம் குலத்துக்கு அபாயம் மீண்டும் நெருங்கிக் கொண்டுதானிருக்கிறதா?

பொன்னியின் செல்வர் சென்றவுடன் குந்தவை, ''படுபாவிப் பாதகா! கந்த மாறா! என் குடும்பத்தை இப்படிக் கெடுக்க வந்தாயே!'' என்று சபித்தாள் மனதுக்குள்.

பொன்னியின் செல்வர் சாலையில் நடக்கும்போது அக்காவிடம் பேசியது பல முறை நினைவுக்கு வந்தது. ''ஏதோ அக்காவிடம் நம்மை நாமே கண்டு பிடிக்கப் போகிறோம் என்று சொல்லிவிட்டு வந்தோம். ஆனால், இதுவும் புறமுதுகிட்டு ஓடுவது போலத்தான்.''

அவருடைய இயல்புக்கு ஒத்திராத செயலல்லவா இது? தாம் ஒன்றும் தேச யாத்திரை செல்லவில்லை என்று அடி மனதில் பொன்னியின் செல்வருக்கு வெட்கம். பெண்ணாசையினால் நாம் ஏவப்பட்டு யாத்திரை போகிறதென்பது வெட்கம்தான். அந்தப் பழுவூர்ப் பெண்ணால் உள்ளத்தில் விதவிதமான கிளர்ச்சிகள் உண்டாகி மறைந்து வந்தன. நெடுந்தூரம் பிரயாணம் செய்வது என்ற எண்ணமே அவருக்கு அந்தத் தோல்வியினால்தான் வந்தது.

தஞ்சையிலிருந்து தெற்கேயும், மேற்கேயும், தென்மேற்குத் திசையிலேயும் புறப்பட்டுச் சென்ற மூன்று பெரிய சாலைகள் அக்காலத்தில் இருந்தன. ஒன்று கொடும்பாளூர் வழியாக இராமேசுவரம் போகும் சாலை. மற்றொன்று மதுரை வழியாகத் தென்பாண்டிய நாட்டுக்குச் சென்ற சாலை. இன்னொன்று உறையூர் வழியாகக் கருவூருக்கும், சேர நாட்டுக்கும் சென்ற நீண்ட அகன்ற சாலை.

அக்காவிடம் சோழ நாடு என்றுதான் சொன்னார். ஆனால், அவர் செல்ல நினைத்தது ஈழத்துக்கு. அதுவும் ஈழம் செல்லும் வழியே வேறு விதமாய் இருந்தது. கோடிக்கரை வழியாகச் செல்லாமல், நாகப்பட்டினம் வழியாகச் செல்லாமல் பாண்டிய நாடு வழியாக, சேது சென்று ஈழம் செல்ல வேண்டும் என்ற ஆசை. வாழ்க்கையில் பெரும் தோல்வியென்பதைச் சந்தித்த பின் தனது மாபெரும் வெற்றி நடந்த இடத்தைத் தேடிச் செல்வது இயற்கை தானே.

குடும்பத்தைப் பிரிய வேண்டுமே என்ற எண்ணம் இடையிடையே வந்து துன்புறுத்திக் கொண்டிருந்தது. தேசயாத்திரை செல்வதாகக் குடும்பத்தாரிடம் போக்குக் காட்டிவிட்டு, வானதியிடம் அரச வேலையாகச் செல்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்துவிட்டார்.

அருள்மொழி தெற்கே பயணித்துக் கொண்டிருக்கையில், சாலையில் அவருடன் சென்று கொண்டிருந்த பலருக்கும் பழங்காலப் பாண்டிய நாட்டின் எல்லையெதுவென்றே தெரியாது. அந்த அளவுக்குச் சோழப் பேரரசில் ஒன்றி விட்டது புராதனமான பாண்டிய நாடு. ஆனால், உற்றுப் பார்ப்பவனுக்குத் தெரியும் பாண்டிய நாடு வந்தவுடன். அதை நெருங்க நெருங்க வழியில் ஒரு காலத்தில் ஜன நெருக்கமாக இருந்த பல கிராமங்கள் வெறுமையாய் ஆகியிருந்தன. பல வீடுகள் கவனிப்பாரின்றிக் குட்டிச் சுவர்களாய் ஆகியிருந்தன. இங்கே யெல்லாம் சோழர்களின் ஆட்சி கொடுத்த ஐஸ்வர்யம் இன்னும் பரவவில்லையென்று தெரிந்தது. அந்த இரு தேசங்களுக்கும் இடைப்பட்ட பகுதியே ஒரு பெரிய போரின் அரங்கமாகத் திகழ்ந்ததன் அடையாளம் என்பதாய்த் தெரிந்தது.

இரவுகளில் பெரும்பாலும் மாட்டு வண்டிகளில்தான் பொன்னியின் செல்வர் ஏறிக் கொள்வார். தமிழரின் விருந்தோம்பலை எடுத்துகாட்டியபடி பலநூறாண்டுகளாகப் பயணிகளின் சயனக் கிரஹங்கள் ராஜபாட்டைகளின் ஓரங்களில் இருந்தன. ஆனால், அதிலெல்லாம் படுக்கத் தயங்கினார் பொன்னியின் செல்வர். மனித சஞ்சாரமே இல்லாத இடமாய்ப் பார்த்துப் போகவேண்டும் என்றுதானே நினைத்தார்?

இரவில் சாலைகளில் நடப்பவர் வெகு சிலரே. அவரைக் கடந்து செல்லும் மாட்டு வண்டிகளைச் செலுத்துவோர்களுக்குப் பார்த்தாலே உள்ளம் சோர்ந்து உடல் தளர்ந்து போய் அவர் தெரிந்தார்.

''தம்பி, வண்டியில் ஏறிக் கொள்'' என்பார்கள்.



''உமக்கு எதற்கையா சிரமம்?'' என்று கேட்டால், ''நானா வண்டியை இழுக்கிறேன்? இந்த மாடுதானே அந்தக் கைங்கர்யத்தைச் செய்கிறது. இன்னும் நான்கு பேரையும் சேர்த்து இழுக்கும். வா'' என்பார்கள்.

வைக்கோல் வண்டியா, விறகு வண்டியா என்று அவர் பார்ப்பதில்லை. ஏறியவுடன் கால் நீட்டி உறங்கிவிடுவார். அவர் தூங்கும் போது கூடத் தனக்குப் பிடித்தமில்லாத இடத்தை விட்டுச் சதா நகர்ந்து கொள்வதில் திருப்தி போலும். அந்தத் திருப்தியில் வெகு நாட்களுக்குப் பின் நிம்மதியாய்த் தூங்கினார். மாட்டின் கால்கள் ஜதி போட்டுக் கொண்டே போகும். அந்த சப்தம் தாலாட்டும் சப்தமாய்க் கேட்கும். உறங்கிவிடுவார்.

அப்படித்தான் ஒரு மாட்டு வண்டியின் பின் புறத்தில் வைக்கோல் மெத்தையில் படுத்திருந்த அருள்மொழி மதுரையின் முதல் தரிசனத்தைப் பெற்றார். இருட்டி ஒரு ஜாமம் ஆனபோது, கீழ்வானத்தில் சந்திரன் உதயமானான். ஒரு பெரிய பொற்காசு போல வண்டியின் வேகத்தில் கூடவே ஓடோடி வந்தது. அதன் பால் வண்ண ஒளி புவனமெல்லாம் பரவியதாகத் தோன்றியது. இந்த மோகனக் காட்சியை ரசிக்க முடியவில்லை. உறங்கிக்கொண்டிருந்தார் அருள்மொழி.

''பாவம்! அவர் தூங்கட்டும். கோட்டை வாசலை அடைந்தவுடன் எழுப்பிவிடலாம்'' என்ற வண்டிக்காரனின் நல்லெண்ணம் பலிக்கவில்லை. அதிகாலையில் மதுரையை அடையக் கடக்க வேண்டிய பாலத்தில் நெரிசல். சுற்றி வந்த வண்டிகளின் சப்தம் அவரை எழுப்பிவிட்டது. வண்டியை இழுத்த காளைகள் கதறியதும், வண்டியோட்டிகளும் ஒருவர் மற்றவருடன் வாழ்த்தொலி செய்து கொண்டதும் அந்தப் பாலத்தின் அருகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அதில் எழுந்தார் அருள்மொழி.

அருள் மொழி கண்களைத் துடைத்துக்கொண்டு பார்த்தார். பின் பிரமிப்பில் மீண்டும் ஒரு முறை கண்களைத் துடைத்துப் பார்த்தார். ஒரு காலத்தில் மதுரை மாநகரைக் காணாதவர்கள் குருடருக்குச் சமம் என்று ஏசப்படுவார்கள். முதல் காட்சியில் என்ன ஒரு பிரமிப்பை ஏற்படுத்தியது இந்த நகரம்! வைகையாறும் அதன் பின் கோட்டைக் கொத்தளமும் தெரிந்தன.

தன்னை அறியாமலேயே அவருக்குள் உறங்கிக்கொண்டிருந்த போர் வீரன் முதலில் எழுந்தான். ''இதை எப்படிச் சோழர்கள் பிடித்தார்கள்? அதை விட முக்கியம் இன்னும் எப்படிக் கட்டுப் பாட்டில் வைத்திருக்கின்றனர்?'' என்று வியந்தார்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்றுப் பதினைந்து

## ஆலவாய் அனுபவம்

இரவெல்லாம் தன்னைச் சுமந்து வந்த வண்டிக்காரரிடம் நன்றி சொல்லிவிட்டு, வண்டியிலிருந்து கீழே குதித்தார் அருள்மொழி. சூரியன் உதிக்கும் சமயத்தில் அவர்கள் மதுரையை அடைந்தார்கள். எனினும் இவரது வண்டி ஊருக்குள் நுழைய உச்சி வேளையாகி விடும். சிறிய பாதையில் எதிர் எதிரே மாட்டு வண்டிகள் நின்றிருந்தன. தங்களுக்கு ஏன் மற்றவர்கள் வழிவிட வேண்டும் என்று எல்லா ஜனங்களும் ஏக காலத்தில் பேச முயன்றார்கள். ஒரே கூச்சலும் குழப்பமுமாய் இருந்தது. வண்டிக்காரர்களோ ஒருவரை ஒருவர் கடுஞ்சொற்களால் தாக்கிக் கொள்ள இதற்கெல்லாம் பழகிப் போன மாடுகள் கவலையின்றி அசை போட்டுக்கொண்டிருந்தன.

வண்டிகளின் நெரிசல் கலைவதற்கோ வெகு நேரமாகும். நடந்து செல்பவன் வண்டிக்கு இடையிடையே இருந்த சந்து பொந்துகளுக்குள் நுழைந்து செல்லலாம். அதிவேகத்தில் இலக்கை அடையலாம். பொன்னியின் செல்வருக்கோ சுமக்கும் பொருட்கள் எதுவும் இல்லை. கைவீசிக் கொண்டு வைகைப் பாலத்தின் மேலிருந்த கூட்ட நெரிசலைக் கடந்து நடந்து சென்று மதுரை மாநகரின் கோட்டை வாசலுக்கு வந்தடைந்தார்.

வடக்குக் கோட்டை வாசல் அண்டை வந்து நின்றது வைகைப் பாலத்திலிருந்து வந்த சாலை. தன்னைப் போலவே பலரும் பிரயாணம் செய்த வண்டிகளைக் கைவிட்டு நடையைக் கட்டினர் என்றறிந்தார்.

மதுரையைச் சுற்றிக் கோட்டைச்சுவர்கள். சற்றுத் தூரம் அதற்கு அப்பால் மணல் பரப்பு. அதற்கும் மேல் அகழியாய்ப் பாவித்த வைகையாறு எதிரியை வழிமறித்தது. வைகையின் மேல் பாலமோ நீரோட்டத்துக்கு அவ்வளவு மேலாக இல்லை. மழைகாலத்தில் பாலத்தின் மேலே நீர் ஓடும் எனத் தெரிந்தது.

வண்டியிலிருந்து இறங்கியதிலிருந்து பொன்னியின் செல்வருடைய கண்கள் மதுரைக் கோட்டைக் கொத்தளங்களையே நோட்டம் விட்டன. தூரத்திலிருந்து மதுரையைப் பாதுகாக்கத் தவறிய கோட்டைக் கொத்தளங்களைக் கண்டார்.

தஞ்சையில் வெட்டாறு போல இங்கு வைகையாறே அகழி. ஆனால், இந்தக் கோட்டையைக் கட்டியவனுக்கு ஓர் ஆதாயம்.



பக்கத்தில் பாறைகளும் மலைகளும் ஏராளம். தஞ்சைக்குப் பல காத தூரம் வரை பாறைகளே கிடையாது. இவற்றைக் கடந்தா சோழர்கள் இந்த நாட்டைப் பிடித்தார்கள்? இதன் மதில் சுவர்தான் எத்தனை பெரியது! தஞ்சைக் கோட்டைச் சுவர்களைவிட ஒன்றரை மடங்கு அதிகமாயிருந்தது. அப்போது இதை மீறி இவ்வூரை வென்றவனின் வீரம்தான் எவ்வளவு! அதற்கு முன் இதைக் கட்டியவனின் பலம்தான் எவ்வளவு என்று வியந்தார்.

வேங்கைக் கொடி பறந்து கொண்டிருந்த வாசலுக்குள் நுழைந்தார். எங்கும் புலிக் கொடிகள் வானளாவிப் பறந்து காற்றில் ஆடிக் கொண்டிருந்தன. பூவுலகத்திலுள்ள மனிதர்கள் எல்லாம் நமது குடையின் கீழ் வாழ வேண்டும் என்ற ஆசை சோழனுக்கு. அதை வெளிக் காட்டவே எங்கும் அவன் சின்னம் பொருந்திய கொடியைப் பறக்க விட்டிருந்தான் போல. இல்லை, மதுரை மக்களுக்குத் தங்கள் அடிமை நிலையைச் சதா உணர்த்த அப்படிச் செய்தானோ?

அன்றைக்கு ஏறக்குறைய நூறு ஆண்டுக்கு முன்னாலிருந்து, தென் நாட்டில் ஒரு காலத்தில் பிரசித்தி பெற்று விளங்கிய பாண்டிய வம்சத்தின் ஆட்சியே இல்லை. சோழ வம்சத்தின் ஆளுகையில் பாண்டி நாடு முழுவதுமாக வந்துவிட்டது. போர்க்களத்தில் ஜெயலட்சுமியின் கடைக்கண் பார்வை கிட்டாத பலரும் சோழர்களுக்குச் சிற்றரசர்களாக மாறி ஆட்சி செலுத்தி வந்தார்கள்.

அவர்கள் மீது அதிகாரம் செலுத்துவதற்கோ கப்பம் கேட்பதற்கோ சோழருக்குப் போர்பலத்தை தவிர உரிமை எதுவும் கிடையாது. எனினும், விதியை நொந்து கொண்டு, நல்ல காலம் வருமென்று வாழ்க்கை நடத்தினார்கள். ஆனால், பழந்தமிழ்க் குடிகளாகிய சோழர்களும் பாண்டியர்களும் ஜன்ம விரோதிகள். காலங்காலமாகவே இரண்டு குலங்களுக்கும் பகையுண்டு. பாம்பும் கீரியும் போல. மற்றவன் வாழ்ந்தால் போதும். வீழ்த்திவிட வேண்டும் என்று மனதில் உறுத்தல் நேரிடும்.

இருவரும் ஒன்றாய் இணைந்தால் தமிழகமே பெரும் மகத்துவம் பெறும். ஆனால், மற்றுமொரு குலம் அழிந்தால்தான் தாங்கள் மட்டும் மகத்துவம் அடையலாம் என்ற எண்ணம் இரு குலங்களுக்கும். அதனால், அடிமைப்பட்ட பாண்டிய வம்சம் மட்டும் சோழரின் மேலதிகாரத்தை ஒப்புக் கொள்ளவில்லை. பூரண சுதந்திரத்துடன் நாட்டை ஸ்தாபிக்கப் போராடி வந்தார்கள். எதிர்க்கத் துணிவு இல்லாமல் இல்லை. சராசரிப் போர் செய்யத் தக்க ஆள் பலமும் இல்லை. அதனால் காட்டிலிருந்து சமர் புரிந்தனர்.

ஆனால், என்னதான் புதுப்புது விஷயங்களைப் பற்றி நினைத்தாலும், அவருடைய மனக்கண் முன்னால் மாறனுடைய குதூகலம் ததும்பும் முகமும், லோகாவின் நாணம் கொண்ட பார்வையுடைய முகமும்தான் அடிக்கடி வந்து கொண்டிருந்தன. அவர்கள் இச் சமயம் எங்கே இருப்பார்கள்? என்ன செய்து கொண்டிருப்பார்கள்? என்ன எண்ணிக் கொண்டிருப்பார்கள்? ஐயகோ! அவர்களைத் தஞ்சையில் விட்டுவிட்டு நாம் வந்தாலும், நினைவில் பின் தொடர்கிறார்களே என்ற சலிப்புத் தோன்றியது. தஞ்சையை விட்டு ஓடி வந்ததே பிசகோ என்ற எண்ணம் வந்தது. வீட்டை விட்டு இவ்வளவு தொலைவு தள்ளி வந்தும் அவளது நினைவுகள் அவரைத் துரத்தி வந்தனவே! இது எல்லாம் எதனால்?

ஒரு பெண்ணின் மீது ஏற்பட்ட அபாரமான பிரேமையால் ஒரு மனிதன் இவ்வளவு மாற முடியுமா? அதுவும் அவள் தனக்கெனப் பிறக்கவில்லையென்ற உண்மை தெரிந்தவுடன் இப்படி இடிந்து போக முடியுமா? அவர் அதுவரை சாதித்தவை யெல்லாம் பூஜ்ய மாகுமா? இனிமேல் சோகமே அவர் ராஜ்யமாகுமா?

கிளம்பியதிலிருந்து முதல் முறையாக கொஞ்சம் அச்சப்பட்டார் அருள்மொழி. தன்னை யாரேனும் அடையாளம் கண்டு கொண்டு விட்டால்? எதிரியோ, நண்பனோ, தான்தான் சோழரின் இளங்கோ என்று யாரேனும் தெரிந்து கொண்டால் சிக்கல். ஆனால், கிளம்பிய நாள் முதல், கடந்து வந்த பல காத தூரத்திலும், இதுவரை தன்னை இன்னாரென்று யாரும் தெரிந்து கொள்ள வில்லை. இனியும் அப்படிதான் இருக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு.

கோட்டை வாசலருகே அப்படி ஒன்றும் உஷார் நிலையில்லை. கஷ்டப்பட்டுக் கைப்பற்றிய எதிரி நகருக்குக் காவல் இல்லையே என்று வியந்தார். பின் சோழர்கள் ஆட்சியை நிலை நாட்டி விட் டார்கள் என்று புரிந்து கொண்டார். இல்லை, சராசரியான அமைதி நிலை இருப்பது போல ஒரு உணர்வை ஏற்படுத்தக் காவலில்லாமல் விட்டிருந்தனர் போலும்.

மதுரை நகருக்குள் பிரவேசித்தார். ''யாரடா நீ? என்ன வேலை உனக்கு இங்கே?'' என்று யாரேனும் கேட்பார்கள் என்று எதிர் பார்த்தே சென்றார். ஆனால், அப்படியொரு கூக்குரல் வரவே யில்லை. தடையின்றி நகருக்குள் நுழைந்தார்.

நுழைந்தபோது ஏதோ பழைய நினைவு வந்தவரைப் போல அவருடைய கண்களில் சிந்தனைக் குறி தோன்றியது. ஆமாம், இதில் வேடிக்கை யென்ன வென்றால் இந்த நகருக்குத் தன்னை



அரசனாக நியமிக்க வேண்டும் என்று பலரும் சிந்தித்திருந்தனர். ஒரு காலத்தில் இவரையே இந்த நகரில் முடிசூட்டலாம் என்று அந்தத் தீரப் பெருங் கிழவரான பெரிய பழுவேட்டரையர் முதலானோர் விரும்பினார்கள். சோழப் பாண்டியர் என்ற புதிய வம்சத்தை உருவாக்கவேண்டும் என்று எண்ணினர். அன்று ஏதோ பல காரணங்களால் அது நடைபெறவில்லை. அதே ஊரில் இன்று ஒரு பரதேசியைப் போல அவர் நுழைந்தார். நினைத்தால் அவருக்கு சிரிப்பு வந்தது.

பசியும் தூக்கமும் வரும்போது அதைப்பற்றிப் பார்த்துக் கொள்ளலாம் என்று ஊரைச் சுற்றத் தொடங்கினார். மதுரைச் சாலைகளில் அடர்த்தியான கூட்டம். அவரைப் பார்த்ததும் யாரும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. யாரோ ஊர் சுற்றும் பிரயாணி என்று நினைத்திருப்பார்கள் போல.

''இது என்ன கோலம்? இப்படி உருமாறிப் போய் விட்டாயே!'' என்று திடீரென எவராவது வந்து தோளில் தட்டிக் கேட்டு விடுவார்களோ என்று பயம் உள்ளூர இருந்தது. ஆனால், யாரும் ஏறெடுத்துக் கூட அவரைப் பார்க்கவில்லை. ஜனங்கள் சாவதான மாக அவரவர் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள்.

மதுரையில் மாளிகைகளுக்குக் குறைவேயில்லை. பாண்டியரின் மாளிகைகளையெல்லாம் சோழர்கள்தான் பலாத்காரமாய்க் கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். பாண்டியமாளிகைகள் பல வானளாவி நின்ற வீதியில் கடைசி மாளிகை ஒன்று பூட்டப்பட்டுக் கிடந்தது. அதை மட்டும் சோழர்கள் கைப்பற்றவில்லை. அது வீர பாண்டியன் வாழ்ந்த மாளிகையாயிருக்கும் போல. மற்ற எல்லா மாளிகைகளையும் ஏதாவது அரசாங்க வேலைக்கென ஒதுக்கி யிருந்தார்கள். மக்கள் உள்ளும் வெளியும் சென்று வந்து கொண்டே இருந்தனர்.

ஆனால், ஊரை எங்கு சுற்றினாலும் மதுரை சோமசுந்தரர் மீனாட்சிதேவியின் கோயில் கோபுரங்கள் தொடர்ந்து கண்ணில் பட்டுக் கொண்டே இருந்தன. சரி அங்கும்தான் சென்று பார்ப் போமே என்று கிழக்கு வாசல் வழியாகக் கோயிலுக்குள் செல்ல முற்பட்டார் பொன்னியின் செல்வர்.

கோயிலில் கருணை பாலிப்பார் கடவுள் என்று சொல்வார்கள். அதனால் கோயில் வாசலில் அவரது கருணைக்காகப் பலரும் ஏங்கி நின்றனர். கடவுளின் கருணைக்கு மட்டுமல்ல, மனிதரும் தங்கள் மேல் கருணைக் காட்ட மாட்டார்களா என்றுதான். கோயி லுக்கு வெளியில் கணவரை இழந்த பெண்களும் பெற்றோரை

இழந்த குழந்தைகளும் மனிதரின் தயாளத்துக்காகக் கையேந்தினர். இப்படிப்பட்ட பலரையும் கடந்தே கோயிலுக்குள் செல்ல வேண்டியிருந்தது. கைம்பெண்களும் அனாதைக் குழந்தைகளும் இழந்ததை எண்ணி மௌனமாக ஓலமிடுவது என்னவோ பேரிரைச்சல் போலக் கேட்டது.

பிச்சை எடுப்பவர்கள் கொடுப்பவர்களாகப் பார்த்து தானம் கேட்டனர் என்று தெரிந்தது. எல்லாரிடமும் கேட்கவில்லை. முக்கியமாகப் பொன்னியின் செல்வரிடம் யாரும் கேட்கவேயில்லை. தான் ஏதோ மாறிப்போனதாகச் சொன்னார்களே வீட்டில். "எந்தவிதத்தில் மாறியிருக்கிறேன்?" என்று தன்னைத் தானேக் கேட்டுக் கொண்டதுண்டு. இப்போது தெரிந்தது மாற்றத்தின் ஆழம். ஏதும் இல்லாதவன் போலொரு தோற்றம் அவரிடம் வந்திருக்க வேண்டும். அதனால் அவரிடம் பிச்சை கேட்டு நேரம் கழிக்க வேண்டாம் என்று பிச்சைக்காரர்களே முடிவு செய்து விட்டனர்.

கோயிலை நன்றாய்ப் பராமரித்திருந்தனர் சோழர்கள். ஊருக்கு நடுவே கோயில். பாண்டியர் சென்று விட்டாலும் சுந்தரேசுவரனும் கயல்விழி கொண்ட மீனலோசனியும் ஆட்சி மாறாமல் இருந்தார்கள். உற்றுக் கவனிப்பவனுக்கு மதுரையில் ஆட்டம் பாட்டம் என்று ஏதுமில்லை என்றும், ஆனால், கோயில் திருவிழாக்கள் மட்டும் நடந்தன என்றும் தெளிவாய்த் தெரியும். இல்லையென்றால் நாடு நாடாய் இருக்காது என்று சோழர்கள் தலையிட்டு அவற்றை நடத்தி வந்தனர்.

கோயில் வாசலில் பொன்னியின் செல்வர் நுழைய நினைத்த போது தெருவோரத்தில் புழுதிப் படலமும், குதிரைகள் பாய்ந்தோடி வரும் சத்தமும் கேட்டது . எல்லோரும் ஒதுங்கி வழி விட்டனர். பொன்னியின் செல்வரும் ஒதுங்கி நின்றார். யார் கண்ணிலும் பட விரும்பவில்லை. "நாம் ஏதாவது செய்யப் போய் அதை அவர்கள் ஏதாவது விஷமம் செய்து கொண்டிருக்கிறேன் என்று பிடித்து விடக் கூடாது!" என்று கவனமாய் இருந்தார்.

முன்னால் வந்த இரண்டு குதிரைகளின் மேலிருந்த வீரர்கள் கையில் பாயும் வேங்கை உருவம் சித்திரிக்கப்பட்ட கொடியைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அடுத்தாற்போல் தனித்து வந்த உயர்ந்த சாதிக் குதிரையின் மீது கம்பீரத் தோற்றமுடைய மனிதன் வந்தான்.

'இவன்தான் கிருஷ்ணாராமனோ? நாம் இதுவரை சந்தித்ததில்லையே. அவனும் நம்மைப் பார்த்திருக்க நியாயம் இல்லை.



எனினும் ஏன் வீண் வம்பு?' என்று இன்னமும் ஒதுங்கினார் பொன்னியின் செல்வர்.

அநிருத்தரின் அந்தரங்க நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். கிருஷ்ணாராமன். பாண்டிய நாட்டின் இராஜரீக நிர்வாகத்தைச் செப்பனிட்டு அமைப்பதற்காக மதுரையில் இருந்தான். அவனைக் கண்டதும் காவலர்கள் பயபக்தியுடன் நின்றார்கள்.

கிருஷ்ணாராமன் மதுரையின் தளபதி. இரும்புக் கரம் கொண்டு சோழரின் பெயர் சொல்லி ஆட்சி புரிந்து வந்தான். பாண்டியர் திரும்பவும் ஒன்று சேரா வண்ணம் சோழன் கையாண்ட யுத்த தந்திரங்கள் அவன் நினைப்பதைச் சாதிப்பதற்குப் போதுமானவையாய் இருந்தன.

எல்லாக் குதிரைகளும் நின்றன. முன்னால் கொடி பிடித்து வந்த இருவரில் ஒருவன், "மதுரை மாநகர்க் கோட்டையின் வீரத் தளபதி கிருஷ்ணாராமன் வருகிறார்! வழி விடுங்கள்!" என்று கூவினான். இன்னொருவனும் அவ்வாறே திரும்பக் கூவினான். வெறும் சம்பிரதாயத்துக்குத்தான். ஏற்கெனவே மக்களெல்லாம் ஒதுங்கி நின்றுவிட்டனர். குதிரையென்ன? யானையே அந்த வழியில் செல்லும் அளவுக்கு ஒதுங்கியிருந்தனர். எனினும் தன் அதிகாரத்தைக் காட்டக் கூட்டத்தையெல்லாம் இன்னமும் ஓரம் தள்ளி அலட்சியமாக நகைத்தான் அந்தச் சோழ நாட்டு வீரன். அவன் தள்ளியவர்களில் சோழ தேசத்தின் கண்மணியான பொன்னியின் செல்வர் இருந்தார் என்பதை அவன் கவனிக்கவில்லை. எனினும் அவர் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

"தளபதி கிருஷ்ணாராமன் வாழ்க! வாழ்க!" என்று பற்பல குரல்கள் சேர்ந்து கோஷித்தன. ஆனால், நன்கு கவனித்தால் இரு புறம் இருந்த சாமானியரிடமிருந்து அந்தக் குரல்கள் வரவில்லை. சோழ தேசச் சீருடையை அணிந்தவரே கத்தினார்கள். இதிலிருந்து சோழன் பேரில் பாண்டி நாட்டு மக்கள் எவ்வளவு கோபம் கொண்டிருக்கிறார்கள் என்பதை ஒருவாறு தெரிந்து கொண்டார் பொன்னியின் செல்வர். இயற்கைதானே?

சோழர்களின் பிரதிநிதி அவன். வெளித் தோற்றம் அமைதியாய் இருந்தாலும் இந்த நாட்டைத் தற்போதைக்கு ஆண்டவர்கள் கவனக் குறைவாக இருக்கவில்லை. சோழர்களுக்கு எதிராக ஒரு கோஷம் எழுப்பினாலும் போதும். அவனைக் கைப்பற்றி அவனுடைய கைகளைச் சங்கிலியினால் பிணைப்பார்கள். பின் தெருத் தெருவாக நாய்போல இழுத்துச் செல்வார்கள்.

சொந்த நாட்டில் கூட வீரர்களின் எண்ணிக்கை இவ்வளவு இருந்திருக்குமா என்று சொல்ல முடியாது. பாண்டிய நாடு இன்று சோழர் சைனியம் முழுவதுமாகத் தண்டு இறங்கியிருந்த பிரதேசம்.

கோயில் பட்டர்கள் பூரண கும்பத்துடன் வந்து தனித்து நின்ற உயர்சாதிக் குதிரை மீதிருந்த வீரனை அணுகி வணக்கத்துடன் நின்றார்கள்.சோழரின் தளபதி வந்தவுடன் பலரும் தாள் பணிந்து வணக்கம் செலுத்தினார்கள். கௌரவத்தை அளித்து அவரை மரியாதையுடன் வரவேற்றார்கள்.

சோழரின் செருக்கை யெல்லாம் வெளிக்காட்டித் தளபதி கோயிலுக்குள் நிமிர்ந்து நடை போட்டுக் கொண்டிருந்தான். சோழர் பெருந்தகையோ கூன் போட்டதோள்களுடன் கூட்டத்துடன் கூட்டமாக ஓரமாக நின்றார்.

சோழர் படை உள்ளே செல்லும் போது கோயிலுக்குள் செல்வது உசிதமில்லை என்று பல பாண்டிய நாட்டு மக்களும் முடிவெடுத்தனர். நடையைக் கட்டினர். முதலில் பொன்னியின் செல்வரும் அப்படித்தான் நினைத்தார். அதனுள் பல ஒற்றர்களும் இருப்பார்கள். சொல்ல முடியாது. தஞ்சையிலிருந்தே யாராவது ஒற்றர்கள் பின் தொடர்ந்து வந்திருக்கலாம். ஆனால், இப்போது விட்டால் பின்னால் கோயிலுக்குள் செல்லும் பாக்கியம் கிடைக்காமல் போகலாம். அதனால் காத்திருந்து பின் உள்ளே செல்லலாம் என்று முடிவெடுத்தார்.

சோழர் படையுடன் வந்த எல்லாரும் கோயிலுக்குள் சென்றவுடன் சிலர் பின் தொடர்ந்தார்கள். அதில் பொன்னியின் செல்வரும் ஒருவர். சற்றுத் தூரத்திலேயே நடந்தபடி உள் சென்றார். கோயிலின் சுற்றுப் புறத்தை ரசித்து விட்டுக் காத்திருந்தால் தரிசனம் முடிந்து சோழர் படை வெளிவரும். பின் உள்ளே செல்லலாம் என்று நினைத்தவர் கண்களில் பொற்றாமரைக் குளம் பட்டது. அதில் தலை முழுகிக் கோயிலுக்குள் செல்வதே முறை என முடிவெடுத்தார்.

மதுரை மீனாட்சி கோயிலின் பொற்றாமரைக் குளம் பிரசித்தி பெற்றது. குளத்தைச் சுற்றிக் கற்படிகள் அமைத்திருந்தனர். பலரும் அமர்ந்து உள்ளிருந்த மீன்களுக்குப் பொரி எறிந்து கொண்டிருந்தார்கள்.

அருள்மொழிவர்மர் குளத்தின் கரையோரமாகச் சென்று உட்கார்ந்தார். இரு கையையும் நீரில் விடவே அவருக்கு மனம் இல்லை. அவரது பிம்பம் கலைந்து போகும். பிம்பத்தை இன்னமும் ஆராய்ந்தார். எவ்வளவு மாற்றம்! நிச்சயமாக உற்றார் உறவினரைத்



தவிர வேறு யாராலும் நம்மை அடையாளம் கண்டு பிடிக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தார்.

சற்றுத் தூரத்தில் காலடிச் சத்தம் கேட்டது. ஈரப்படிகளில் ''பொதேல் பொதேல்'' என்று சப்தம் கேட்டது. யாரோ யாத்திரீகன் குளத்தில் கால் நனைக்க வருகிறான் என்று நினைத்தார் பொன்னியின் செல்வர்.

ஆனால், அவர் தோளின் மீது ஒரு கை பட்டது. அச்சமயம் நேர்ந்த உள்ளக் கிளர்ச்சியினாலும் அதிர்ச்சியினாலும் உடனே உடலில் ஒரு நடுக்கம். வேங்கை போலச் சிலிர்த்துக் கொண்டார். அவர் முகம் செக்கச் செவேலென்று ஆகிச் செங்கழுநீர்ப் பூப்போல ஆனது. அதன் பிம்பம் நீரில் நன்றாய்த் தெரிந்தது. திரும்பிப் பார்த்தால் யாரிருப்பார்களோ என்ற அச்சம்.

''இளவரசே! சௌக்கியமா?'' என்றது ஒரு மெல்லிய குரல். தன்னைத் தெரிந்தவன்தான் பின் நிற்பவன் என்று யூகித்தார்.

பின்னிருந்து நண்பன் இளவரசே என்கிறானா? இல்லை, எதிரி கேலியாய்க் கேட்கிறானா? தன்னைக் குளத்தில் தள்ளிவிட்டுப் பாண்டிய ஆபத்துதவிகளை அழைப்பானா? இல்லை, கட்டி அணைத்து எல்லாரிடமும் பொன்னியின் செல்வர் இவர்தான் என்று கூக்குரலிடுவானா? இரண்டும் சரி சமமான ஆபத்தான சூழ்நிலைகள்தாம். பொன்னியின் செல்வருக்கு ஒன்றும் புரியவில்லை.

நீரினை நோக்கிக் கொண்டு கற்சிலையைப் போல் அமர்ந்திருந்தார். கண்களில் கோபக் கனல் பறந்தது. 'தீய எண்ணத்துடன் என் அருகில் நெருங்குகிறவன் யமனுலகம் போக ஆயத்தமாயிருக்க வேண்டும். அதற்கு முன் யாரவன் என்று பார்க்கலாம்' என்று பின்னால் நின்றவனின் பிம்பத்தையும் குளத்தில் பார்த்தார்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப்பதினாறு
## ஆலவாயை விட்டு வெளியேறவேண்டும்

'தோள் மேல் கை வைத்தவனை நாம் என்ன செய்தாலும் கோயிலுக்குள் வந்தது மட்டும் மகாத் தவறு' என்று நினைத்துக் கொண்டார் பொன்னியின் செல்வர். ஆனால், அந்தக் குரலை

ஏற்கனவே கேட்டது போலிருந்தது. சந்தேகப்பட்டுத் திரும்பிப் பார்க்க மனமும் வரவில்லை.

பொன்னியின் செல்வர் உடனே திரும்பவில்லை. குளத்து நீரில் பின்னிருப்பவன் முகம் பிரதிபலித்தது. தன் தோளின் மேல் கைவைத்தவனின் முகம் பிம்பமாய் நீரில் தெரியும் என்று அதைப் பார்த்தார். நீரில் தெரிந்த அவன் முகத்தைப் பார்த்த வண்ணம் இளவரசர், யார் என்று புரிந்து கொண்டுவிட்டார். பயப்படும்படியாக யாரும் இல்லை.

'பின்னால் நிற்பவனுக்கு நாம் கொள்ளையர் தீவில் கண்ட மெய்யப்பரின் களை இருக்கிறது. ஆனால், இப்போது சற்றுப் பருமனாக இருக்கிறான்.'

திரும்பினார். அந்த இடத்தில் சாட்சாத் மெய்யப்பன் தான் இருந்தான். நண்பனாய் இருந்தாலும் பிரச்சனைதான். 'ச்சி! இவ்வளவு தூரம் யார் கண்ணிலும் படாமல் வந்தோமே! இப்போது என்ன செய்வது? நான் நான் இல்லை என்று பொய் சொல்ல முடியாது. வேறேதாவது பொய் சொல்லி வெளியேறவேண்டும்' என்று முடிவு செய்தார்.

திரும்பிய பொன்னியின் செல்வரைப் பார்த்த மெய்யப்பர் "அரசே! இது என்ன கோலம்?" என்றான். உண்மையில், பொன்னியின் செல்வருடைய கோலம் அலங்கோலமாகத்தான் இருந்தது. பல நாள் பயணத்துடன் இப்போது பரபரப்பு வேறு. மெய்யப்பனைப் பார்த்ததில் திடுக்கிட்டுப் போயிருந்தார். அவர் முகம் வியர்த்திருந்தது.

"மெய்யப்பரே!" என்று சொல்லிப் பொனனியின் செல்வர் அவனைத் தழுவினார்.

"அண்ணலே, இந்த ஏழையை நினைவு வைத்துக் கொண்டிருப்பது பற்றி நிரம்பச் சந்தோஷம். முதலில் என் கண்பார்வையிலோ, ஞாபக சக்தியிலோ ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைத்தேன். இதென்ன விந்தை? உமக்கு ஏன் இந்த நிலை?"

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே நின்றார்கள். பொன்னியின் செல்வர் ஏதேனும் விளக்கம் தருவார் என்று அவன் காத்திருந்தான்.

என்ன சொல்வது, ஏது சொல்வதுஎன்று தடுமாறிய பொன்னியின் செல்வருக்குச் சட்டென ஒரு யோசனை வந்தது "மெய்யப்பரே! நான் மாறுவேடத்தில் சோழர் பிரதேசம் முழுவதும் சுற்றித் திரிகிறேன்" என்றார்.



ஆனால், பொன்னியின் செல்வர் நினைத்தது போல மகிழ்ச்சி ததும்பிய குரலில், "ஆஹா! தவறாக ஒன்றுமில்லையே. நாட்டைச் சுற்றிப் பார்க்க, எல்லாம் சரியாக நடகின்றனவா என்றறிய மாறுவேடத்தில் வந்திருக்கிறீர்கள். அப்படித்தானே?" என்று அவன் கேட்கவில்லை.

"ஐயா! புளுகாதீர். என்னாலேயே உம்மை அடையாளம் காண முடிகிறது. பின் இது என்ன மாறுவேடம்?" என்றான் மெய்யப்பன்.

"ஓ! நான் சொல்லுவதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? கதை கட்டுகிறேன் என நினைக்கிறீரா?" என்று பொன்னியின் செல்வர் பேசிக்கொண்டே அடுத்து என்ன யுக்தியைக் கையாளுவது என்று தடுமாறினார்.

'ஆமாம்' என்று தலையசைத்தான் மெய்யப்பன். பொன்னியின் செல்வருக்கோ உள்ளத்தில் பேரலைகள் எழுந்து விழுந்தன. திடீரென்று மெய்யப்பனின் இரு கரங்களையும் பற்றி, "மெய்யப்பரே, நீர் என் சினேகிதர் தானே?" என்றார்.

"ஐயனே! உமது நட்பு என் வாழ்க்கையில் பெரிய பாக்கியமல்லவா? உம்முடன் ஒரு தடவை சிநேகமானவன் மறுபடி மாற முடியுமா? இப்பூவுலகில் கிடைக்கக்கூடிய பாக்கியமா எல்லாருக்கும்?" என்றான்.

"சரி. அப்படியென்றால் இதற்கு மேல் கேள்விகள் கேட்காதீர்!" என்றார் பொன்னியின் செல்வர்.

வாயடைத்துப் போனான் மெய்யப்பன். "சரி. ஆனால், என்னுடன் என் விருந்தினர் மாளிகைக்கு வர வேண்டும்" என்றான்.

"இல்லை ஐயா! நான் முக்கியமான வேலையாய்ச் செல்கிறேன். உம்முடன் என்னைப் பார்த்தால் சந்தேகம் எழும். நான் சுவாமி தரிசனம் செய்து விட்டுச் செல்லவேண்டும் என்றிருக்கிறேன் அதனால் நீர் முதலில் கிளம்பும்" என்றான்.

'சரி' என்று மனமில்லாமல் அவ்வப்போது திரும்பித் திரும்பிப் பார்த்தபடி சென்றான் மெய்யப்பன். ஆனால், அவன் மனதுக்குள் தன் குலதெய்வமான திருக்காணப்பேர் காலீசனை வேண்டியபடி தான் சென்றான். "இந்த மாமனிதர் பெரும் பிரச்சனையை அனுபவிக்கிறார். இந்த மானிட மூளைக்கு அது எட்டவில்லை. ஐயனே! நீதான் அதைச் சரி செய்ய வேண்டும்."

உள்ளே சென்ற சோழ வீரர்கள் கோயிலை விட்டு வெளியே வருவார்களென்று எதிர்பார்த்துத் தூணின் பின்னால் அமர்ந்தார் பொன்னியின் செல்வர்.

ஆனால், யாரும் வெளியே வருகிற வழியைக் காணோம். சோழ மகாராஜ்யத்தில் பெரிய பதவிகள் என்று கருதப்படும் பதவியொன்றை வகிக்கும் மதுரைக் காவலர் இவர்தாம். இவருக்கு வானோங்கிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. அதற்கு ஏற்ற மதிப்பும் கோயிலுக்குள்ளே.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த பொன்னியின் செல்வர், 'சரி, நாமும் கிளம்ப வேண்டியதுதான். நமக்கு ஏற்பட்டது அவ்வளவு தான்' என்று முடிவு கட்டி வெளியேறினார்.

கோபுர வாசலை விட்டு வெளியே வந்து கடைத்தெருவில் கோயில் மதிலை ஒட்டி இருந்த வீதிகளின் வழியாக வேடிக்கை பார்த்துக் கொண்டே மெதுவாகச் சென்றார். மெய்யப்பன் தன்னை எளிதில் கண்டு பிடித்தது அவருக்கு ஓர் அதிர்ச்சிதான். இனி ஒரு சந்தேக உணர்வுடன்தான் தன்னை யார் உற்றுப் பார்த் தாலும் நினைக்கத் தோன்றும். 'நல்லவேளை, யாருடைய பார்வை யும் நம்மீது விழாமல் ஒதுங்கி இருந்தோம் என்று நினைத்தோம். இப்படி ஆனதே!' என்று நினைத்துக் கொண்டார். தலையைக் குனிந்துகொண்டே செல்ல வேண்டும் என்றால் முடியவில்லை. மதுரையின் எழில் அவரைக் கவர்ந்திழுத்தது.

தஞ்சைபுரி போல் புதிதாகப் பல்கிப் பெருகிப் பரந்து வளர்ந்து கொண்டிருந்த நகரம் அல்ல இது. இது சங்கம் வளர்த்த மதுரை. சிவபெருமானின் சடையிலிருந்து விழுந்த மதுரத் துளி ஏற்படுத்திய நகரம் இது. நஞ்சுண்ட கண்டரின் அருளினால் இந்த நகர் 'மதுரா' என்று பெயர் பெற்றது.

மதுரையில் முத்தங்காடி பிரபலம். சீமான்களுக்காகத் தெரு வோரமெங்கும் கூடை கூடையாகக் கொற்கை முத்துகளைக் கொட்டி விற்றுக் கொண்டிருந்தனர். ஈழத்திலிருந்து வந்த ரத்தின மாலைகளும் வைக்கப்பட்டு வியாபாரம் நடந்து கொண்டிருந்தது.

சாமானியருக்காகப் பட்சணக் கடையில் மலை மலையாக அதிரசத்தை அடுக்கி வைத்திருந்தனர். பலரும் புஷ்பம் விநியோகித் தார்கள். விவசாயத்துக்குப் பயன்படும் பொருட்களும் பெரும் அளவில் விற்கப்பட்டன. ஆனால், ஓர் இடத்தில் கூட வாளோ வில்லோ விற்கும் கடையில்லை. இதுவே தஞ்சையென்றால் இரண்டு கடைகளில் ஒன்று, ஆயுதக் கிடங்காகத்தான் இருக்கும்.

ஓர் அடிமை நாட்டில் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டு எல்லாரும் திரிவார்கள் என்று எதிர்பார்த்து வந்தவர்கள் ஏமாந்து போவாரர்கள். பலரும் புதிய ஆட்சியுடன் ஒத்துப் போய் வாழ்க்கையில் வளம் பெற்றனர்.



கடை வீதி நிரம்பி வழிந்தது. சந்தையில் ஒருவரை ஒருவர் இடித்துச் செல்ல நேர்ந்தது. வீதிகளெல்லாம் 'ஜே ஜே' என்று ஒரே ஜனக் கூட்டம். வெளியூர்களிலிருந்து பல அலுவல்களின் நிமித்த மாக வந்தவர்கள் அங்குமிங்கும் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களில் அருகிலிருந்த பட்டணங்களிலிருந்தும் கிராமங்களி லிருந்தும் வந்தவர்களும் இருந்தார்கள். தூர தூர தேசத்திலிருந்து வந்தவர்களும் இருந்தனர்.

ஆனால், ஒரே ஒரு வித்தியாசமும் அவருக்குப் புலனாயிற்று. நிச்சயமாக, செழுமைக்குக் குறைவு இல்லை, வறுமையில்லை. ஆனால், மக்களிடையே சந்தோஷமும் இல்லை.

வெளிப்படையாக யாரும் ஒப்பாரி வைக்கவில்லை. சோழருக்கு எதிராகக் கத்திப் பேசினால் சிறை செய்யும்படி ஆணைகள். ஆனால், எதிர்ப்பு இருந்தது. மனதுக்குள் முணுமுணுத்தால்கூடச் சிறை என்று ஆணைவந்தால் மதுரையைச் சுற்றியே கூண்டமைக்க வேண்டியது தான் என்று புரிந்தது.

ஆனால், ஒன்று. சோழர்களின் குரூரமான நடவடிக்கைகள் எதுமில்லை. பசியில்லை, பிணியில்லை. எனினும் அளவில்லாத மனச்சோர்வு கொண்டிருந்தார்கள் பாண்டிய மக்கள். மற்ற அடிமை நாடுகள் போலில்லை பாண்டியநாடு. ஞாபகங்கள் நெடு நாள் நிலைத்திருந்தன. சரித்திரத்தில் சோழர்கள் அவர்களை நடத்திய விதத்துக்கே இன்னமும் கோபம் கொண்டார்கள்

சோழர்களின் அதிகாரம் எட்டுத் திசையிலும் பரவி நிலை பெற்றிருக்கிறது. இந்தப் பரந்த பூமண்டலத்தில் அவர்கள் ஆணைக் குக் கீழ்ப் படியாதவர்கள் யாரும் இல்லை என்ற நிலை. எந்தக் கட்சியில் அதிக அநுகூலம் இருக்கிறதோ, அதில் சேரவேண்டியது தானே என்று பல நாடுகளும் சோழருடன் கைகோத்துக் கொண்டு விட்டன. ஆனால், மதுரை மக்கள் மட்டும் இதற்கு விதி விலக்காயிருக்கின்றனர். பாண்டியர் பணிகிற வரையில் சோழர் சைனியத்தை மதுரையில் நிறுத்த வேண்டியிருந்தது. பாண்டிய குலத்தாருக்கு உயிரைக் கொடுக்க, அந்த இணையில்லாத் தியாகத்தைச் செய்யப் பலர் இன்னமும் இருந்தனர் என்று கேள்விப் பட்டிருந்தார் பொன்னியின் செல்வர்.

திடீரென, அவர் நினைவோட்டம் தடைப்பட்டது. அரசியல் பாடு ஒரு பக்கமிருக்கட்டும். முதலில் இந்த நகரில் வசதியாகத் தங்குவதற்கு ஓரிடத்தை சீக்கிரம் தெரிந்து கொள்ளவேண்டும். கால் நீட்டிப் படுக்க வேண்டும் என்று தோன்றியது.

ஆங்காங்கு சத்திரம் சாவடிகளில் பயணிகள் பலர் படுத்தும் சாய்ந்தும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு சத்திரத்தைப் படுத்துறங்க அருள் மொழி தேர்ந்தெடுத்தார். வைகைக் கரையில் இருந்தது அந்தச் சத்திரம்.

மணியக்காரரைப் பார்த்துத் தங்க ஒப்புதல் வாங்க நினைத்தார். ஆனால், அந்தப் பதவிக்கு யாரும் இல்லை. யார் வேண்டுமானாலும் தங்கலாம் என்ற சத்திரம் போல. பொன்னியின் செல்வர் அமர்ந்தார். சுவரின் மீது முதுகைச் சாய்த்தார். பெருமூச்சு விட்டார். இவரைப் போலப் பலரும் இருந்தனர். ஒரே பிராயம். எதையோ பறிகொடுத்தது போலொரு பாவனை எல்லோர் முகத்திலும்.

நடந்தவற்றை யெல்லாம் நினைவில் ஓட விட்டார். அந்தச் சத்திரத்தில் குடிகொண்ட மௌனம் அவரைப் பாதித்தது. யோசித்துப் பார்த்தால் கடைவீதியிலும் கோயிலிலும்தான் பேச்சொலி. இல்லையென்றால் மதுரை நகரில் பல நேரம் நிசப்தம் குடி கொண்டிருக்கும்.

''இது என்ன மௌனம்? ஏன் பேசாதிருக்கிறீர்கள்? சுந்தரர் கோயில் கற்சிலைகளைப் பார்த்துவிட்டு நீங்களும் கற்சிலையாகப் போய் விட்டீர்களா?'' என்று கேட்கத் தோன்றும். அந்த அளவுக்கு மௌனம் காத்தனர் மதுரை மக்கள்.

தேவையில்லாத வார்த்தைகளே இல்லை. பொய்யாமொழிப் புலவர் தன் குறளை இயற்றியது தொண்டை நாட்டு மயிலையாய் இருக்கலாம். ஆனால், அதைப் பொற்றாமரையின் மீது வைத்து அழகு பார்த்தது மதுரையில். மதுரை நாட்டு மக்கள் அவரது சொற்களுக்கு அவ்வளவு மதிப்புக் கொடுத்தனர் என்று தெரியவந்தது.

விதியின் சிம்மாசனமே எது தெரியுமா? போர் வாளா,' கோட்டைக் கொத்தளமா, அழகிய பெண்ணின் இடையா? இல்லை, இல்லை. அது மனிதனின் நாக்கு. ''யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு'' என்று சொல்லும் பொய்யாமொழிப் புலவரின் வாக்கு. வள்ளுவர் பெருமான் கூறியது போல மக்கள் மிக ஜாக்கிரதையாக இருக்கிறார்கள். அந்த விதியானது எப்போது மனித நாவிலே வந்து உட்கார்ந்து கொள்ளும் என்று சொல்ல முடியாது. சமயம் பார்த்து ஆக்கிரமித்துக் கொள்ளும். அப்போது என்ன பேசுகிறோம் என்று மனிதனுக்கே தெரியாது. விதி தன் வேலையை முடித்த திருப்தியில் திரும்பப் பேசாமலிருக்கும். நாவின் அடக்கத்தை இழந்து பேசியவன் பாடு பாவம்!



தவறான இடத்தில் தும்மிவிட்டால் கூட எதோ ஆக்கிரமிப்புப் படைகளுக்கு எதிராகக் குரல் எழுப்பியதாக ஆகிவிடுமோ என்ற பயம். சோழனின் கோபத்துக்குப் பாத்திரமாக யாருக்குத்தான் துணிவு இருக்கும்?

கோடிக் கணக்கான பாண்டிய மக்களின் வாழ்க்கை அடியோடு மாறிப்போயிருந்தது. சோழரின் வாளுக்கு முன்னால் நிற்க முடியாமல் பாண்டியர்கள் புறமுதுகிட்டு ஓடியது வெட்கம். வீர சாகசம் புரிந்த பலரும் நாதியின்றிப் போர்க்களத்தில் மாண்டது சோகம். அதனால் ஊருக்குள் இருப்பவரெல்லாம் கோழைகள் என்ற எண்ணம் ஒரு பக்கம். எல்லாருக்கும் முன்னால் ஓட்டம் பிடித்தவன்தான் இன்று ஊரில் இருக்கிறான். அது இவனாய் இருக்குமோ அல்லது அவனாய் இருக்குமோ என்று ஒவ்வொருவர் மேலும் சந்தேகம். அதனால் ஒற்றுமை குலைந்தது.

சுதறிக் கொண்டு இருக்கவில்லை யாரும். நெஞ்சிலிருந்த புண்களெல்லாம் வடுக்களாக மாறிவிட்டன. ஆனால், கண்களில் ஒளியில்லை. வாழ்வில் எதையோ தவறவிட்டவர்கள் என்று பார்த்தாலே தெரிந்தது.

சத்திரத்தின் பின்புறம் அடுப்பை மூட்டிச் சமையல் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் சத்திரத்தில் இருந்தவர்கள் எல்லாரும் நடுவிலிருந்த நிலா முற்றத்துக்குச் சென்றனர். விதியின் கொடுமையே கொடுமை. குலம் கோத்திரம் தெரியாதவர் பலருடன், செந்தமிழ் நாட்டை ஆண்டு வந்த சோழ பரம்பரையின் குலக்கொழுந்து. மூதாட்டி ஒருவர் அளித்த வரகரிசிச் சோறும் வள்ளிக்கிழங்கும் வாங்கிச் சாப்பிட்டார். அதை மீறிப் பசித்தவருக்குக் கேப்பைக் கூழும் ஊறுகாயும் இருந்தன. பலரும் அந்த வரிசையிலும் சென்று நின்று சாப்பிட்டனர்

சத்திரத்தில் கொடுத்த எளிய உணவை மற்றவருடன் சேர்ந்து பருகினார் அருள்மொழி. பின் கையை மடித்து வைத்துக் கொண்டு படுத்தார். களைப்பில் உறங்கி விட்டார். அப்போது மெல்லப் பேச்சுக் குரல் அவர் தூக்கத்தில் ஊடுருவியது. கண்களை மூடிய படியே கேட்டார்.

சத்திரத்தில் தூங்காத மற்றவருடைய பேச்சு அது. கேட்டார். எல்லாருடைய பேச்சும் கிரிஷ்ணாராமனைப் பற்றித்தான் இருந்தது. ''அவன்தான் இப்போது பாண்டிய நாட்டின் சேனாதிபதியாம். அவனுடைய ஆட்டம் பொறுக்க முடியவில்லை!'' என்றான் ஒருவன்.

"சோழ மகாராஜ்யத்தில் பெரிய பதவிகள் என்று கருதப்படும் பதவியொன்றை வகிக்கும் மதுரைக் காவலன் இவன். இவனுக்கு வானோங்கிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. ஆடாமல் இருப்பானா?" என்றான இன்னொருவன்.

"இன்று காலை கிருஷ்ணாராமன் வந்த தோரணையைப் பார்த்தாயா? ஏதோ அரசன் போல வந்தான். சோழனிடம் கை கட்டிச் சேவகம் செய்பவன். அந்தப் பொன்னியின் செல்வனை இங்கு அரசனாய் நியமிக்க எண்ணமிட்டார்களே. அப்போதாவது பொறுத்துக் கொண்டிருப்பேன்" என்றான் மற்றும் ஒருவன்.

"சோழனின் அட்டூழியங்களுக்கு முடிவேயில்லையா? அவன் செய்யும் கொடுமைகளுக்கு அவன் பதில் சொல்ல வேண்டாமா?" என்று கோபமான ஒரு குரல் கேட்டது.

அடுத்து ஒரு கிழவனின் வார்த்தைகள் மட்டும் தெளிவாய்க் கேட்டன. "கடலைக் கடக்க மரக்கலத்தை வைத்துப் பாலம் கட்டும் அளவுக்கு அவனிடம் கப்பற்படை இருக்கிறது. நம் நாடு நகரம் எல்லாம் நிரப்பும் அளவுக்கு அவனிடம் ஆள்பலம் இருக்கிறது. அவன் படையிலுள்ள குதிரை யானைகளை இங்கு மேயவிட்டாலே நமக்குப் பஞ்சம் ஏற்படும். நம்மிடம் என்ன இருக்கிறது? அடங்கித்தான் போக வேண்டும்" என்றான்.

அவர்கள் பல நாள் சரித்திரத்தை மனத்திலேயே வைத்துக் கொண்டு பொருமினார்களேயன்றி, வேறெதுவும் செய்ய முடிய வில்லை. பின் ஒருவன் சமிக்ஞைப் பாஷையினால் "நம்மிடையே புதியவன் இருக்கிறான். பேச்சு வேண்டாம்" என்பது போலச் சொன்னான். மீண்டும் அமைதி சூழ்ந்தது.

எதிர் வருபவர் நல்லவரா, பொல்லாத சூழ்ச்சிக்காரரா? அவரை நம்பலாமா, கூடாதா? என்று பார்த்தே செல்லும் நிலை. கதவோரம் ஒதுங்கி நின்று ஒட்டுக் கேட்பார்கள். ஏன் இந்தச் சுவர்களுக்கே காதுகள் உண்டு. ஓடிச் சென்று சோழனிடம் பற்ற வைத்துவிடும் என்ற பயம்.

ஒரு நொடிதான் அமைதி. பின் ஒரு பெரியவர் வெடித்தார். "இனி என்னைச் சோழனால் என்ன செய்ய முடியும்? என்னை எப்படியெல்லாம் துன்புறுத்த முடியுமோ செய்துவிட்டனர். இனி என் உயிர் மட்டும்தான் பாக்கி. அதையும் வேணுமென்றால் உத்தம சோழன் வந்தெடுத்துக் கொள்ளட்டும்!" என்று கத்தினான் கிழவன். கிழவன் பேசுவதைக் கேட்டுப் பலரும் விம்மினார்கள். அவனைச் சாந்தப்படுத்தி அழைத்துச் சென்றனர்.



கடைசியாக ஒருவன் புலம்பினான். "பாலை நாட்டில் பால் பெருக அணைகட்டலாம். இப்படிப் பாழாய்ப் போன நாட்டில் என்னதான் செய்வது?"

'ஒரு பெண்ணின் முல்லை நிகர் புன்னகையும் கடைக்கண் பார்வையும் கிடைக்கவில்லையேயென்று இவ்வளவு தூரம் வந்தோம். இங்கு எவ்வளவு பேருக்கு எவ்வளவு கஷ்டம்!' என்று வியந்தார் பொன்னியின் செல்வர்.

"கடவுளே! சோழர்களின் கர்வத்தை அடக்க மாட்டாயா?" என்று பலரும் வேண்டுவது அவருக்குக் கேட்பது போலிருந்தது. அதனால் மனநிலை சஞ்சலமுள்ளதாயிருந்தது. அவரிடம் காரண மில்லாத சங்கடமொன்று அவன் மனத்தின் ஆழத்தில் குடி கொண்டிருந்த பழைய சங்கடங்களைக் கிளறிவிட்டது.

அருள்மொழிக்கு முழுவதுமாகத் தூக்கம் போனது. தஞ்சையில் கேள்விப்படுவது போலப் பாண்டிய நாடு முழுமையாகச் சாம்ராஜ்யத்துடன் ஒன்றிவிடவில்லை எனத் தெரிந்தது. பகைமைத் தீயை மூட்டி ஆயிரமாண்டுகளாயின. இன்று கொழுந்து விட்டுப் பற்றியெரிகிறது. இரண்டு குலங்களில் ஏதேனும் ஒன்றுதான் தமிழகத்தில் இருக்க முடியும். இல்லையேல் இரண்டும் சண்டையிட்டுச் சேர்ந்துச் செத்தொழிய வேண்டும்.

ஆனால், போர் எதற்கு என்று தஞ்சையில் சென்று கேட்டால் எல்லாரும் கொடுக்கும் பதில்: "மன்னர்களின் மண்ணாசை காரணமாக மக்கள் மடிவானேன் என்று பார்க்க முடியாது. ஒரு பெரிய எதிரி வந்தால் போதும். விறகுத் துண்டுகள் போலத் தனித் தனியாக மடிவோம். நாமே ஒன்று சேர வேண்டும். இல்லை, அந்த நிலையை ஒரு குலம் முன்வந்து செய்யவேண்டும். இல்லை யென்றால், தமிழர் கலாசாரமும் கலையுமே பாழ்பட்டு போய் விடும்" என்பார்கள்.

இதெல்லாம் நியாயமா என்ற ஐயம் அவர் மனத்தில் உதித்து விட்டது. பாண்டி நாட்டைப் பார்க்கும்போது அனுதாபம் வந்தது. மக்களின் உயிர் உடைமை மானம் என்று எதுவும் நிலையில்லை. என்றோ வரப்போகும் பெரும் எதிரிக்காக நம் சகோதரர்களை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தோம். ஆனால், 'சோழம் சோழம்' என்று ஆர்ப்பரித்து அம்பு மழையைப் பொருட்படுத்தா மல் பிடித்த நகரம் இது. அவ்வளவு சுலபமாக விட்டுவிடுவார்களா என்ன? பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிடியைச் சோழர் களும் தளர்த்தத் தயாரில்லை.

'இன்னும் இந்த அடிமை நாட்டின் மக்கள் இதய அந்தரங்கத்துக்குள்ளே கிடக்கும் ரகசியங்கள் எத்தனையோ! அடிமைப் படுத்திய நமக்கே கோபம் கோபமாய் வருகிறது. அவர்களுக்கு எப்படியிருக்கும்?' என்று பொன்னியின் செல்வர் யோசித்தார். 'தன் வாழ்வில் கஷ்டமென வந்தவுடன்தான் எதிராளியின் கஷ்டமெல்லாம் புரிகிறது. இந்தப் பயணம் உலகின் மறுபக்கத்தையும் காட்டும் போலிருக்கிறது' என்று உணர்ந்தார்.

ஒற்றுக் கேட்ட சொற்கள் புண்ணில் கோல் இடுவதுபோல் விழுந்தன. அவற்றை கேட்டுக் கொண்டிருந்த அருள்மொழிக்கு ஓர் அபூர்வமான யோசனை உதயமாயிற்று. அவர் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த பல கஷ்டங்களில் ஒன்று இன்னும் கூடிவிட்டது. அது மட்டுமல்ல, மீதமுள்ள எல்லாக் கஷ்டங்களுக்கும் இதுதான் காரணமோ? ஆயிரமாயிரம் பொது ஜனங்களின் சாபத்தைப் பெறும் அரசகுலம் சந்தோஷமாகவே இருக்க முடியாதோ என்றும் தோன்றியது.

பொன்னியின் செல்வர் சிந்தனையில் ஆழ்ந்தார். அவர் இருந்த மன நிலையில் இந்த மக்களுக்காக அனுதாபப்பட்டார். இழப்பு என்பது ஏற்படுத்தும் வலி ஒன்று தானே. அது மட்டுமல்ல, தனது இருண்ட மனதை இன்னும் இருட்டாக்கும் இந்த நகரத்தை விட்டுச் சென்றுவிடவேண்டும் என்று முடிவெடுத்தார். இங்கிருக்கும் ஒவ்வொரு நிமிடமும் ஒரு யுகமாக இருக்கின்றது. தான் ஒரு வேற்று மனிதனாகத் தோன்றியது. பொழுது விடிவதற்குள்ளே இந்த நகரை விட்டு வெளியேறிவிடவேண்டும் என்று தீர்மானித்தார்.

ஒரு காலத்தில் இரவெல்லாம் உறங்க மறுத்த மதுரை மாநகர் இது. இரவெல்லாம் பகல் போலவே இருக்குமாம். 'மீன் கண் அயராதது போல மீன் விழியாளும் தன் நகரை இரவெல்லாம் விழித்திருந்து பார்க்கிறாள் மீனாள்' என்று மக்கள் நம்புவர். ஆனால், இன்று அப்படியில்லை. ஊர் இருட்டாய் இருந்தாலும் ஊர் நடுவிலிருந்த கோயில் மட்டும் அப்படியல்ல. இருளின் நடுவில் ஜகஜோதியாகப் பிரகாசித்த விளக்குகளினால் ஒளிமயமான தீவு போலக் காட்சி தந்தது.

மாலை மயங்கி இரவு படையெடுத்தது. வானத்தின் நட்சத்திரங்களைப் பார்த்துத் திசையைத் தெரிந்து கொண்டு விரைவாக நடக்கத் தொடங்கினார். இரவு இரண்டாம் ஜாமத்தைத் தாண்டிவிட்டது. எப்படியாவது வைகை ஆறைப் பிடித்துச் சேது கொண்ட தென்பாண்டி நாட்டை நோக்கி நடக்க வேண்டும் என்று எண்ணினார்.

❖ ❖ ❖



## அத்தியாயம் நூற்றுப்பதினேழு

## இருளில் ஒரு பயணம்

மதுரையை விட்டு வெளியேறி அருள்மொழி நகரத்தின் எல்லைக்கு வந்தார். கரிய இரவு அவருக்கு வரவேற்புக் கூறியது. கொஞ்ச நேரம் சாலை, குடியிருப்புகளுக்கு நடுவில் சென்றது. பின் இரு புறமும் காடுகள் அடர்ந்திருந்தன. அவற்றுக்குள் பார்த்தால் கன்னங்கரிய பயங்கரமான இருள்.

அந்த இருண்ட காட்டில் என்னென்ன அபாயங்கள், என்னென்ன விதத்தில் இருக்கின்றனவோ தெரியாது. சிறுத்தைகள், கரடிகள், யானைகள், விஷ ஜந்துக்கள்- இவற்றுடன் பகைவர்களும் மறைந்திருக்கக் கூடும். அது மட்டுமல்ல. இரவு வேளையில் வழி கண்டு பிடிக்க முடியாமலும், திக்குத்திசை தெரியாமலும் போய்விட வாய்ப்பிருந்தது.

அந்தக் கன்னங் கரிய இருளில் நடப்பவருக்கு முன் நாலைந்து காலடித் தூரம்தான் தெரிந்தது. எப்போது எதிலாவது முட்டிக் கொள்வோமோ என்ற இயற்கையான பயம் வந்தபின், இனித் தட்டுத் தடுமாறி ஏதாவது இலக்கை எட்டவேண்டும் என்ற ஆசையும் வரும். காலையில் கூடக் கிளம்பியிருக்கலாமோ என்று அருள்மொழிக்குத் தோன்றியது. ஆனால், காரிருள் அவருக்குப் பயம் தரவில்லை. அதைக் காட்டிலும் இருண்டதாகத் தெரிந்தது அவரது எதிர்காலம்.

இரவில் தனித்திருந்தபோது இப்படி வேகமாகப் பலவகை ஞாபகங்களெல்லாம் ஓடுகின்றனவே என்று சில சமயம் நினைத்தார் அருள்மொழி. ஆனால், ஒன்று. மதுரையில் இன்னும் கொஞ்ச நேரம் தங்கியிருந்தால் ஏற்கனவே இருள்படிந்திருந்த மனதில் அவருக்கு முழுவதுமாகப் பைத்தியம் பிடித்திருக்கும்.

'தோல்வியுற்ற நாட்டின் அடிமட்ட மக்களிடம் இவ்வளவு துன்பங்களா? நம் குலத்தால் துன்பமடைந்தவர் எவ்வளவு பேர்? இதுவரை தெரியாமல் போனதே!' என்று ஆதங்கப்பட்ட அருள்மொழி, அவ்விடத்தை விட்டு விரைந்து வெளியேறத் துடித்தார். இதயத்திலிருந்த நரம்புகளெல்லாம் துடிதுடித்தன. அவர்களுக்கு முன் தம் கஷ்டம் ஒன்றுமே இல்லையெனத் தோன்றியது. 'மேல்மட்ட வணிகரும் சீமான்களும் ஆக்கிரமிப்பாளனுடன் ஒத்துழைத்து நாட்டில் அமைதி ஏற்பட்டுவிட்டதாக ஒரு மாயையை அல்லவா ஏற்படுத்திவிட்டனர்! அதைக் கண்டு நாம் கூட ஏமாந்து விட்டோமே?' என்ற கோபம்.

எதிர்ப்பையெல்லாம் களைந்து எறியாவிட்டால் என்றாவது ஒரு நாள் அது காளான் போல முளைக்கும் என்று ராணுவ ரீதியாக யோசித்தாலும், இந்த நாட்டின் உண்மையான பிரச்சனைகளைத் தெரிந்து கொண்டால்தான் இனிமேலாவது அதைச் சோழ நாட்டுடன் இணைக்க முடியும். ஒரு கிரீடத்தால் மட்டும் முடியாது. 'கிரீடம்' என்றவுடன் அவருக்கு லோகாவும், மாறனும் அதை ஒன்று சேர்ந்து கண்டு பிடித்தது நினைவில் வந்தது. இன்னும் அதிகவேகமாக நடந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் இரவின் இருளுக்குக் கண்கள் பழக்கப் பட்ட பிறகு ஓரளவு எல்லாம் தெரிந்தது. மேகத்துக்குப் பின் நிலவு ஒளிந்து கொண்டிருந்தாலும் விண்மீன்களின் வெளிச்சத்தில் எல்லாம் புரிந்தது. எனினும் எப்படி சரியாக வழி கண்டுபிடிப்பது என்று திண்டாடினார் பொன்னியின் செல்வர். வழியைக் கேட்கக்கூடக் கிராமம் ஒன்றும் இல்லை.

அப்போது பார்த்து நீரோடும் சத்தமும் எதிர்த் திசையிலிருந்து கேட்கத் தொடங்கியது. அவரது சுவாசத்துக்குக் காற்றில் ஈர வாசனையும் தென்பட்டது. ஆறு ஒன்று நெருங்கி வருகிறது என்று தெரிந்து கொண்டார். சிறிது தூரம் நடந்தவுடன் அதிர்ஷ்டவசமாக வைகை நதியும் தெரிந்தது. மதுரையின் வடக்கில் வைகையாறே கோட்டையின் அகழியாய்த் திகழ்ந்தது. ஆனால், கிழக்குத் திசையில் சற்றுத் தூரம் சென்றவுடனேதான் அது தென்படும்.

பொன்னியின் செல்வருக்கு ஒரு வகைத் திருப்தி. ஆற்றைப் பார்த்தவுடன் ஒரு சந்தோஷம். வழிக்காட்டி கிடைத்துவிட்டது. வைகையாற்றைப் பிடித்துவிட்டார். இனி அதன் கரையோடு போக வேண்டியதுதான். வழி விசாரிக்க வேண்டிய அவசியம் கூடக் கிடையாது. அதை யொட்டித் தென்கிழக்கே நடந்தால் சில நாட்களில் சேதுக்கரை வந்துவிடும்.

வைகை என்பது நீளமான நதியல்ல. வைகையின் ஜனன ஸ்தானம் மதுரைக்கு அதிதூரத்தில் இல்லை. அது போல அது கடலில் சென்று முடிவதுமில்லை. கடலோடு சங்கமமாகாத சில ஆறுகளில் வைகையும் ஒன்று. பூமியின் அபாரத் தாகத்துக்கு இரையாகிச் சமுத்திரத்தை அது எட்டாது.

ஆனால், அதற்காக அதன் மகத்துவம் குறையாது. இதுவே வைகை ஆறு. சிவபெருமான் கையை வைத்தவுடன் வெளிவந்த ஆறு என்று பொன்னியின் செல்வருக்குத் தெரியும். இது போல இன்னும் ஓர் ஆறு தமிழகத்தில் இருக்கிறது. அது வந்தியத் தேவரின் ஊரான திருவலத்தில் ஓடும் ''நீவா'' நதி. சிவபெருமான் ''நீ வா!'' என்றவுடன் தோன்றிய நதி அது என்றும் அவருக்குத் தெரியும்.



வைகை மிக அகலமான ஆறுதான். ஆனால், அகலத்துக்கு ஏற்றாற்போல் நீரோட்டம் இல்லை. வெள்ளம் வரும்போது வைகையிலும் படகுகள் பலவும் அலைபுரண்டு மிதப்பதைப் பார்க்கலாம். ஆனால், இன்று அப்படியில்லை. மணல்பரப்பில் நட்ட நடுவே ஓடிக் கொண்டிருந்தாள் வைகை. அவர் காதில் எட்டிய சப்தமெல்லாம் நீரின் அளவால் இல்லை. இருந்த கொஞ்ச நீரும் வழிமறித்த பாறைகளின் மேல் மோதியதால் ஏற்பட்ட சப்தம். ஆற்றின் நீர் நடுவில் ஓடியது. வெகு நாட்களாய் அப்படித் தானிருந்திருக்க வேண்டும். ஏனென்றால் புதர்கள் கரையிலிருந்து வெகு தூரம் வரை தழைத்திருந்தன.

ஆற்றங்கரையின் மீது நடந்த அருள்மொழிக்கு வேகம் அதிகரித்தது. வெகு நேரம் நடந்து விட்டார். தொலைதூரம் நடக்க நினைப்பவர்கள் வேகத்தை அடக்கியே செல்ல வேண்டும் என்பது அவருக்கு முதலில் புரியவில்லை. அதனால் அதி சீக்கிரத்தில் களைப்பு ஏற்பட்டது. ஓய்வெடுக்க இடமிருந்தால் நல்லதெனத் தோன்றியது.

இந்த வழி தொன்று தொட்டுப் பயணிகள் உபயோகிக்கும் பாதை தான். அதனால் வைகை ஆற்றங்கரையில் படித் துறைகளை யொட்டியே நதிக்கரை மண்டபங்கள் பலவும் இருந்தன. யாத்திரீகர்கள் ஓய்வெடுக்கக் கட்டப்பட்ட அவை, வெள்ளத்தைக் கணக்கிட்டுத் தள்ளியேயிருந்தன. ஆனால், அங்குச் செல்ல அவருக்கு இஷ்டம் இல்லை. ஆற்றின் நடுவிலிருந்த நீரோட்டத் துக்குச் சென்று முகம் கழுவிப் புத்துணர்வு பெறலாம் என்று எண்ணிய அருள்மொழி ஆற்றின் நடுவே நடந்தார். நீரோட் டமோ வெகு தொலைவில் இருந்தது.

நீரோட்டத்தின் விளிம்பிற்கு நெருக்கமான மரஞ்செடிகளைப் பிளந்து கொண்டு கொடி வழி ஒன்று சென்றது. ஆற்றின் நடுவே கால்நடைகளும் மனிதர்களும் அடிக்கடி நடந்து சென்றதனால் இயற்கையாகப் பாதை ஏற்பட்டிருக்க வேண்டும். பாதையில் சலித்தது போல மணலும், பாதையின் வெளியில் கல்லும் முள்ளும் கள்ளியும் இருந்தன. பாதையிலிருந்து சற்றுக் கால்கள் அகன்றால் கூட வேலியைப்போல் வளர்ந்திருந்த கற்றாழைச் செடிகளின் முட்கள் சில சமயம் அவருடைய கால்களைப் பதம் பார்த்தன.

ஆனால், பாதையின் வரம்புகளுக்கு இடையில் நடந்தாலும் ஒரு கஷ்டம். காலை அழுத்தி நடக்க முடியவில்லை. வெகு

நாட்களாய் நீர் வராததால் தைரியம் கொண்டு எலிகளும், முயல்களும் ஆற்று மண்ணுக்கு அடியில் பொந்துகளை அமைத்திருந்தன. காலை அழுத்தமாக ஊன்றினால் மண் கீழே இறங்கியது. அது அபாயகரமானது. கால் முறிவு கூட ஏற்படலாம் என்று நுனிக் கால்களில் நடந்தார் பொன்னியின் செல்வர்.

சற்று நேரத்துக்கெல்லாம் கால்களுக்கு ஈர மணல் தென்பட்டது. அதனால் இருட்டிலும், இலக்கை அடைந்தாயிற்று என்று உணர்ந்தார். சற்று நேரம் நின்றபடி ஓடும் வைகையைப் பார்த்தார். கரிய நிறத்தில் ஓடியது நீர். இருள் நிறைந்த வானத்தை ஓடும் நீரும் பிரதிபலித்தது. அந்தக் கற்பாறைகளைத் தடைகளாகவே அவள் நினைக்கவில்லை. ஏகப்பட்ட பாறைகளுக்கு இடையில் சந்து பொந்துகளில் புகுந்து விரைந்து ஓடினாள் வைகைப் பெண்.

ஆற்றுக்கு அப்பாலிருந்தபடி வீசிய குளிர்ந்த காற்றினால் அவர் உடம்பெல்லாம் சிலிர்த்தது. முகம், கால், கை கழுவ ஆவலாயிருந்தது. சற்று நேரம் போகட்டுமே. கொஞ்ச நேரம் கால்களை வைகை ஆற்றில் நனைத்தால் ஆனந்தமாய் இருக்கும் என்று நின்றார். முட்கள் பதம் பார்த்த இடங்களெல்லாம் வலித்தன. பின் நீரோட்டத்தின் முன் குனிந்து இரு கைகளையும் சேர்த்து நீரெடுத்து முகம் கழுவினார். பின் குடித்தும் பார்த்தார். தேவாமிர்தம் போலிருந்தது.

அந்த அழகான சூழல் ஒரு விதத்தில் அவர் துன்பத்தை அதிகரித்தது. நிமிர்ந்த பொன்னியின் செல்வருக்கு மனம் கனத்தது. களைப்பினால் அவருடைய உடம்பெல்லாம் சொல்ல முடியாத வேதனை கொண்டது. சற்று அமருவோமே என்று கால்கள் கெஞ்சின. 'உடனே பயணித்து என்ன வெட்டி முறிக்கப் போகிறாய்?' என்றது மனம். நீரோட்டத்தின் அருகே அமர்ந்தால் நீரோடும் சப்தம் மனதுக்கு இதமாய் இருக்கும் என்று எண்ணினார்.

அமர ஆசை தோன்றிய பிறகு சுற்றுமுற்றும் பார்த்தார். இருட்டில் முதலில் சரிவர எதுவும் தெரியவில்லை. வரவரத் தெரியலாயிற்று. பாறைகள் பலவும் இருந்தன. வைகை ஓரிடத்தில் பெரும் பாறையை வளைத்துக் கொண்டு சென்றது. நீரெனும் சிற்பி அந்தப் பாறையின் பக்கங்களை வழுவழு என வடிவமைத்திருந்தான். சற்று நேரம் அமருவோம் என்று அந்த ஆளுயரப் பாறையின்மீதேறி அமர்ந்தார்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அந்தச் சூழல் அவருக்கு ஓர் ஆழ்ந்த அமைதியைத் தந்தது. இயற்கையின் பல அம்சங்களைக் கண்டு ரசிக்கத் தொடங்கினார். பாறையில் அமர்ந்தபடி வானத்தைப்



பார்த்தார். வானத்தில் இரத்தச் சிவப்பு நிறமான புதன் ஒரு துளி உதிரம் போல ஜொலித்தது. உற்று நோக்கியவரின் கண்ணைப் பறித்தது. சப்த ரிஷிகளும் தெளிவாய்த் தெரிந்தனர்.

வெகு தூரத்தில் அடிவானத்துக்கருகில் ஒரு பெரிய மேகக் கூட்டம் தயாராகிக் கொண்டிருந்தது. வானத்தின் விளிம்பில் ஒரு கரிய மலை போல மேகங்கள் தோன்றின. இல்லை இல்லை. மலையிலிருந்து உருண்டு வரும் கரும் பாறைகள் போலவே அவரை நோக்கி ஓடிவந்தன. சற்று நேரத்துக்கெல்லாம் கரி பூசியது போலிருந்தது இரவு. இடிமுழக்கம் கேட்டது. வானைப் பிளந்து ஒரு வெள்ளிவாள் போன்ற மின்னல் வந்தது. மின்னல் மறைந்ததும் மறுபடியும் நாலாபுறமும் காரிருள் வந்து மூடிக் கொண்டது. சற்று நேரத்துகெல்லாம் மண் வாசனை தென் பட்டது. எங்கோ வானம் பூமியை வாழ வைக்க மழை வார்த்துக் கொண்டிருந்தது.

வடகிழக்கிலிருந்து திரண்டு வந்த மேகங்கள் வானத்தைப் பெரும்பாலும் மூடியிருந்தாலும், தெற்கிலும் மேற்கிலும் இன்னும் சில நட்சத்திரங்கள் தெரிந்தன. நட்சத்திரச் சுடர்களால் விளங்கிய வானமும், சலசலவென்ற சப்தத்துடன் ஓடிய வைகையாறும் அவர் மனதுக்கு ஓர் அளவுக்குச் சாந்தி கொடுத்தன. மதுரை நகருக்குள் பிரவேசித்தது அவருக்கு மனிதர்களின் கஷ்டங்களைப் பற்றி முழுவதுமாகப் புரிய வைத்திருந்தது. அதற்கு முன் தன் கஷ்டம் சற்றுச் சிறிதாகவே தோன்றியது.

பொன்னியின் செல்வர் பாறையில் சப்தமின்றி உட்கார்ந்திருக்கையில், அந்த அமைதியில் ஏதோ பழகிய வாசம் வந்தது. ஆனால், இன்றிருக்கும் நிலையில் அவரால் அந்தப் பழகிய வாசம் என்னவென்று கண்டறிய முடியவில்லை.

அது மட்டுமல்ல. அப்படியொரு மயான அமைதி அந்த ஆற்றங்கரையில். பட்சிகள் கூடக் கூடுகளிலே சென்று அடங்கி விட்டன போலும். இரவில் வெளிவரும் கோட்டான்கள் கூடச் சப்திக்கவில்லை. அப்போது தான் பொன்னியின் செல்வருக்குப் புரிந்தது. அவர் அறிவைச் செலுத்தி அந்த அமைதிக்கும் அந்தப் புதிய வாசத்துக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்று முடிவுக்கு வருவதற்குள் அங்கு வேறு ஓர் நிகழ்வு! புதிதாய் ஒரு மனிதனும் அந்த இடத்துக்கு வந்து விட்டான்.

வந்தவனை முதலில் தன் பிரதேசத்துக்கு வந்த ஆக்கிரமிப்பாளனைப் போலப் பாவித்தார் பொன்னியின் செல்வர். 'சுற்றுப்புறமெங்கும் மனித சஞ்சாரமே கிடையாது என்று யோசித்ததால் தானே இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தோம்? ஜனசஞ்சாரம்

இல்லாத பாதையென்று நினைத்தோமே? இவன் யார்?' என்று முதலில் கோபம்.

காடாக மண்டிக் கிடந்த நாணல் புதர்களுக்கு மத்தியில் வந்த ஒரு பிரயாணி அவன். ஆற்றை யொட்டிச் சென்றான். தாகமாக இருக்கும் போல; சற்று நேரத்தில் சென்று விடுவான், என்று மனதைத் தேற்றிக் கொண்டார்.

அவன் நிற்கும் இடத்திலிருந்து அவரைத் தெரியவில்லை போலும். தான் இருக்கும் இடத்தை வெளிக் காட்டலாமா என்று முதலில் யோசித்த பொன்னியின் செல்வர், பின் வேண்டாமென்று முடிவெடுத்தார். அந்த மனிதன் ஆற்றோரமாக முகம் கழுவி நீர் பருக நினைத்திருப்பான். அவனுக்கு நாம் இங்கு இருக்கிறோம் என்று ஏன் தெரியவேண்டும் என்று அமைதியாய் இருந்துவிட்டார்.

புதிதாய் வந்தவன் ஆற்றுக்குச் சென்று முகத்தையும் சிரசையும் குளிர்ந்த தண்ணீரினால் அலம்பிக் கொள்ள விரும்பினான் போல. அவரைப் போலவே அந்த மனிதனும் களைப்பான கால்களை ஆற்றோட்டத்தில் நனைத்தபடி நின்றான். தன்னை விட நல்ல மன நிலையில் அவன் இருந்தான் என யூகிக்க முடிந்தது. பாடல் ஒன்றை முணுமுணுத்தான். வாய்விட்டு உற்சாகமாகப் பாடுவதற்குத் தகுந்த இடந்தான் இது. அவனாவது உற்சாகமாக இருக்கிறான் என்று நினைத்துக் கொண்டார் அருள்மொழி.

வந்தவனோ ஒரு நொடி சுற்றிலும் பார்த்தான். 'ஆகா! இயற்கையின் அழகே அழகு தான்' என்று ரசித்தான். அதிலும் அவன் இந்த நாட்டைச் சேர்ந்தவன் போல. அதை விட்டு வெகு நாள் பிரிந்தவன்போல. ஒவ்வொன்றையும் ரசித்தான்.

ஆனால், அவன் முணுமுணுத்த பாடல் வரிகள் இவருக்கு எப்படிக் கேட்டது? ஆம், திடீரென சுற்றியிருந்த எல்லாச் சப்தங்களும் அடங்கிப் போயிருக்க வேண்டும். ஏன், இயற்கையில் அமைதியே கிடையாது. பின் ஏன் மீண்டும் மீண்டும் அந்த அமைதி எழுந்தது என அவரைச் சலனப்படுத்தியது.

திடீரென்று நாணல் புதர்கள் அசைந்ததைக் கேட்டு அசையாமலிருந்த பொன்னியின் செல்வர் சுய பிரக்ஞை அடைந்தார். திடீரென்று ஒரு குரல் கேட்டது. நிசப்தத்தின் மத்தியிலிருந்து ஸ்வரூபம் தெரியாத ஒரு சத்தம் எழுந்தது. அது ஆக்ரோஷமான குரலா இல்லை தீனமான துயரக் குரலா எனக் கண்டுபிடிக்க முடியவில்லை.

குரல் ஆற்றில் முளைத்திருந்த நாணல்களுக்கு நடுவேயிலிருந்து வருவதாகத் தோன்றியது. நீரின் அருகேயிருந்த மனிதன் கரைப்



பக்கம் திரும்பிப் பார்த்தான். அப்போது சரியாக வானத்தில் மின்னல் மின்னியது. அவன் முகம் பளிச்சென்று நன்றாய்த் தெரிந்தது. அவனுக்கும் ஏதோ சப்தம் கேட்டிருக்க வேண்டும். முகத்தில் பயமிருந்தது. வியப்போடு விழித்தான்.

மீண்டும் சற்றுத் தூரத்தில் கடல் குமுறுவது போன்ற சப்தம் கேட்டது. அந்த சப்தம் அந்த மனிதனுக்கும் கேட்டது. உடம்பு நடுங்கியது. நடுங்கிய கால்களை மெதுவாக எடுத்து முன் வைக்க முயன்றும், அவனால் முடியவில்லை. அவனுடைய கால்கள் நின்ற இடத்திலேயே நின்றன. ஆபத்து என்று தெரிந்தது. ஆனால், என்ன வகை ஆபத்தோ தெரியவில்லையே? மனப் பிரமையின் கோளாறா? அல்லது வேறு ஏதாவது பேய் பிசாசாய் இருக்குமோ?

சப்தத்தைத் தொடர்ந்து அவனுடைய உடம்பின் இரத்தத்தையெல்லாம் கண்டச் செய்யும்படியான இன்னொரு பயங்கரத் தோற்றமும் தென்பட்டது. ஒரு பாறை நகர்ந்தது அந்த மனிதனுக்குப் பெரும் வியப்பை அளித்தது. முதலில் இது வீண் பிரமை என்று எண்ணிக் கொண்டு நின்றான். கண் முன் பாறை என்றாவது நகருமா என்ன? அப்போதுதான் அந்தப் பாறைக்குக் கண்கள் இருந்தது தெரிந்தது. சிவந்த கண்கள் கோபத்தில் ஜொலித்தன; கனல் போல; வானத்திலிருந்த சிவப்புப் புதன் போல.

பொன்னியின் செல்வரும் அந்தக் காட்சியைப் பார்த்தார். ஆற்றங் கரையில் மெல்ல ஒரு பாறை உருண்டு நிமிர்ந்து நின்றது. அது பாறையே யல்ல. தனித்திருந்த யானை. இந்த நேரம்வரை யானை உணர்வற்றுப் பாறைபோல் கிடக்கக் காரணம் என்ன? அதன் உருவத்துக்குச் சத்தம் செய்யாமல் இதுவரை இருந்தது பெரும் விஷயம்தான். ஆகா! ஒற்றை யானை வருகிறது. மத யானை. மரங்களை முறித்து அதம் செய்துவிட்டு ஆற்றங்கரையில் படுத்துறங்கியிருந்தது போல. புதியவன் வந்து எழுப்பி விட்டான்.

'இவ்வளவு பெரிய யானை படுத்திருந்தது. அதைத் திரும்பிக் கூடப் பாராமல் சென்று விட்டான். நாம் கூடக் கவனிக்கவில்லையே. என் வாசம் அதற்கு இதுவரை தெரியவில்லை. ஏன்? ஆற்றின் மேல் எதிர்க் காற்று அடித்ததால் என்னுடைய வாசத்தை அது முகரவில்லை' என்று யூகித்தார் பொன்னியின் செல்வர்.

அதன் குன்று போன்ற சரீரத்தைப் பாறையென்று புதிதாய் வந்தவன் மட்டுமல்ல, தானுமல்லவா நினைத்து விட்டோம். யானைகளைப் பிடிப்பதிலிருந்து பயிற்சி கொடுப்பதிலிருந்து அவற்றுடன் பேசத் தெரிந்த தனக்கே புலப்படவில்லையே. இதுதான் விதி.

யானையை உற்றுப் பார்த்த பொன்னியின் செல்வருக்கு இன்னும் பல விஷயங்கள் தெரிந்தன. யானை மெலிவடைந்திருந்தது. போட்டியில் அது கூட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கும். ஆனால், அதன் மதம் குறைந்திருக்காது. அதிகரித்திருக்கும். யானையின் பின்காலுக்கு மேல் ஒரு காயம். அதில் சீழ் கசிந்து கொண்டிருந்தது. மனிதன் செய்த காயமன்று, கூட்டத்தில் ஏற்பட்ட சண்டையினால் இருக்கும். யானைகளைப் பற்றி முற்றிலும் அறிவார் அருள்மொழி. அதன் தாபமும் தெரியும்; தாகமும் தெரியும். இப்போது அதன் வேகத்தைத் தெரிந்து கொண்டார்.

அந்த ஐந்தறிவு ஜீவன் தன் முன் நிற்கும் இந்த மானிடப்பதர்தான் தன் கஷ்டத்துக்கெல்லாம் காரணம் என்று முடிவு கட்டியிருந்தது. அவனைச் சித்திரவதைச் செய்ய முடிவு செய்திருந்தது. அவன் திரும்பிசெல்ல அந்த யானை வழிகொடுக்காது. ஆற்றிலிருந்து வெளியேறும் வழியில் அவனை அந்த யானை வழிமறிப்பது உறுதி. அதன் துதிக்கையால் அவனைச் சுழற்றி அருகிலிருந்த மரத்தில் அடிக்கத் தயங்காது. அதற்கே அது காத்திராது. முன்னேறப் போகிறது. பாவம்! நீருக்கும் யானைக்கும் நடுவில் அவன் சிக்கிக் கொண்டான்.

இதுவரை யானை அசைந்து கொடுக்கவில்லை என்பதே அதன் வெறியை வெளிப்படுத்தியது. சாதாரண யானையென்றால் வந்தவனைப் பயமுறுத்தி விரட்டியிருக்கும். இல்லை, மனித வாசம் பிடிக்காமல் ஒதுங்கிப் போயிருக்கும். இது அவனைத் தாக்கவே இப்படிச் செய்தது. வேறு எந்தப் பட்சியோ, மிருகமோ, பூச்சியோ கூட இவ்வளவு நேரம் சப்தம் எழுப்பவில்லையே என்று இப்போது யோசிக்கும்போது தான் தெரிந்தது.

இந்தக் கோரக் காட்சியைப் பார்த்த பொன்னியின் செல்வருக்கு ஒரு கணம் மனத்தில் ஒரு போராட்டம் நிகழ்ந்தது. போய் அந்த மனிதனுக்கு எச்சரிக்கை செய்ய வேண்டாமா என்று எண்ணினார். ஆனால், என்ன விதமாக எச்சரிக்கை செய்வது? எப்படியும் கத்தினாலும் யானை இன்னும் வெறி கொள்ளும். அவனும் இருட்டில் குரல் வருகிறதே என்று பயத்தில் ஸ்தம்பிப்பான். அவனுடைய கவனத்தைக் கவர முயற்சி செய்தால் இன்னும் ஆபத்து.

பொன்னியின் செல்வருடைய மனதில் ஓர் ஏக்கம். சாகப் போகும் அம்மனிதனின் மேல் ஒரு கனிவு ஏற்பட்டது. அவனை எப்படியும் காப்பாற்ற வேண்டும் என்று உறுதி பூண்டார். ஆனால், எப்படி?



இருளில் எங்கும் நிசப்தம். வைகைகூட யானைக்குப் பயந்து அமைதியாய் ஓடியது. காற்றுகூடச் சப்தமின்றி அடங்கிப்போனது. ஜீவராசிகளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். வாயை மூடி, வாலைச் சுருட்டி அமைதி காத்தன. அந்த யானையின் கோபம் அவற்றுக்கும் புரிந்தது.

சில வினாடிகளுக்கு அந்த வைகைக் கரையில் காலமே ஸ்தம்பித்து நின்று விட்டது போல் ஓர் உணர்வு.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப்பதினெட்டு

## யானையின் அட்டகாசம்

நெஞ்சு நடுங்கும் காட்சியது. பாறை உயிர் பெற்றது போலத் தோன்றியதைக்கண்டு அவனுடைய உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் குலுங்கியது என்று பொன்னியின் செல்வர் அறிந்தார். புதியவன் மிரண்டு போய் அசையும் பாறையைப் பார்த்தான். இரண்டு கண்ணும் தெரியாத குருடன் போல அவன் சென்று விட்டான். மத யானையிடம் மாட்டிக் கொண்டான். வந்தவனைப் பார்த்தால் வீரன் போலிருந்தது. ஆனால், யானையைப் பார்த்தவுடன் அவனது மனத்திண்மையெல்லாம் கரைந்தது. சட்டென முகமெல்லாம் வியர்த்தது. அடிமனதில் மறைத்து வைத்திருந்த பயமெல்லாம் இப்போது வெளிவந்தது.

அதே சமயத்தில் அப்போது உயிர் பெற்று எழுந்த பாறையைப் பொன்னியின் செல்வரும் உற்று நோக்கிக் கொண்டிருந்தார். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. அவருடைய தேகத்தைச் சிலிர்க்கச் செய்தது. தனக்கு ஆபத்தில்லையென்றாலும் அன்று ராத்திரி ஏதோ பெரிய விபரீதம் ஏற்படப் போகிறதென்பது தெரிந்தது. அதைத் தடுக்க வேண்டிய சக்தி தன்னிடம் இருக்கின்றதாவென்றும் தெரியவில்லை.

யானையின் கண்கள் கோபத்தில் நெருப்புத் துண்டுகள் போல ஜொலித்தன. அதன் கண்களில் கோபக் குறி காணப்பட்டது. வாயோரத்தில் சற்று நுரை. கண்களிலிருந்து ஒழுகல். நிச்சயமாக மத யானைதான். இரத்தச் சிவப்பில் அதன் கண்கள் முறைக்க, மனம் முழுவதும் கோபமும் வெறியும் சுமந்து கொண்டு காத்திருந்தது அந்த யானை. யானையின் கண் ஓரத்தில் மின்னல் வெளிச்சத்

தில் வெள்ளை வெளேரென்று நீரூற்று ஜொலித்தபடியால், அது மதம் கொண்ட யானை என்று தெளிவாய்த் தெரிந்தது. பொன்னியின் செல்வருக்கு இப்போது புரிந்தது. இதுவரை என்னவென்று புரியாமல் விழித்தாரே. அந்தப் பிரத்யேக வாசமும் இப்போது புரிந்தது. அது மதம் பிடித்த யானைக்கே உண்டான வாசம். அந்த வாசம் வந்தவுடன் அந்த யானையைக் கூட்டத்திலிருந்து பிரித்துச் சங்கிலியால் பிணைக்க வேண்டும் என்பது யானைப் பாகனின் தலையான கடமை.

எழுந்தது மெய்யானதா பிரமையா எனக் கண்டறியவே நேரமானது. 'ஆற்றங்கரையில் சிறிய சிறிய கற்பாறைகள் பல உண்டு. சில சமயம் பெரிய பாறைகளும் உண்டு. இருளுக்குத் தகுந்தாற்போல் பயங்கரக் காட்சிகளைக் கற்பனை செய்து கொண்டோமா என்று யோசிக்கிறான் போல.'

யானை எழுந்தது. கடவுளின் படைப்புகளில் யானைக்கு பலம் அதிகம். ஆனால், நளினம் இல்லாத நடையும் பாவனையும் அதற்கென விதிக்கப்பட்டிருந்தது. யானையைப் பார்த்து நடுங்கினான். அது திடீரென வந்தது வீராதி வீரனுக்கும் அச்சத்தைக் கொடுக்கும்தான். வாயிலிருந்து எழுந்த "ஆ!" என்னும் வியப்பொலியைத் தவிர பேச்சு மூச்சற்றுக் கற்சிலை போல நின்றான்.

இருளில் திடீரெனத் தரையிலிருந்து முளைத்த பாறையைப் போல அந்த யானை எழுந்தது. அதன் மூச்சுச் சப்தமே உறுமல் போலிருந்தது. பின்னர் தான் அதன் பிளிறல் சப்தத்தைக் கேட்டான். பிளிறலின் எதிரொலி நெடுந்தூரத்துக்கு வைகைக் கரையெங்கும் பரவியது; வான வெளியெங்கும் வியாபித்து எதிரொலி செய்தது.

மத யானையின் ஓலத்தைக் கேட்டுப் பயப்படாதவரில்லை. அது போலவே மதயானை பூமி அதிர நடந்து வருவதைக் கண்டு மரண பயமே ஏற்படும். யானைகளைப் பற்றிப் பல ஆண்டுகளாகப் பொன்னியின் செல்வருக்குத் தெரியும். மதம் பிடித்த யானைகளின் நடவடிக்கைகளைக் கண்டறிந்தவர் பொன்னியின் செல்வர். ஆண்டவன் படைத்த ஜீவராசிகளில் உருவில் பெரிது யானை. அதுவும் மதங்கொண்ட யானையின் சக்தியோ ஒரு யானை மந்தையின் கூட்டுச் சக்தியை விட அதிகமானது என்று அவருக்குத் தெரியும்.

ஓரிரு முறை நகருக்குள்ளேயே யானையின் மதவெறியைப் பார்த்திருந்தார். சிதறி ஓடும் மக்களுக்கு இடையில் ஒரு குன்று கால் முளைத்து ஓடுவது போலிருக்கும். பல முறை யானைப்



பாகனின் மேல் அதன் கோபம் திரும்பும். அவனைப் பிடித்துத் தரையில் அடித்துத் துவைப்பது போல் துன்புறுத்திக் கொல்லும். பல மணி நேரம் யாரையும் பாகனின் உடலைக் கூட நெருங்க விடாது.

பொன்னியின் செல்வருக்கு யானையின் சரித்திரம் நன்கு தெரிந்தது. அதற்கு அடிபட்டிருந்தது. கோஷ்டித் தகராறில் கூட்டத்தை விட்டு வெளியேறி யிருக்கும். ஆண் யானைகள் வயதிலும் பலத்திலும் வளர்ந்தவுடன் துணைகளுக்கான போட்டி வரும். அதில் தினம் தோறும் சண்டை வரும். பல கிழட்டு யானைகள் ஒன்று சேர்ந்து இளம் யானைகளை விரட்டியடிக்கும். படு காயமும் உண்டாக்க வாய்ப்புண்டு.

தனக்கென ஒரு மந்தையைத் தேடும்வரை இப்படி மதம் பிடித்துத்தான் அலையும் அந்த இளம் யானைகள். அது போன்ற ஒன்று இது. அதன் நெஞ்சில் பற்றிய நெருப்பின் வெப்பத்துக்கு அளவே யில்லை. அதன் காலடியில் மனிதத் தலை சிக்கினால் என்னவாகும்? பழந் தமிழ் நாட்டில் சில வகைக் குற்றங்களுக்கு அப்படியொரு தண்டனை கூட இருந்தது.

பொன்னியின் செல்வருக்கு அடுத்த ஓரிரு நிமிடங்களில் என்ன நடக்கப் போகிறது என்று தெளிவாய்த் தெரிந்தது. யானை அந்த ஆளை முட்டித் தள்ளப் போகிறது. அடிபட்டு முதுகெலும்பு முறிந்து அவன் ஆற்று வெள்ளத்தில் விழுந்தால் பிழைப்பது கஷ்டம். நாலா திசையிலும் அவனுக்குப் பாதுகாப்பான புகலிடம் இல்லை. அப்படியே இருந்தாலும் அவன் கால்கள் நகர மறுத்தன. அழகு நிறைந்த அந்த ஆற்றங் கரையில் அப்படியொரு அபாயம் பதுங்கியிருக்கும் என்று அவன் அறியவில்லை. மரணத் தறுவாயில் அந்த மனிதன் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான். அவன் விடிவுக்கு ஒரு வழியும் வரவே வராது போல் தோன்றியது.

பொன்னியின் செல்வர் நிலைமையை நன்கு கணக்கிட்டார். இன்னும் ஓரிரு நிமிடத்தில் யானை அந்த மனிதனை எட்டி விடும். மதங்கொண்ட ஒற்றை யானை சாதாரணமான ஆயிரம் யானைகளுக்குச் சமமானது. அதன் மூர்க்கத்தனத்துக்கு முன்னால் யாரும் எதிர்த்து நிற்க முடியாது. அதைத் தடுக்க முயற்சி செய்வதென்பது முடியாத காரியம்.

அந்தக் காட்சியை உற்று நோக்கினார். அந்த க்ஷணமே ஒரு முடிவுக்கு வந்தார். மின்னல் மின்னுகிற நேரத்தில் பல வித யோசனைகளும் அவர் மனத்தில் தோன்றி மறைந்தன. அமைதியான யானையென்றால் பேசியே கட்டுப்படுத்தியிருக்கலாம். ஆனால், தன் பேச்சுக்கெல்லாம் இது கட்டுப்படாது. சாதாரண

நிலையில் இந்த மிருகம் இருந்தால் அதை அவர் ஆணைக்கு அடக்கி விடலாம். ஆனால், யாருடைய ஆணைக்கும் அடங்காத நிலையில் இப்போது அந்த மிருகம் இருந்தது. அதிலும் பாகனுடைய அங்குசத்தின் வலி தெரியாத காட்டு யானை இது.

கண் முன் ஒரு மனிதன் சாவதை எப்படிப் பார்த்துக் கொண் டிருப்பது? 'நமக்கு அந்தக் கலை தெரியாதென்றால் பரவாயில்லை. தெரிந்ததுதானே.' அவரது கடமை அவர் கண் முன்னே தோன்றியது. அவனைக் காப்பாற்றும் நிர்பந்தம் தன்னுடைய தலையில் சார்ந்திருக்கிறதென்பதையும் அவர் உணர்ந்தார்.

நொடிப் பொழுதுக்குள் நடந்த நிகழ்வுகள் அந்த மனிதனைச் சிலையாக்கி ஸ்தம்பிக்க வைத்தன. அந்த நேரத்தில் ஆச்சரியம் மிகுந்திருக்க, அவனால் முடிவெடுக்க முடியவில்லை. அவனுக் காகப் பொன்னியின் செல்வர் முடிவெடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. பாய்ந்து சென்று அவனைத் தண்ணீரில் தள்ளி விடலாமா? அவன் மூச்சுத் திணறியபடி ஒரு இருபது அடிகள் தள்ளி எழுவான். யானை அவனை விட்டாலும் விட்டு விடும் என்ற யோசனை. ஆனால், ஒத்துவராது. எதிர்க்கரையின் மேல் ஏறுவது என்பது சாத்தியமில்லை. வைகையின் ஆழத்தை இவன் நீந்திக் கடக்கவேண்டும். யானையோ அதில் நடந்தே செல்லும்.

மின் வெட்டும் நேரம் தானிருந்தது. முடிவெடுத்தார் பொன்னி யின் செல்வர். கட்டளைக்குக் கட்டுப்படாத மிருகத்துக்கு இன்னும் ஓர் இலக்கைக் காட்ட வேண்டும். பயந்து நடுங்கும் அந்த மனிதனை விடச் சக்தி வாய்ந்த எதிரியைக் காட்டவேண்டும். உடனே பொன்னியின் செல்வர் எழுந்தார். பாறையின் மேல் நின்றார். வாயின் மேல் கைகளைக் கூப்பிக் கொண்டார். ஒரு விசித்திரமான குரல் அவர் வாயிலிருந்தும் அடித் தொண்டை யிலிருந்தும் வந்தது.

வாயைக் குவித்துக் கொண்டு, தீர்க்கமான ஒரு கூச்சலைக் கிளப்பினார். அந்தப் பயங்கரமான ஒலியைக் கேட்டதும் அவருக்கே உடம்பெல்லாம் மயிர்க் கூச்செலடுத்தது. அந்த மனிதன் ஆச்சரியத்தில் திகைத்தான். அவன் யானையையும் புதிதாய் வந்தவனையும் மாறி மாறிப் பார்த்தான். 'ஏன் கத்துகிறான். அவனுக்கு சித்தப் பிரமை பிடித்துவிட்டதா?' என்ற சந்தேகம் அவன் மனத்தில் தோன்றியது.

முக்கியமாக, யானை அந்தக் குரலைக் கேட்டவுடன் அதன் பாதையில் நின்றது. இன்னும் நாலு அடிகள் வைத்திருந்தால் அந்த மனிதனைக் காலால் உதைத்துத் தும்பிக்கையால் பிடித்துக்



கரையில் மோதி அதன் வெறியைத் தீர்த்துக் கொண்டிருக்கும். ஆனால், இந்த சப்தம் அதற்கு வேறு ஒரு செய்தியைச் சொன்னது.

யானைக்கு அதிர்ச்சி. பொன்னியின் செல்வர் செய்த சப்தம் யானையின் பிளிறல். அதுவும் ஓர் ஆண் யானை மற்றொரு யானையைச் 'சண்டைக்கு வா' என்று இழுக்கும் சப்தம். 'நீயா நானா பார்த்து விடலாம்' என்று சமருக்கு இழுக்கும் போர்க்குரல். யானைக்கு அதன் பழைய ஞாபகங்கள் வந்தன. தன்னைக் கூட்டத்தை விட்டுத் துரத்திய ஆண் யானையின் நினைவு வந்தது.

'இது என்ன புதுச் சப்தம் திடீரெனப் பின்னாலிருந்து எழுகிறது! தன்னைச் சண்டைக்கு இழுத்து முட்டி மோதிக் காயப்படுத்திய யானைகள் மீண்டும் வந்துவிட்டனவா?' ஆனால், மனிதனைக் கண்டவுடன் அந்த மாத்திரத்தில் குழம்பியது. ஒரு நொடிதான். பின் அதன் கண்களில் கோரக் களை தாண்டவ மாடியது. அந்தக் குரலை எழுப்பும் மானிடன் தான் தனக்கு இப்போது பிரதான எதிரி என்று அந்த யானை முடிவெடுத்தது.

யானையின் செவியில் அந்த சப்தம் எப்படிக் கேட்டதோ தெரியாது. ஆனால், அதன் கோபத்தைப் பன்மடங்கு ஆக்கியது. அதனால் சும்மாயிருந்தவன் மீதிருந்த கோபமெல்லாம் இப்போது புதிதாய் வந்தவனின் மீது மாறியது. ஒரே ஒரு கணம்தான், அதன் கோபம் திரும்ப.

யானையின் போக்கு இப்போது அடியோடு மாறிவிட்டது. யானைக்கு இப்போது இரண்டு எதிரிகள் தோன்றினர். நேரே இருந்து நடுங்கும் எதிரி. தன் கஷ்டத்துக்கெல்லாம் அவனே காரணம் என்று அதன் மதம் பிடித்த மூளை முடிவு கட்டியிருந்தது.

இப்போதோ 'இப்படிச் சிலை போல நிற்பவன் எதிரியல்ல. என் பின்னால் ஒருவன் தோன்றிக் கைகாலை ஆட்டி வம்புக்கு இழுக்கிறானே. அவன்தான் முதன்மையான எதிரி' என்று அதன் மதம் பிடித்த மூளை சொன்னது.

ஆத்திரத்துடனும் பரபரப்புடனும் இருந்தது யானை. எப்படி யாவது இந்த மனிதனை இங்கிருந்து உடனே துரத்தி அனுப்பி விட வேண்டும் என்று முடிவு கட்டியது.

யானைகளைப் பற்றிய முழு அறிவும் பொன்னியின் செல்வருக்கு உண்டு. யானையை அடக்கும் கலையிலும் தேர்ச்சி பெற்றவரும், நிகரற்ற சாமர்த்தியம் வாய்ந்தவருமான அருள் மொழி, அந்த அறிவைச் செலுத்தி யானையைத் திசை திருப்பி விட்டார். ஆனால், அது வெற்றியல்ல. அந்த யானை இப்போது

தன்னைத் தாக்கப் போகிறது. அதனிடமிருந்து தப்பித்தால்தான் முழு வெற்றி, தனக்கு முழு வாழ்க்கை என்று அவருக்குத் தெரியும்.

அந்தப் போர்க் குரல் இந்த மனிதனிடமிருந்து வந்ததென்று யானை யோசிக்கவில்லை. 'மனித உருவம் ஆனால், யானையின் பிளிறல், எப்படி?' என்று வியக்கவில்லை. எதிரி இங்கிருக்கிறான். சிறிதாகவும் தெரிகிறான். அவனைத் துண்டு துண்டாகத் தும்பிக்கை கொண்டு கிழித்தெறியவேண்டும் என்று வதம் செய்யப் புறப்பட்டது.

ஆகவே எதிரில் நிற்பவனை விட அவனே பெரிய எதிரியாய்த் தோன்றினான். யானை திரும்பியது. பொன்னியின் செல்வர் மேல் தாக்குதலைத் தொடங்க ஆயத்தமானது. வெகுண்டு எழுந்த யானை தன் துதிக்கையை மகாவிஷ்ணுவின் சக்கராயுதத்தைப் போல் ஒரு சுற்றுச் சுற்றியது. துதிக்கையைச் சுழற்றிப் பகைவர்களை அதாஹதம் செய்ய வேண்டுமென்ற வெறி வளர்ந்தது. அதன் தந்தங்களால் அவருடலைக் குத்திக் கிழிக்க எண்ணியது. கால்களால் அவன் தலையை மிதிக்க எண்ணியது. துதிக்கையால் அவனைச் சுழற்றி அடிக்க நினைத்தது. முதல் எதிரி என்று எண்ணியவனை இப்போது ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை அந்த மத்த கஜம். தேக்கி வைத்த வஞ்சமெல்லாம் புதியவனிடம் ஒட்டு மொத்தமாகத் தீர்த்துக்கொள்ளப்பார்த்தது.

யானையின் நடவடிக்கையில் பொன்னியின் செல்வருக்கு வியப்பு ஒன்றும் உண்டாகவில்லை. தன்னுடைய யூகம் சரிதான் என்று தெரிந்து கொண்டார். ஆனால், அடுத்த யூகம் சரியா என்பதை அடுத்த சில நொடிகள் சொல்லிவிடும். அதற்குப் பிறகுதான் தான் உயிருடன் இருப்போமா என்பதே நிச்சயம்.

பொன்னியின் செல்வர் அப்படி என்ன யூகம் செய்து அதன் உண்மையை வைத்துத் தன் உயிரையே பணயம் வைத்தார்? இந்த ஆற்றில் கடைசியாகப் பிரவாகம் வந்தபோது இதன் மேல் மட்டம் சரி சமமாய் ஆகியிருக்கும். ஆனால், அடித் தளத்தில் அப்படியில்லை. வரும் போதே ஓரிரு முறை பொந்துகளில் அவரது கால் அகப்பட்டது. யானை நடந்த போது அதன் கால்கள் மண்ணில் அமுங்கியது போலிருக்கும். ஆனால், வேகமாய் ஓடும் யானை அந்தப் பொந்துகளில் தடுக்கி விழுவது நிச்சயம் என்று யூகித்திருந்தார்.

மின்னல் கீற்றென முடிவெடுத்தார் பொன்னியின் செல்வர். திரும்பிய யானைக்கு முன் பாறையிலிருந்து கீழே குதித்தார். ஓட்டம் பிடித்தார். யானையும் பிளிறிக்கொண்டே அவரைப் பின் தொடர்ந்தது. பொன்னியின் செல்வர் ஓடினார். ஆனால், கவனமாக நுனிக் கால்கள் மட்டுமே தரையில் படும்படி ஓடினார். உடலின் முழுக் கனமும் ஓரிடத்தில் பதியாதவாறு ஓடினார்.



யானையோ அதி வேகமாக அவரை நெருங்கி வந்து கொண்டிருந்தது. தன்னை வம்புக்கிழுத்த பொன்னியின் செல்வரைப் பார்த்தவுடன் அதன் வெறி அதிகமாகியிருக்க வேண்டும். துதிக்கையைத் தூக்கிக் கொண்டு அந்த மத யானை பிளிறியபோது அதன் சப்தத்தில் அண்ட சராசரங்கங்கள் வெடிக்காமலிருந்தது அதிசயந்தான்.

கணத்துக்குக் கணம் வேகமாகிக் கொண்டிருந்த யானைத் தும்பிக்கையை முன்னால் வெண் சாமரம் வீசுவது போல ஆட்டிக் கொண்டே ஓடியது. எப்படியேனும் எட்டியாவது இவனைப் பிடித்துவிட வேண்டும் என்ற உறுதியுடன் ஓடியது. மொத்தத்தில் அந்த இரவுக்கு ஒரு முடிவேயில்லை போலத் தோன்றியது.

புயல் காற்றின் வேகத்தில் ஓடி வந்த யானைக்கு அகப்படாமல் விரைந்தோடினார் பொன்னியின் செல்வர். அவரது கால்களுக்கு எப்படித்தான் அவ்வளவு வேகம் வந்ததோ! இரு உயிர்கள் அவரது வேகத்தைப் பொறுத்தே பிழைக்கும் என்ற எண்ணமோ? அந்த எண்ணம் அந்த நொடியில் கால்களுக்கு அதிசயமான பலத்தை அளித்தது.

மிகவும் கவனமாய் ஓடினார் பொன்னியின் செல்வர். தன் முழு எடையையும் தரையில் பதிக்கக் கூடாது என்று கவனம் செலுத்தினார். அவருடைய கால்கள் தரையைத் தொட்டனவா என்றே தெரியவில்லை. அவர் கால் வைக்கிற இடத்தில் பொந்துகளும் தரைக்கடியில் பள்ளங்களும் இருந்தாலும் அவர் நுனிக் காலில் ஓடியதால் பாதகம் ஏற்படவில்லை.

பொன்னியின் செல்வரைக் குறி வைத்துக் கொண்டு, யானை மேலும் நெருங்கி வந்தது. மேலும் மேலும் நெருங்கி வந்தது. யானை அவ்வப்போது துதிக்கையை நீட்டி அவரைப் பிடிக்க முயன்றது. அதன் மூச்சைக் கூட அவரால் உணர முடிந்தது.

பொன்னியின் செல்வருக்கே ஐயம் வந்தது. 'என்ன நாம் நினைத்தது தவறா? பக்கவாட்டில் ஓடுவதற்கும் வசதியாக இல்லை. செடி கொடிகள் அடர்ந்திருந்தன. வைகையின் கரை கருவேல மரங்கள் நிறைந்த காட்டுப் பிரதேசமாகக் காணப்பட்டது. அருகில் கரையின் மேல் ஏறலாம் என்றால் ஒரு நொடியில் தும்பிக் கையை வைத்துக் கீழே இழுத்துப் போட்டு மிதித்து விடும். மழையில் நனைந்த காரணத்தினால் கரையின் மண் சேறாகியிருந்தது

வழுக்கத் தொடங்கி விட்டால் பின் அதோ கதிதான். ஓடித் தப்பிக்கத்தான் முடியுமா? யானையை விட அதிக தூரம் நம்மால் ஓட முடியாது. கணக்குத் தப்பியிருக்குமோ? வேறு திட்டம் தீட்டவேண்டுமா?'

பின் அவரே அதற்கு அவகாசமிலையென்றும் உணர்ந்தார். 'நல்ல சமயம் பார்த்தாய், புது திட்டம் தீட்ட!' என்று தன்னைத் தானே கடிந்து கொண்டார்.

ஒரு நிமிடம் யானை தன்னைப் பிடித்து விட்டதென்றே நினைத்தார். அதன் மூச்சை முதுகில் உணர முடிந்தது. அப்போது வேகமாய்ச் சென்ற யானை திடீரென்று மண்டியிட்டது போல் முன் கால்களை மடக்கிக் கொண்டு முன்புறமாகச் சாய்ந்தது.

யானை சென்ற வழியில் செடி கொடிகளும் பாறைகளும் ஹதமாகி விழுந்தன. காலடியில் உள்ள மண் மட்டும் சும்மா யிருக்குமா? அவரை நோக்கிச் சென்ற மதங் கொண்ட யானையும் முன்னங்கால் இரண்டையும் பள்ளத்தில் வைத்து விட்டது. பிறகு சமாளிக்கப் பார்த்தும் முடியவில்லை. மண்ணுக்குள் கால் சென்ற வுடன் யானை தடுமாறியது. ஓடிவந்த வேகத்தில் யானை சரிந்து விட்டது.

தன் உயிரைப் பணயம் வைத்து இவ்வளவு சிரமம் அவர் எடுத்துக் கொண்டது வீண் போகவில்லை. தன் காலடியில் மண் அமுங்குவதைக் கண்டார். நுனிக் காலில் மான் போலத் தாவிச் சென்றார். யானைக்கென்று முடிவுசெய்து வைத்த கதி தனக்கு ஏற்பட்டுவிடக் கூடாது. தரையில் பொந்துகளை ஏற்படுத்த ஆயிரம் ஜீவன்கள் இந்தக் காய்ந்து போன நதியில் உயிர் வாழ்ந்தன. நீர் அடிக்கடி வராத காரணத்தால் பல பொந்துகள் இருந்தன. மனிதனின் கனத்தைத் தாங்கும். ஆனால், யானையின் கனம் அப்படி யில்லையே?

பொன்னியின் செல்வர் தன் பின்னே என்ன நடந்தது என்று யூகித்துவிட்டார். யானையின் கோபப் பிளிறல் இப்போது வேறு விதமாகச் சோகப் பிளிறலாய்க் கேட்டது. ஆனால், முதலில் திரும்பிப் பார்க்கக்கூடப் பொன்னியின் செல்வர் யோசித்தார். பின் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு திரும்பினார். கீழே விழுந்த யானை துள்ளி யெழுந்து விடுமா என்று பயந்தார். ஆனால், அதனால் எழ முடியவில்லை. அதனுடைய குன்றொத்த உடலின் பெருங்கனமே அதற்குச் சத்துருவாகி விட்டது. இனி அதனால் எழமுடியாது. இதே இடத்தில் அதற்கு முடிவு வந்து விடும்.



ஆனால், யானை குழியில் சிக்கியிருந்தாலும் விடுவதாய் இல்லை. பொன்னியின் செல்வரை முறைத்துப் பார்த்தது. அதன் கோபம் அடங்கியதாகத் தெரியவில்லை. பிளிறியது. தோல்வியும் வலியும் ஒன்று சேர்ந்து அதை நோக அடித்தன.

பொன்னியின் செல்வருடைய இருதயம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது. பரபரப்பு அடங்க நேரமானது. பிழைத்தால் புனர் ஜன்மம்தான் என்று உயிரைப் பணயம் வைத்தது சரியா என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டார். ஆனால், இன்று வேறெந்த வழியும் மத்தகஜத்திடம் பலித்திராது. ஓர் உயிரைக் காப்பாற்றி விட்டோம் என்ற திருப்தியிருந்தது.

திரும்பி நடந்தார் பொன்னியின் செல்வர். இம்முறை ஆற்றின் நீரில் மெல்ல நடந்து வந்தார். அவர் காப்பாற்றியவனுக்கோ நின்ற இடத்தை விட்டு நகர மனம் துணியவில்லை. நன்றி எனச் சொல்லிப் பேச்சுக் கொடுப்பதற்குக் கூட நா எழவில்லை. அவன் முகம் வெளுத்துப் போயிருந்தது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பலர் திடீரெனப் பேச்சுத் திறனை இழப்பதைப் பொன்னியின் செல்வர் பார்த்திருந்தார். இவனுக்கும் அப்படி ஏற்பட்டதோ என்று பயந்தார். பின் அவனைக் காப்பாற்றிய தன் முழுப் பலனை அடைய முடியாது.

அவன் உடலின் நடுக்கத்தை இன்னும் தவிர்க்க முடியவில்லை. யானையின் பிளிறல் இன்னமும் அவனைப் பயமுறுத்தியது. பொன்னியின் செல்வருடைய கரங்களைப் பற்றிக் கொண்டான். கண்கள் குளம் போல ஆயின. கடைசியாக இதழ்கள் மெல்ல ஒரு புன்னகையால் மலர்ந்தன.

"வா, போகலாம்" என்று கையைப் பிடித்து அவனை அழைத்துச் சென்றார். வெகு தூரம் வரை யானையின் பிளிறல் கேட்டுக் கொண்டேயிருந்தது. இருளில் அந்தச் சப்தம் எதிரொலித்தது. யானை தன்னை விடுவித்துக் கொள்ளப் போராடிய பிறகு வலி தாங்காமல் மயக்கமுறும். பின் ஓரிரு நாட்களில் இளைத்துப் போகும். கால்கள் முறியவில்லை யென்றால் எழுந்து போய்விடும். அவை உடைந்திருந்தால் இரு வார காலத்தில் உயிரை விடும். நூற்றுக் கணக்கான கழுகுகளுக்கு விருந்து படைக்கும்.

சற்று நேரத்தில் கார் மேகங்கள் எல்லாம் கலைந்து போய் விட்டன. அவற்றின் பின்னாலிருந்து வெளிவந்த சரத்காலச் சந்திரனின் அமுத கிரணப் போதையை அனுபவித்துக் கொண்டு இருவரும் அடுத்தடுத்து நடந்தனர்.

அவர்கள் இருவரையும் கண்டவுடன் சந்திரனுக்குச் ஆச்சரியம். விதியைக் கண்டு அதற்கு சிரிப்பு நிலைகொள்ளவில்லை. பின்னர் அது தவறாய் போய்விடும் என்று பஞ்சு போல வந்த ஒரு வெண் மேகத்தை இழுத்துத் தன் முகத்தை மூடிக் கொண்டான் சந்திரன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றுப்பத்தொன்பது
## புதியதொரு நட்பு

அந்த ஆற்றங்கரை அதுவரை அசாதாரணமான அமைதி குடி கொண்ட இடமாய் விளங்கிற்று. அதற்கு நேர்மாறாக இப்போது இருந்தது. தன் பயத்தை வெளிப்படுத்தும் மத்த கஜத்தின் சப்தம், மற்றவருக்குப் பீதியை உண்டாக்கும் பயங்கரப் பிளிறலாய்க் கேட்டுக் கொண்டிருந்தது.

அவ்வளவு சீக்கிரத்தில் இந்தப் படலத்தை வந்தவன் முடிப்பான் என்று யனையிடம் அகப்பட்டவன் நினைக்கவில்லை. மாறாகத் தன் மேல் வந்த ஆபத்தை மாற்றிக்கொண்டு மாளப்போகிறான் என்று தான் நினைத்தான். கொஞ்ச நேரம் அவனுக்குப் பேச்சே வரவில்லை. பொன்னியின் செல்வர் வலுக் கட்டாயமாக அவன் கையைப் பிடித்து அழைத்துச் சென்றுவிட வேண்டும் என்று நினைத்தபோது அவன் கையில் நடுக்கம் தெரிந்தது.

இருவரும் ஆற்றங்கரையைக் கடந்து மேட்டுப் பாங்கான இடத் துக்கு வருவதற்கு முன் அந்த யானையின் கோர முடிவு பலருக்கும் தெரிந்துவிட்டது. ஆற்றோரமாகத் தழைத்துச் செழித்திருந்த விருட்சங்களின் கிளைகளின் மேல் பல நூறு கழுகுகள் காத் திருந்தன - பிளிறல் முடியட்டுமென்று.

இன்னும் பறந்து வரும் கழுகுகளைக் கண்ட அந்த மனிதன் உடல் சிலிர்த்தான். பயத்தில் வெதும்பிய அவன் உள்ளம் உயிர் பிழைத்த குதூகலத்தினால் பொங்கியது. ஆனால், அந்தக் கோரச் சம்பவத்தை அவ்வப்போது நினைவு கூர்ந்தான் அவன். யானை யால் தனக்கு என்ன நேர்ந்திருக்கக்கூடும் என்று நினைத்த போதெல்லாம் குப்பென வியர்த்தது.

பொன்னியின் செல்வருக்கு நன்றி சொல்ல யத்தனித்தான். நன்றியைத் தெரிவித்தவனுக்கு ஒரு கேள்வி. அதைக் கேட்கா



விட்டால் தலை வெடித்துவிடும் போலிருந்தது. "ஐயா! எப்படி உம்மைப் பின் தொடர்ந்த யானை கால் தடுமாறி கீழே விழுந்தது?"

ஆகா, இவன் பேசும் சக்தியை இழந்து போகவில்லை என்றறிந்த பொன்னியின் செல்வர் மகிழ்ச்சி கொண்டார். பின்னர் விளக் கினார். "காய்ந்த ஆற்றின் மணலில் ஆயிரம் ஆயிரம் ஜீவ ராசிகள் வாழும். கழுகுகளுக்குப் பயந்து தரைக்கடியில்தான் உயிர்வாழும். அந்தப் பொந்துகளின் மேல் நம் கால்களே பலசமயம் சிக்குவ தில்லையா? மத்த கஜத்தின் கனத்தை எப்படித் தாங்கும்?"

"இந்த யோசனை எனக்குத் தோன்றாமல் போயிற்றே!" என்றான் அவன்.

"உமக்கு எப்படி யோசனை வரும்? வைகையாற்றில் சிலை போலல்லவா நின்றீர்!" என்றார் பொன்னியின் செல்வர்

அவன் சிரித்தான். "ஆமாம். கற்சிலை போலத்தான் நின்றேன். யானை வராத இடமாய்ச் சென்று படுத்துத் தூங்கிவிட்டுப் பொழுது விடிவதற்குள் எழுந்து வைகை நதியில் குளித்துவிட்டுச் செல்லுவோம். ஒரு முறை காலில் பட்டால் மீண்டும் மீண்டும் படும் என்பார்கள்" என்ற யோசனையைத் தந்தான் அவன்.

துரிதமாகச் செல்லும் அளவுக்கு வேலை யொன்றும் இருவருக் குமே இல்லை என்று தோன்றியது. ஆனால், அவன் விடை கொடுத்து அனுப்பினாலும் பிரியமாட்டான் போல. அந்த யானை மீண்டும் வரும் என்று பயந்து கூடவே வந்தான். பொன்னியின் செல்வருக்குத் தான் தனியாகச் சாதித்தது இதுதான் முதற் காரியம் என்ற பெருமிதம். அதன் அடையாளமான இவனை ஏன் இவ்வளவு சீக்கிரம் பிரிய வேண்டும் என்றும் தோன்றியது.

"சரி! வா!" என்றார். இருவரும் கிழக்கு நோக்கிப் பயணித்தனர்.

இருவருக்கும் முதற் சந்திப்பு என்றே அதைச் சொல்ல முடியாது. அவ்வளவு ஒரு அன்னியோன்யம் ஏற்பட்டது. இரண்டு நள்ளிரவுப் பிரயாணிகளும் அவ்வப்போது பேசியபடி நடந்தனர். சற்று நேரத்தில் இருவருடைய கால் அசைவுகளும் கூட ஒத்துப் போயின. அவனுக்குத் திகில் வந்தது போலவே திடீரென்று விட்டுப் போயும் விட்டது. அவரோடு கூச்சமின்றிப் பழகினான்.

வானத்து மீன்கள் கண் சிமிட்டிக் கண் சிமிட்டி வியந்தன. "இவர்கள் இருவருமா ஒன்று சேர்கிறார்கள் என்று?"

யானையின் பிளிறல்களும் அதன் எதிரொலிகளும் மெல்ல மெல்லக் குறையத் தொடங்கின. ஆனால், அது முற்றிலுமாகக் கேட்காத தூரத்தில் நல்ல மரத்தடியில் இடமொன்றை இருவரு

மாகத் தேர்ந்தெடுத்தனர். இனி வழி நடப்பது அசாத்தியமாதலால், அன்றிரவை அந்த மரத்தடியிலேயே கழிப்பது என்று இருவரும் தீர்மானித்தார்கள்.

மரத்தடியில் இருவரும் அமர்ந்தவுடன் பொன்னியின் செல்வரைப் பார்த்து அவன், "இன்று நீர் என்னைக் காப்பாற்றியதில் ஏதோ ஒருமுக சக்தி நம் இருவரின் பாதையையும் இணைக்கிறது என்று தோன்றுகிறது. என்னுயிரைக் காப்பாற்றிவிட்டீர் நண்பரே, அதனால்..." என்று இழுத்தான்.

"நீரும் என் உயிரைக் காப்பாற்ற வேண்டுமா?"

"இல்லை, இல்லை, ஒரு சம்பிரதாயம் உண்டு. என் வாழ்க்கை முழுவதும் என் காவலுக்கு நீரே பொறுப்பு" என்று சொல்லிச் சிரித்தவன், "நண்பரே! அந்த யானை தப்பி வராதல்லவா?" என்றான்.

சிரித்தார் பொன்னியின் செல்வர். "நன்றாய்ச் சிக்கியிருக்கிறது. அவ்வளவு எளிதில் வெளி வர முடியது. ஏன் இன்னும் பயம்?"

"ஆமாம், பயம்தான். மத்த கஜத்தின் வலிமை யாருக்குத்தான் தெரியாது. புழுவாய்த் துடிக்கத்துடிக்க என்னை நசுக்கியிருக்கும் அந்த மதயானை. அதன் துதிக்கையில் இன்றைக்கு யமனே வந்து உட்கார்ந்திருந்தான். நீர் நிகழ்த்திய மகத்தான வீர சாகசச் செயல்தான் என் உயிரைக் காப்பாற்றியது. நீர் திட்டமிட்டே அந்த யானையைச் சிக்க வைத்தீர். நல்லது. ஆனால், யானையைப் போல எப்படிக் கத்தக் கற்றுக் கொண்டீர்? இந்த யானையை அடக்கும் விவரமெல்லாம் உமக்கு எப்படித் தெரிந்தது?" அவனோ வாள் சுழற்றக் கற்றுக்கொண்டவன், வேல் வீசக்கற்றுக்கொண்டவன் போன்றோரைப் படைகளில் கண்டிருந்தான். இப்படி ஒரு மிருகத்தை அடக்கத் தெரிந்தவர்கள் அரிது.

அதற்குப் பதிலேதும் சொல்லாமல் சிரித்தார் பொன்னியின் செல்வர். அவனோ விடுவதாக இல்லை.

"எந்த நாட்டு ஆள் நீர்?"

"எனக்கென நாடொன்றும் இல்லை!" என்று அவசரமாகப் பதில் சொன்னார் பொன்னியின் செல்வர்.

"எனக்குக் காலனாய் வரவிருந்த யானையை உம்மிடம் திசை திருப்பிக்கொண்டீர். நீர் யாரென்று தெரிந்து கொள்ளலாமா?"

"அதை மட்டும் கேட்காதீர்!" என்றார் பொன்னியின் செல்வர்.

அவன் அதற்கு ஆச்சரியப்படவேயில்லை. அதற்குப் பதிலாகப் பெருமூச்சுவிட்டான். சோழர்களின் அட்டூழியத்தால் இப்படித்



தமிழகம் முழுவதும் எத்தனையோ பேர் சுற்றிக் அலைந்து கொண்டிருக்கிறார்கள் என்று அவனுக்குத் தெரியும். அதில் இவனும் ஒருவன்' என்று நினைத்தான்.

"இப்படி நாதியின்றி நாடின்றிப் பலரையும் அலையவிட்டனர் சோழர்கள். என்ன செய்வது? தமிழகத்தின் தலை யெழுத்து!" என்றான். "போர்க்களத்தில் ஓரமாகக் கிடக்கும் பிணக் குவியல்களைப் பற்றி நினைப்பதில்லை. பிணம் போல உயிருடன் அலையும் ஆயிரமாயிரம் மக்களைப் பற்றியும் நினைப்பதில்லை. புதிதாய்க் கைப்பற்றிய நாட்டில் அவனுக்கு மகுடாபிஷேகம் நடப்பதையே நினைக்கிறான்" என்று புகார் சொன்னான்.

மதுரையில் அடிக்கடி கேட்ட உரையாடல் போலிருந்தன பொன்னியின் செல்வருக்கு.

வந்தவன் பொன்னியின் செல்வருடைய நவயௌவனத் தேகத்தை உற்றுக் கவனித்தான். பொன்னியின் செல்வர் பல போர்களில் கலந்து கொண்டாலும், அவர் மீது எதிரியின் ஆயுதங்களால் எந்தக் காயமும் பட்டதில்லை. இந்திரனின் வஜ்ராயுதம் போலச் சுழலும் அவர் வாள் அமைத்த வியூகத்தை எந்த பாணத்தாலும் இதுவரை துளைக்க முடிந்ததில்லை. அவருடைய பொன்னிற மேனியின் மேல் ஒரு காயமும் ஒரு எதிரியும் செய்ய முடிந்ததில்லை. செய்வோம் என்று வெகு அருகில் வந்தோர் இன்று உயிருடனும் இல்லை. அதனால் அவரைப் பார்த்தால் பல போர்களில் கலந்து கொண்டவர் என்று யூகிக்க முடியாது. ஏன், போர்க்களம் சென்று பார்த்திராதவர் போலத்தான் காட்சிதருவார்.

"அது இருக்கட்டும். நீர் என்ன தொழில் செய்கிறீர்? அதை யாவது சொல்லுங்கள். நல்ல கட்டமைப்பான உடல் உமக்கு. ஆனால், உமது முகத்தில் ஒரு தெளிவு இருக்கிறது. அந்தத் தெளிவு எப்போது வருமென்றால் போரைப் பார்க்காதவன் முகத்தில்தான் வரும்" என்றான்.

பல நாட்களாக முகத்தைக் கண்ணாடியில் பார்க்கவில்லை பொன்னியின் செல்வர். ஆனால், அந்த விவரிப்பு உத்தம சோழருக்கு எல்லாரும் சொல்லுவது என்றறிந்தார். தன் முகத்தில் அப்படியென்ன மாறுதல் ஏற்பட்டிருக்க முடியும் என்று யோசித்தார்.

"யானைப் பாகன்தான் நான்!" என்றார் பொன்னியின் செல்வர்.

"ஆகா! அப்படித்தான் நினைத்தேன். ஒன்று தெரியுமா, எங்கள் எதிரியும் ஒரு யானைப் பாகன்தான்!" என்றான் அவன். மேலும் "போர் யானையையும் சமாளிப்பீரோ?"

"போரென்றால் சுத்தமாகப் பிடிக்காது. காட்டு யானைகளைப் பிடித்துப் பழக்குவது எங்கள் குலத் தொழில்!" என்று அருள்மொழி பதில் சொன்னார். ஆனால், பேச்சைத் தன்னிடமிருந்து திசை திருப்புவது அவசியம் என்று முடிவெடுத்தார்.

" சரியப்பா, உன்னைப் பற்றிச் சொல்" என்றார்.

"பூர்வீகமாய் நான் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவன். என் பெயர் இடும்பன். ஊர்ஊராகப் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது இங்கு வந்து அகப்பட்டுக் கொண்டேன்" என்றான்.

மேலும் அவனைப் பற்றி விளக்கம் தர அவன் உற்சாகத்துடன் முன்வந்தான். "அந்நிய அதிகாரவர்க்கத்துக்கு ஒத்துழைத்துப் பாண் டிய நாட்டில் மக்கள் வாழ்க்கை நடத்துகிறாகள். அதனால் தான் நான் அந்த நாட்டுக்குள் காலடி வைப்பதில்லை. இப்படியொரு வாழ்க்கை நமக்கு அவமானம் என்று கடம்பூரில் வாழ்க்கை நடத் தினேன். பின் அந்த நாடு அழிந்ததைக் கண்டு வெளியேறினேன்."

பொன்னியின் செல்வர் தன்னை அறியாமல் ஒரு நடுக்கம் கொண்டார், 'கடம்பூர் நாடு. ஆகா! அந்த நாட்டுக்கு ராணியாகப் போகிறாள் நான் காதலித்த பெண்!' என்று நினைத்தார்.

மாற்றத்தை கவனித்த இடும்பன், "என்ன ஐயா?" என்றான்.

"ஆகா! இத்தனை நாளாக நீ கடம்பூர் அரண்மனையிலா சேவகம் செய்தாய்?" என்றார் பொன்னியின் செல்வர்.

"நீர் கடம்பூர் சென்றிருக்கிறீரா?" என்றான் இடும்பன்.

'என் இதயத்தைக் கொண்டவளின் இதயம் அங்கே இருக்கிறது!' என்று சொல்ல நினைத்தார் பொன்னியின் செல்வர். ஆனால், "இல்லை" யென்று தலையசைத்தார். ஆனால், பலரைப் போலப் பொன்னியின் செல்வருக்கும் கடம்பூரில் அன்றிரவு என்ன நடந்தது என்பதையறிய ஆர்வம். சோழர் சரித்திரத்தை மாற்றி அமைத்த இரவல்லவா அது?

தெரியாதவர் போலப் பேச்சுக் கொடுத்தார். "ஐயா! கடம்பூர் எரிந்து போனதாமே, எப்படி?"

"ஆதித்தனின் கொலைக்குப் பின்தான் அரண்மனையே எரிந்து போனது. ஒரு நாள் அந்தத் தஞ்சை சிம்மாசனத்தில் ஏற வேண்டியிருக்கும் என்று காத்துக் கிடந்த அரக்கன் மாண்ட பின் கொன்றவனின் தடயங்களை அழிக்கத் தீ வைத்து விட்டனர்" என்றான் இடும்பன்.



'ஆகா! இவனும் அந்தச் சதியில் சம்பந்தப் பட்டிருக்கிறான் என்று தெரிந்து கொள்ள அபாரமான அறிவு வேண்டியதில்லை!' என்று நினைத்துக் கொண்டார் பொன்னியின் செல்வர். சற்று நேரம் திகைத்தார். பிறகு மனதைத் திடப்படுத்திக் கொண்டு பேச்சுக் கொடுத்தார்.

"நீ அப்போது அங்கிருந்தாயா?"

"இருந்தேனா?" குரலைத் தாழ்த்தினான் அவன். "நீர் என் உயிரைக் காப்பாற்றியவர். உம்மிடம் சொல்வதில் தவறில்லை. அந்தக் கொடும்பாவியைக் கொலை செய்ததே நான்தான்!" என்றான். தன் நாவின் வெளிப்பாடுகளைத் தடுக்க முற்பட்டவன் போலத் தோன்றவில்லை. ஏதோ உடைந்த அணை போல விஷயங்களையெல்லாம் கொட்டிக் கொண்டிருந்தான்.

அவன் பேசப் பேசக் குனிந்த தலை நிமிராமல் தரையைப் பார்த்தார் பொன்னியின் செல்வர். இதயம் சுக்கு நூறாய்ச் சிதறி விடும் போலிருந்தது பொன்னியின் செல்வருக்கு. நடுநிசியில் இப்படி ஒரு சம்பவம் நிகழ்ந்து இவர்கள் இருவரையும் ஒன்று சேர்க்க வேண்டுமா?

சற்று நேரம் இடும்பன் எதுவும் பேசாமல் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். பழையதை நினைத்தானோ என்னவோ, ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

பொன்னியின் செல்வருக்கோ, "கடவுளே! அண்ணனுக்குத் தான் எத்தகைய சாவு! தென்னகத்தின் மாபெரும் வீரன் போர்க் களத்தில் எதிரிகளுடன் போராடி வீர மரணம் அடைந்திருக்கக் கூடாதா? இப்படியா அவன் தலையில் எழுதியிருந்தது? பெண் களின் அந்தப்புரத்தில் இருட்டில் கத்திக் குத்துப் பெற்றுச் சாக வேண்டுமா?" என்று மனம் கதறியது.

இடும்பன் சொன்னதையெல்லாம் கேட்டபோது பொன்னியின் செல்வருக்குச் சந்தேகமும் உண்டாயிற்று. 'இல்லை! இவன் பெரும் பொய்யன். அப்படிபட்ட மாவீரனைக் கொன்றவன் இவனாய் இருக்க முடியாது' என்றது ஒரு மனம்.

பின்னர் தீவிரமாக யோசித்தபோது, அவன் வாயிலாகக் கேட்டறிந்த அனைத்தும் உண்மைகள்தாம் என்று யூகித்தார். தன் மரணத்தையே நேரே இன்று இவன் பார்த்திருக்கிறான். பொய் யெல்லாம் வாயில் இன்று வராது. ஆனால், அவ்வளவு கைதேர்ந்த கொலைக்காரனாகத் தெரியவில்லையே. நந்தினி தன் கடமையில்

தவறி விட்டாள் என்று தெரிந்தவுடன் இவன் சென்று கொலை செய்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தார்.

பொன்னியின் செல்வருக்கு அதி வேகமாக மனம் இயங்கியது. அப்போது இவன் சோழரின் எதிரி. ஆகா! நம்முடன் வருபவன் பாண்டிய நாட்டுப் போராளி. இப்போது நம் கடமை யென்ன? அவனைக் கொன்று வைகையில் போடுவதுதானே? நாம் யாரென்று தெரிந்தால் அவனும் அப்படி தானே செய்வான்?

ஆனால், இடும்பனைப் பொறுத்த மட்டில் ஆதித்தனின் மரணம் கொலையே இல்லை. 'போர் இன்னமும் முடியவில்லையே. போரில் கொல்வது கொலையாகுமா?' என்பது போலப் பேசினான்.

''சோழர்கள் பாண்டிய நாட்டில் எத்தனையோ குடும்பங் களைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிவிட்டனர். என்னைப் போல் இன்னும் எவ்வளவோ பேர் உண்டு. அவர்கள் உயிர்த் தியாகம் செய்யவும் பின்வாங்க மாட்டார்கள். சரியான சந்தர்ப்பத்துக்காகக் காத்திருக்கிறோம். தியாகம் செய்ய ஆளிருப்பதால் வீணாகச் செய்யக் கூடாதல்லவா?''

அவ்வார்த்தைகள் பொன்னியின் செல்வருடைய காதில் விழுந்தபோது அவருடைய நெஞ்சம் அடைத்துக் கொண்டது போலேயிருந்தது. 'இந்தப் பாவியின் வாயினால் அதையெல்லாம் கேட்க வேண்டியதாய்ப் போனதே. நான் கொல்ல வேண்டிய வனையே என் கண்ணெதிரில் காட்டி அவன் உயிரை நிச்சய மரணத்திலிருந்து காப்பாற்றி வேடிக்கை பார்க்கிறது விதி' என்று நொந்தார். அந்த இழிசெயலைச் செய்தவனைத் தானே காப்பாற்றி யிருந்தார். கொஞ்ச நாட்களாகவே தன் வாழ்வின் பாதை தன்வசம் இல்லை. விதியின் வசம் தான் என்று பொன்னியின் செல்வர் தெரிந்து கொண்டிருந்தார். இதுவும் விதியின் விளை யாட்டே. இதுவே கடந்தகாலமாய் இருந்தால் ஒருக்காலும் இந்த மனிதன் உயிருடன் சென்றிருக்க முடியாது. எப்படியோ சமாளித்துக் கொண்டு தட்டுத்தடுமாறி முகம் மாறாமல் வைத்துக்கொண்டார்.

ஆனால், பொன்னியின் செல்வரால் இன்னமும் நம்ப முடிய வில்லை. 'வெளித் தோற்றத்துக்குச் சாதாரணமாய் இருக்கும் இவனா உலகின் மாபெரும் வீரரான ஆதித்த கரிகாலனைக் கொன்றது? ஒருவேளை பொதுவாகப் பாண்டியரால் அவனுடைய மரணம் நேர்ந்திருக்குமோ. இவன் வீணாகத் தம்பட்டம் அடித்துக் கொள்கிறானோ?'



மீண்டும் ஒரு பெரு முயற்சி செய்து மனதைத் திடப்படுத்திக் கொண்டார். அவனது கூற்று மெய்யாகத்தானிருக்கவேண்டும். பொய் சொல்ல அவனுக்குக் காரணம் இல்லை. இந்த விஷயத்தை வெளியே சொன்னால் அவன் உயிர் அவனது அல்ல. அப்படித் தெரிந்தும் வெளியே சொல்கிறான் என்றால் தன் மீது வைத்திருக் கும் அன்புக்கும் நன்றிக்கும் அது அறிகுறி எனப் பொன்னியின் செல்வர் தெரிந்து கொண்டார். அவனைப் பழிவாங்க அவர் சித்தமாய் இல்லையென்பதே அவருக்கு ஆச்சரியம்.

இடும்பன் மனம் திறந்தான். ஏதோ மனதில் இருந்த பாரத்தை இறக்கி வைத்துவிட்டுத் தூங்கிவிட்டான். பொன்னியின் செல்வருக்கோ தூக்கம் வரவில்லை. திரும்பிப் பார்த்தார். நல்ல குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான் இடும்பன். தன்னந் தனியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். பொன்னியின் செல் வருக்குத் தூக்கம் வரவில்லை. நள்ளிரவு ஆகியும் தூங்காமல் தவித்திருந்தார். பல கேள்விகள் மனதில் இங்குமங்குமாய்ப் பாய்ந்தோடின.

''நமக்கு என்னவானது? நெஞ்சு உடையும்படியான வேதனை யெல்லாம் எனக்கு வரவில்லையே. இடும்பனைப் பற்றி உலுக்கத் தோன்றவில்லையே. 'என் அண்ணனைக் கொன்றவனாடா நீ ?' என்று கேள்வி கேட்கத் தோன்றவில்லையே. இந்த உணர்ச்சிக ளெல்லாம் ஏன் வரவில்லை? இரவில் வருமோ? அருகில் படுத்திருந்த இவன் தலையில் பாறாங்கல்லைத் தூக்கி எறிய நம் மனம் சொல்லுமோ?'' என்றெல்லாம் குழம்பினார்.

பின்னர் சிரித்தார். தன்னுடைய விதியின் விசித்திர கதியைக் கண்டு சிரித்தார். 'இப்போதுதான் அவன் உயிரைக் காப் பற்றினேன். அதற்குள்ளாக அவனைக் கொன்றால் நன்றாகவா இருக்கும்? விதி தன் விளையாட்டைத் தொடங்கிவிட்டது என்பதில் ஐயமில்லை. உலகில் உள்ள எல்லாரையும் மறந்து தன்னை மட்டும் துரத்தி வருகிறது தன் முழு வேலையாக.'

சரி. கொல்லவேண்டாம். குறட்டைவிட்டுத் தூங்குகிறான். ஆயினும், இவன் தூங்கும் போது கிளம்ப அவர் மனம் இசைய வில்லையே. 'ஏன் இவனிடம் அன்பு ஏற்பட்டுவிட்டதா? இந்தப் பாஷாண்டியினிடம் அன்பா? இல்லையே, இவன் வேஷதாரி யில்லையே. சுயசரிதையையெல்லாம் சொல்லிவிட்டானே. நாம் தானே நம் நிஜ ரூபத்தை மறைக்கும்படி வார்த்தைகள் சொன்னோம்.'

'நம்முடைய ஜன்மத் துவேஷத்துக்குப் பாத்திரமான இடும்பன் காரி இவன்தான். இந்த வேஷ வஞ்சகக்காரனுக்குப் உயிர்ப்பிச்சை அல்லவா கொடுத்தோம்! நம் குலத்தின் ஜன்ம விரோதியல்லவா இவன். அடக்க முடியாத ரௌத்ராகாரமான கோபம் வந்திருக்க வேண்டும். வரவில்லையே?' என்று அடங்காத அதிசயம் அவருக்கு.

மனதிலே ஒன்று இருக்க, நாக்கு எதையோ சொல்கிறது. கடமை ஒன்றை வலியுறுத்த, மனமோ வேறொன்றைச் செய்கிறது. அடுத்துப் படுத்திருப்பவனை இப்போது விஷம் போலத் துவேஷிக்க வேண்டாமா? ஏன் முடியவில்லை? இப்படி முற்றும் துறந்த முனி போலாகி விட்டோமா? எல்லா மாற்றமும் ஒரு பெண் கிடைக்கவில்லை யென்பதாலா?

இதைக் காட்டிலும் இக்கட்டான நிலைமை ஒருவனுக்கு வர முடியாது என்று நினைத்தார் பொன்னியின் செல்வர். பளிங்கு போன்ற தெளிவு ஏற்படும் என்று ஊரைவிட்டு ஓடோடி வந்தால் இவ்விதமெல்லாம் தன் வாழ்க்கையின் சிக்கலான விவகாரங் களிலும் சஞ்சரித்துக் குழம்பித் தன்னைப் பைத்தியம் பிடிக்கும் அளவுக்கு ஆக்கி விட்டனவே!

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபது
## கருவூரார்!

**ச**ந்திர வெளிச்சத்தில் பெரிதுமாய் வற்றத் தொடங்கிவிட்ட வைகையைப் பார்த்தார் பொன்னியின் செல்வர். ஆற்றங் கரையில் ஆழ்ந்த மௌனம் குடி கொண்டிருந்தது. ஆற்றுக்கு அப்பாலிருந்து ஒரு மெல்லிய காற்று தவழ்ந்து வந்து கொண்டிருந்தது.

மாலை முழுவதும் ஓயாமல் நடந்த பொன்னியின் செல் வருக்கோ உறக்கம் வரவில்லை. ஆனால், அருகில் இடும்பன் அயர்ந்து தூங்குகிறான். சற்று முன்னர் நடந்த சம்பவங்களினால் பதைபதைத்துப் போனவன் போல அவனைக் கண்டால் தெரியவில்லை. எப்பேர்ப்பட்ட சம்பவம்! யானையின் காலடியில் யமதர்மனைக் காணவிருந்த அவன் விதி பொன்னியின் செல்வரால் தவிர்க்கப்பட்டது.

தூங்கும் முன் இடும்பன், "என்னிடம் உன் பெயரே சொல்ல வில்லையே?" என்று கேட்டான். ஏற்கெனவே பேச்சு வாக்கில் தன்



பிரதான எதிரியான சோழ இளவரசன் ஒரு யானைப்பாகன் என்று சொல்லியிருந்தான் இடும்பன். அதனால் தன் பெயரை மாற்றித்தான் சொல்ல வேண்டும் என்று பொன்னியின் செல்வர் முடிவெடுத்தார். மனதில் சட்டென வந்த முதல் பெயரைச் சொன்னார்: "பொன்னன், என் பெயர் பொன்னன்" என்றார்.

"பொன்னனா? நல்ல பெயர்!" என்று சொல்லிக் கண்ணை மூடியவன், உடனே குறட்டை விட்டவன்தான். இடும்பன் இன்னும் விழிக்கவில்லை.

அவனுக்கு என்ன? நன்றாய்த் தூங்கலாம். அருகில் இருப்பவன் தன் உயிரைக் காப்பாற்றியவன் என்ற நிம்மதி. வெகு நேரம் பொன்னியின் செல்வருக்குத்தான் தூக்கம் வரவில்லை. தூக்கம் வராத காரணம் அடுத்து இருப்பது ஜன்ம விரோதி என்று தெரிந்ததனால். திக்கற்ற அநாதையைப் போல் மரத்தடியில் புரண்டு புரண்டு படுத்திருக்கிறானே, இந்த இடும்பன்தான் தன் குல எதிரி.

எப்போதெல்லாம் இடும்பன் தூக்கத்தில் புரண்டானோ அப்போதெல்லாம் அவன் முகத்தை உற்றுப் பார்த்தார் பொன்னி யின் செல்வர். 'அந்தக் கொடுமையான காரியத்தைச் செய்தவன் இவனாய் இருக்க முடியுமோ? இல்லை, புளுகுகிறானோ? ஆனால், முகத்தில் கொலைகாரன் என்று களை சொட்டுமா என்ன? ஆதித்தன் கையாண்ட யுத்த தந்திரங்களும், போர்க் களத்தில் முன்னணியில் நின்று நிகழ்த்திய வீரச் செயல்களும், சோழர் வீரர்களுக்கு இணையில்லாத உற்சாகத்தையும் துணிச்சலையும் அளித்தன. பாண்டியருக்குக் கெட்ட கனவாய் அவனிருந்தான். இன்னும் கொஞ்ச நாள் காதல், கத்தரிக்காய் என்று பெண் மோகம் கொள்ளாமல் இருந்திருந்தால் உலகையே ஒரு குடைக்குக் கீழ் கொண்டு வந்திருப்பான் என்பது நிச்சயம். பெண் எனும் பொறி வைத்து அவனைப் பிடித்தார்கள் பாண்டியர். ஆனால், அண்ணனைக் கொன்ற செயலை இவனா செய்தான்?'

இப்படி பலவகைக் கேள்விகள் பொன்னியின் செல்வரைத் தாக்கின.

தூக்கத்தில் நாம் ஏதாவது உளறிவிட்டால் கூட நம்மைக் கொன்று விடுவான் என்ற அச்சம் லேசாக இருந்தது. ஆனால், அதைவிட எல்லாம், 'உன்னைப் பொறுத்தவரை அவன் ஒரு மகாபாவி. ஊழித்தீயைப் போலப் பற்றியெரியவேண்டாமா உன் வயிறு? ஆனால், அவனை ஒன்றும் செய்ய உன் மனமோ கரமோ நடவடிக்கையெடுக்கவில்லையே?' என்பதை அவர் மனம் திரும்பத் திரும்பத் துருவித் துருவிக் கேட்டது.

இன்னும் கொஞ்ச நேரத்தில் கிழக்கு வெளுத்துப் பொழுது புலரத் தொடங்கி விடும். அந்த நேரத்தில் அவனை எழுப்பி முடிவெடுத்தாக வேண்டும். நாளைக் காலையில் புறப்படும்போது வேறு வேறு திசைகளில் கிளம்ப வேண்டும் என்று மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டார் பொன்னியின் செல்வர். இல்லை, என்றால் மனம் மாறி இவனைக் கொன்று விடுவோம் என்று முடிவு செய்த பொன்னியின் செல்வர் தானும் உறங்கி விட்டார்.

இருவருமாய் நன்றாய்ப் படுத்துறங்கி விட்டனர். சூரிய வெப்பம் பட்டவுடன்தான் இருவரும் எழுந்தனர். காலையில் நேரம் ஆக ஆக, சூரியன் வான மார்க்கத்தில் மேலே ஏறியது. மரங்களுக்கு இடையே ஜன்னல் போல் திறந்திருந்த இடை வெளியிலிருந்து வெளிச்சம் வந்தது.

தூக்கத்திலிருந்து ஒரு மாதிரி தெளிந்ததும், சுற்றுப்புறத்தைச் சூரிய வெளிச்சத்தில் சுற்றிப் பார்த்தனர். அது மட்டுமல்ல, ஒருவர் முகத்தைக் கூட ஒருவர் தெளிவாக இப்போதுதான் பார்க்க முடிந்தது. அவர்களைச் சுற்றிலும் காடு சூழ்ந்திருந்தது. பக்கத்தில் ஊர் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஏன், மனித நடமாட்டமே இல்லை.

இரவில் கடைசியாக நினைத்தபடி இப்போதுதான் தீர்க்கமான முடிவுகளை எடுக்க வேண்டும் என்று பொன்னியின் செல்வர் நினைத்துக் கொண்டார். சேர்ந்து போவதா? பிரிந்து செல்வதா? ஆனால், காலை உதயத்துடன் இரு நண்பர்களும் ஒருவரை யொருவர் தழுவிக் கொண்டு விடை பெற்றுக் கொண்டு விடலாம் என்று எண்ணியவருக்கு ஏமாற்றம். பேச்சுக் கொடுத்தவுடனேயே இவனைக் கழற்றி விடுவது என்பது கஷ்டம் எனப் பொன்னியின் செல்வர் அறிந்து கொண்டார்.

பயத்தாலோ நன்றியாலோ பொன்னியின் செல்வரை விட மாட்டேன் என்று சொல்லி விட்டான் அவன். மூச்சுக்கு மூன்று தடவை, ''என் உயிரைக் காப்பாற்றியவரே!'' என்று சொல்லிக் கொண்டாடிக் கொண்டிருந்தான். அவ்வப்போது 'யானையின் பக்கமே நாம் உதவி செய்திருக்கலாமோ?' என்றுகூட யோசித்தார் பொன்னியின் செல்வர்.

இந்த நட்பை, பயங்கரப் பிணைப்பை வளரவிட வேண்டாம் என்ற எண்ணத்தில் பல சமயம், ''நான் உன்னைக் காப்பாற்ற வில்லை. புதருக்குள் ஒளிந்திருக்கும் வனவிலங்குகளின் கைவண்ணம்தான் அது'' என்றார்.



அதற்கு இடும்பனோ, ''நண்பா! நீ அடக்கத்தில் என்ன சொன்னாலும் இப்படித் தந்திரத்தால் மத்த கஜத்தை அநாயாசமாக வீழ்த்தியவன் நீ. வில்லேந்திய வீரர்கள், வாளேந்திய வீரர்க ளெல்லாம் பயம் கொள்ளும் காரியத்தை வெறும் கையினால் முடித்தாய்!'' என்றான்.

''அதெல்லாம் இல்லை ஐயா. வேகமாய் ஓடினேன். வெற்றி யென்றால் அதை என் கால்கள்தான் சாதித்தன!'' என்று அதை வேடிக்கையாய் ஆக்கினார். இப்போது பார்த்துத் தனித்தனி வழியாய்ப் பிரிந்து போக வேண்டும் என்று சொன்னால் அழுதே விடுவான் இடும்பன். சரி, சற்று நேரம் சேர்ந்தே செல்லுவோம் என்று முடிவெடுத்தார்.

இரவில் ஓடி வந்தபோது திக்கற்றுத் திசைமறந்து நடந்து விட்டனர். அதனால் சிறிது நேரம் அப்படியும் இப்படியுமாய் சுற்றுப் பார்த்த பிறகு எந்தப் பக்கம் போகலாம் என்ற எண்ணத்தில் விரும்பிய இடும்பன், பக்கத்தில் நின்ற பொன்னனைப் பார்த்தான். ஆனால், பொன்னியின் செல்வனோ பூமியை நோக்கவில்லை. வானத்தை நோக்கிக் கொண்டிருந்தார். ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். அப்போது இடும்பனுக்கு ஒரு விசித்திரமான சப்தம் கேட்டது. ஒரு தொண்டையில் இருந்து வந்த குரல் அல்ல. ஒன்று சேர்ந்த ஆயிரமாயிரம் குரல்கள்.

திடீரென வானத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அதுவரை ஏறு முகமாய் இருந்த சூரிய வெளிச்சம் பளிச்சென்று இருந்தது. இப்போது திடீரென இருளாக மாறியது. அந்த மாறுதல் ஏன் ஏற்பட்டதென்பதை அருள் மொழிவர்மன் உடனே ஊகித்து உணரமுடியவில்லை. ''சூரிய ஒளியை மறைக்கும் அளவுக்கு அம்புகள் மஹாபாரதத்தில் பறக்கக் கேள்விப் பட்டிருக்கிறேன். இது என்ன, காகக் கூட்டம் போலொன்று வானக் கூரையையே மறைக்கின்றதே!'' என்று வியந்தார்.

இடும்பனும் வானத்தை நோக்கித் திரும்பினால், காகங்கள். ஆயிரமாயிரம் காகங்கள். வானையே கருமையாக்கிய பயங்கர மான கரும் பூதத்தைப்போல் ஆகாசத்தை ஆக்கிரமித்தன அந்தக் காகங்கள். ஏக காலத்தில் கரகரப்பான கத்தல் ஓசைகள் அவற்றின் வாயிலிருந்து வெளியாயின.

மேலும் சில நிமிஷ நேரம் அங்கேயே நின்று அந்தக் காட்சியை அடங்காத ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். காகங்கள் பறப்பது சூறாவளியை நினைவு படுத்தியது. காகங்கள் ஏன்

ஓரிடத்தில் சுற்றுகின்றன? சடலம் கிடந்தால் முதலில் கழுகுகள் வந்து வட்டமிடும். அங்கு காகங்களுக்கு இடமே இல்லை. பொது வாகக் கூட்டத்தைச் சேர்ந்த பறவையொன்று அடிபட்டிருந்தாலோ இறந்து கிடந்தாலோதான் காகங்கள் இப்படிச் செய்யும். எனினும் அந்தக் கூட்டத்தில் அதிகபட்சமாக முப்பது நாற்பது பறவைகள் தானிருக்கும். ஆனால், இங்கிருந்ததோ பல ஆயிரம் பறவைகள்.

காகங்களின் வேகமோ அடங்கவில்லை. அதையே வெகு நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆற்றின் மேல் காகங் களின் வேகம் அதிகமாகிக் கொண்டிருந்தது. பல பறவைகள் கரையோரத் தென்னை மரங்கள் மேல் அமர்ந்ததால் அந்த மரங்களும் கரிய நிறமேற்றுப் பேய் பிசாசுகளைப் போல் பயங்கர மான ஆடின.

வானில் காகக் கூட்டம் கரிய வட்டம் அமைத்தாற்போலச் சுற்றிச் சுற்றிப் பறந்தது. அவை கரைந்தது காட்டில் பெரும் சப்தத்தை எழுப்பின. அந்தக் காகக் கூட்டத்தில் ஏதோ கவர்ச்சி இருந்தது. முக்கியமாக அந்த வட்டத்தின் மையத்தில் கீழே என்னயிருக்கிறது என்று பார்க்க ஆர்வம். அது என்னதான் என்று பார்த்துவிடவேண்டும் என்று அந்தத் திசையில் பயணித்தார்கள்.

பாதையில் இட நெருக்கடியுடன் நடந்தார்கள். ஆங்காங்கு நின்று அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டு ஜாக்கிரதையாகச் சென்றார்கள். ஏனென்றால் இருபுறமும் இருந்த செடி கொடிகளி லெல்லாம் ஆயிரமாயிரம் காகங்கள் அவர்களை முறைத்துப் பார்த்தன. ஆனால், ஒன்றும் செய்யவில்லை.

அம்மம்மா! கணக்கிட முடியாத ஈக்கள் மொய்ப்பது போல இவ்விடத்தை ஆக்கிரமித்தன காகங்கள். மரங்களில் இலைகளே தெரியாத அளவுக்குக் கருமை. தரையிலும் அவ்வளவு காகங்கள். அருகில் வேறெந்த ஜீவராசிகளுமே இல்லை என சொல்லும் அளவுக்குக் காகங்கள். "எல்லாமாய்ச் சேர்ந்து கொத்தத் தொடங்கினால் என்னவாகும்? நேற்றுத்தான் யானையிடம் தப்பினோம்" என்ற எண்ணமிருந்தது இடும்பனுக்கு.

நடந்த இருவருக்கும் மேல் வானத்தில் காகங்கள் இரைச்சல் போட்டுத் தங்கள் வரவை யாருக்கோ அறிவுறுத்திக்கொண் டிருந்தன எனப் புரிந்தது. காட்டில் ஒரு திறந்த வெளிக்கு வந்துவிட்டனர். அங்கோ திடீரெனக் காகங்களின் எண்ணிக்கை கூடியது போலிருந்தது. ஆனால், எல்லாம் அமைதியாய் அமர்ந் திருந்தன. ஒரு குகை போல இருளை ஏற்படுத்தியிருந்தன காகங்கள். மேகமொன்று பூமிக்கு இறங்கி வந்தது போலச் சுற்றிக்



கருமையாயிருந்த இடத்துக்குள் இருவருமாய் நுழைந்தனர். ஸ்தம்பித்து நின்றனர். என்னவொரு விசித்திரமான காட்சி!

ஒரு மரத்தடியில் ஒரு திண்ணை போல இருந்தது. அதில் ஒரு காலைத் தொங்கப்போட்டுக்கொண்டு இன்னும் ஒரு காலை மடித்தபடி ஒரு துறவி அமர்ந்திருந்தார். வந்த இருவருடைய வயது தானிருக்கும். கரு கரு என்ற அவர் முடி முகமெங்கும். மார்பு வரை தாடி. தலை முடியோ சடை சடையாய்த் தொங்கியது. அந்த பெரியவரைச் சுற்றி ஆயிரமாயிரம் காகங்கள்.

ஆனால், முக்கியமாக அந்த இருளிலும் ஜொலித்தன அவரது வைரம் போன்ற கண்கள். இல்லை, இல்லை. தீப் பிழம்புகள் போன்ற கண்கள். கண்களைக் கண்ட பொன்னியின் செல்வ ருக்குத் திடீரென்று உடல் ஓய்ந்து தரையில் உட்கார வேண்டும் போலிருந்தது. அவரது மனதுக்குப் பின் ஒரு சிறிய எச்சரிக்கை. தந்திர மந்திரங்களைத் தெரிந்தவர் பலர். அவர்களது சூழ்ச்சித் திறன்களைக் கண்டு மயங்கக்கூடாது. கண்ணெதிரே இந்திர ஜாலமோ மகேந்திர ஜாலமோ என்று சொல்லும்படியாக நடந்து கொண்டிருந்தது.

ஆனால், அந்த எச்சரிக்கையை மீறியும் மீண்டும் மீண்டும் பார்க்கத் தோன்றியது அந்தத் துறவியின் கண்களை. கண்கள் இரண்டும் கோமேதக வர்ண நட்சத்திரமோ என்று நினைக்கும் அளவுக்கு மின்னின. தன்னைப் பரிவுடன் அவர் பார்வை அழைக்கிறது என்று அறிந்து கொண்டார்.

பொன்னியின் செல்வருடைய இருதயம் "படபட" வென்று அடித்துக் கொண்டது. அதிசயமும் அவநம்பிக்கையும் ஒன்றோ டொன்று போட்டியிட்டுக் கொண்டு அவர் உள்ளத்தில் கொந் தளித்தன. சிறந்த தவ வல்லமை யுள்ளவர்களின் சிருஷ்டி விசித்திரங்களில் ஒன்றாய் விளங்குவது இதுவா? இல்லை, இல்லை. அவர் கண்களைப் பார்த்தவுடன் தெரிந்தது - அவர் புண்ணிய புருஷர் என்று. கடுமையான தவ விரத அனுஷ்டானங்களில் ஈடுபட்ட முனிவர். பக்தியில் ஈடுபட்டுப் பெரும்பாலும் யோகத் திலும் தியானத்திலும் பூஜையிலும் காலம் கழித்ததால்தான் அந்த யோகியின் முகத்தில் ஒரு தேஜஸ் வந்துவிட்டது.

சற்று நேரம் ஞானியைக் கண்டதும், கண்கள் அவரை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தரையை நோக்கின. அவர் சாதாரண மானிடன் அல்ல, தெய்வாம்சம் உடையவர் என்ற எண்ணம் முதன் முதலில் பார்க்கும் போதே வந்திருந்தது. மதிப்பும் மரியாதையும்

உள்ளத்தில் தோன்றியிருந்தது. ஆனால், அந்த உள்ளக் கிளர்ச்சியெல்லாம் இடும்பனுக்கு இல்லை.

யோகி சில சமிக்ஞைகள் செய்ததும் அந்தக் காகக் கூட்டம் ஒரு சப்தமுமின்றி வெளியேறியது. சப்தமென்றால் வாயிலிருந்துதான் வரவில்லை. சர்வ அடக்கமாய்ச் சென்ற அந்தப் பறவைகள் அடித்த சிறகுகளில் புயல் அடித்தாற்போல் ஓர் அதிர்வு. புழுதி பறந்தது. சிறு சிறு பஞ்சு போன்ற சிறகுகள் காற்றில் மிதந்தன. சிறிது நேரம் அந்தச் சித்தரைச் சுற்றி ஒரே அல்லோலகல்லோலமாயிருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு அமைதி ஏற்பட்டது. எல்லாக் காகங்களும் தனக்கென ஒரு மரக் கிளையையோ, பாறையையோ, தரையில் ஓரிடத்தையோ தேர்ந்தெடுத்து அமர்ந்து விட்டன. எதுவுமே வாயைத் திறக்கவில்லை.

மீண்டும் இருவரும் துறவியைப் பார்த்தார்கள். பொன்னியின் செல்வருக்கு அவர் முகம் நன்றாய்ப் பழக்கப்பட்டதாகத் தோன்றினாலும் எப்போது இவருடன் பழகியிருக்கிறோம் என்பது மட்டும் தெளிவாகவில்லை. அவர் முகம் சாந்தமாக இருந்தது. அவ்வப்போது சிரிப்பும் சில நேரம் சோகமும் அவர் முகத்தில் மாறிமாறிப் படையெடுத்தன - தூக்கத்தில் இன்பக் கனவுகள் கண்டபோது முகத்தில் புன்னகை மலர்வதும் சில சமயம் பயங்கரமான கனவுகள் வரும் போது அச்சம் வருவதும் போல.

இருவரையும் பார்த்துச் சிரித்தார். புன்னகை பூத்த அவருடைய இதழ்களின் செந்நிறமும் பற்களின் வெண்ணிறமும் அவர் கரும் தாடிக்கு நடுவே தெரிந்தது. ''இடும்பா! பொன்னா! வாருங்கள். அப்பா! வந்தீர்களா? உங்களுக்காகக் காத்திருந்து காத்திருந்து, போதும் போதும் என்று ஆகிவிட்டது. ஏன் இவ்வளவு தாமதம்?'' என்றார்.

''ஆகா! துறவி யூகித்து விட்டார் தன் பெயரை'' என்று நினைத்தான் இடும்பன். ஆனால், பொன்னியின் செல்வருக்கோ, தான் தனக்குப் போன இரவு சூட்டிக் கொண்ட பொன்னன் என்ற புதுப் பெயரை இவர் எப்படிக் கண்டு பிடித்தார் என்று ஆச்சரியம். சித்தர்களின் அதி அற்புதச் சாமர்த்தியங்களைப் பற்றி ஏற்கெனவே பொன்னியின் செல்வர் கேள்விப்பட்டிருந்தார். அனுபவிப்பது இப்போதுதான்.

பொன்னியின் செல்வருக்கு அவர் உண்மையில் தனக்காகக் காத்திருந்தார் என்று தெரிந்தது. தாம் வருமுன்பே வருவோம் என்று அவர் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டிருந்தார். அவர் இருதயத்தை ஊடுருவி உள்ளிருக்கும் விஷயமெல்லாம் தெரிந்து



கொண்டார் போல. ஏதோ அவர் முன்னே நிற்கும் போது உடையின்றி நிற்பது போலொரு பிரமை. ஆனால், ஒன்று. அவர் இருதயத்தில் அதுவரை அறிந்திராத நிம்மதி உண்டானது.

யோகி இருவரையும் கண்டு சிரித்தார். சிரித்ததோடல்லாமல் அருகில் வரும்படி அழைத்தார். ''இருவருமாய்ச் சேர்ந்து வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஐயா! நாங்கள் வழியில் சந்தித்தோம்'' என்றான் இடும்பன் காரி. அவர் முன் பேசும்போது அவனுடைய குரல் தழுதழுத்தது. முரட்டு ஆசாமியான இடும்பனுக்குக் கூடப் பக்தி வந்தது அவர் முன்.

துறவி வாய்விட்டுச் சிரித்தார். ''வழிப்போக்கர் போலச் சந்தித்து வந்தீரா?'' என்று கேட்டுவிட்டு விழுந்து விழுந்து சிரித்தார்.

பொன்னியின் செல்வருக்குப் பதற்றம். 'சுவாமிகளுக்கு அந்த இரகசியம் தெரிந்து போய்விட்டது. நேற்றுதான் நமக்கே புலனானது. அதற்குள் அவருக்குப் பூரணமாகப் புரிந்திருக்கிறதே! அவர் இதற்கும் மேல் பேசினாலோ, அர்த்தம் கொண்ட ஜாடைமாடைப் பேச்சுகள் செய்தாலோ உண்மை வெளியாகிவிடும். குட்டு வெளிப்பட்டுவிடும்' என்று நினைத்த அவருக்கு உயிரே நின்றுவிடும் போலிருந்தது.

ஆனால், அவர் அதைத் தொடரவில்லை. ''இருந்துவிட்டுச் செல்லுங்கள்'' என்றார். அதிகாரத் தொனியுடைய கடினமான குரல் போன்று இருந்தாலும் அன்புக் கட்டளை என்றும் அதை எடுத்துக் கொள்ளலாம்.

இருவருக்குமே அங்கே இருக்க வேண்டும் என்று தோன்றியது. நேற்று நடந்த சம்பவம் இடும்பனைக் குலுக்கியிருந்தது. அதற்கும் இதற்கும் ஏதோ சம்பந்தம் இருக்குமோ என்று தோன்றியது அவனுக்கு. அவர் முன் உருகிக் குழைந்தான் இடும்பன். பொதுவாகச் சோம்பித் திரியும் ஆண்டிகள், பிக்ஷுக்கள், காவித்துணி தரித்த சந்நியாசிகள், மண்டை ஓட்டு மாலை அணிந்த காபாலிகர்கள் இவர்களையெல்லாம் கண்டாலே அவனுக்கு ஆகாது.

'நாட்டில் இவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன. இதில் கடவுளைத் தேடு, கைலாயத்தை நேசி என்று உபதேசம் வேறு!' என்கிற கோபம். ஆனால், இன்று இது வேறு விதமான அனுபவம் என்று தெரிந்து கொண்டான்.

பொன்னியின் செல்வருக்கோ 'இவரது அழைப்பு நம்முடைய நோக்கத்துக்கு அனுசரணையாகவே இருக்கிறது. ஈழத்துக்குப் போக வேண்டும் என்று என்ன வேண்டுதலா?' என்று தோன்றியது.

பார்த்ததும் யார் யாரென்று புரிந்தவருக்கு அவனுடைய துர்பாக்கியம் இத்தகையது என்றும் தெரிந்தும் இருக்கும். அந்த மகானின் முகத்தில் கருணையும் அன்பும் நிறைந்து ததும்பியதைக் கண்டான். கூரிய அறிவின் ஒளியும் அவர் கண்களில் வீசியது. 'இந்தச் சித்தரிடம் இருந்து நம்மைப் பற்றி எதையாவது கற்றுக் கொள்ள முடிகிறதா என்று பார்ப்போம் என்று முடிவெடுத்தார் பொன்னியின் செல்வர்.

ஆனால், இருவரும் ஒப்புக்கொள்வார்கள் என்று ஞான திருஷ்டியில் தெரிந்து கொண்ட சித்தர், பதிலுக்கு எதிர்பாராமல் காட்டுக்குள் நடந்தார்.

மாயக் கயிற்றில் கட்டுண்டவர் போல இருவரும் சித்தரைப் பின் தொடர்ந்தனர்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்தொன்று
## சித்தருடைய சீடர்கள்

யோகி, ''வாருங்கள்!'' என்று அழைத்தவுடன், இருவரும் பேசாமல் அவரைப் பின் தொடர்ந்தார்கள். அவர்களும் மேற் கொண்டு என்ன செய்வது என்று ஒரு கணமும் யோசிக்கவில்லை. அவர் கேட்டவுடன் சற்று நிதானித்து யோசிக்க நேரமும் இல்லை. வேற்று யோசனைகளும் இல்லை என்பதால் அவர் பின்னால் நடந்தனர்.

மூவரும் வைகைக் கரையோரக் காட்டுக்குள் புகுந்ததை இரு புறமும் ஆயிரமாயிரம் காகங்கள் உற்றுப் பார்த்தபடி மரத்தில் அமர்ந்திருந்தன. ''தாங்கள் வரும் செய்தியை முன்பே சென்று காகக் கூட்டம் அவரிடம் சொல்லி விட்டதோ?'' என்ற சந்தேகம் பொன்னியின் செல்வருக்கு.

யோகியோ திரும்பாமல் சென்றார். புதியவர்கள் பின்னால் வருகிறார்களா என்றுகூட உறுதிப்படுத்திக் கொள்ளவில்லை. ''யோகிக்கு நம்மிடம் என்ன வேலை? நமக்காக வெகு நேரம் காத் திருந்தேன் என்று சொன்னாரே? எதற்காக?'' என்ற சந்தேகங்கள் மனதை நிறைத்தன.



யோகி இவர்களிடம் என்ன எதிர் பார்க்கிறார் என்று தெரியாத போதும், சம்பவங்களின் கோர்வை ஒரு விதத்தில் பொன்னியின் செல்வருக்குப் பிடித்திருந்தது. விதியின் வசத்தில் விட்டால் தின மொரு அனுபவம் நிகழும் போல. சுவாரசியமாய்த் தானிருந்தது.

வைகையாற்றையொட்டி இருந்த மரங்களைத் தாண்டினார்கள். திடீரென ஒரு அழகான கோயில் கண்களுக்கு தெரிந்தது. கோயிலுக்கு நல்ல ராஜகோபுரம் இருந்தது. ஆனால், வர்ணமடித்து நாட்களாயிருந்தது. கோயிலின் மதில் மேல் நந்திகளின் உருவங்கள் வரிசையாய் ஏக திசையில் பார்த்தபடி அமர்ந்திருந்தன. ஆகையால், அது சிவன் கோயிலாய்த்தான் இருக்க வேண்டும் என்று யூகித்தனர். கோயிலுக்குச் சற்று அப்பால் மாட மாளிகைகள் தெரிந்தன. ஆனால், கோயிலுக்கு முன் மனித நடமாட்டமே இல்லை. வெறும் காடுதான். மற்ற ஊர்கள் போலக் கோயில் ஊருக்கு நடுவே இல்லை. ஓர் ஓரத்தில் இருந்தது.

''கோயிலுக்குள்தான் இவர் ஜாகையோ?'' என்று நினைத்தனர் இருவரும். ஆனால், இவர்களுக்கு அவ்விடத்தைக் காட்டும் பொருட்டே யோகி அங்கு சென்றார் போலும். கோயில் அருகே சென்ற யோகி திரும்பி, ''இதுதான் பூவனம்'' என்றார்.

இருவருக்கும் உடனே புரிந்துவிட்டது. மதுரையிலிருந்து சேதுவுக்குச் செல்லும் வழியில் வைகை ஓரிடத்தில் வடக்கு நோக்கிப் பாய்வாள். உத்திரவாஹினியான வைகைக் கரையில் இருந்த பூவனம் வட காசிக்குச் சமமானது என்று இருவருக்கும் தெரியும். அருள் மொழிக்கு இன்னமும் தெரியும். சமயக்குரவர் பாடிய இடம் இது எனத் தெரியும்.

ஆனால், எதிர்பார்த்தபடி யோகி கோயிலுக்குள் நுழைய வில்லை. வாசலுக்கு நேரே வந்து, ''ஓம் நமசிவாய'' என்று மூன்று முறை கத்தினார். ஏதோ வெங்கல மணி அடித்தாற் போலிருந்தது யோகியின் குரல். அவரது குரலைக் கேட்டு மெய் சிலிர்த்தது இருவருக்கும். அதைப் போலவே கோயிலுக்குள் கோசாலையில் கட்டியிருந்த மாடுகளும் அதை ஆமோதித்தன. சற்று நேரம் ஒரே சப்தம் தான்.கோயில் குருக்களும் வெளியே ஓடோடி வந்தார்.

சித்தர் முன் மண்டியிட்டுத்தான் விழவில்லை பட்டர். அவ்வளவு குனிந்து வாய் பொத்தி நின்றார் யோகிக்கு முன்.

புதியவர்களைச் சுட்டிக்காட்டும் எண்ணத்துடன், திரும்பி இருவரையும் பார்த்தார் யோகி. ''இவர்கள் என்னுடன் சில நாள் இருப்பார்கள். இவர்களுக்குத் தவறாமல் கோயில் பிரசாதம் கொடுக்க வேண்டும்'' என்றார்.

சரியெனப் பட்டரும் தலையாட்டினார். யோகியின் மனநிலை யில் திரை சற்று அகன்றது இருவருக்கும். "ஆகா! நம்மை அவருடன் சில நாள் இருக்கச் சொல்கிறார்" என்று புரிந்தது.

பின் யோகி கோயிலுக்குக் கிழக்கே நகர்ந்தார். மரங்களுக்கு இடையில் புகுந்தார். அங்கு காட்டுக்கு நடுவே இருந்தது ஒரு சுத்தமான இடம். அவ்விடத்தில் பூக்கள் பூத்துக் குலுங்கின. பூவனம் என்று அவர் பெயரைச் சொன்னவுடன் இவ்விடத்துக்கு என்னவொரு பொருத்தமான பெயர் என்று இருவருக்கும் தோன்றியது.

எல்லா நிறங்களிலும் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கின. வைகைக் குளங்களிலும் சரி, கோயில் குளத்திலும் சரி, வட்ட வடிவத் தாமரை அல்லி இலைகள் தங்கள் இடத்தைத் தக்க வைத்துக் கொள்ளத் தடுமாறின. தாமரை மலர்கள் இலைகளுடன் ஒத்து வாழ மறுத்து, அவற்றின் மேலே தலைதூக்கி இதழ் விரித்திருந்தன.

தலைக்கு மேல் பார்த்தால் பொன் நிறத்தில் சரம் சரமாய்க் கொன்றை மலர்கள். தன் காதலி கங்கையைப் போல மேலிருந்து கீழாகப் பாய்வதால் அவற்றைச் சிவனுக்குப் பிடிக்குமோ என்று நினைக்கத் தோன்றியது. அனைத்து மரம் செடி கொடிகளின் அடிப் பகுதியிலும் அந்தந்த மலர்களின் கம்பளம் ஒன்று விரிக்கப் பட்டிருந்தது - வட்டமாக.

தஞ்சை என்றால் பரவாயில்லை. ஆண்டு முழுவதும் ஆறுகளி லும், குளங்களிலும், குட்டைகளிலும் தண்ணீர் நிறைந்து ததும்பி ஓடும். பாண்டிய நாட்டில் ஜலத்தைப் பார்ப்பதே அரிது. அப்படி யிருக்கையில் இந்த இடத்தில் இப்படி இயற்கை வளமை கொண்டிருக்கிறாளே! எப்படி? இறையருளா? இல்லை, இந்த யோகியை இயற்கைத் தாய் வாழ்த்தி வணங்குகிறாளா?

'காகங்களே இப்படி இவர் முன் சரணடையும்போது இயற்கை எல்லா விதங்களிலும் அவர்முன் ஆடுவாள்தானே' எனத் தோன்றியது.

அவர் அங்கு தங்கக்கூடிய ஒரு குடிலை எதிர்பார்த்த பொன்னி யின் செல்வருக்கு ஏமாற்றம். அப்படியொன்றும் இல்லை. வெய்யிலோ மழையோ அவரைப் பாதிக்காது என்று இருவரும் அதற்குள் தெரிந்து வைத்திருந்தனர். ஆனால், தங்களைப் பாதிக் குமே என்ற வருத்தமும் இருந்தது. ஆனால், இந்த இடத்தில் மனித நடமாட்டம் அதிகமாகவே இருந்தது போலொரு எண்ணம் பலரும் இவரைக் காண வருவார்கள் என்று யூகித்தனர்.



யோகிக்கு வந்த வேலை முடிந்தது போல. அதற்கு மேல் ஒன்றும் சொல்லாமல் யோகி ஒரு மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்யத் தொடங்கிவிட்டார். மேலே என்ன செய்வதென்று இருவருக்கும் தெரியவில்லை. சற்று நேரம் யோகி கண் திறப்பார் என்று நினைத்துக் காத்திருந்தனர். ஆனால், கண் திறக்கவில்லை.

யோகியைக் கண்டதிலிருந்து இருவரும் நெடுநேரமாய்க் கலந்துரையாடவேயில்லை. முதல் முறையாக இருவரும் வார்த்தை களைப் பரிமாறிக் கொண்டார்கள். "நாமாய் எடுத்துப் போட்டுத் தான் வேலை செய்ய வேண்டும் போலிருக்கிறது" என்றார் அருள் மொழி.

முதலில் இருவருமாக யோகியைச் சுற்றியிருந்த இடத்தைச் சுத்தம் செய்தனர். மரத்திலிருந்து விழுந்த இலைகளையெல்லாம் எடுத்துக் குவித்து வைகை ஆற்றின் காய்ந்த பகுதியில் தீ மூட்டினான் இடும்பன். அருகில் இருந்த பானைகளில் நீர் எடுக்க ஆற்றுக்குச் சென்றார் பொன்னியின் செல்வர். இருவரின் சேவை களையும் மௌனமாய் மேற்பார்த்தன ஆயிரம் ஆயிரம் காகங்கள்.

முடிந்தவரை வேலைகளைச் செய்து விட்டுக் களைப்பைப் போக்க யோகியின் முன் இருவரும் அமர்ந்தனர். மதியம் கோயிலில் மணி அடித்தது. அதற்கும் சித்தர் முகத்தில் ஓர் அசைவு கூட இல்லை. மதியம் உணவருந்தும் வேளை வந்த போது கோயில் பட்டர் கோயிலைப் பூட்டிவிட்டு அவர்களைத் தேடி வந்தார்.

பட்டருக்குச் சுற்றுப்புறத்தைக் கண்டு ஆனந்த அதிர்ச்சி. "ஆகா! பிரமாதமாக வேலை செய்திருக்கிறீர்கள். ஒரு நாள் என் கோயிலையும் வந்து சுத்தப் படுத்த வேண்டும். நான் ஒருவனாக முடிவதில்லை" என்றார்.

"ஏன் ஊரிலிருந்து உதவிகள் இல்லையா? பெரிய மாட மாளிகைகளாகத் திகழ்கின்றதே திருப்பூவனம்?" என்றார் பொன்னியின் செல்வர்.

"இல்லையப்பா. ஊரே காலியாயிருக்கிறது. திருப்பூவனத்தில் எல்லாரும் வீட்டைப் பூட்டிவிட்டுச் சென்று விட்டனர். வீட்டுக்கு ஒரு காவலாளி. அவ்வளவுதான்."

"சோழர் படையெடுப்புக்கு அப்புறம் சிறு ஊர்களெல்லாம் செத்தே போய்விட்டன!" என்றான் இடும்பன். "பூவனமும் அப்படியொன்று."

" பின்னர் கோயிலுக்கு யாரும் வருவதில்லையா?"

"வருவார்கள். அவ்வப்போது அலையெனத் திரண்டு வருவார்கள்" என்றார் பட்டர் மர்மமாக.

பட்டர் கோயில் பிரசாதத்தைக் கொண்டு வந்திருந்தார். பொன்னியின் செல்வரிடம் கோயில் மடப்பள்ளியிலிருந்து வந்த சம்பாச் சாதத்தைக் கொடுத்தார் பட்டர். இரண்டு பொட்டலங்கள்தான் இருந்தன.

''சுவாமிக்கு?'' என்று கேட்டார் பொன்னியின் செல்வர்.

ஏதோ பெரும் அபசாரம் செய்தது போல் பட்டர் பொன்னியின் செல்வரை முறைத்தார். ''அவர் சித்தர். நம்மைப் போலெல்லாம் இரு வேளைகள் சாப்பிட மாட்டார். இதுவரை நான் கொடுத்த எதையும் அவர் எடுத்துக் கொண்டதில்லை'' என்றார் பட்டர்.

''ஆனால், பல நாள் நான் பார்த்திருக்கிறேன். பிரமையா என்று தெரியவில்லை. காகங்கள் கொண்டு வந்து அவர் காலடியில் உணவைப் போடுகின்றன. மாமிசம் கூடக் கொண்டு வந்து போடும். அதைக்கூட ரசித்துச் சாப்பிடுவார். போகும் போக்கில் விட்டால் நித்தநித்தம் அவையே அவருக்கு ஊட்டிவிடும் போலும். அப்பா! அவற்றின் தொல்லை தாங்கவில்லை!'' என்று குற்றம் சாட்டினார். ''யாரையும் அருகே விடாது. உம்மை விட்டதே அதிசயம்!'' என்றார். தான் கொடுத்ததை ஏற்காமல் காகங்கள் கொடுப்பதை அவர் உண்ணுவது கோபம் போல, பட்டருக்கு.

''சரி, பட்டரே. இவர் யார்?'' ரிஷி மூலம் நதி மூலம் பார்க்கக் கூடாது என்று தெரிந்தே கேட்டார் பொன்னியின் செல்வர். ஆனால், இருவருக்கும் இடையே ஏதோ பந்தம் இருக்கிறது என்கிற உணர்வு. 'தனக்காகக் காத்திருந்தேன்' என்று சொன்னாரே.

''இவர்தான் கருவூர்ச் சித்தர். சேர நாட்டுக் கருவூரிலிருந்து வந்திருக்கிறார். அருமையாகப் பதிகம் பாடுவார். தீராத நோய்களைக் குணப்படுத்துவார். சிவபெருமானின் பெருமைகளை உபதேசம் செய்வார். இவரே சர்வ கஷ்டங்களுக்கும் நிவாரணி!'' என்றார் பட்டர்.

அந்தக் கோயிலுக்குள் சாமி தரிசனம் செய்வதற்காக வருவோர் எல்லாரும் இவரைக் காணவே வருகிறார்கள். தேவார மூவர் பாடியிருந்தாலும் இப்போது இவரால்தான் இந்தக் கோயிலுக்கு மகிமை என்று பட்டர் சொல்லி இருவரும் தெரிந்து கொண்டனர்.

மேலும் ''தம்பி, வியாழக் கிழமை மட்டும் பலரும் வைத்தியம் பார்க்க வருவார்கள். சில நாள் கூட்டம் அதிகமாக இருக்கும்'' என்று சொல்லி விட்டு ''மற்ற நாட்களில் கருவூரார் கோயிலுக்கு மாலையில் வந்துவிடுவார். நீங்களும் வாருங்கள்'' என்ற பட்டர் பின்னர் ஓய்வெடுக்கப் புறப்பட்டர்.



''நீங்களும் படுத்துறங்குங்கள். மாலையில் வேலையிருக்கும்'' என்று சொல்லிச் சென்றார்.

பட்டர் சொல்வதற்காக சித்தருக்கு உணவு கொடுக்காமல் இருக்கக் கூடாதென்று பொன்னியின் செல்வர் உணவில் ஒரு பங்கைக் கண் மூடிய சித்தர் முன் படைக்க எண்ணி எடுத்துச் சென்றார். அப்போது திடீரென மரத்தின் மேலிருந்து காகம் ஒன்று பட படவென்று சிறகடித்து வந்து அந்த உணவைத் தரையில் தட்டிவிட்டது. அதன் சிறகு அடித்த வேகத்தில் அவர் கையில் சிராய்ப்புகள் ஏற்பட்டன. சப்தம் கேட்டுத் திடீரென யோகியின் விழிகள் திறந்தன. அவர் நீட்டிய உணவு தரையில் கிடந்ததைப் பார்த்து விட்டுக் கலீரென்றுச் சிரித்தார்.

நடந்ததைப் புரிந்து கொண்டார். இது பல முறை ஏற்கெனவே நடந்ததுதான் போல. ''பொன்னா! எனக்கு வேண்டாம். நீயும் இடும்பனும் பசியாற்றிக் கொள்ளுங்கள். எனக்கு எப்போதாவது நான் பசியெடுக்கும். அப்போது இந்தக் காகங்கள் வயற்காட்டில் திருடி வந்து என் முன் எதையாவது போடும். அதுவே எனக்கு உணவு'' என்றார்.

தவத்தில் இருந்தவரை எழுப்பிவிட்டார் பொன்னியின் செல்வர் என்ற கோபம் சுற்றியிருந்த காகங்களுக்கு. பொன்னியின் செல்வரைப் பார்த்து முறைத்துக் கொண்டே நெருங்கி நெருங்கி வந்தன.

''ஷூ, ஷூ, போ, போ!'' என்று கருவூரார் விரட்டினார். காகங்களெல்லாம் அவர் பேச்சுக்குக் கட்டுப்பட்டுத் தள்ளிச் சென்றன.

சித்தர் காகங்களைப் பற்றிப் பேசினார். ''இவற்றுக்கு உள்ள திமிர் வேறெதுக்கும் இல்லை. ஏன் இந்தத் திமிர் தெரியுமா?''

''தெரியாது'' எனத் தலையாட்டினார் பொன்னியின் செல்வர்.

''நான் சொல்கிறேன். காகத்தை யாரும் உண்ணுவதில்லை. அதனால் தான். ஏன் தெரியுமா? அதையும் நான் சொல்கிறேன்'' என்று தொடர்ந்தார்.

''ஒரு காகத்தை அடித்துக் கொல், ஒரு தீயை ஏற்றி அதையும் ஒரு செங்கலையும் அடுத்தடுத்து வை. காகத்தை விட அதிவேகமாகச் செங்கல் வெந்துவிடும். அதுமட்டுமல்ல. காகத்தை விட உன்னை ருசியாகவும் இருக்கும்!'' என்று சொல்லிச் சிரித்தார்.

காகங்களைப் பார்த்து ஒரு விரலை ஆட்டி, ''வா வா, ஒரு நாள் உன்னுடைய தசைக்குச் சுவை தந்து விடுகிறேன்'' என்று மிரட்டினார். அவர் கூறியது புரிந்தது போலப் பல காகங்கள் கத்திக் கொண்டே ஆகாசத்தில் பறந்தன.

சிரித்துவிட்டுக் கண் மூடினார் கருவூரார்.

மற்ற இருவரும் வந்த சம்பாச் சாதத்தை உண்டு விட்டுப் படுத்தனர்.

மாலையில் கோயில் மணி அடித்துக் கருவூராரைத் தியானத்திலிருந்து எழுப்பியது. எழுந்தார். காட்டு வழியில் புகுந்து அதிவிரைவாக நடந்து ஆலயத்தினருகே வந்து சேர்ந்தார். வந்த வேகத்தில் சித்தர் ஆலயத்துக்குள் போனார். இருவரும் பின் தொடர்ந்தார்கள். பட்டர் மூவரையும் பார்த்து முக மலர்ந்தார்.

கருவூராருக்குப் பிடித்த இடம் நடராஜருக்கு முன் இருந்த இடம் தான். கருவூரார் ஆடல் வல்லான் முன்னால் வந்து அமர்ந்தார். கோயில் அவ்வளவு சுத்தமாக இல்லை என்பதை இருவரும் கவனித்தனர். தரையில் படிந்திருந்த புழுதியில் அங்குமிங்கும் மனிதக் கால் சுவடுகள் இருந்ததைக் கவனித்துக் கொண்டார்கள். இனிக் கருவூராருக்காக மாலை நேரத்தில் நடேசன் முன்னுள்ள இடத்தைச் சுத்தம் செய்ய வேண்டும். விளக்கேற்றிச் சாம்பிராணி போட்டு நன்றாய் ஆக்க வேண்டும் என்று முடிவெடுத்தனர்.

சற்று நேரத்துக்கெல்லாம் சித்தர் சாய்ந்து சாய்ந்து பாதி படுத்தபடியே நடராஜனை ரசித்தார். அவருக்கு நடேசன் ஆனந்த நடனமாடுவதாகவே தோன்றியது போல. விண் வெளி அரங்கத்தில் விதவிதமான ஜதி பேதங்களுடன் திரும்பத் திரும்பச் சுழன்று ஆடுவதாகத் தோன்றியது. இப்படி ஆனந்த வெள்ளத்தில் மிதந்த வண்ணமாக அவருக்கு மட்டும் தெரியும் கூத்தனின் ஆட்டத்துக்கு மயங்கிச் சாய்ந்திருந்தார் கருவூரார். அவருடைய உள்ளம் சதா சர்வ காலமும் நடராஜப் பெருமானின் இணையடித் தாமரைகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்ததால் அந்த தரிசனம் தினம் தினம் கிடைத்தது.

மற்றவர் இருவருக்கும் நடேசன் ஆடுவதைப் பார்க்கும் அளவுக்குப் பாக்கியமோ பக்குவமோ இல்லை. ஆனால், அந்த நடனத்தைக் காணும் கருவூராரின் முகமானது செய்யும் அசைவுகளே நடனம் போலிருந்தது.

சித்தரின் நடவடிக்கை பொன்னியின் செல்வருக்கு மிக அபூர்வமானதாக இருந்தது. ஒரு யோகி போலவே இவர் நடையும் பாவனையும் இல்லையே என்று நினைத்தார். முதலில் அவரைப் பார்த்த போது சித்தர் தலை தூக்கி நடந்த கோலமே ராஜ கம்பீரம் என்றும் "என்ன ஒரு தேஜஸ்!" என்றும் நினைத்தார்.

அதுவும் நடேசன் முன் அவர் இப்போது கொலு வீற்றிருந்த அழகைப் பார்த்தால் பூமியில் பாதியை ஆளும் சக்கரவர்த்தி



போலப் பார்ப்பவருக்குத் தோன்றும். அவரது முகத்தில் 'எல்லாம் எனக்குத் தெரியும். எல்லாம் என் கட்டுப்பாட்டில்தான் உள்ளன' என்ற அகந்தை சுடர்விடுவது போலப் பொன்னியின் செல்வருக்குத் தோன்றியது. அந்த நினைவு அவர் மனதைக் கடக்கக்கூடவில்லை. அதற்குள்ளாகச் சித்தர் திடீரென ஒரு பாடலைப் பாடினார்.

மின்னார் உருவம் மேல்வி ளங்க வெண்கொடி மாளிகைசூழ்ப்
பொன்னார் குன்றம் ஒன்று வந்து நின்றது போலும்
என்னாத்தென்னா என்று வண்டு பாடும்
தென் தில்லை அம்பலத்துள்
மின்னார் அமுதை எங்கள் கோவை என்றுகொல் எய்துவதே?

பாடிய பாட்டை நிறுத்திப் பொன்னியின் செல்வனைப் பார்த்து. "ஆகா! இந்தப் பாடலில் உன் பெயர் வருகிறதே? என்னே உன் அதிர்ஷ்டம்? ஆமாம், பொன்னா. இந்தப் பாடலை எழுதியது யார் என்று உனக்குத் தெரியுமா?" என்றார் சித்தர்.

பொன்னியின் செல்வருக்குத் தெரியும். ஆனால், வாய் திறக்கவில்லை. அவர் முகம் வியர்த்துப் போனது. அந்தப் பாடலைக் கேட்டவுடன் கருவூராருக்குத் தான் யாரென்று தெரிந்து விட்டது என்பதில் பொன்னியின் செல்வருக்கு ஐயமே இல்லை.

எப்போதும் போலத் தெரியாதென்று தலையசைத்தான் இடும்பன். கருவூரார் அவனைப் பார்த்து, "இடும்பா! இந்தப் பாட்டை இவனது பாட்டன் எழுதினார். என்ன பொன்னா, சரியா?" என்றார் கருவூரார். நல்ல வேளைக்கு அதற்கு மேல் அந்தக் கவிதையை இயற்றியவர் பற்றிச் சொல்லவில்லை. அது மட்டுமல்ல. இந்தப் பதிகத்தின் கடைசிப் பாடலைப் பாடி விடுவாரோ என்று பொன்னியின் செல்வர் பதற்றமடைந்தார்.

நல்ல வேளை, பாடவில்லை. கடைசிப் பாடலில் கோழி வேந்தன் என்றும், தஞ்சைத் தலைவன் என்று பாடலாசிரியர் தன்னை அடையாளம் காட்டிக்கொள்வார். அந்தப் பாடலைப் பாடியது கண்டராதித்தர். பொன்னியின் செல்வருக்குப் பாட்டன் முறை. தற்போது அரசாளும் உத்தம சோழரின் தந்தை.

இடும்பன் அதைத் தெரிந்து கொண்டால் தன்னை வெறுப்பான் என்பதற்காகத்தான் யோசித்தாரோ என்னவோ? இல்லை, தான் யாரென்றே மறக்க வேண்டும் என்று நினைத்தாரோ? பொன்னியின் செல்வர் ஒரு பெரு மூச்சு விட்டார்.

நடராஜரின் நடனம் முடிந்தது போல. திடீரென எழுந்து லிங்கத்திடம் சென்றார் கருவூரார். சிவபெருமானுக்குப் பாட்டுப்

பாடினார். அதைக் கைதட்டி பட்டர் ஆமோதித்தார். பிறகு கடைசியாக, ''நமப் பார்வதி பதயே! ஹர ஹர மகாதேவா!'' என்று வெண்கலக்குரலில் கத்தினார். பின் அதி வேகமாக வெளியே சென்றார்.

பட்டர் அவரசரமாக, ''தம்பிகளா! உங்கள் புண்ணியமே புண்ணியம். இப்படி ஒரு மகா புருஷனுடன் இருக்கிறீர்களே!'' என்றார், இரவு பிரசாதத்தைக் கொடுத்துவிட்டு. அவர்கள் பிரசாதத்தை வாங்கி வருவதற்குள் விறு விறு என்று கருவூரார் தன் இடத்துக்குச் சென்று விட்டார். இவர்கள் ஓட்டமாய் ஓடிச் செல்வதற்குள் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். என்ன செய்வது என்று தெரியவில்லை. பொட்டலத்தைப் பிரித்து இருவரும் அதிலிருந்தே சாப்பிடத் தொடங்கினார்கள்.

அன்று இரவு தூங்கும் முன் பக்கத்தில் படுத்திருந்த இடும்பன் கேட்டான். 'ஆகா! உன் குடும்பத்தில் யோகிகளெல்லாம் உண்டா? கவிதை எல்லாம் பாடியிருக்கிறார்களா? நீ என்ன வென்றால் யானைப் பாகனாய்த் திரிகிறாய். ஆனால், ஒன்று, நீயும் கவிஞராய் இருந்திருந்தால் என் கதி அதோ கதிதான். பின் என்னை யானையிடம் காப்பாற்றியிருக்க முடியுமா? எனினும் விசித்திரக் குடும்பமய்யா உனது!'' என்றான்.

பொன்னியின் செல்வர் நினைத்துக் கொண்டார். ''ஆமாம், விசித்திரக் குடும்பம்தான். அதனால்தான் என் குல விரோதியுடன் ஆனந்தமாய்ப் பேசி அருகில் படுத்துறங்கிக் கொண்டிருக்கிறேன்.''

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்திரண்டு
## பழையதெல்லாம் மறந்தான்!

தினம் தினம் வைகை செல்லும் வழியிலிருந்து சூரியன் எழுந் தான். பின் வைகை தோன்றி வரும் மேல்திசையில் மாலையில் கீழே விழுவான். நாட்கள் நகர்ந்தன. இருவரும் கருவூராரின் சீடர்களாகவே ஆகிவிட்டனர். கருவூராரின் அருகே அன்புக்குரிய சக்திகளே பரவியிருந்ததால், அது போலவே அவருடைய சீடர்கள் இருவரின் நட்பும் வளர்ந்தது. சில மாத காலங்களுக்குள் உயிர்த் தோழர்களாகிவிட்டனர்.



கோயிலுக்கு ஒருபுறம் பூவனம் கிராமம். ஆனால், இருவருமே வெவ்வேறு காரணம் சொல்லி ஊருக்குள் செல்வதில்லை. கரு வூராரும் அங்கு செல்லும்படி வற்புறுத்தவில்லை. பட்டரின் வீடு அங்கு இருந்தது. அவர் அழைத்தபோது கூட இருவரும் ஊருக்குள் வர மறுத்துவிட்டார்கள். தங்களை யாரேனும் அடையாளம் கண்டுவிடுவார்கள் என்ற பயம் இருவருக்குமே இருந்தது.

இருவருக்கும் இதுதான் வேலை என்று கருவூரார் ஒரு நாள் கூடக் கோடிட்டுக் காட்டவில்லை. எனினும் இருவரும் தவறாமல் தினந்தோறும் தமது கடமைகளை முதலில் நிறைவேற்றினர். ஆற்றி லிருந்து நீர் கொண்டு வருவது, மலர் பறிப்பது, அதை மாலையாய்த் தொடுப்பது போன்ற வேலைகள் எல்லாம் செய்தனர்.

ஆற்றின் மத்தியில் இருந்தது நீர். அதை அடைய வெண்மணல் பிரதேசத்தைக் கடக்க வேண்டும். வெய்யிலின் தாக்கத்தால் அந்த வெண் மணல் பிரதேசத்தில் கால் வைத்தால் கொப்பளித்துவிடும். அதிர்ஷ்டவசமாக, வைகைக் கரையோரமாகவே ஆங்காங்கு பள்ளங்கள் இருந்தன. போனமுறை வெள்ளம் வந்து வற்றிய பின் அந்த இடங்களில் மட்டும் இப்போது தண்ணீர் தேங்கியிருந்தது. அதுமட்டுமல்ல. ஆற்றுப்பள்ளமே பூக்காடாகத் திகழ்ந்தது. அதைச் சுற்றியும் தாழம் புதர்கள் அடர்ந்திருந்தன. பொன்னிறத்திலும், தந்த வர்ணத்திலும் வெண் தாழம்பூக்களும் எல்லாப் பக்கமும் செறிந்து கிடந்தன.

ஒரே இடத்தில் மலரும், நீரும் கிடைப்பதால் இந்தக் குளங்களையே இருவரும் நாடினர். அப்படியே அங்கே காலைக் குளியலையும் முடித்து விடுவார்கள். அதற்கு அவசியமும் ஏற்படும். தாமரைப் பூக்களை அடிக்காம்போடு பறிக்கக் குளத்தில் இறங்கி யவர்கள், சேறுடன் வெளிவருவதால் குளித்துத்தான் கரையேற வேண்டும்.

பொன்னியின் செல்வரோ அமைதியாய்க் குளிப்பார். இடும்பன் சிறுவனைப் போல வைகையாற்றில் தேங்கியிருந்த நீரில் உயர்ந்த கரையிலிருந்து ஓடி வந்து குதித்து விளையாடுவான். 'தொபேல்' என்று குளத்தில் குதிப்பதும் உள்ளே சென்று மூச்சைப் பிடித்து வெளி வரத் தாமதிப்பதும் அவன் விளையாடல்களில் சில. தினமும் தன் போராட்ட வாழ்வால் இந்த மாதிரிக் குட்டிக் குட்டி இன்பங்கள் அவனுக்குக் கிடைக்கவில்லை என்று பொன்னியின் செல்வர் புரிந்து கொண்டார்.

''பொன்னா! பயப்படாதே. நீயும் குதி'' என்பான். அதற்குச் சும்மாயிருந்து விட்டுச் சற்று நேரம் கழித்து ஓரிரு முறை,

''இடும்பா! யானை வருகிறது'' என்பார் பொன்னியின் செல்வர். தன்னையறியாமல் பயந்து போய்த் திரும்புவான் இடும்பன். பின் அதுவே மிகவும் வேடிக்கையானது இருவரிடமும். குளித்துவிட்டுத் துணிகளை உலர்த்தி விட்டு வெகு நேரம் நீரில் கல்லை விட்டெறிந்துக் குமிழிவருவதை வேடிக்கை பார்ப்பார்கள்.

வாழ்க்கை ஆனந்தமாகப் போனது இருவருக்கும். உணவுக்குக் கஷ்டமில்லை. தினந்தோறும் திருப்பூவனநாதர் உண்டாரோ இல்லையோ, அவரது நைவேத்தியத்தை இடும்பனும் பொன்னியின் செல்வனும் உண்டார்கள். ஆனால், ஒரே ஒரு கஷ்டம் தான். பொழுது சாய்ந்தவுடன் இருவருக்குமே முகத்தில் ஒரு நிழல் விழுந்தாற் போலாகும். இரவுக்கு இரவு பழையபடி அவனுக்குப் பயம் வந்தால் போல் இடும்பன் பொன்னியின் செல்வனை விட்டு அகலவே மாட்டான். அவருக்கும் பயம்தான். ஆனால், இருவருக்குமே வெவ்வேறு பயம்.

இரவில் இருவரும் கையைத் தலையணையாய் வைத்துக் கொண்டு படுப்பார்கள். நாலாபுறமும் இருள் சூழ்ந்து வரும். இருவரின் உள்ளத்திலும் ஏதேதோ பழைய ஞாபகங்களை எழுப்பி, எங்கிருந்தோ இனந் தெரியாத ஒரு துக்கம் வந்து நெஞ்சை அடைக்கும். அதை மறைக்கப் பேச்சு அதிகமாகும். பேச்சில் மிகவும் கஷ்டம் பொன்னியின் செல்வருக்குத்தான்.

பழையதைப் பற்றிக் கேட்டால் பொய்தான் சொல்ல வேண்டும். வாய்க்கூசாமல் பொய் சொல்லிக்கொண்டிருப்பது அவருக்குப் பிடிக்கவில்லை. ''நான் உண்மையில் துர்பாக்கியசாலி தான்! ஒரு காலத்தில் பொய் சொல்வதற்கு முன்னால், என் நாக்கையே துண்டித்துக் கொண்டிருப்பேனே!'' என்று நினைப்பார். ஆனால், மனதுக்கு மிகவும் கஷ்டமானது கண்ணுறங்கும் போது கனா வருமே, அதுதான். ஒருவனுக்கு யானை வரும்; ஒருவருக்கு யாழினை ஒத்த மேனி கொண்ட பெண் வருவாள்.

யானையிடம் தப்பியதிலிருந்து இடும்பனுக்கு என்றுமில்லாத திகில் உண்டாயிற்று. மனக் கலக்கத்தை அதிகமாக்கக் கூடிய விதமாகக் கரையோரமாகக் காடுகளில் இரவெல்லாம் சலசலப்புச் சத்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன. ஒருவேளை அந்தப் யானை உயிர் பிழைத்து வருமோ என்ற பயம். அவனுக்குத் தூக்கம் சரியாய் வரவில்லை. அது போலவே அந்தப் பழுவூர்ப் பெண் தன் தூக்கத்தில் வருவாளோ என்ற பயம் பொன்னியின் செல்வருக்கு.

கொஞ்ச நாள்தான் இப்படி இரவின் பயம். விடியற்கால வேளை எப்போது வரும் என்று ஏங்கிப் படுத்த காலங்கள் போய்ப்



பழையபடியே நித்திரா தேவி இருவரையும் தினசரி அரவணைக்க ஆரம்பித்துவிட்டாள். ஒரு வித மன அமைதி வந்ததால் பரப்பரபடைந்த மனங்கள் சாந்தி பெற்றிருந்தன.

மிகவும் புதியதொரு அனுபவத்தைக் கொடுத்தார் கருவூர்த் தேவர். இப்போது அவரிடம் பூரண பக்தி கொண்டிருந்தனர் இருவரும். காலை முழுவதும் யோக நிலையில் இருப்பார் கருவூரார். தியானத்தில் அமர்ந்தவுடன் அவருக்கு ஒரு சலனமற்ற நிலை. ஆனால், அவர் தியானிக்கும் போது வண்டுகளின் ரீங்காரம் போல் ஒரு சப்தம் எழும். இருவரும் சுற்றிப் பார்த்தால் எந்த வண்டும் இராது.

தியானத்தில் இல்லாத நேரங்களில் எப்போதும் வெற்றிலை போட்டுக் கொண்டே இருந்தார். மென்ற வெற்றிலையைத் துப்ப நினைத்துத் தொண்டையைக் கனைக்கும் போது பாத்திரம் ஒன்றை எடுத்து வர இருவரில் ஒருவர் ஓடுவார்கள். அருகில் பாத்திரம் இல்லையென்றால் யோசிக்காமல் வந்து கையை நீட்டுவர்.

கருவூராருக்குப் பலதரப்பட்ட சக்திகளும் இருந்தன. யோகியின் காதுபட எதுவும் பேச வேண்டாம் என்று இருந்தால்கூட, இவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே, அவரது மனம் அதை ஒட்டுக் கேட்டுவிடும். அதற்குப் பதிலும் கொடுப்பார். சொல்லுவதைச் சொல்லிவிட்டுக் கண்ணின் கடைக் கோணத்தின் மூலமாய்ப் பார்ப்பார். பல முறை அவர்கள் இதில் அதிசயப்பட்டாலும், பின் பழகிப் போனது.

இரவு தவறாமல் கோயிலுக்கு வந்துவிடுவார் சித்தர். சில சமயம் அவரே லிங்கத்துக்கு அபிஷேகம் செய்யவும் செய்வார். பின் நந்திக்கு அருகிலிருந்து இரவு இருவரையும் அமர்த்தி வைத்து உபதேசம் செய்வார். சில சமயம் கோயில் பட்டரும் வந்துவிடுவார் உபதேசம் கேட்க. கருவூரார் சொல்வதில் பெரும் பங்கு தன்னைப் பற்றியதே என்ற குற்ற உணர்வு பொன்னியின் செல்வருக்கு.

''மனிதன் மனதின் போக்குவரத்துக்களைக் கொஞ்சம் கட்டுப் படுத்திக் கொண்டால் நன்றாயிருக்கும். அவற்றில் நீ அகப்பட்டுக் கொள்ளாதே!'' என்று பெண்ணின் அழகைப் பார்த்துச் சொக்கிப் போய்க் காமாந்தகாரத்தில் மூழ்கியிருந்த மானிட ஜன்மங்களைத் திட்டினார். புவன சுந்தரிகளைக் கண்டு மயங்கி வாழ்க்கையைச் சீரழித்துக் கொள்ளும் மனிதரைப் பற்றி ஏசினார். காதல் கொண்டவர்களை 'கயல்விழிகள் விரிக்கும் மோக வலையில் அகப்பட்ட மீன்கள்' என்றார். பட்டரோ, இடும்பனோ வாழ்க்கையில்

காதலித்திருக்ககூடியவர்களாகத் தெரியவில்லை. அப்போது இந்த வார்த்தைகளெல்லாம் தனக்குத்தான் என்று புரிந்துகொண்டார் பொன்னியின் செல்வர்.

அது போலவே மண்ணாசை பெற்றவரையும் அவர் விட்டு வைக்கவில்லை. வீரர்கள் சிலர் வானத்தையும் பூமியையும் தங்கள் காலடியில் போட்டுக் கொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்று நினைக்கிறார்கள். ''போர் செய்து இராஜ்யத்தை விஸ்தரிப்பதில் ஆசையிருக்கும் மன்னர்கள் போர்களினால் மனிதர்கள் அடையும் துன்பங்களைக் நினைத்துப் பார்க்கவேண்டும்'' என்றார்.

''பிறவிப்பயன் என்பது என்ன? சிலருக்கு மண். சிலருக்குப் பொன். சிலருக்குப் பெண்!'' என்று அவர் ஒரு நோக்கம் நிறைந்த பார்வையுடன் அருள்மொழியை நோக்கினார். அவரது காதலைப் பற்றி ஜாடைமாடையாகக் குறிப்பிட்டுத் துடித்துடிக்கச் செய்து விட்டார்.

எல்லாவற்றுக்கும் இடும்பன் தலையசைத்து வைப்பான். பட்டர் கண்ணீர் மல்கக் கேட்பார். பொன்னியின் செல்வரோ முகத்தைக் கற்சிலை போல அசையாமல் வைத்து உற்றுக் கேட்பார். தன் நிலைக்கு ஏதேனும் நேரடி பதில் கிடைக்குமென்று எதிர்பார்த்த வருக்கு இதுவரையில் ஏமாற்றம்தான்.

ஒரு நாள் அந்தக் கோயிலின் சரித்திரத்தில் நடந்த அற்புத விஷயத்தைப் பற்றிப் பேசினார் கருவூரார். நடனக் கலையிலே சிறந்த தேர்ச்சியடைந்து, தன்னையே இந்தத் திருப்பூவனநாதருக்கு அர்ப்பணம் செய்த ஒரு பெண்ணைப் பற்றிய கதையது. ''அற்புத மாய் ஆட்டம் ஆடிக் கடவுளையே திகைக்கச் செய்ய வேண்டு மென்றும் எண்ணுவாள். அவள் பெயரும் உன் பெயர் போலத் தான். பொன்னனையாள்!'' என்றார் பொன்னியின் செல்வரைப் பார்த்து.

''ஒரு நாள் சிவபெருமானே சித்தர் வடிவத்தில் அவள் வீட்டுக்கு வந்தான். ரசவாதம் செய்து அனைத்துப் பொருட்களையும் தங்கமாக ஆக்குகிறேன் என்று சொன்னான். அவளும் ஒப்புக் கொள்ளவே வீட்டிலிருந்த எல்லாப் பொருட்களிலும் திருநீறு பூசிச் சென்றான். அடுத்த நாள் காலை எல்லாப் பொருட்களும் தங்கம் ஆயின; ஆனால், அவள் அதையெல்லாம் பார்த்து ஆசை கொள்ள வில்லை. அனைத்தையுமே அவள் கோயிலுக்கு அர்ப்பணித்தாள். கோயிலுக்குத் தங்கச் சிலைகள் செய்தாள். சோமாஸ்கந்தர் சிலையில் கடவுளின் அழகை ரசித்தவள் மெய்ம்மறந்து கன்னத்தில் கிள்ளியேவிட்டாள். கடவுள் அந்த அன்புப் பரிசை ஏற்றுக்



கொண்டதால் சொக்கத் தங்கம் அவள் கிள்ளுதலுக்கு வழி கொடுத்துப் பள்ளமானது. இன்றும் அவள் கிள்ளிய இடத்தைப் பார்க்கலாம். சுந்தரர் இந்தச் சாமியை என்ன சொல்கிறார் தெரியுமா? பொன்னனையாள் என்று கூறுகிறார்'' என்று கதையை முடித்தார்.

இப்படி ஆன்மீகத்தையும் சைவத்தையும் தினந்தோறும் பேசிய கருவூரார் வெறும் விபூதிப் பட்டையிட்ட ருத்ராக்ஷதாரியாய் மட்டுமில்லை என்று இருவரும் போகப் போகத் தெரிந்து கொண்டனர். சதா சர்வ காலமும் சுவாமியைக் கும்பிட்ட வண்ண மாகவே கருவூரார் இருக்கவில்லை. பொதுமக்களுக்குத் தொண்டும் செய்கிறார் என்று தெரிந்தது. மாயா ஜாலம் தெரிந்தவர். ஆனால், அதை மானிடத்துக்குப் பயனுள்ள விதத்தில் மட்டுமே பிரயோகிப்பவர். கஷ்டத்தில் வந்தவர்களுக்கு ஆறுதல் சொன்னார். அதற்கெல்லாம் மேலாக மருத்துவம் பார்த்தார். வலியால் துடித்து வரும் மாந்தருக்குப் பச்சையிலை மருந்து கொடுத்தார். மாயமாய்ப் போயின வியாதிகள்.

வாரத்துக்கு ஓரிரு முறை கோயிலருகே ஒரு விசித்திரக் காட்சியைக் இருவரும் கண்டனர். தங்கள் கஷ்டத்தைத் தீர்த்துக் கொள்ளச் சித்தரைத் தேடி ஆயிரமாயிரம் பேர் வந்தனர். கிராம வாசிகளுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருந்தார் சித்தர். ஆனால், அவர்களைத் தம் இடத்துக்கு வர விடுவதில்லை. பூவன நாதர் கோயில் இடத்திலேயே வைத்து வைத்தியம் பார்த்தார்.

சித்தரின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்து நூற்றுக் கணக்கானவர் கோயிலின் சமீபத்தில் வரிசை வரிசையாய் நின்று விட்டார்கள். ஒவ்வொருவர் முகத்திலும் ஏதாவது கவலை. பிராணன் போகும் அளவுக்கு வலி. ஆனால், கண்ணில் மட்டும் ஒரு நம்பிக்கை ஒளியும் இருந்தது. கருவூராரைப் பார்த்தவுடன் அந்த ஒளியானது இன்னமும் பிரகாசமானது.

முதல் முறை ஜனக் கூட்டம் வந்தபோது, ஊர்வலம் நெருங்கி வரவரப் பொன்னியின் செல்வருடைய பரபரப்பும் அதிகமாகிக் கொண்டிருந்தது யோகிக்குத் தெரிந்தது. அவர் கையைப் பிடித்து அமர வைத்து, ''யாருக்கும் உன்னைத் தெரியாது. என்னைத் தவிர!'' என்று சொல்லிக் கண் சிமிட்டினார். சித்தர் அவரது கையைப் பிடித்த போது அந்த மாதிரி உணர்வை அவர் தன் வாழ்நாளில் அனுபவித்ததில்லை. சித்தர் சொன்னது போலவே ஒருவர் கூடப் பொன்னியின் செல்வரை அடையாளம் காணவில்லை.

வந்தவர்களிடம் முக பாவத்தினாலேயே தன்னுடைய வரவேற்பைத் தெரிவித்தார் சித்தர். அந்த மாதிரி சாந்த சுவரூபத்தைத் தன் வாழ்நாளில் பொன்னியின் செல்வர் பார்த்ததில்லை. பஜனை செய்து கொண்டு ஊர் ஊராய்ப் போகவில்லை. தானுண்டு தன் வேலையுண்டு என்று இருப்பவர். அவர் இடம் தேடி எல்லோரும் வருகிறார்கள். இல்லை கவரப்படுகிறார்களா? காந்தம் இரும்பைக் கவர்வது, போல.

வந்தவர்களின் உடல் நலனை சித்தர் மீண்டும் சீர்படுத்தினார். முடமாய் வந்தவன் நிமிர்ந்து சென்றான். பேசாத குழந்தைகளை 'நமசிவாய' என்று சொல்ல வைத்தார். கண் தெரியாதவர்கள் அவர் தரிசனம் பெற்றே சென்றனர்.

வந்தவரெல்லாம் அவரைப் புகழ்ந்துரைப்பதைக் கேட்கக் கேட்கப் பொன்னியின் செல்வருக்கு மட்டுமல்ல, இடும்பனுக்கும் அவர் மேல் பக்தி கூடியது. இடும்பனுக்கு எப்போதுமே யோகிகளிடம் நல்ல அபிப்பிராயம் கிடையாது. அவர்கள் தவ வலிமையால் நாட்டில் எவ்வளவோ அக்கிரமங்களைத் தடுத்திருக்கலாம்; செய்யவில்லையே என்று அவன் நினைப்பதுண்டு. 'மனம் வைத்திருந்தால் சோழரின் அட்டூழியங்களைத் தடுத்திருக்கலாமே?' என்றுகூட ஆதங்கப்படுவதுண்டு. எனினும் அவனுக்கே இவரைக் கண்டவுடன் மரியாதை ஏற்பட்டது.

வந்தவர்களில் பலரும் அவரது பாதங்களைப் பற்றித் தழுவிக்கொண்டனர். தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தனர். கதறினர். மயங்கி விழுந்தனர். பலரும் அங்கே தங்கவாமா என்று மன்றாடிக் கேட்டார்கள். விரட்டி அடிக்காத குறையாகத் துரத்திவிட்டார் கருவூரார். அதைக் கண்ட பொன்னியின் செல்வருடைய மனதில் சந்தேகம். தனக்கு மட்டும் எப்படி இந்த மாபெரும் வாய்ப்பு. இல்லை, இதுவும் தற்காலிகமானதா?

'ஆனால், இந்த ஞானிக்கு நிரந்தரமாய்ச் சேவை செய்யும் பாக்கியம் கிடைக்குமானால் அது எப்பேர்ப்பட்ட பாக்கியமாயிருக்கும்! இங்கு தங்க வில்லை யென்றால் அருமையான வாய்ப்புப் போயிருக்கும். துர்பாக்கியசாலியாய் ஆகியிருப்போம். இவருடன் பழகப் பேறு பெற்றோமே' என்று நினைத்தார்.

பக்தர்கள் வரும் நாளில் இருவருக்கும் நல்ல சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லை. சித்தரைப் பார்க்க வருபவர்கள் இடியாப்பமும், புளிக்கறியும் சோளமாவுப் பணியாரமும் கொண்டு வருவார்கள். அவற்றை அவரது சீடர்களுக்குக் கொடுத்துச் செல்வார்கள். அதை இருவரும் உண்டு விட்டுக் கோயில் குருக்கள் அனுப்பிய



பிரசாதத்தை அன்று திரும்பிக் கூடப் பார்க்க மாட்டார்கள். ஒரு வீட்டின் தயாரிப்பு என்றால் உணவு; பலவீட்டின் உணவென்றால் விருந்தல்லவா?

அந்த ஞானியின் செயல்கள் பொன்னியின் செல்வரை வெகுவாகக் கவர்ந்திருந்தன. பொன்னியின் செல்வருக்கு இங்கிருந்ததில் ஏற்பட்ட மாற்றங்கள். வந்தபோது பொன்னியின் செல்வருடைய உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தபடியால் இறைவனுடைய திருக் கோலங்களில் அவருடைய மனம் பூரணமாக ஈடுபட முடியவில்லை. எனினும் அந்தச் சித்தருடன் காலம் கழிக்க வேண்டும் என்றே மனம் ஆசைப்பட்டது. 'பொன்னனாய் உருமாறிச் சித்தரின் அன்பைப் பெற்றோமே' என்று நினைத்தார். அகத் தோற்றம் மட்டும் மாறவில்லை. உள்ளமும் அதன் போக்கும் கூட மாறி விட்டது. பொன்னியின் செல்வருக்கோ புதிய அனுபவம். புரியாத அனுபவம். ஈழத்துக்குச் செல்லும் நோக்கத்தை விட்டு விட்டார் பொன்னியின் செல்வர்.

இங்கு வந்ததும் அவருடைய மனப் போக்கு வேறு விதமாகத் திரும்பி விட்டது. ஆரம்ப காலத்தில் பல நாள் உதய சூரியனையும் பூரணச் சந்திரனையும், வண்ண மலர்களையும், பாடும் பறவைகளையும், பறக்கும் பட்டுப் பூச்சிகளையும் பார்த்துப் பார்த்து அவளுடைய ஞாபகம் உண்டாயிற்று. மறுபடியும் எப்போதுமே அவளைப் பார்க்க மாட்டோமோ என்ற ஏக்கம் பல சமயம் உண்டாகும்.

ஆனால், கருவூராரைப் பார்த்த பின் அந்த எண்ணங்கள் மறைந்தன. பூ பூவாய்த்தானிருந்தது. பட்டுப் பூச்சி பட்டுப் பூச்சியாய்த் தானிருந்தது. பழுவூர் இளவரசியின் பிம்பமாய் அவை மாறவில்லை. கொஞ்ச நாளைக்கெல்லாம், அந்த உறவே அர்த்தமற்றதாயிருந்தது. முதலில் அடிக்கடி அவள் சிரிப்பொலி அவர் காதில் விழும். முகம் வந்து இவர் முகத்துக்கு முன் நிற்கும். இப்போது மெல்ல மெல்ல அவள் முகமே மறந்து போனது.

சில நாட்களாகத் தன்னை வேறொரு மனிதனாகவே நினைக்கத் தொடங்கினார். முதலில் கனவில் மட்டும் அந்தப் பழுவூர்ப் பெண் வந்து தொந்தரவு செய்தாள். பின் அவளுக்கும் கருவூராரைக் கண்டு பயமோ என்னவோ, வருவதில்லை.

உள் மனதின் ஞாபகங்கள் மெல்ல மெல்லக் குறையத் தொடங்கின. தஞ்சையிலிருந்து புறப்பட்ட சமயம் அவர் மனத்திலிருந்த கவலை இப்போது இல்லை. கிளம்பும்போது கோபமும்

ஆத்திரமும் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. அதற்குப் பதிலாக இப்போது பூரணஅமைதி.

அவர் மன அமைதியுடன் இருந்தது கருவூர்த் தேவரின் காந்த சக்தியினால்தான். அவர் சொல்லும் வார்த்தைகள் தனக்கென ஒரு தனி அர்த்தத்தைக் கொண்டிருந்தது போல் தோன்றின. அவர் பொதுப்படையாகப் பேசியதில்கூட உள் அர்த்தம் தோன்றும் பொன்னியின் செல்வருக்கு.

வேதனையை மறந்து வெளியே மட்டும் அமைதியென்ற நிலைக்கு மாறினார் பொன்னியின் செல்வர். ஆனால், அதனுடன் வேறு மாறுதல்களும் கைகோத்தபடி நிகழ்ந்தன. இதில் என்ன அதிசயமென்றால் பொன்னன் என்ற பெயருக்கு உடனடியாக முகம் திருப்பினார். தன்னைப் பொன்னன் என்றே நினைக்கத் தொடங்கிவிட்டார்.

'இப்படியே இருந்தால் பழையதெல்லாம் மறந்து விடும். மறந்துதான் போகட்டுமே' என்று கூட நினைக்கத் தோன்றியது அவருக்கு!

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்துமூன்று
## இடும்பனின் கனவு

**கா**ட்டில் மூன்று மாத காலமாக வாழ்க்கையை இப்படியே நடத்தியாயிற்று. ''நடுக்காட்டிலா? ஆள் நடமாட்டம் இல்லாத இடத்திலா? பொழுதைப் போக்குவது கஷ்டமாயில்லையா?'' என்று யாரேனும் கேட்டால். அப்படியொன்றும் இல்லை.

சித்தர் அவர்களை ஒரு வேலையும் செய்யச் சொல்வதில்லை. தாங்களாகத்தான் எடுத்துப் போட்டு வேலையைச் செய்தனர். வேலையின் பளு ஒன்றும் அவ்வளவாகவும் இல்லை. ஆனால், அதுவே ஒரு நாளைப் பூரணமாக நிரப்பியது. ஆனால், நடுக் காட்டில் இவ்வளவு ரஸமான அனுபவங்கள் கிட்டும் என்று இருவரும் என்றும் கருதியதேயில்லை.

கருவூரார் செல்லுமிடமெல்லாம் செல்வார்கள். காட்டில் மருந் தைச் சேகரிப்பார்கள். அதைத் தவிர ஒரு வேலையையும் அவர்



சொல்வதில்லை. அடிக்கடி அதிகாலையில் ஒரு வகை இலையைக் காட்டி ''இதைப்போல் எடுத்து வா'' என்பார் கருவூரார்.

காடெங்கும் பச்சைப் பசேலென்று புல்தரையில் மண்டிக் கிடக் கின்ற செடி கொடிகளில் தேடுவார்கள். அதில் அந்த இலையைத் தேடி வர வேண்டும். தேடி ஓடி எடுத்து வந்தால் அந்த மருந்து குணப்படுத்தும் வியாதிக்காரன் சரியாக வந்து சேருவான்.

தினந்தோறும் இரவு அவர் கூப்பிடாமலேயே அவருடன் கோயிலுக்கு விஜயம் செய்துவிடுவார்கள். அது போலத்தான் ஓர் இரவு திருப்பூவனம் கோயிலில் ஒரு புதியப் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார் கருவூரார். அந்தப் பாடல் அவர்கள் வந்திருந்த திருப்பூவனம் கோயிலைப் பற்றியது. அதில்

திருவருள் புரிந்தாள் ஆண்டுகொண்டிங்ஙன்
    சிறியனுக்கு இனியதுகாட்டிப்
பெரிதருள் புரிந்தானந்தமே தரும் நின்
    பெருமையிற் பெரிய தொன்றுளதே.
மருதா சிருங்கோங்கு அகில் மரம் சாடி
    வரைவளங்கவர்ந்திழி வைகைப்
பொருந்திரை மருங்கோங்கு ஆவண
    வீதிப்பூவனங் கோயில் கொண்டாயே!

என்ற பாடலைப் பூவனநாதருக்கு அர்ப்பணித்தார்.

தானே இயற்றிய பாடல் என்றாலும் ஒரு பிசிரும் இன்றித் தொடர்ச்சியாகப் பாடினார். பலவித மரங்களை மலையின் உச்சியிலிருந்து வெள்ளத்தில் அடித்துக் கொண்டு வந்த வைகை, ரத்தினங்களையும் அடித்துக்கொண்டு வருகிறாள் என்றார். அப்படிபட்ட வளமையான வைகை மோதும் கரையில் பெரிய மாடவீதிகளையும் மாட மாளிகைகளையும் கொண்ட ஊர் பூவனம் என்றார்.

திருப்பூவன நாதரைப் பற்றிக் கருவூரார் பாடியதைக் கேட்டுக் கொண்டிருந்த இடும்பன் முதலில் கண் கலங்கினான். பின் தாரை தாரையாய்க் கண்ணீர் மல்க நின்றான். இரவெல்லாம் அந்தப் பாடலை நினைத்து நினைத்து அழுதான். பார்க்கப் பாவமாய் இருந்தது பொன்னியின் செல்வருக்கு.

''என்ன இடும்பா, உனக்கு அவ்வளவு பக்தி வந்துவிட்டதா என்ன?''

''இல்லை, பொன்னா. வைகையில் பொன்னும் மணியும் வருகின்றதாம். பாண்டிய நாடெங்கும் மாட மாளிகைகள்

இருக்கின்றதாம். நினைத்துப் பார்த்தேன். பிரமிப்பில் அழுகை வந்துவிட்டது'' என்றான்.

''உன் நாட்டின் பழைய நிலைமையை நினைவுபடுத்திப் பாடுகிறார் என்று வருத்தமா?''

''என்ன சொன்னாய்?'' என்று ஒரு விதமாகப் பார்த்தான் இடும்பன். ''எங்கள் நாட்டின் எதிர் காலத்தை யூகித்துப் பாடுகிறார் கருவூரார். இவ்வளவு செல்வச் செழிப்பும் ஒரு நாள் பாண்டிய நாட்டுக்கு மீண்டும் வரும்'' என்றான்.

என்னவொரு தேசப் பற்று இவனுக்கு என்று எண்ணிக் கொண்டார், பொன்னியின் செல்வர். மனதின் ஓரத்தில் அவன் ஆசைகள் நிறைவேற வேண்டும் என்ற எண்ணம் கூட எட்டிப் பார்த்தது.

பின்னர் ''என்ன? எதிரி வெற்றி பெற வேண்டும் என்று எந்த வீரனாவது நினைப்பானா?'' என்றும் அதிசயித்தார். அப்போது மாலையில் கருவூரார் செய்த உபதேசம் நினைவுக்கு வந்தது. ''உலகில் எதுவும் நிலையானதல்ல. பகைவன் நண்பனாகலாம். நண்பன் பகைவனாகலாம்!'' என்றார் கருவூரார். சொல்லிவிட்டு ஓர் அர்த்தமுள்ள பார்வையைப் பொன்னியின் செல்வரின் மீது வீசினார். முழுவதுமாய்ப் புரிந்து கொண்டார் பொன்னியின் செல்வர். பின் அருகிலிருந்த இடும்பன் காரியை நோக்கினார். அவனுக்கு ஒன்றும் புரிந்ததாகத் தெரியவில்லை.

இந்த தினசரி உபதேசங்களில் தன்னைத் தாக்குகிறார் இந்தக் கருவூரார் என்று ஆதங்கப்பட்டார் பொன்னியின் செல்வர். அவர் பட்ட அவதியைக் கண்டு ரசிக்கவும் செய்தார் கருவூரார். அவருக்கு இது பெரும் விளையாட்டாக இருந்தது போல. ஒரு நாள் பொறுக்காமல் தானே இரைச்சல் போட்டுத் தனது உண்மையான பெயரை உலகுக்கெல்லாம் கேட்கும்படி கத்தி விடலாம் என்று கூடத் தோன்றியது அருள்மொழிக்கு. ஆனால், அவ்வப்போது அவருக்குத் தான் யார் என்று நினைவூட்டுகிறார் கருவூரார் என்றும் தோன்றியது. நண்பர்கள் இருவரும் நேர் எதிர்த் துருவங்கள் என்று மீண்டும் மீண்டும் நினைவு படுத்தினார். இல்லையென்றால் தான் நிஜமாக யாரென்றே மறந்து போகும்.

ஆனால், விதி ஏன் இப்படி விளையாடிப் பார்க்கிறது என்று பொன்னியின் செல்வருக்கு ஆச்சரியம். ''நம் ஆசாபாசங்களைச் சோதித்துப் பார்க்கிறது. ஒரு பெண்ணின் மேல் ஏற்பட்ட பிரேமை யால் ஊரைவிட்டுக் கிளம்பி வந்தாயே! இன்று உன் அண்ணனைக் கொன்றவன், உன் சொந்த ரத்தத்தைப் பலி கேட்டவன் எதிரே



நிற்கிறான். என்ன செய்யப் போகிறாய்?அஞ்சா நெஞ்சம் கொண்ட வீரர்தான். தன்மானம் மிகுதியாய் இருந்த குலம்தான். மொத்தத்தில் க்ஷத்திரிய குணாதிசயங்களைக் கடைப்பிடித்த குடும்பம்தான். ஆனால், எதுவும் எடுபடவில்லையே?'' என்று விதி கேட்டுக் கேட்டுக் கேலி செய்தது.

ஆரம்பத்தில் ஒரு முயற்சி செய்து தன் மனத்தில் குடி கொண்டிருந்த அருவருப்பைப் போக்கிக் கொண்டு இடும்பனிடம் சிநேக பாவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவர் முடிவு செய்திருந்தார். ஆனால், முயற்சியெல்லாம் தேவைப்படவில்லை. இருவரும் உண்மையிலேயே ஒருவருடன் ஒருவர் நண்பர் களானார்கள். காட்டில் அறிமுகமான எதிரி என்று நினைக்க முடியவில்லை. ஆருயிர் நண்பனாய் ஆகிவிட்டான் இடும்பன்.

ஆனால், இடும்பனுடன் அருகில் இருக்கும் போது அவ்வப் போது ஒரு யோசனை வரும். தனது முகத்திரை கிழிந்தால், தான் யாரென்று உண்மையாகவே தெரிந்தால் பின் இடும்பன் என்ன செய்வான்? ''நம்மைப்போல் சும்மாயிருப்பானா? நன்றி மறந்து நம்மைக் கொல்ல நினைப்பானா?'' அதைச் சோதித்துப் பார்க்க ஆவலாயிருந்தது பொன்னியின் செல்வருக்கு.

ஓரிரவு இருவருக்கும் தூக்கம் வரவில்லை என்பதால் எழுந்து சென்று வைகைக் கரையில் அமர்ந்திருந்தனர். நிலவின் ஒளி காய்ந்த ஆற்றுக்கு வெள்ளி முலாம் பூசியிருந்தது. விருட்சங்களெல்லாம் காகங்களால் கருமை எய்தியிருந்தன.

''இடும்பா! உமது போராட்டம் என்ன ஆனது? ஒரு செய்தியும் இல்லையா?'' என்றார் பொன்னியின் செல்வர்.

இடும்பன் தன் நண்பனை ஓரக்கண்ணால் விசித்திரப் பார்வையாகப் பார்த்தான் ''என்ன, இன்று புதிதாய்க் கேட்கிறாய்? பொன்னா! உனக்கு அரசியலில் பெரும் ஈடுபாடு வந்துவிட்டது போல!'' என்றான்.

''ஊர் விவரம் எல்லாம் தெரிந்து கொண்டால் நல்லதுதானே என்று கேட்டேன்'' என்று சமாளித்தார் பொன்னியின் செல்வர். தான் யாரென்று யூகித்து விடுவானோ இடும்பன் என்ற பயம் வந்தது. ஆனால், அந்தப் பயம் சடுதியில் நீங்கியது. இடும்பன் அவர் சொன்ன விஷயத்தை முற்றிலுமாக ஏற்றுக் கொண்டு தன் கதையைத் தொடங்கினான்.

''உன்னிடம் சொல்வதால் என்ன? என் உயிரைக் காப்பாற்றி யவன் நீ.'' என்று ஆரம்பித்தவன்தான். மனத்தில் உள்ளதை மறைத்து வைக்கும் வித்தையைப் போராளிகள் போல் கற்றிருப்ப

வர் யாரும் கிடையாது. ஆனால், ஏதோ ஒரு நன்றி உணர்ச்சியில், உயிரைக் காப்பாற்றியவனிடம் மனதிலிருந்ததைக் கொட்டிக் கொண்டிருந்தான் இடும்பன் காரி. பாண்டிய நாட்டின் மகிமையைப் பற்றிக் கருவூரார் பாடியது அவனை ஏதோ செய்திருந்தது. சாதுர்யமாகப் பேசிக் கேள்விகள் கேட்கக்கூடத் தேவையில்லை. தூண்டிக்கூடக் கேட்கவேண்டியதில்லை. அவனாக எல்லாம் சொன்னான்.

ஆனால், அவன் பொன்னனிடம் மனம் திறந்ததிலும் ஓர் உள் நோக்கம் இருந்தது.

இடும்பனுக்குத் தெரியும் பாண்டியர் போராட்டம் ஏன் வலுவிழந்தது என்று. சோழருக்குப் பயந்து நாலா பக்கமும் சிதறிப் போய்விட்டார்கள் விசுவாசிகள். புதிய ஆள் சேர்க்கும் வேட்டை அவ்வப்போது நடக்க வேண்டும். அதனால் பாண்டியரின் வலிமையைப் பற்றிப் பேசினால் பொன்னன் தங்களுடன் சேரச் சம்மதிப்பான் என்று நினைத்து பேசினான். தன் வலிமையை நிரூபித்துப் பொன்னனின் அபிமானத்தைப் பெற வேண்டும். பெற்ற அபிமானத்தை வைத்து அவனையும் பாண்டியர் கூட்டத்தில் சேர்க்க வேண்டும் என்ற ஆசை.

"பொன்னா! நீ கூட ஏதோ பறிகொடுத்தவன் போலத் திரிகின்றாய். இப்படித்தான் பாண்டிய நாட்டில் பலரும், மனைவியை இழந்தவர்கள், குழந்தையை இழந்தவர்கள் என்று திரிகிறார்கள். தாங்கள் யாரென்றே வெளிச் சொல்லிக் கொள்ளாமல், கொஞ்ச நாட்களில் தங்கள் பெயரே மறந்து விடும் என்ற நிலையில், எல்லாவற்றிற்கும் காரணம் சோழன்தான்."

"இதெல்லாம் தன் புகழுக்கு இழுக்கு என்று சோழர் என்றுமே கருதவில்லை. சரித்திரம் எழுதும் கோல் அவர்களிடம் இருக்கிறது. அதனால் அவப் பெயரைப் பற்றிக் கவலையே இல்லை. ஆனால், பாண்டியர் கதை முடிந்ததென்று எண்ணி மூடர்கள் பரிகாசமும் செய்து கொண்டிருக்கிறார்கள். சொந்தப் பெண்டு பிள்ளைகளின் மரணத்தைக் கண்டவன் பின் நிம்மதியாகத் தூங்க முடியுமா? பாண்டியன் வெகுண்டு எழுந்தால் சோழர் போன்ற நூறு சாம்ராஜ்யங்கள் மல்லாந்து விழும்!" என்று சபதம் செய்தான்.

பொன்னியின் செல்வர் முதல் முறையாகக் குறுக்கிட்டார் "நீ சோழர்களைக் குறைத்துக் கணக்கிடுகிறாய் என்று நினைக்கிறேன். தரை மார்க்கமாகப் பிடிக்க வேண்டிய இடங்களை யெல்லாம் பிடித்து விட்டனர். இனிக் கடலை கடந்து படையெடுக்கின்றனர். இன்னும் பழையதையே பேசுகிறாய்."



"நான் நினைத்ததை விட உனக்கு அரசியல் நன்றாகவே தெரிகிறது" என்றான் இடும்பன்.

"உன் போன்றோரோடு பேசிப் பேசி நாட்டு நடப்புகளைத் தெரிந்து கொண்டதால்தான்" என்று அவசரமாய்ச் சமாளித்தார் பொன்னியின் செல்வர்.

பின் இடும்பன் தொடர்ந்தான்: "குறுகிய ஆண்டுகளில் எங்கள் நாட்டில் இவ்வளவு மாற்றங்கள். பெரும்பாலானோர் இதுதான் விடுயென்று ஆறுதல் சொல்லிக் கொண்டு சோழருக்குக் கப்பம் கட்டி வாழ்க்கை நடத்தி வந்தார்கள். காட்டில் மட்டும் ஒரு கூட்டம் சோழரை அழிக்கும் எண்ணத்துடன் சமர் புரிகிறது."

"காட்டில் உள்ள ஒரு சிறிய கூட்டம் சோழரை என்ன செய்துவிடமுடியும்?" என்றார் பொன்னியின் செல்வர்.

"அதன் காரணம் என்ன வென்பதை அவர்களிடம்தான் கேட்க வேண்டும். அவர்கள் வாழ்க்கைக் காலத்தில் அந்தப் போராட்டமெல்லாம் உபயோகமற்றதாய்ப் போகலாம். வாழ்க்கைக் காலமும் சோழர் கத்தி முனையில் அல்லது, தூக்கு மேடையில் குறைந்து போகலாம். ஏதேனும் விடிவெள்ளி தென்படுகின்றதா என்று காத்திருக்கின்றனர். என்றாவது சற்று முன்னேற்றம் உண்டாகலாம் என்ற நம்பிக்கை."

பொன்னியின் செல்வர் முகத்தில் ஒரு புன்னகை மெல்லத் தவழ்ந்தது. அதைக் கண்ட இடும்பனுக்கு அவரது யூகம் புரிந்தது. "இப்படிக் கற்பனாலோகத்தில் அடிக்கடி சஞ்சரித்ததால் வெற்றி என்றென்றும் கை நழுவிப் போகும் என்று நினைக்கிறாயா பொன்னா? 'சோழன் மட்டும் என் கையில் கிட்டினால் போதும், அவனை நார் நாராகக் கிழிக்கிறேன். காலடியில் போட்டுப் பூமியுடன் ஒன்றாகும்படி மிதிக்கிறேன்' என்று தினசரி வீண் சபதம் செய்து கொண்டிருக்கிறோம். அவனைத் தோற்கடிக்கும் வழியை அல்லவா செய்ய வேண்டும். செய்யவில்லை என்று நினைக்கிறாயா, பொன்னா?"

"ஆம்" என்று தலையசைத்தார், பொன்னியின் செல்வர்.

"நீ நினைப்பதுப் போல வெறும் வாய்ப் பேச்சில் மட்டும் ஈடுபடவில்லை. ஐந்தாண்டுகளுக்கு முன் வெற்றிக்கு முகமன் சொல்ல ஒரு சந்தர்ப்பம் எழுந்தது. அந்தப் படுபாதகச் சோழர் குலம் செய்த இந்த அட்டூழியத்தை எவ்வளவு நாள் சகித்துக் கொண்டிருப்பது என்று காத்திருந்த எங்களுக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனால், நழுவ விட்டோம்" என்றான் இடும்பன்.

''அப்படி என்ன நல்ல சந்தர்ப்பம்?

''ஆயுதபாணிகளை எதிர்த்து நாங்கள் என்ன செய்யமுடியும் என்று சோழர் நினைத்து அலட்சியமாய் இருந்தனர். நெருக்கடியான நேரத்தில் பாண்டிய நாட்டுக்குப் புத்துயிரூட்ட வேண்டும் என்று நினைத்தோம். எங்கள் தலைவனுக்கோ என்றும் இந்த அடையாளச் செயல்கள் பிடிக்காது. உயிரைப் பணயம் வைக்கிறோம். கை மேல் ஏதாவது பலன் கிடைக்க வேண்டும் என்று நினைப்பான்.''

''அடையாளம் என்றால் என்ன? பலன் என்றால் என்ன?'' என்று வினவினார் பொன்னியின் செல்வர்.

''ஒரு ராஜவிசுவாசி ஓடிச் சென்று மதுரைக் கோட்டையின் மேலேறி வேங்கைக் கொடியை நார் நாராய்க் கிழித்தெறிந்து விட்டு, அதற்குப் பதிலாகக் கயல் நீந்தும் கொடியை ஏற்றினால், அது வெறும் அடையாளம்தான். கீழே அவன் இறங்கும் முன் தர்மச் சாத்துச் சாத்தி விடுவார்கள். அதுவே வீரம் உள்ளவன் விடுதலைப் போராட்டத்தில் ஓரடி முன் வைக்கும்படி வைத்தால் கூடப் போதும். அப்படியொரு பலன் தரும் திட்டம்தான் தீட்டினான் ரவிதாசன். ஒரு காலடி அல்ல, வாமனன் வைத்தானே மூவுலகுக்கும் ஓரடி. அது போன்றது. ஆனால், விதி விளையாடியது. எப்பேர்ப்பட்ட திட்டம் தெரியுமா? மூவரையும் ஒரே நாள் கொல்வதென்று திட்டமிட்டோம்.''

''யாரை?''

''புலியையும் புலிக் குட்டிகள் இருவரையும். அதாவது சோழ அரசனையும் அவன் மகன்கள் இருவரையும்தான். எவ்வளவு பெரிய வேலை தெரியுமா? மூவரையும் தனித் தனியாகக் கொலை செய்ய முயற்சித்திருந்தால் ஜெயித்திருப்போம். ஆனால், சுந்தர சோழன் முன்னதாகக் கொலையுண்டால், அந்தச் செய்தி கேட்டதும் அவன் குமாரர்கள் ஜாக்கிரதையாகி விடுவார்கள் என்றே சிந்தனை கொண்டோம்.''

''திட்டம் எப்படித் தோற்றது?'' என்றார் பொன்னியின் செல்வர். தன் கதையைத் தனக்கே இன்னும் ஒருவன் சொல்லும் போது கூடுதலான ஆர்வம் இருந்தது கேட்பதற்கு.

''சுந்தர சோழனை ஓர் ஊமைக் கிழவி காப்பாற்றி விட்டாள். ஆனால், அதிசயமென்னவென்றால் மூன்றாவதாய் நாங்கள் கொலை செய்ய எண்ணியவன் பொன்னியின் செல்வன். அவனது யமனை யானைப் பாகனுடைய அங்குசத்திலே ஒளிந்திருக்க வைத்தோம். ஆனால், எங்களுக்குத் தெரியாமல் போனது ஒன்று



தான். அதுதான் தோல்வியில் முக்கியமானது. என் எதிரியும் யானைப் பாகன் என்று தெரியாமல் போனது.''

ஒரு நொடி சிந்தித்துவிட்டு, ''ஆகா! என்னவொரு பொருத்தம்! உன் தொழில் அவனுக்குத் தெரியுமாம் பொன்னா!'' என்றான். பொன்னியின் செல்வருக்குப் பகீர் என்றது. நமது கீர்த்தி இந்தக் காடு வரையில் வந்து எட்டியிருக்கிறது என்ற பெருமை முதலில் வந்தாலும், பொன்னன் என்ற புனை பெயரையும், யானைப் பாகன் என்றதையும் ஒன்று சேர்த்துக் கணக்கிட்டுவிடுவானா இவன் என்று பயந்தார். ஆனால், அப்படி நேரவில்லை.

''ஆனால், பொன்னியின் செல்வர் உன் போல் ஜீவனோபாயம் நாடி யானைகளுடன் காலம் கழிப்பவன் அல்ல. உண்மையில் அந்த மிருகங்களை ரசித்து நேசித்து அன்பு செலுத்துபவன். ஆதனால் அந்த யானை அவனை ஒன்றும் செய்யவில்லை. மாறாக விஷம் கொண்ட அங்குசத்தை விட்டெறிந்தது. எல்லாம் அமைத்து வைத்தோம். பொறியைத் தட்டினால் எலி சிக்கிக் கொள்ளும்படியாக அமைத்தோம். ஆனால், அங்கும் எங்கள் துரதிர்ஷ்டம் தொடர்ந்தது.''

மேலும் தொடர்ந்தான் ''ஆனால், ஒன்று. அந்த இளையவன் இருக்கிறானே, அருள் மொழி - அவன் தமையனைப் போலக் கொடியவனல்ல. ஈழம் சென்ற போது மக்களைத் துன்புறுத்தாமல் படையெடுத்தான் என்றுதான் சொல்லுவார்கள். ஆனாலும் பாம்புப் புற்றில் பல்லியா இருக்கும்? அவனும் உள்ளுக்குள் நயவஞ்சகன்தான். பாண்டியர் போராளியைக் கண்டு ஆதரவுடன் பேசுவானா? பார்த்த மாத்திரத்தில் கொன்று விடுவான் அல்லவா?'' என்றான் இடும்பன்.

பொன்னியின் செல்வர் மனதுக்குள் சிரித்துக் கொண்டார். ''தோல்வியைப் பற்றியே பேசுகிறாயே. நீ வெற்றி பெற்ற ஒரு விஷயத்தைச் சொல்'' என்றார்.

''ஆம். தோல்விகள் மூடி மறைத்தாலும் அந்த வெற்றி வெற்றிதான். கடம்பூரில் வெற்றியென்றாலும் மிகவும் கஷ்டப்பட்டு வெற்றி பெற்றோம்.''

''சில காலமாகவே சோழரின் ஆட்சி தென் பாரத நாடெங்கும் பரவிக் கொண்டு வந்தது. கடல் கடந்து கூடப் பார்வையைச் செலுத்தி வந்தனர். போர்க் கப்பல்களை ஆயத்தம் செய்தனர். இதற்கு மேலும் பாண்டியரைப் பிரதான எதிரியாக நினைக்கவில்லை. அதெல்லாம் கடம்பூரில் நடந்த அந்த நள்ளிரவு நிகழ்வுகளுக்கு முன்னால். துணிந்து வந்த பட்டத்து இளவரசனை

நம்பிக்கையான ஒரு நண்பன் வீட்டில் வைத்துக் கொலை செய்தோம். அதற்குப் பின் ஆரம்பித்தது ரகளை. யாருக்கெல்லாம் தமக்குத் தெரியாமலேயே பாண்டியருடன் தொடர்பிருந்தது எனத் தெரிய வந்தது. எவ்வளவு தூரம் பாண்டியர்கள் சோழ அரசில் ஊடுருவியிருந்தார்கள் என்று தெரிய வந்தது. விதி வசத்தால் மட்டுமே தப்பியது சோழர் குலம் எனத் தெரிய வந்தது.''

''விவரமாய்ச் சொல்'' என்றார் பொன்னியின் செல்வர். அன்று கடம்பூரில் என்னதான் நிஜமாக நடந்தது என்று தெரிந்து கொள்ள அவருக்கு ஆவல். ஆனால், அந்த ஆவலைக் குரலிலிருந்து முடிந்த வரை மறைத்தார். ஆனால், அதையெல்லாம் இடும்பன் கவனிக்க வில்லை. அவன் பழைய காலத்துக்கே பறந்து சென்றிருந்தான்.

''கடம்பூர் மாளிகையில் ஓர் இரவு நடந்த காரியம் எல்லா வற்றையும் விட முக்கியமானது. நானும் அந்த நாளுக்கு ஏற்பாடு செய்யப் பல நாட்களுக்கு முன்பே கடம்பூர்ச் சம்புவராயரிடம் வேலைக்குச் சேர்ந்து விட்டேன்'' என்றான்.

உள்ளத்தில் கிராதக எண்ணத்துடன்தான் கடம்பூரில் வேலைக் குச் சேர்ந்திருக்கிறான். அதுவும் பல நாட்களுக்கு முன். அப்போது பாண்டியர் திட்டம் எவ்வளவு ஆழமானது என்று பொன்னியின் செல்வரால் யூகிக்க முடிந்தது.

''நடக்கப்போவதை அறியாமல், மக்கள் விஷயம் தெரியாமல் கோலாகலமாகத்தான் இருந்தார்கள். ஒரே திருமணப் பேச்சும், காதல் நாடகங்களுமாயிருந்தன. ஆதித்தன் வந்திருந்தான். வீர பாண்டியர் மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்க நாங்கள் சபதம் செய்திருந்தோம். பாண்டியக் குலத்து மீன் சின்னம் பொறித்த வீரவாள் அவனைக் கொல்லப் போகிறது என்று காத்திருந்தோம். அந்த கத்தி நந்தினியிடம் இருந்தது.''

''யாரிந்த நந்தினி?'' என்று தெரியாதவர் போலக் கேட்டார் பொன்னியின் செல்வர்.

நந்தினியின் கதையை இடும்பன் விளக்கினான். ''பழுவூர்க் கிழவனை மயக்கி மணம் புரிந்தவள். ஆனால், உண்மையில் அவள் பாண்டியப் போராளி. அது மட்டுமல்ல. பாண்டிய அரச குல ரத்தம் அவளிடமும் ஓடுகிறது. நந்தினி இருந்த காலத்தில் எங்களுக்கு கஷ்டமே இல்லை. நந்தினி சோழர்களிடையே சென்று சேர்ந்தது பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போலானது எங்கள் போராட்டத்துக்கு. வேங்கை போட்ட பொற்காசுகள் வந்து கொண்டே இருக்கும். தன அதிகாரியின் மனைவியல்லவா? நந்தினியைக் கட்டிக் கொண்டு படாத பாடு பட்டார் கிழவர்.



பொன்னைக் கொடுத்துத் தேளைக் கொட்டிக் கொண்ட கதை யாயிற்றே என்று பெரிய பழுவேட்டரையர் நினைத்தார். அப்படி அவரை ஆட்டிப் படைத்தாள்!'' என்று சொன்னான்.

''நந்தினி சோழர் குலத்தைக் கெடுக்க வந்த கொம்பேறி மூக்கன்'' என்று பலரால் வர்ணிக்கப்படுவது பொன்னியின் செல்வருக்குத் தெரியும். ஏற்கெனவே நந்தினிக்கும் ஆதித்தனுக்கும் ஆகாது. இந்த இரு ஜன்மவிரோதிகளின் மோதலுக்கு, மகா யுத்தத் தின் தளமாக கடம்பூரின் அந்தப்புரம் அமைந்தது. வெட்கக்கேடு சோழர் குலத்துக்குத்தான். மாற்றான் மனைவி நந்தினியை நடு இரவில் அவளது அந்தப்புரத்தில் காண வந்த ஆதித்தன் செத்துக் கிடந்தான்.

''நந்தினி ஆதித்தனைக் கொன்றாளா?'' என்று வினவினார் பொன்னியின் செல்வர்.

''இல்லை, இல்லை. நெருக்கடியான சமயத்தில் நந்தினி தவறி விட்டாள். பெண்களெல்லாம் சதிநடத்தத் தொடங்கினால் அதன் இலட்சணம் எப்படியிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை. நந்தினி கொலை செய்யும் வேளையில் செய்ய வில்லை.''

''அவள் ஏன் கொலை செய்யவில்லை?''

''முக்கிய நோக்கமாயிருந்ததை மறந்துவிட்டு பழைய காதலை நினைத்தாள் போல. இப்போது கூடத் தஞ்சைக்குச் சென்று பொன்னியின் செல்வனுக்கு முன் கண்ணீரும் கம்பலையுமாய் நின்றாளாம்'' என்று குறை சொன்னான் இடும்பன். பொன்னியின் செல்வருக்குப் பாண்டியரின் ஒற்றர் படை எவ்வளவு சிறப்பாக நடக்கிறது எனத் தெரிந்தது.

''பிறகு?''

''பிறகென்ன? வேட்டை மண்டபத்தில் ஒளிந்திருந்த நான்தான் அந்த வேலையைச் செய்ய வேண்டியிருந்தது'' என்றான் இடும்பன். ''எனினும் மற்றவர் இருவரும் தப்பி விட்டனரே? நானே மூன்று இடத்திலும் இருக்கும் மந்திரம் கற்றிருந்தால் அன்று முழு வெற்றிகிட்டியிருக்கும்!'' என்றான்.

அருள்மொழி ஒரு கணம் சிந்தனை செய்தார். ''இடும்பா. கிடைத்த ஓர் அரிய சந்தர்ப்பத்தை நழுவ விட்டீர்கள். இனி உன் கூட்டத்தால் மாபெரும் சோழச் சைனியத்தை என்ன செய்ய முடியும்? கொசுக்கடி போலத்தான் அவர்களுக்கு உமது தாக்குத லெல்லாம்'' என்றார்.

''எப்போதும் இப்படியேயிராது பொன்னா. அவ்வப்போது சோழனென்னும் ஆலமரத்தை வேரோடு வீழ்த்தச் சந்தர்ப்பம் கிடைக்கும்'' என்றான் இடும்பன். ''இன்றைக்குச் சோழர் செயலுக்கு ஈடான பதிலை எங்களால் கொடுக்க முடியாது. ஆனால், என்றாவது எங்கள் வாரிசில் ஒருவன் வருவான். தஞ்சையைப் பிடிப்பான். மாளிகையை இடிப்பான். எருது பூட்டிய கலப்பைகள் கொண்டு ஊரையே உழுது விஷக்கடுகு பயிர் செய்து தஞ்சையை மீண்டும் வயலாக்கி அந்தச் சோழர் கலாச்சாரம் இருந்ததையே சரித்திரத்திலிருந்து அடியோடு அழிப்போம். சோழன் என்பவன் இந்த உலகில் இருந்ததையே பின்னால் வரும் மக்கள் அறியமாட்டார்கள்!'' என்று சபதம் செய்தான்.

இந்த வார்த்தைகள் பொன்னியின் செல்வருடைய காதில் இரும்பைக் காய்ச்சி விடுவது போல் விழுந்தன. இதழ்கள் துடித்தன. மனதுக்குள் குமுறினான். ''க்ஷத்ரியனாகப் பிறந்த நீ இப்போது செய்தது மாபெரும் குற்றம். இவனைக் கொன்றிருக்க வேண்டுமே. ஏன் செய்யவில்லை?'' என்று கேட்டது அவர் மனம். 'அவன் மேல் வைத்திருக்கும் விசித்திர அன்பினாலா? இல்லை, கருவூரார் நடந்த இந்தப் பிரதேசத்தில் பழி வாங்கும் எண்ணம் எல்லாம் காற்றில் கரையும் கர்ப்பூரம் போலக் கரைந்து விடுமா?'

இதற்கு மேல் அவரால் பேச முடியவில்லை. திரும்பிச் சென்று படுத்து விட்டார். இடும்பனோ கருவூராரின் பாடலை நினைத்த படி தூங்காமல் அமர்ந்திருந்தான்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று இருபத்துநான்கு

## இடும்பனின் நண்பர்கள்

கருவூராரின் சமீபத்தில் சிலமாத காலம் ஓடியது. கணக் கெல்லாம் வைத்துக் கொள்ளவில்லை இருவருமே. ஆனால், ஆனந்தமாய்ச் சென்ற காலமது. அவற்றைக் கணக்கிட்டுக் கெடுக்க விரும்பவில்லை. பின் பல கேள்விகள் எழும். இத்தனை நாள் நன்றாய் இருந்ததே. இன்னும் எத்தனை நாளுக்குத் தாங்கும் இந்தச் சந்தோஷம் என்று மனதுக்குள் பயமோ என்னவோ.

ஒரு நாள் சூரியன் வானில் ஏறத் தொடங்கிய நேரம், மதியம் அபிஷேகத்துக்கு நீரும் தாமரை மலர்களும் கொண்டு வர



இடும்பன் ஆற்றுக்குச் சென்றான். அவன் சென்ற சில நிமிடங் களில் வானிலையில் திடீரென மாற்றம். ஆற்றின் மேல் காற்றின் வேகம் அதிகமாகிக் கொண்டிருந்தது. கரையோரத் தென்னை மரங்கள் பேய் பிசாசுகளைப் போல் பயங்கரமாக ஆடின. வானைக் கிழித்துக் கொண்டு மின்னல் வந்தது. மின்னலைத் தொடர்ந்து இடி முழக்கம் கேட்டது.

இடும்பனைக் காணவில்லை யென்றவுடன் பொன்னியின் செல்வருக்கு மனதின் ஓரத்தில் கலக்கம். இந்தப் பேய்க் காற்றில் பல அபாயங்கள் உண்டு. கிளைகள் முறிந்து விழலாம். வானம் இருட்டி விட்டபடியால் கண் தெரியாமல் குழியில் தடுமாறலாம். மின்னல் தாக்கிக் கண் பார்வையை இழந்திருக்கலாம். போய் அவனைப் பார்த்துவிட்டு வரலாமா என்ற யோசனை.

பொன்னியின் செல்வரோ தியானத்திலிருந்த கருவூராருக்கு அருகில் இருந்தார். அவர் திடீரெனக் கண் விழித்து ஏதேனும் கேட்டால் எடுத்துத் தர இருவரில் ஒருவர் இருப்பது வழக்கம். ஆனால், இன்று வரை அவர் தியானத்தின் பாதியில் கண் திறந்ததே இல்லை. ஏதும் கேட்டதும் இல்லை. அதனால் பொன்னியின் செல்வர் ஒரு முடிவுக்கு வந்தார்; போய்த்தான் பார்ப்போமே என்று.

ஆற்றை நோக்கிப் பொன்னியின் செல்வர் நடந்த அரை நொடியில் கருவூரார் கண்விழித்தார். தூரத்தில் பொன்னன் செல்வது அவருக்குத் தெரிந்தது. ஒரு மெல்லிய புன்னகை அவர் இதழ்களில் ஜொலித்தது. இளநகை புரிந்துவிட்டு, பின் கண்களை மூடி திரும்பவும் தியானத்துக்குச் சென்று விட்டார்.

எதிர் காற்றில் நடப்பது அவ்வளவு சுலபமாக இல்லை. எனினும் பொன்னியின் செல்வர் வேகமாக நடந்தார். இடும்பன் எங்கிருப் பான் என்று யூகித்து விட்டார் பொன்னியின் செல்வர். இடும்பன் பூப் பறிக்கவும் நீர் கொண்டு வரவும் செல்லும் வழக்கமான இடத்துக்கு நேரே சென்றார்.

ஆற்றங்கரையையொட்டி ஒரு குழியிருந்தது. வைகையில் போன முறை வந்த வெள்ளம் அதில் நீரை விட்டுச் சென்றிருந்த படியால் அது தடாகம் போலக் காட்சி தந்தது. அதில் மீன்கள் துள்ளி விளையாடும். தாமரைப் பூக்கள் பூத்துக் குலுங்கும். தினசரி அவற்றை இரவு பூஜைக்குப் பறிக்கச் செல்வான் இடும்பன்.

எதிர்பார்த்தபடி குளத்தருக்கே இடும்பன் இல்லை. ஆனால், அவன் பூப்பறித்ததற்கு அடையாளமாக ஒரு கொத்துத் தாமரை மொட்டுகள் கரையில் இருந்தன. குளத்துக்கு வெளியே சேறும்

சகதியுமாய் இருந்தது. 'ஆற்றின் நடுவே சென்று தெளிந்த நீரை முகரப் போயிருப்பானோ?'

சுற்று முற்றும் பார்த்தார். இன்னொரு மின்னல் அடிவானத்தில் இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது. இடி முழக்கத்தை தொடர்ந்து பேச்சுக் குரல்கள் கேட்டன. நின்ற இடத்திலிருந்த படியே எட்டிப் பார்த்தார். மரங்களுக்குப் பின் இடும்பனைச் சுற்றி மூன்று பேர் நின்றிருந்தனர்.

அவர்களைப் பார்த்தவுடன் இடும்பன் தடுமாறியிருக்க வேண்டும். கையிலிருந்த பானையைக் கை நழுவ விட்டான் போல. அது சுக்கு நூறாய்க் கீழே கிடந்தது. புதியவர்கள் சூழ்ந்து கொண்டது அன்பிலா அந்தரங்கத்திலா என்று சொல்ல முடிய வில்லை. ஆனால், இடும்பனுக்கு அபாயமொன்றுமில்லை எனத் தெளிவாய்த் தெரிந்தது. அதனால் தான் தலையிடல் ஆகாது என்று மறைவில் இருந்தார் பொன்னியின் செல்வர்.

அவர்கள் யார் என்பதை முன்னமே ஊகித்துக் கொண் டிருந்தார். பாண்டியர் ஆபத்துதவிகளாக இருக்க வேண்டும். ஏதோ இரகசிய சம்பாஷணை நடக்கிறது. என்னதான் நடக்கிறது என்று அறிந்து கொள்ள ஆவலுற்றவராய் அவர்கள் அறியா வண்ணம் முடிந்தவரை அருகில் சென்று உற்றுக் கேட்டார். மரத்தின் பின்னிருந்து தெரிந்தவரை எட்டிப் பார்த்தார். சற்று அருகில் சென்றவுடன் அவர்கள் பேசிய வார்த்தைகள் யாவும் கேட்கவில்லை யென்றாலும் அவற்றுள் சில அவர் காதில் நன்றாய் விழுந்தன. அதிலும் ஒருவன் உரத்த குரலில் கணீர் என்று பேசினான்.

ஒட்டுக் கேட்பது அநாகரிகம் என்று முதலில் தோன்றினாலும், வந்தவர்கள் யாரென்று தெரிந்து கொள்ளும் ஆவலும் எழுந்தது. 'பாண்டியரின் திட்டம் ஏதாவது நிறைவேறப்போகிறதா? இல்லை, ஏற்கெனவே நிறைவேறிவிட்டதா? ஏதேனும் திட்டம் தீட்டி இடும்பனுக்காகக் காத்துக் காத்துப் பொறுமையிழந்து வந்தனரோ? அல்லது வேறு ஏதேனும் செய்தி கிடைத்திருக்கிறதோ?'

இல்லையென்றால் இடும்பனை ஏன் பார்க்க வந்திருக் கிறார்கள்? பல சொற்கள் தெளிவாகக் காதில் விழவில்லை. இடும்பனைச் சுற்றியிருந்தவர்கள் ஏதோ பரப்பரப்புத் தரும் விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்பது மட்டுந் தான் தெரிந்தது. அவனிடம் நாட்டுக்குத் திரும்பும்படி வலியுறுத்திக் கொண்டிருந்தனர்.



''இடும்பா! உன்னைத் தேடி எவ்வளவு தூரம் வருவது? காட்டில் ஒளிந்திருப்பதைக் காட்டிலும் முக்கியமான காரியம் அங்கே நமக்கு இருக்கிறது. இந்த யுத்தத்தில் நமக்கு முக்கால் பங்கு வெற்றி கிடைக்க ஒரு திட்டம் வைத்திருக்கிறான் ரவிதாசன்'' என்றான் ஒருவன்.

''இப்படித்தான் பாதிப் பங்கு, முக்கால் பங்கு என்று சொல்லிக் கொண்டே இருக்கிறீர்கள். இருப்பதும் கை நழுவிப் போய்க் கொண்டிருக்கிறது'' என்றான் பதிலுக்கு இடும்பன்.

''தலைவர் கூப்பிடுகிறார். நம் கனவெல்லாம் நினைவாகும் தருவாயில் கண்ட கண்ட பரதேசியுடன் காலம் கழிக்கிறாயே!'' என்று வந்தவன் திட்டினான்.

அதற்கு இடும்பனோ, ''அவர் மகான். நம் போராட்டத்துக்கு அவர் ஆசீர்வாதம் நிச்சயம் வேணும். அது சரி. எப்படிக் கண்டு பிடித்தீர் நான் இங்கு இருக்கிறேன் என்று?''

''பாண்டியரின் ஒற்றர் படையைப் பற்றிக் குறைவாக எடை போடாதே!'' என்று சொல்லி ஒருவன் சிரித்தான். பின் ''அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லை. ஊரூராய் விசாரித்து வந்தோம். இங்கு இந்தச் சித்தருடன் யாரோ புது ஆட்கள் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டோம். நீயாக இருக்கலாம் என்று உத்தேசமாக எவ்வழி இங்கே உன்னைத் தேடி வந்தோம்'' என்று சொல்லிவிட்டு, ''உன்னோடு இன்னொருவன் இருக்கிறானாமே, அவன் யார்?''

''யானைப் பாகன் அவன். நல்லவன். என் உயிரைக் காப் பாற்றினான். நம்முடன் வருவானா என்று கேட்கப் போகிறேன்.''

கொஞ்சம் நேர சம்பாஷணைக்குப் பிறகு, ''நான் சித்தரிடம் சொல்லிவிட்டுத்தான் வருவேன்'' என்றான் இடும்பன்.

''உன் இஷ்டம். இவ்வளவு நாள் காத்திருந்த புரட்சி இன்னும் ஒரு நாழிகை நேரம் காக்காதா என்ன? நாங்கள் இங்கேயே இருக்கிறோம். சீக்கிரம் அவரிடம் ஞான தீக்ஷையெல்லாம் பெற்று வா'' என்று சொல்லிச் சிரித்தான் வந்தவன்.

தியானம் செய்யும் சித்தருக்கு எதிரே ஆற்றங்கரையில் விட்டுவந்த பொன்னனைத் தேடி இடும்பன் வந்தான். பொன்னி யின் செல்வரோ அவ்விடத்தை விட்டு விரைந்து வந்த பின் தெரிந்தும் தெரியாதது போல் சித்தருக்கு முன் அமர்ந்திருந்தார்.

திரும்பி வர அழைப்பு வந்தது இடும்பனுக்கு அளவிலாத குதூ கலத்தை அளித்திருக்கிறது. ''பொன்னா! எனக்கு வரச்சொல்லிச் செய்தி வந்திருக்கிறது. என் மக்களுக்கு அதற்குள் அவசரம் பொத்துக் கொண்டுவந்துவிட்டது. ஏதோ வேலையாம். என்னை

உடனே வந்துவிட வேண்டுமென்று செய்தி அனுப்பி விட்டார்கள். ஆனால், ஒன்று. இத்தனை நாளும் எப்போது வரும் என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் வந்திருக்கிறது போல. மனப் பூர்வமாக எனக்குச் செல்லத்தான் ஆசை. ஆனால், உன்னையும் சித்தரையும் விட்டு எப்படி அகல்வது என்று தான் தெரியவில்லை'' என்றான்.

''அப்போது நாம் பிரியும் நேரம் வந்து விட்டதா?'' என்றார் பொன்னியின் செல்வர்.

''அப்படித்தான் நினைக்கிறேன். கொஞ்ச நாள் கருவூராருடன் இருந்து, போகும் வழிக்குப் புண்ணியம் தேடலாம் என்றால் முடிய வில்லை. என் ராசிக்குப் பெரிய மனிதர்களின் உறவும் சகவாசமும் ஒத்துவராது என்று நினைக்கிறேன். என் கடமை அழைக்கிறது. நான் கிளம்புவதைப் பற்றிச் சித்தரிடம் சொல்லி மேலும் அவர் நெஞ்சைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. அவர் போகாதே என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது என்றும் தெரியவில்லை. சொல்லாமல் ஓடிப் போய்விடலாமா என்று கூடத் தோன்றுகிறது'' என்றான் இடும்பன்.

''அதற்கு அவசியமும் ஏற்படாது. ஒரு நாளும் போகாதே என்று உன்னிடம் சொல்ல மாட்டார். நீ நம்பியிருக்கலாம். ஆனால், அவருக்கு மனத்தாங்கல் இல்லாத முறையில் சொல்லிவிட்டுச் செல்லவேண்டும்'' என்றார் பொன்னியின் செல்வர்.

''வா, சித்தரிடம் சொல்லிவிட்டு நான் கிளம்புகிறேன்'' என்றான் இடும்பன்.

இருவரும் பணிவாகச் சென்று கருவூரார் முன் நின்றனர்.

காலடிகள் ஓசை கேட்டவுடன் கண் திறந்தார் கருவூரார். ''என்ன இடும்பா, கடமை அழைக்கிறதா?'' என்றார் சித்தர். அவர் முகத்தில் ஆச்சரியத்தின் அறிகுறியைக் காணோம். அவன் எண்ணத்தை முன்கூட்டியே அறிந்து கொண்டிருந்தார், எப்போதும் போல.

''ஆம் ஐயனே!'' என்றான் இடும்பன். அவன் சொன்னதைக் கேட்டு விட்டு ஏளனமாக சிரித்தார் சித்தர்.

''என் சீடனாக நீ இருந்ததும் இப்போது உலகக் கடமைகளைக் கவனிக்கச் செல்வதும், இறைவனுடைய சித்தமாக ஏற்பட்டிருக் கிறது. செல்'' என்று சொல்லிவிட்டு, ஒரு கையை உயர்த்தி வாழ்த் தினார். பின் சட்டென எழுந்து கோயிலுக்குள் சென்று விட்டார். அவர் அதற்கு மேல் பேசாதது இருவருக்குமே ஆச்சரியம்.



எப்போதும் ஏதாவது அர்த்தம் தொனித்த அறிவுரை சொல்பவர் இன்று ஒன்றும் சொல்லாமல் செல்கிறாரே!

அவர் கோயிலுக்குள் செல்லும் வரை காத்திருந்துவிட்டு, ''நண்பா! நீ கிளம்பு'' என்றான் பொன்னியின் செல்வர்.

கிளம்ப ஆயத்தமானான் இடும்பன். மெதுவாக இருவரும் வைகையாற்றங்கரைக்குச் சென்றார்கள். ஆனால், அவனுக்கு இரண்டு வருத்தங்கள். ஒன்று, தாய் வீடாய் இருந்த இவ்விடத்தை விட்டுச் செல்வது ஒரு வருத்தம். பாசப் பிணைப்பு நிறைந்த நட்பு பிரியப் போகிறதே என்ற இன்னுமொரு வருத்தம்.

அவனுடன் ஆற்றங்கரை வரை வழியனுப்ப வந்த பொன்னியின் செல்வர் சற்று எச்சரிக்கையுடன் செயல்பட்டார். வந்தவர்கள் கண்ணில் படாமல் ஒதுங்கியே இருந்தார். அவர்களில் யாராவது தன்னை அடையாளம் தெரிந்து கொண்டால் பின் சிரமம்.

பிரியும் சமயத்தில் இடும்பன் உருக்கமாய்ப் பேசினான். ''என் கடமை அழைக்கிறது. போகலாமென்று கிளம்புகிறேன். இந்த நாடு எனக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கெல்லாம் வேறு எந்த விதத்தில் நன்றி செலுத்தப் போகிறோம்? இந்தச் சந்தர்ப்பத்தில் நாட்டுக்காக உயிர் பொருள் ஆவியென அனைத்தையும் தியாகம் செய்யாவிட்டால் நான் உயிரோடிருந்து என்ன பயன்? என் போராட்டத்துக்காக என்னை உயிருடன் வாழவைத்தவனே நீதான். எனக்கு எவ்வளவோ ஒத்தாசை செய்திருக்கிறாய். கைம் மாறாக உனக்கு நான் என்ன செய்ய முடியும்? இன்னும் ஓர் அரிய சந்தர்ப்பத்தில் என் உயிரைத் தியாகம் செய்யும் அளவுக்குக் காப்பாற்றினாயே! அப்படிப்பட்ட புண்ணியவானாகிய உன்னை விட்டுச் செல்ல வேண்டுமா என்றுதான் மனம் கேட்கிறது. பொன்னா! உன்னையும் எங்கள் போராட்டத்தில் சேர்த்துக் கொள்ள எண்ணினேன். நீயும் எங்களுடன் வா. எங்கள் போராட் டத்தில் கலந்து கொள்'' என்று அழைப்பு விடுத்தான் இடும்பன்.

''நான் வந்து அப்போராட்டத்துக்குச் என்ன செய்யமுடியும்?''

''மத யானையைத் தந்திரமாகச் சிக்கவைத்த விதத்தைத்தான் கண்ணால் பார்த்தேனே. அந்த தந்திரம் உன்னிடம் உள்ளது. மஹானுக்குச் சேவை செய்கிறாயே. அந்தப் பணிவு இருக்கிறது. எங்கள் போராட்டத்துக்குப் புதிய சேர்க்கைக்கு உன்னைப் போலத் தகுதியான ஆளைக் காண முடியாது. இவ்வளவு திறமை யுள்ள உன்னை எங்களுடன் இணைத்துக் கொண்டால் எங்களுக் குத்தான் நன்மை'' என்றான்.

''இல்லையப்பா, அது எனக்கு ஒத்து வராது!'' என்றார் பொன்னி யின் செல்வர். ''எனக்கு வேறு வேலையிருக்கிறது. போரின் மீது எனக்கு அவ்வளவாக ஆர்வமும் இல்லை'' என்றார்.

''ஆமாம். அதை நானும் பார்த்தேனே'' என்றான் சிரித்தபடி இடும்பன். ''கருவூராரை விட்டாலும் நீ யானைகளைப் பழக்கச் சென்றுவிடுவாய்.''

''அது மட்டுமல்ல இடும்பா. இருவரும் சென்று விட்டால் பின் சித்தருக்கு யார் சேவை செய்வது?'' என்றார் பொன்னியின் செல்வர்.

''அப்படியென்றால் விடு. எல்லாவற்றிற்கும் நேரம் வர வேண் டும். என்னைக் கேட்டால் உன் பாடு யோகந்தான். இன்னும் சில நாள் இவருடன் இருப்பாய் போலிருக்கிறது. ஆனால், ஒன்று. நாங்கள் ஆயிரமாயிரம் போர்க்களங்களுக்குச் சென்று வர வேண்டும். ஆனால், வெற்றி என்றாவது எங்களுக்குக் கிட்டும். கிட்டியவுடன் இருக்கிறது சோழர் கதை'' என்றான் இடும்பன் காரி.

''அது போலவே வெற்றி கிட்டியவுடன், பொன்னா உன்னைத் தேடிக் கண்டுபிடித்துப் பெரும் பதவி வாங்கித் தருகிறேன். பாண் டிய நாட்டில் உள்ள எல்லா யானைப் பாகன்களின் தலைவன் என்ற பதவி வேண்டுமா?'' என்று சொல்லிச் சிரித்தான். ''அதுவரை நீ இங்கு இருப்பாயா? எவ்வளவு நாள் இவருக்குச் சேவை செய்யப் போகிறாய், பொன்னா? உன்னை மீண்டும் எப்போது பார்ப் பேன்?'' என்று கவலை தொனித்த குரலில் கேட்டான் இடும்பன்.

''நான் வந்தக் காரியம் இன்னும் ஆகவில்லை இடும்பா. உனக்கு உத்தரவு வந்து விட்டது. நீ செல். அப்படி உத்தரவு வரவிலை யென்றால் மீதி வாழ்நாளை இங்கேயே கழித்து விடலாமோ என்ற ஆசை. என்றாவது விதியின் வசத்தால் சந்தித்தால் இன்று போலக் கட்டித் தழுவுவோம்!'' என்றார் பொன்னன்.

''கருவூராரிடமே முழுநேர சிஷ்யனாக மாறிவிட்டாய் போலிருக்கிறது. எனக்கும் ஒரு ஆசைதான். ஆனால், கடமை அழைக்கிறது. ஏதோ நீயாவது சண்டை சச்சரவு என்று இல்லாமல் சந்தோஷமாக இரு!'' என்று வாழ்த்தினான் இடும்பன்.

ஆற்றங் கரைக்கு இருவருமாய் நடந்தனர். அப்போது இடும்பன், ''நண்பா! உன்னை விட்டுப் பிரிய மனமே வரவிலை. நீ செய்த உதவிகளுக்கெல்லாம் கைம்மாறாக என்னால் எதுவும் செய்ய முடியாது. பொன்னா, உனக்கு ஒரு நன்றிக் கடன் இருகிறதே. எப்படிப் பெற்றுக் கொள்வாய்?''



''எதைச் சொல்கிறாய்?''

''என் உயிரைக் காப்பாற்றினாயே. அதற்கு ஈடு என் உயிர் தானே?''

''எனக்கு வேணும் என்கிற போது அதை கேட்டு வாங்கிக் கொள்கிறேன். இப்போது போய் வா நண்பா'' என்று சொல்லி சிரித்தார் பொன்னியின் செல்வர்

''ஆமாம்! மறவாதே. என் உயிர் என்றும் உன்னுடையது!'' என்று வாக்குக் கொடுத்தான். இருவரும் கட்டித் தழுவி அவரவர் வழியே சென்றனர்.

இந்தப் பூவுலகில் பிறந்தவர்க்கு வாழ்க்கையே ஒரு புதிர். விதியின் இரகசியங்களை மானிடர் அறிவது கடினம். அதை அறிந் தாலும் புரிந்து கொள்வதென்பது மிகவும் கடினம். வரப்பிரசாதம் போல வந்தது பெரும் தொல்லையாகிப் போகும். அதே சமயம் எதிரி நண்பன் போலத் தோற்றத்தில் தெரிவான். குழம்பினார் பொன்னியின் செல்வர்.

வற்றிக் கிடந்த வைகையின் அக்கரையில் தழைத்திருந்த தாவரங் களுக்குள் அந்தக் கூட்டம் மறையும் வரை பார்த்துக் கொண் டிருந்தார் பொன்னியின் செல்வர். அந்தக் கூட்டத்தில் ஒருவன் மட்டும் பத்தடிக்கு ஒரு முறை திரும்பித் திரும்பிப் பார்த்துச் சென்றான். அது இடும்பன் காரிதான் என்று பொன்னியின் செல்வருக்குத் தெரிந்தது. மனதோரம் ஒரு சின்ன வலி. மிகவும் வேண்டப்பட்டவனிடமிருந்து பிரிந்தது போல. அதுவும் நிரந்தர மாகப் பிரிந்தது போல. கடைசியில் அவனைப் பார்த்தது மட்டும் நினைவில் நிற்கும். இந்தப் பரந்த உலகில் அவனைச் சந்திக்க இனி இயலாது என்று நினைத்த போது ஏதோ உடலின் ஒரு பாகமின்றி இனி வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது போலொரு உணர்வு.

அவர் உள்ளத்தினுள்ளே இனந்தெரியாத சங்கடமும் குடி கொண்டது. ஏன் இந்த வருத்தம் என்ற வினா? வழியில் சந்திக்கும் மனிதர்கள் சத்ருவாகவோ மித்திரனாகவோ வழிப்போக்கனா கவோ இருக்கலாம். ஆனால், இந்தச் சந்திப்பின் அர்த்தம்தான் என்ன? புரியாததால் வந்த மனக் கஷ்டமா? இடும்பனுக்கு அவனுடைய இலக்குத் தெரிந்து விட்டது. தனக்கு இன்னமும் தெரியவில்லையே என்ற வருத்தமா?

ஆற்றைக் கடந்து சென்று கொண்டிருந்த இடும்பனின் முதுகைப் பார்த்தபடி பொன்னியின் செல்வர் நினைத்தார் 'நண்பா! இனி எப்படிச் சந்திக்கப் போகிறோமோ? எந்த நிலையில் சந்திக்கப் போகிறோமோ?'

அப்போது தன் தோளின் மீது ஆதரவான கரம் ஒன்று விழுந்ததை உணர்ந்த பொன்னியின் செல்வர் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். அங்கு முகத்தை மலர் போல் அழகுபடுத்திய புன்னகையுடன் கருவூர்த் தேவர் நின்றிருந்தார்.

''என்ன வருத்தம் பொன்னா? அவனைக் கொல்லாமல் விட்டோமே என்று வருத்தமா?'' என்றார் சித்தர்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்தைந்து
## 'திரும்பிச் செல்!'

அந்தக் கொடும் வார்த்தைகளைக் கேட்டவுடன், திடுமெனக் கனவு உலகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தார் பொன்னியின் செல்வர்.

''சுவாமி! என்ன சொல்கிறீர்கள்? இடும்பனை நான் கொல்வதா?''

சிரித்தார் சித்தர். எல்லாம் தெரிந்தவர் சிரிக்கும் சிரிப்பு.

''நண்பனை விட்டுப் பிரிய மனமே வரவில்லையோ பொன்னா? அவன் மறுபடியும் வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டு காத்திருக்காதே. அந்த உத்தேசமே அவனுக்குக் கிடையாது'' என்றார்.

இடும்பன் அங்கிருந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் தனிமை வந்துவிட்டது போலொரு எண்ணம் உண்மையில் பொன்னியின் செல்வருக்கு இருந்தது.

''அதற்காக அவனை நீ சந்திக்கும் கடைசிச் சந்தர்ப்பம் இது என்றும் கலங்காதே. கவலையை விடு. நீங்கள் இருவரும் இன்னும் ஒரு முறை சந்திப்பீர்கள்'' என்று சொல்லி வாய் விட்டுச் சிரித்தார் கருவூரார். ''இன்னும் ஒரே ஒரு முறை!'' என்று அதை வலியுறுத்தினார்.

அவர் சிரிப்பின் குரல் கேட்டுக் காகங்களெல்லாம் வானை நோக்கிக் கத்திக் கொண்டே பறந்தன. சிறகடித்த சப்தமும் கரைதலும் அவர் சிரிப்புக்கு எதிரொலி போலக் கேட்டன.



அவர் சொன்னது புரியாமல் பொன்னியின் செல்வர் மீண்டும் ஒரு முறை ஆற்றை நோக்கினார். ஆனால், இடும்பனும் அவனது கூட்டத்தாரும் கண் பார்வைக்கு மறைந்து விட்டனர். பொன்னியின் செல்வருடைய கண்கள் கலங்கியிருந்ததைப் பார்த்துக் கருவூரார் ''உன் கண்கள் குளமாகும் அளவுக்கு அங்கு செல்கிறானே, அவன் யார் அருள் மொழி?'' என்றுகேட்டார்.

சித்தர் அவருடைய இயற்பெயரை வைத்து அழைத்தது அதிர்ச்சி. ''ஐயனே! என் பெயர் உமக்கு.....'' அதுவரை பொன்னா, பொன்னா என்று வாயார அழைத்த சித்தர் இன்று தானே மறந்த தன் நிஜப் பெயரைச் சொல்லி அழைத்தது அதிர்ச்சி.

''உன் பெயர் எனக்குத் தெரியும், அருள் மொழி. உனக்குத் தாய் தந்தை ஒரு பெயர் வைத்தனர். மக்கள் ஒரு பெயர் வைத்தனர். நீயாகவும் ஒரு பெயர் வைத்துக் கொண்டாய். இனியும் உனக்கு ஒரு பெயர் உண்டு. திருவீழிமிழலையில் சிவனுக்கு ஒரு பெயருண்டு. 'அரசர்களுக்கு அரசே' என்று. அந்தப் பெயரும் உனக்கு ஒரு நாள் பொருந்தும். சரி, அதை விடு. எதிர் காலம் வரும் போது அதைப் பார்த்துக் கொள்ளலாம்'' என்றார். ''இப்போது சொல். இடும்பன் சென்று விட்டான் என்று ஏன் கண் கலங்குகிறாய்?''

''சுவாமி! இடும்பன் என் நண்பன். நான் உயிரைக் காபாற்றிய நண்பன்.''

''அது நேற்று. அதற்கு முன்?''

''சுவாமி....'' என்று இழுத்தார் பொன்னியின் செல்வர்.

''அனைத்தையும் அறிந்தவன் நான். அருள்மொழி! நான் சொல்லட்டுமா? நீ உயிரை எடுக்க வேண்டிய ஜன்ம விரோதியல்லவா அவன்? அவனுடன் சேர்ந்து இந்த மூன்று மாதங்கள் ஆட்டமென்ன, பாட்டென்ன, கூத்தென்ன, குதூகலம் என்ன? உன் வாழ் நாளின் மிக இன்பமான நாட்களை உன் ஜன்ம விரோதியுடன் கழித்திருக்கிறாய். இதில் என்ன விந்தையென்றால், அவன்தான் உன் எதிரி என்று தெரிந்து கொண்டே செய்திருக்கிறாய். பொன்னா! உலகமே நாடகம். உலகமே நாடகம்!'' என்றார்.

என்ன சொல்வதென்று தெரியாமல் திகைத்தார் பொன்னியின் செல்வர்.

மீண்டும் தொடர்ந்தார் கருவூரார்: ''இடும்பனின் பிரிவு உன்னை வாட்டுகிறதா? உன்னைப் பிரிந்து உன் குடும்பம் அங்கு வாடுவதை நினைத்தாயா? அது உன்னை வாட்டவில்லையே! அதிலும் இவன் உனக்கு உறவும் இல்லை. உதிர பந்தமுமில்லை. ஜன்மத்துக்குத் துவேஷிக்க வேண்டிய பகைவனல்லவா? உன் குல

ரத்தத்தைச் சிந்தியவன் அல்லவா? இதெல்லாம் பார்க்கும்போது வாழ்வே ஒரு மாயை என்று உனக்குப் புரியவில்லையா?'' என்றார்.

''எல்லாம் மாயை என்றால் பின் நிஜம்தான் என்ன சுவாமி?'' என்று தன் ஐயத்தை வெளியிட்டார் பொன்னியின் செல்வர்

''எனக்கொரு நிஜம் இருக்கிறது. உனக்கொரு நிஜம் இருக்கிறது. நீயாகத்தான் தேடிக் கொள்ள வேண்டியது.''

''பின் இவ்வளவு நாள் தேடியது?''

''இன்னமும் தேட வேண்டும். இது உனக்குள் தேட வேண்டியது. நாடு நாடாய், நகர் நகராய்ப் போய்த் தேடுவதல்ல.''

''மாயை மாயை என்கிறீரே. அப்படியென்றால்......?'' பொன்னி யின் செல்வருக்கு உண்மையில் தெரிந்து கொள்ள ஆர்வம்.

''சொல்கிறேன். ஆற்றைக் கடந்து சென்றானே இடும்பன். அஞ்சா நெஞ்சம் கொண்ட ஒரு போர் வீரனை, உன் சொந்த அண்ணனைக் கொன்றவன் அவன். வாள் வீச்சில் வல்லவன், வேலெறிவதில் சூரன் என்றிருந்தவனைச் சதி செய்து கொன்றவன். அவனை உன்னிடம் விதி ஒப்படைத்தது. நீ என்ன செய்தாய்? அவன் உயிரைக் காப்பாற்றினாய். அந்த மத யானைக்குத் தெரிந்த நியாயம் கூட உனக்குத் தெரியவில்லை. இவை யெல்லாம் மாயை தான். அவன் யாரென்று உனக்குச் சந்தேகமறத் தெரிந்ததுதானே. நீயும் க்ஷத்ரியன்தானே. நானா வந்து உன் கையைப் பிடித்து அவனைக் கொல்லாதே என்றேன்?'' கருவூரார் குரலில் நையாண் டித்தனம் தெரிந்தது.

குழம்பி நின்ற பொன்னியின் செல்வருடைய கையைப் பற்றிக் கருவூரார், ''என்னுடன் வா கோயிலுக்கு. பல வேலைகள் உள்ளன. இனி நீயும் நானும் மட்டும்தானே!'' என்றார். இருவரு மாகத் திரும்பினார்கள். நடக்கும் போதே அவ்வப்போது அவன் தோள் மீது சாய்ந்தார். அவர் உடலில் இல்லாத சக்தியா? ஆனாலும் பொன்னியின் செல்வருடைய தோளின் மீதே சாய்ந்தபடி நடந்தார்.

யோசித்துக் கொண்டே வந்தார் பொன்னியின் செல்வர். 'எப்படியெல்லாம் இடும்பனுடன் சிரித்துப் பேசி வாழ்ந்தோம். எல்லாவற்றையும் மறந்து! ஆனால், சித்தரோ இடும்பனுக்கும் தனக்கும் இருக்கும் பகையையும் தொடர்பையும் யூகித்து விட்டார். எப்படி அவரால் முடிகிறது?'

கோயில் வாசலருகே வந்தார்கள். வாசலில் நின்றவர்களுக்கு நேரே கருவறை தெரிந்தது. கோயிலின் வெளியிலிருந்தே சிவபெரு



மானின் திருவுருவமேனி தெரியும்படி நந்தி சற்று விலகி இருக்கும் பூவனம் கோயிலில்.

''ஒரு காலத்தில், நாம் மிதித்து வந்தோமே இந்த வைகை யெல்லாம் சிவலிங்கமாய்த் தெரிந்ததாம். அக்கரையில் இருந்த மூவேந்தர் ஆற்றைக் கடக்க மறுத்துவிட்டு அங்கிருந்தே தரிசனம் செய்ய முற்பட்டனர். அதனால் நந்தி விலகி அவர்களுக்குச் சிவபெருமானைக் காட்டியதாம். இங்கு மட்டுமல்ல. நந்தனுக்குப் புன்கூரில் காட்டியது. அருள் மொழி! நாம் அரசனாக இருந்தாலும், ஆண்டியாக இருந்தாலும், நம் பக்திக்கு என்றும் பலனுண்டு !'' என்றார்.

பின் கோயிலுக்குள் சென்று சற்று நேரம் அமர்ந்தார். கண்களை மூடிக் கொண்டார்.பின் திடீரென, ''அருள் மொழி! உனக்கும் கிளம்ப நேரம் வந்து விட்டது. ஆனால், ஓரிரு நாள் கழித்துச் செல். திரும்ப உங்கள் இருவரின் பாதையும் அதற்குள்ளாகச் சந்திக்கக் கூடாது'' என்றார்.

இதைக் கேட்ட சிறிது நேரம் திகைத்துப் போய் நின்றார் பொன்னியின் செல்வர். ''ஐயனே! இங்கேயே இன்னும் சில நாள் தங்கியிருந்துவிட்டுச் செல்கிறேனே'' என்று சிறுபிள்ளைத் தனமாகக் கேட்டார்.

கம்பீரமாக ஏறிட்டுப் பார்த்துக் கூறினார் கருவூரார். ''நீ செல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது. உனக்கு எதிர் காலத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறேன்.''

''ஆசாரியரே! உமது வாக்கை நான் புரிந்து கொள்ள முடியாத வனாய் இருக்கிறேனே!'' என்று வருந்தினார் பொன்னியின் செல்வர்.

''சமயம் நேரும்போது உனக்கே தெரியும்'' என்று கருவூரார் வாக்களித்தார்.

அன்றிரவு பொன்னியின் செல்வர் உறங்கவே யில்லை. ஆற்றங் கரையில் அமர்ந்தபடி யோசித்திருந்தார். தானும் கிளம்ப வேண்டும் என்று கருவூரார் சொன்னவுடன் பொன்னியின் செல்வ ருடைய மனதில் பலதரப்பட்ட எண்ணங்கள். திரும்பவும் வெளி உலகுக்குச் செல் என்று கருவூரார் சொன்னது அவர் மனதில் இந்த மூன்று மாத காலத்தைப் பற்றியும் அதில் அவர் சாதித்ததையும் எண்ணிப் பார்க்க வைத்தன.

'ஒரு விதத்தில் பார்த்தால் பைத்தியக்காரதனமாக இருக்கிறது. தஞ்சையை விட்டு வெளியேறி வந்ததில் நம்மைப் பற்றியே நிறைய விஷயங்கள் கிரகித்துக் கொள்ளலாம் என்று நினைத்தோம்.

கிரகித்த ஒரே ஒரு விஷயம் வந்தது தவறென்பதுதான். உறுதியற்ற நிலை தொடரத்தான் செய்கிறது. ஆனால், அதை அங்கேயிருந்து தான் தாக்குப் பிடித்திருக்க வேண்டும்' என்று நினைத்துக் கொண்டார்.

'இனிய கிண்கிணி நாதக் குரலில் ஆறுதல் சொல்ல மனைவி யில்லை. அப்பா என்று கால்களைக் கட்டித் தழுவ ஓடிவரும் குழந்தைகள் இல்லை. 'தனிமை தனிமை என்று ஆசைப் பட்டோமே. மகாத் தவறு செய்துவிட்டோம். கூண்டில் வாழும் கிளி போல மூச்சு முட்டியது தஞ்சையில் என்றுதானே வெளி யேறினோம். அது கூண்டல்ல. கூடு. அவர்கள் ஆதரவில்லாமல் நான் நானாக இருக்க முடியாது!' என்று உறுதி கொண்டார்.

பின் அவர் எண்ணங்கள் இடும்பனின் செயலுக்குச் சென்றன. ஏதோ சந்தர்ப்பத்தின் முக்கியத்துவத்தைக் கருதி இடும்பனும் சென்றுவிட்டான். அந்தக் காரியம்தான் என்னவாயிருக்கும் என்பது மனதை அரித்தது. அரசியலில் ஈடுபாடே இல்லாமல் மூன்று மாதம் கழித்துவிட்டு இப்போது மனதின் ஓரத்தில் லேசாகக் கேள்விகள் எழுந்தன. ஆனால், அந்தப் பழுவூர்ப் பெண்ணின் நினைவும் வந்தது.

'தஞ்சைக்குச் சென்ற பின் அந்த விஷயத்தை எப்படிச் சமாளிக் கப் போகிறாய்?' என்று கேட்டது அவர் மனம். 'தஞ்சையில் எப்பேர்ப்பட்ட முக்கியமான காரியத்தில் ஈடுபட்டபோதிலும் அவளை என்னால் மறக்க முடியவில்லை. இரவும் பகலும் சதா சர்வ காலமும் அவளுடைய நினைவு என் இருதயத்தில் குடி கொண்டது. அந்த நினைவு, இன்பத்தையும் வேதனையையும் ஏக காலத்தில் அளித்தது. என்ன செய்தாலும் அவள் நினைவை என் மனதிலிருந்து அகற்றிவிட முடியாது என்று கோழை போல ஓடி வந்தோமே. இங்கு வந்த பின் என் உள்ளத்திலும் ஒரு மாறுதலைக் கண்டேன். இதோ இந்தச் சித்தர் போகச் சொல்லும்வரை அவளைப் பற்றியே நினைவே வரவில்லையே!' என்று நினைத்துக் கொண்டார்.

'கருவூராரின் முன்னால் வந்தவுடன் அவள் நினைவே வரவில்லை. தன் வரவுக்கு எந்தத் திவ்ய சுந்தராங்கி காரணமா யிருந்தாளோ அவளுடைய மோகன வடிவத்தைப் பற்றி நாம் அவர் அருகில் இருக்கும்போது நினைக்கவில்லையே!' அவரை விட்டுச் சென்றால் மீண்டும் அந்தத் தோல்வியுணர்ச்சி ஏற்படுமோ என்ற பயம் இருக்கத்தான் செய்தது. அதை நினைத்தால் மீதி வாழ்நாளை இங்கேயே கழித்து விடலாமோ என்ற ஆசையும் வந்தது.



இரவு முழுவதும் பொன்னியின் செல்வர் தூங்கவில்லை. காலையில் குழப்பத்தின் உச்ச கட்டத்தில் இருந்தார். கருவூரார் மனதைமாற்றிக் கொள்ள மாட்டாரா என்ற ஏக்கமும் இருக்கவே இருந்தது. காலையில் தன் முன்னிலையில் வந்து நின்ற சீடனைக் கருவூரார் கண்டார்.

''அருள் மொழி! நீயும் புறப்பட வேண்டிய தருணம் வந்து விட்டது. கிளம்பு!'' என்று இரவு சொன்னதையே மீண்டும் சொன்னார்.

''குருநாதா! இப்படித் திடீரெனச் செல்லச் சொன்னால்.....?''

''தாமதமின்றிக் கிளம்பு. வீட்டுக்குத் திரும்பிச் செல். அதுவும் விரைந்து செல்!''

''ஐயா! உமக்குச் சேவை செய்ய யார் இருக்கிறார்கள்?''

உடனே அவருடைய முக பாவம் முற்றிலும் மாறி, அதில் புன்னகை தோன்றியது. ''பேச்சைப் பார், பேச்சை. என் பிறப்பி லிருந்து அருகிலிருந்தது போல் பேசுகிறாய்!'' என்று சொல்லிச் சிரித்தார்.

''எனக்குச் சாப்பாடு கொண்டு வந்து கொடுப்பதற்கு இந்தக் காகங்கள் இருக்கின்றன. நித்தநித்தம் அவையே எனக்குப் பசி யாறும்படி பார்த்துக் கொள்ளும். நீ வரும் முன்னும் அவைதானே அந்தச் சேவையைச் செய்தன. நான் ஏற்கெனவே இருப்பது போல் இருக்கிறேன்.''

'மிகக் கடுந்தபஸியான இவருக்குப் பசியெல்லாம் ஒரு பொருட்டா?' என்று உணர்ந்தார் பொன்னியின் செல்வர்.

கவலை ததும்பிய முகத் தோற்றத்துடனே குருநாதரைப் பார்த்தார். காகங்களின் ஆயிரமாயிரம் கண்கள் தன்னைக் கூர்ந்து நோக்குகின்றன என்பதையும் உணர்ந்தார்.

''ஐயா! உமது கட்டளை எதுவோ, அதன்படி நடக்க நான் கடமைப் பட்டவன். உமது அபிப்பிராயத்துக்கு மாறாக எதுவும் செய்வதாய் எனக்கு உத்தேசமில்லை. கிளம்பச் சித்தமாகி விட்டேன்!'' என்றார்.

''அதற்கு முன் ஒரு நொடி உன் கண்களை மூடு. தியானி.''

'' எதை நினைத்துத் தியானிப்பேன்?''

''உன்னை நினை, என்னை நினை, ஏன், சுடுகாட்டில் பூத கணங்களுக்கு மத்தியில் பிணத்தை எரித்த சாம்பலைப் பூசிக் கொண்டு கோரத் தாண்டவமாடும் எம்பெருமானை நினை!'' என்று அறிவுறுத்தினார்.

"ஐயனே! இவ்வளவு நாள் என்னிடம் ஒரு முறை கூடத் தவம் பற்றிச் சொல்லாத தாங்கள் இன்று கிளம்பும் போது..?" அருள் மொழிக் கேட்டார்.

சித்தர் சிரித்துக் கொண்டார். "இப்போதாவது சொல்கிறேனே என்று சந்தோஷப்படு. கண்ணை மூடு. தியானி. இழந்ததையும், பெற்றதையும் நினைத்துப் பார்!" என்றார்.

அருள்மொழி கண் மூடினார். ஒரே இருட்டாய் இருந்தது. சற்று முன்னால் அவன் யோசித்து முடிவு செய்திருந்த தீர்மானங்க ளெல்லாம் காற்றிலே பறந்து போயின. குடும்பத்தார் இவர் பிரிவால் படும் கஷ்டம் கண் முன் தோன்றி ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. முக்கியமாகத் தாயும் தந்தையுமற்ற அந்தக் கள்ளங் கபடமற்ற பெண் வானதியை நோகடித்திருக்கக்கூடாது. மனைவியை நினைத்தவுடன் கண் திறந்தார்.

சற்று நிதானித்து விட்டுப் பொன்னியின் செல்வர், "சரி, ஐயா! கிளம்புகிறேன்" என்றார்.

தன் முன்னிலையில் கிளம்பத் தயாராய் இருந்த சீடனிடம் கருவூரார், "ஒரு கணம் கூட வழியில் தாமதியாமல் செல். அருள் மொழி, உன்னை நான் மீண்டும் சந்திப்பேன். இப்போது நீ நினைத்திருப்பதெல்லாம் வெகு அற்பமான பிரச்சனைகள். உனக்கு நீ நினைக்கும் பரிசு கிடைக்கும். ஆனால், அது இலவசமான பரிசல்ல. விலை கொடுத்து வாங்க வேண்டும். சரியான விலை. ஒன்றைக் கொடுத்தால்தானே ஒன்று கிடைக்கும்? சந்தைக்குச் சென்றால் பண்டப் பரிமாற்றம் என்பார்கள். நினைத்த மாத்திரத் தில் வேண்டியதெல்லாம் கிடைத்துவிட்டால் அதன் அருமை தெரியாது. அது போலவே சரியான விலை கொடுத்துப் பெறாத பொருளின் அருமையும் உனக்குத் தெரியாது."

புரியாமல் நின்றார் பொன்னியின் செல்வர். ஆனால், அவன் மனதில் ஒன்று மட்டும் தோன்றியது. இவர் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். பின் யோசித்து அர்த்தம் புரிந்து கொள்ளலாம்.

கருவூரர் மீண்டும் தொடர்ந்தார் "அதை விட்டுத் தள்ளு, அருள் மொழி. எதிர் காலத்தில் உனக்கு ஒரு தேவை வரும். அப்போது என்னையன்றி உனக்கு யாராலும் உதவ முடியாது. அன்று இவர் தீர்க்க திருஷ்டியை என்னவென்று புகழ்வது என்று நீயே கேட்பாய்." புரியாமல் நின்றவருக்கு மேலும் விளக்கினார். "ஒரு நாள் உனக்கு ஒரு பெரும் சோதனை வரும். உன் சாதனை ஒன்றை



மனிதன் ஏற்றுக் கொண்டாலும் ஆண்டவன் ஏற்க மறுக்கிறான் என்ற ஏக்கம் வரும். அன்று எனக்குச் செய்தி அனுப்பு."

"ஐயனே! நீர் எங்கு இருப்பீர்? எப்படிச் செய்தி அனுப்புவேன்?"

"எனக்கென்ன புறாவிடு தூதா அனுப்ப முடியும்? இல்லை, புரவியின் மேல் தூதுவனை அனுப்ப முடியுமா? காகத்திடம் சொல்லி அனுப்பு. வருகிறேன்" என்று சொல்லி வாயில் இருந்த வெற்றிலை எச்சிலைத் துப்பிவிட்டுச் சிரித்தார்.

"காகத்திடம் தூதா?"

"அந்தக் காகங்களுக்கு உள்ள அறிவு மனிதர்களுக்கு இருந்தால் இந்தப் பொன்னியின் செல்வன் புரிந்து கொள்வான்."

பொன்னியின் செல்வர் கருவூராருக்கு முன் சாஷ்டாங்கமாக விழுந்தார். அடிபணிந்து எழுந்த பிறகு, பயபக்தியுடன் நின்றார். கண்கள் கலங்கிக் கண்ணீர் துளிர்க்கும் நிலையில் இருப்பதைக் கருவூரார் கவனித்தார்.

"ஏன் முகம் ஒரு மாதிரி இருக்கிறது?" என்று சித்தர் கேட்டார்.

"ஒன்றுமில்லை, ஐயா!" என்று சொன்னான்.

"ஒன்றுமில்லையென்றால் முகம் ஏன் வாடியிருக்கிறது? கிளம்பு, கிளம்பு. பல காத தூரம் ஒரே மூச்சில் நீ போக வேண்டும் அல்லவா?" என்று அவசரப் படுத்தினார். விடைபெற்றுக் கொள்ளும்போது பொன்னியின் செல்வருக்கு மனம் வலித்தது.

கிளம்பியபோது வெள்ளி நிலவு வானில் பிரகாசித்துக் கொண் டிருந்தது. அவர் திரும்ப வீடின்றி அலையத் தொடங்கியதைப் பார்த்துப் பரிகாசமும் செய்து கொண்டிருந்தது.

இதுவரை யாரிடமும் தனக்கு ஏற்படாத பக்தியும் வாத்ஸல்ய மும் இந்த யோகியிடம் உண்டாகக் காரணம் என்ன? முக்காலமும் அவருக்குத் தெரிந்ததாலா? மனதை முழுதாய்த் தெரிந்து வைத் திருக்கும் சித்தர் எதிர்காலத்தையும் ஓரளவுக்குத் தெரிந்து வைத்திருப்பார். அதனால் அவர் பேச்சுக்கு எதிர்ப்புச் சொல்லாமல் கிளம்பினார்.

ஆனால், வருத்தங்கள் பலவும் இருந்தன. தாய் வீட்டை விட்டுச் செல்வது போல் ஒரு வருத்தம். அப்போர்ப்பட்ட பாசப் பிணைப்பு ஏற்பட்டுவிட்டது இந்தக் கானகக் கோயிலுடன். இந்த இடத்தில் அவர் அதுவரை அறியாத மன அமைதியை உணர்ந்தார். உலகை வேறு கண்ணோட்டத்தில் பார்க்கும் ஞானியாகக் கூட ஆகி விட்டார்.

ஆசிரமத்தை விட்டுச் சற்றுத் தூரம் கடந்தவுடன் பழைய நினைவுகள் குமுறிக் கொண்டு வந்தன. நல்லவையும் இருந்தன. புதியவையும் இருந்தன. குடும்பத்தின் அன்பு நினைவுக்குத் திரும்ப வந்தது. பெண்ணுக்காக, காதலுக்காக எதையெல்லாம் துறந்து வந்தோம் என்ற உணர்வும் வந்தது.

"திரும்பிச் சென்றவுடன் ஓடிவந்து முகமன் கூறக் குழந்தைகள் இருப்பார்கள். தூண் மறைவிலே நாணத்துடன் நின்று கடைக் கண்ணால் என்னைப் பார்க்கும் மனைவியிருப்பாள். அதையெல் லாம் விட்டு விட்டு இங்கு வந்தோமே!'' என்று நினைத்தார்.

வைகைக் கரைக்கு அப்பாலிலிருந்து திரும்பிப் பார்த்தார். என்னவோ அதற்காகக் காத்திருந்தது போலத் திரும்பக் காகங்கள் சித்தரின் இருப்பிடத்தைச் சூழ ஆரம்பித்தன. காகங்களின் அணிவகுத்த படையிலிருந்து ''கா, கா...'' என்ற கோஷம் ஆயிரம் கண்டங்களிலிருந்து கிளம்பி எதிரொலி செய்தது. 'இருவரும் கிளம்பியவுடன் தனியாய்ச் சித்தர் இருப்பார் என்று வந்தனவோ?'

ஆயிரமாயிரம் காகங்கள் வானில் சிறகடித்தன. வானத்தை மூடின. நிர்மலமான வானில் பத்தரை மாற்றுப் பசும் பொன்னின் நிறத்தில் வீசிய நிலவொளியையே மூடி மீண்டும் அஸ்தமனத்தை ஏற்படுத்தின.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்து ஆறு

## மழபாடியில் மன்னர்பெருமான்

வெள்ளைப் பாய்கள் விரிக்கப்பட்ட ஏழெட்டுப் பெரிய ஓடங்கள், கொள்ளிட நீரில் மிதந்து வந்தபோது, தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு வெண்சிறகுகளை விரித்துக் கொண்டு வரும் அன்னப் பட்சிகளைப் போல் காட்சியளித்தன.

நீல நிற வானும், பசுமை நிறைந்த கொள்ளிடக் கரைகளும் பின்னிருக்க, வெள்ளை நிறப் பாய்கள் வெகு தூரத்தில் இருக்கும் போதே கரையில் இருப்போரின் கண்களுக்குத் தெளிவாய்த் தென்பட்டன.

மழபாடி நகரெங்கும் செய்தி பரவியது. உடனே மழவர் நாட்டு மக்களெல்லாம் கொள்ளிடக் கரையில் கூடி விட்டனர். அவர்கள்



மட்டுமா? மழநாடு, நடுநாடு, திருமுனைப்பாடி நாடுகளிலிருந்து பல பிரமுகர்களும், குடிமக்களும் மழபாடி நகருக்கு வந்திருந் தார்கள். ஒரு வாரமாகவே மழவர் நாடு முழுதும் அல்லோல கல்லோலப்பட்டது. கரையில் அத்தனை பேரும் அந்தப் படகுகள் வரும் திசையையே ஆவலுடன் பார்க்கத் தொடங்கினார்கள்.

அந்தப் படகுகளிலே ஒரு படகு எல்லாவற்றுக்கும் முன்னதாக விரைந்து வந்தது. அது மழபாடிக் கோயிலுக்கு நேரான பகுதியில் இருந்த கரையின் ஓரமாக நெருங்கி வருவதைக் கண்ட மக்கள், அதில் யார் இருந்தார் என்று யூகித்து விட்டனர். உடனே மக்களுடைய உற்சாகம் எல்லை கடந்ததாயிற்று.

"கோப்பரகேசரி மதுராந்தக உத்தமச் சோழர் வாழ்க!'' என்று மக்களின் குரல்கள் முழங்கின.

முதலில் வந்த படகின் பாய் அதி வேகத்தில் சுருட்டப்பட்டது. அதுவரை கொள்ளிட ஆற்றின் மேல் பாய்ந்தோடி வந்த காற்றினால் உந்தப்பட்டு விரைந்து வந்து கொண்டிருந்த படகு வேகம் இழந்தது. துடுப்புக்களை ஊன்றிப் படகை லாகவமாகப் படகோட்டிகள் கோயிலுக்கு நேரே இருந்த கரையில் நிறுத்தினர்.

நின்ற படகிலிருந்து சோழ நாட்டுச் சக்கரவர்த்தி முதலில் இறங்கினார். படகிலிருந்து இறங்கும் போதே உத்தம சோழரது கண்கள் கோயிலின் சீரமைக்கப்பட்ட கோபுரத்தின் மேலேதான் விழுந்தன. ''ஆகா! 'மழபாடியுள் மாணிக்கமே' என்ற வார்த்தை களுக்கு ஏற்ற கடவுள். அந்த மாணிக்கத்தைப் பதிக்க ஏற்ற கோயில் இது!'' என்று நினைத்தார்.

கரையில் அரசரை வரவேற்கப் பலரும் நின்றனர். ஆற்றங் கரையில் கடலெனத் திரண்டிருந்த கூட்டத்தின் முன்னால் நின்றார் தென்னவன் மழவராயர். அவரே இந்தப் பகுதியில் ஆட்சி செலுத்தி வந்த அரசர். மழபாடித் தென்னவன் மழவரையர், சோழர் பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசர் பரம்பரைதான். ஆனால், உறவுமுறையில் சக்கரவர்த்தி குடும்பத்துக்கு மிகவும் நெருக்க மானவர். செம்பியன் மாதேவிக்கு உடன் பிறந்த சகோதரன். அரசாண்ட உத்தம சோழனுக்கு மாமன்.

அரசருக்கு அடுத்து அவரது தாய் செம்பியன் மாதேவி படகி லிருந்து இறங்கினார். அவருக்கு ஆதரவாக அவரது கையைப் பிடித்தபடி அரசியார் பூங்குழலியும் இறங்கினார். மூவரும் கும்பாபிஷேகத்துக்காக இப்போது வந்திருந்தாலும், கடந்த இரு ஆண்டுகளில் இவ்வூருக்குப் பலமுறை வந்து, தங்கி, திருப்பணி வேலைகளை மேற்பார்வை செய்திருந்தனர். அல்லும் பகலும்

சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்துக் கொண்டிருந்த உத்தம சோழரும், உலகம் போற்றும் புண்ணியவதியாகிய அவர் தாய் செம்பியன் மாதேவியும் சேர்ந்து செய்தத் திருப்பணியல்லவா இது?

சோழ அரச குடும்பம் முழுவதுமாக ஓரிடத்தில் சங்கமிக்கப் போகிறார்கள் என்றால் கேட்க வேண்டுமா? சில நாளைக்கு ஊர் தடபுடல் பட்டுக்கொண்டுதானிருக்கும். அரச குடும்பத்தைப் பெரும் ஆரவாரத்துடன் மக்கள் வரவேற்றனர். அந்தப் பெருங் கூட்டத்தில் ஆயிரமாயிரம் உரத்த குரல்களிலிருந்து, "உத்தம சோழர் வாழ்க!, சோழர் குலம் உயர்க!" என்பன போன்ற கோஷங்கள் பெரு முழக்கமாக ஏகோபித்து எழுந்து, சுற்று வட்டாரமே அதிரும்படி செய்தன. சோழ மக்களின் ராஜ விசுவாசத்தைப் பற்றி எவ்வளவோ எல்லாரும்தான் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் இந்தக் கூட்டத்தைப் பார்க்கும் போது அதெல்லாம் உண்மைக்கு உறை போடக் காணாது எனத் தோன்றும். அவ்வளவு பெரிய கூட்டம் கூடியிருந்தது. நாளைக்குப் போகும் கதிக்கு வழி தேடிக் கொள்வோம் என்று மக்கள் உபன்யாசங்களுக்கும், கோயில் யாத்திரைகளுக்கும் செல்வதுண்டு. ஆனால் இப்படி மாபெரும் கூட்டம் திரண்டு வர ராஜ விசுவாசமும் ஒரு காரணம்.

கோயிலுக்கு வெகு சமீபத்தில் கொள்ளிடம் ஆறு ஓடியதால் இடைப்பட்ட இடம் சற்றுக் குறுகித்தான் இருந்தது. விசேஷமான சந்தர்ப்பங்களில் பதினாயிரக் கணக்கான மக்கள் கூடி நிற்கும் படியாக அந்த இடம் விசாலமாய் இல்லை. அதனால் கூட்டம் இன்னும் அதிகமாகத் தெரிந்தது.

படகிலிருந்து அடுத்ததாக வந்தியத் தேவனும், குந்தவையும் இறங்கிவர, தொடர்ந்து அந்தப் படகிலிருந்து கடைசியாகத் தனியாக ஒரு பெண்மணியும் இரு குழந்தைகளும் இறங்கினர். தனியாய் வந்தவள்தான் வானதி. எல்லாரும் தம்பதி சமேதராக வந்தபோது, தான் மட்டும் தனியாய் வருவதில் வானதிக்கு மிக்க வருத்தம்தான். எல்லாரும் அவளையே உற்றுப் பார்ப்பது போலொரு எண்ணம் வேறு. ஆனால், அருள்மொழியைப் போல ஒரு கணவரை மணந்த பின் 'இப்படி நட, அப்படிச் செய்' என்று சொல்லவா முடியும்? 'வேண்டித்தானே கட்டிக்கொண்டாய். இப்போது தனிமையைப் பொறுத்துக் கொள்' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

அரச குடும்பத்தைத் தரிசித்த பின் ஆரவாரித்த பெரும் கூட்டம் மீண்டும் அமைதியானது. அதற்குக் காரணம் அரசரை இறக்கி விட்டு அவரது படகு சற்றே நகர்ந்து சென்றவுடன், அடுத்த படகு



வந்து கரைக்கு நேரே நின்றது. மக்கள் ஆர்வத்துடன் இந்தப் படகில் யார் யாரெல்லாம் வருகிறார்கள் எனப் பார்க்கத் தொடங்கினார்கள்.

அடுத்த படகில் பிரதமர் அநிருத்தப் பிரம்மராயர் வந்தார். அவருடன் வந்த பெண் யாரென்று எல்லாரும் கூர்ந்து கவனித்தனர். பலருக்கும் தெரியவில்லை. ஆனால் அரசியலில் கைதேர்ந்தவர்கள் சிலர் மனதுக்குள் கேட்டுக் கொண்டனர். "ஆகா! இது நந்தினி அல்லவா?"

சில மாதங்களுக்கு முன் நந்தினியை யாரேனும் மலைக் குகையில் சந்தித்திருந்தால் தற்போது மனதில் எழும் சந்தேகம், 'ஒரு மாதத்தில் ஒருவர் இவ்வளவு மாற முடியுமா?' என்பதுதான். காட்டு வாழ்க்கையை விட்டு நகர நாகரிகத்துக்கு வந்தவள் முகத்தில்தான் என்னவொரு அழகு! நந்தினியுடன் ஒரு பாலகனும் இறங்கினான். சேர்ந்து வந்தவன் தான் பாண்டிய அரசனாய்ப் பதவி யேற்கப் போகும் இளவரசன் என்று சிலருக்குத் தெரிந்திருந்தது. அவனை உற்றுக் கவனித்தனர்.

கூட்டத்தைப் பார்த்தபின் இயற்கையாகவே நந்தினி நடுங்கினாள். ஆனால் வெகு விரைவில் சமாளித்துக் கொண்டு சோழர் அரச குடும்பத்தைத் தொடர்ந்து பின் சென்றாள். எல்லாரும் மழபாடிக்கு வரும்போது நந்தினியைத் தஞ்சையில் விட்டு விட்டு வருவது சரியல்ல என்று பிரதமர் எண்ணித்தான் அழைத்து வந்திருந்தார்.

இப்படி இன்னும் மூன்று படகுகள் நிறையத் தஞ்சை அரசவையில் முக்கியமானவர்கள் வந்திருந்தார்கள். அனைவரும் கரையில் ஏறியவுடன் கோயிலுக்குள் சென்றனர். கொள்ளிடக் கரைக்கு மிக அருகில் தான் மழபாடிக் கோயில் அமைந்திருந்தது. இரண்டு கோபுரங்களைக் கடந்து ஊர்வலம் வஜ்ரநாதர் சன்னிதியை அடைந்தது.

இரண்டு நூறாண்டுகளுக்கு முன் சுந்தரர் பார்த்தபோது வஜ்ரநாதர் பூத்துக் குலுங்கிய கொன்றை மரங்களின் மறைவில் இருந்த சிறிய கோவிலில் இருந்தார். ஒரு காலத்தில் அதிகமாகப் பிராபல்யம் அடையாத கோயில் அது. பின் ஒரு நாள் அருகில் சென்ற சுந்தரரைத் தானே அழைத்துப் பாடும்படிக் கட்டளை யிட்டார் வஜ்ரநாதர்.

"சுவாமி! தங்களை நான் மறந்து விடுவேனா? தங்களை மறந்து விட்டு வேறு கடவுளை நினைப்பேனா?" என்னும் கருத்து அமைத்து, தேவாரத்தைப் பாடினார் சுந்தரர்.

சுந்தரமூர்த்தி அங்கே சென்று சுவாமி தரிசனம் செய்துவிட்டு மனமுருகிப் பாடியது போல் இன்று சோழர் சக்கரவர்த்தியும் மனமுருகிப் பாடினார்.

'பொன்னார் மேனியனே! புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே!
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே!
அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே?'

மல்லிகை, பாரிஜாதம், பன்னீர், செண்பகமெனப் பல மலர்களின் வாசத்துடன் சாம்பிராணி சந்தனப் பொடிகளின் புகையும் சேர்ந்து கோயிலை தேவலோகத்துக்கு ஈடாக்கியது. எல்லாவற்றிற்கும் மேலாக வஜ்ரநாதரை விட்டு வெளிவர மனமே இல்லை அரசருக்கு.

பின்னர் மற்றவர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் கோயிலுக்கு வெளியே வந்து திருப்பணிகளைப் பார்வையிட்டார். இரு ஆண்டுகளாக விமரிசையாய் நடந்தன இந்தத் திருப்பணிகள். பல மாத காலமாக இந்த நகரில் கேட்டுக் கொண்டிருந்த கல்லுளியின் 'கல் கல்' ஒலியும் இப்போது ஓய்ந்துவிட்டது. சிலைகள் மட்டுமல்ல, ஆயிரமாயிரம் ஆண்டுகள் சோழர்களின் சரித்திரத்தை வெளிக்காட்டும் கல்வெட்டுக்களும் பொறிக்கப்பெற்றிருந்தன. அழகான வேலைப்பாடமைந்த தூண்கள் தாங்கிய மண்டபங்களிலும், மண்டபங்களின் மேலிருந்த விமானங்களிலும் சிற்பங்கள் உயிர்பெற்று விளங்கியது போலவே இருந்தன. எல்லாரும் கோயிலின் கலை நயத்தைப் பார்த்தபோது மெய் மறந்து போனார்கள். சிற்பிகளின் கறபனா சக்தி அபாரமாக இருந்தது என்னவோ உண்மைதான்.

கோயிலின் கலை நயத்தைப் பார்த்தபின், பெருமையுடன் செம்பியன் மாதேவி தன் மகனைப் பார்த்தாள். சுந்தர சோழச் சக்கரவர்த்திக்கு முன்னால் சோழ நாட்டில் நீண்ட காலம் அரசு செலுத்தியவர் அவருடைய பெரிய தந்தை கண்டராதித்த சோழர். அவரும், அவருடைய தர்ம பத்தினியான மழவரையர் மகள் செம்பியன் மாதேவியும் சிவ பக்த சிகாமணிகள். சிவாலயத் திருப்பணிகளிலேயே தங்கள் வாழ்க்கையை முழுவதும் ஈடுபடுத்தியவர்கள்.

அது போலவே சுந்தர சோழர் காலத்திலும் சிவன் கோயில்களுக்குத் திருப்பணியை மேற்கொண்டனர் தாயும் மகனும். உத்தமர் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பின் தமிழ் நாடெங்கும் ஆங்காங்கே சிதறிக் கிடந்த தேவாரத் திருப்பதிகங்களைப் பெற்ற



கோயில்களுக்குக் கண்டராதித்தர் ஆயுள் காலத்தில் நிறைவேறாத திருப்பணிகள் முழு மூச்சில் செய்யத் தொடங்கி விட்டனர்.

ஒவ்வோர் அரச குலத் தாயும் தன் மகன்களின் வீரதீரச் செயல்களைப் பற்றிய மனோராஜ்யத்தில் நாள் கணக்காக மூழ்கிவிடுவாள். தூர தூர தேசங்களுக்குச் சென்று மாபெரும் யுத்தங்களை நடத்தி ராஜாதி ராஜாக்களை வென்றுவந்து அவனுக்கு கப்பம் கட்டி அடிபணிவதை மனக் கண்ணில் பார்ப்பார்கள்; அந்தக் கற்பனையில் ஆனந்தம் கொள்வார்கள். ஆனால் செம்பியன் மாதேவி அப்படியல்ல.

அரசரைப் பெற்றத் தாயான செம்பியன் மாதேவி அவரை வளர்க்கவில்லை. ஆனால், தான் எப்படி வளர்க்க எண்ணினாளோ அப்படியே தோட்டத்தில் குடிசை போட்டுத் தங்கி வந்த ஊமைச்சி வளர்த்திருந்தாள் என்று மனம் பூரித்தாள். ஒரு வேளை தான் வளர்த்திருந்தால் மற்றவர் தலையீட்டால் இப்படிப்பட்ட மாபெரும் சிவ பக்தனாக வந்திருக்க மாட்டானோ என்று கூட அவருக்கு தோன்றும். பூந்தோட்டத்திலிருந்து நேரே அரண்மனைக்குப் போன பிறகு உத்தமருடைய வாழ்க்கையிலும், மனப்போக்கிலும் மாறுதல் ஏதும் ஏற்படவில்லை. சைவத் தொண்டையே முதன்மையாகக் கருதினார்.

அதற்காக உத்தம சோழரின் ஆட்சியில் சோழ நாடு வெறும் ஆன்மீக வளர்ச்சியைமட்டும் கண்டது எனச் சொல்ல முடியாது. அரசர் போரின் தீய விளைவுகளைப் பற்றி நன்றாக அறிந்திருந்தார். அதற்காகப் போரை நிறுத்தச் சொல்லிக் கட்டளையிடவில்லை. அருள்மொழி வர்மர் படையெடுத்துச் செல்ல வேண்டிய வசதியும் அளித்தார். சோழர்கள் வீரத்தை வெளிக்காட்டாவிட்டால், அவர்கள் செய்த கலை கலாசார, ஆன்மீகத் திருப்பணிகள் எல்லாம் எதிரிகளின் சூழ்ச்சியால் மண்ணோடு மண்ணாகப் போகும் என்று அவருக்குத் தெரியும். அதனால் பொன்னியின் செல்வர் போன்ற மாபெரும் வீரர்களைக் கொண்டு சோழ நாட்டின் பாதுகாப்பை பலப்படுத்திக் கொண்டிருந்தார். அதன் தொடர்ச்சியாகத்தான் பாண்டிய நாட்டில் ஒரு சுதந்திர ஆட்சியை நிர்மாணிப்பது என்ற பிரதமரின் யோசனையை ஏற்றிருந்தார். இந்த விழா முடிந்தவுடன் மதுரைக்குச் சென்று அங்கு பாண்டிய ராஜ வம்சத்தைச் சேர்ந்த பாலகனுக்கு மகுடாபிஷேகம் செய்வதென முடிவெடுத்திருந்தார். சோழரின் கண்காணிப்பில் பாண்டிய வம்சம் ஆட்சிப் பொறுப்பை மேற்கொள்வது எல்லாருக்கும் நல்லது என்று முடிவெடுக்கப்பட்டிருந்தது.

அடுத்த சில நாட்கள் அரச குடும்பத்தினர் எல்லாரும் மழவராயரின் மாளிகையில் தங்கினார்கள். குடும்பத்தினர்தான் அங்கிருந்தனர். அரசர் எப்போதும் சிவன் கோயிலுக்குள்தானிருந்தார். இதில் பெரும் வருத்தம் கொண்டவர்கள் அரசரைக் காண வந்தவர்கள்தான். தஞ்சைக்குப் போய் சக்கரவர்த்தியைத் தரிசிக்க முடியாதவர்கள் இங்கு வந்து கூடியிருந்தார்கள். சிற்றரசர்கள் பலர் இராஜ தரிசனத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அரசரோ வஜ்ரநாதர் சன்னிதியில் தேவாரம் பாடிக் கொண்டிருந்தார்.

''இலேசில் ராஜ தரிசனம் கிட்டாது போல! நமக்கும் தேவாரம் தெரிந்திருக்க வேண்டும். இல்லை, குறைந்த பட்சம் தாளம் போடவாவது தெரிந்திருக்க வேண்டும்; சக்கரவர்த்தியின் சிநேகத்தைப் பெற!'' என்று விளையாட்டாக ஒரு அரசர் இன்னொருவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

எவ்வளவு அழகாகத் திருப்பணி நடந்திருக்கிறது என்று பார்க்க தூர தூர தேசங்களிலிருந்து சிவனடியார்களும் கடலெனத் திரண்டு வந்திருந்தார்கள். அவர்களுடன் தேவாரப் பாடகர்களின் கோஷ்டிகளும் வந்ததால் கோயிலின் சுற்று வட்டாரமே 'ஜேஜே' என்று இருந்தது. ஆலயங்களிலே பூஜா காலத்து மணி ஓசையும் மங்கள வாத்தியங்களின் கோஷமும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தன. அவற்றுடன் சமஸ்கிருத கடிகைகளில் வேத மந்திரங்களின் கோஷமும், சைவத் தமிழ் மூவரின் தெய்வீகமான தேவாரப் பாசுரங்களின் கானமும் எழுந்தன. கொடிகளாலும் தோரணங்களாலும் தொங்கல் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்கிய கோயில் மதிற் சுவரைச் சுற்றியும் ஆயிரமாயிரம் பேர் பிரதட்சணம் செய்தார்கள்.

அலங்காரம் மட்டுமல்ல, சோழ நாட்டின் உபசரிப்புக்களும் உள்ளத்தை வசீகரித்திருந்தன. நெடுந்தூரம் பிரயாணம் செய்து அலுத்துக் களைத்திருந்த பக்தர்களுக்கு மோரும் பானகமும் அளிக்க மக்கள் காத்திருந்தனர்.

''ஐயா! இப்போது தான் முன்னால் இருந்த பந்தலில் மோர் சாப்பிட்டேன்'' என்று யாத்திரீகர்கள் கூற ''அவன் போட்டிக்காக எனக்கு முன்னே பந்தலிட்டு எனக்கு வரும் விருந்தாளிகளை வயிறு நிரம்பச் செய்கிறான். பொறாமை பிடித்தவன். பரவாயில்லை, ஐயா எனக்காக ஒரு கிண்ணம் பானகம் குடியுங்கள்'' என்று கெஞ்சாத குறையாக மன்றாடி வந்தவர்களைப் பந்தல் ஓரமாக இழுத்தனர். மேலும் பயணத்தில் அயர்ந்து போன பயணியிடம் ''இரவு போஜனம் எங்கள் வீட்டில்தான், வந்து விடுங்கள்'' என்று வேறு சொல்லி அனுப்பினர்.



கொள்ளிடத்தின் வடகரைக்குச் சோழர் படைகள் வந்து தண்டிறக்கி இருந்தன. சோழர்கள் தங்களுடைய நால்வகைப் படைகளையும் கொண்டு வந்து பிரஜைகளுக்கும் சிற்றரசர்களுக்கும் காட்டி அவர்கள் பிரமிக்கும்படி செய்யவே இந்த ஏற்பாடு. எல்லாம் பிரதமரின் முடிவுதான். பயபக்தியில் வரும் விசுவாசம் நெடு நாள் நிலைக்கும் என்று அநிருத்தர் கருதினார்.

ஒரு காலத்தில் தமிழகம் முழுவதையும் ஒரு குடையின் கீழ் ஆள வேண்டுமென்ற ஆசை சோழர்களுக்கு இருந்தது. அது நிறைவேறியவுடன் இப்போது பரத கண்டத்தையே ஆளவேண்டும் என்ற ஆசை. அது அவர்கள் வீரத்தைக் காணும்போது பேராசையாய்த் தெரியவில்லை. அடுத்து இந்த உலகமே அவர்களுடையது என்று சொன்னாலும் சொல்லுவார்கள் என்று நினைத்துக் கொண்டனர் எல்லாரும்.

சோழர் பேரரசுக்குக் கீழே இப்போது பல நாடுகள் இருந்தன. ஒரு குடைக்குள் வாழ்க்கை நடத்தும் பல மக்கள் சங்கமிக்க இந்த விழா உதவியது. மழபாடி நகரைச் சுற்றிலும் ஒரு அரைக் காதத் தூரம் ஆட்கள் தண்டு இறக்கிவிட்டனர். இரவில் பார்த்தால் கொள்ளிடக் கரை எங்கும் சமைக்கும் புகை மண்டியிருந்தது.

கம்பீரமான மாடமாளிகைகளையுடைய நகரமல்ல மழபாடி. எனினும் அரசகுலத்தின் பார்வை பட்டதால் தஞ்சையில் இருந்தது போல் மழபாடியும் கலைமகளும் திருமகளும் குதூகலமாக கொலு வீற்றிருக்கும் நகரமாக இப்போது விளங்கியது. ஆடம்பர இராஜோபசாரங்களைப் பார்த்தால் தஞ்சை அரண்மனையே இடம் பெயர்ந்திருந்தது என்றுகூட நினைக்கத் தோன்றும்.

சோழர் படையின் வில்லாளிகள், வாள் வீரர்கள், மல்லர்கள் முதலியோர் அந்தக் கொள்ளிடக் கரையில் விருந்தாளிகளின் முன்னிலையில் தேக்கி வைத்திருந்த தத்தம் திறமைகளை வெளிக்காட்டினார்கள். பின்னர் எல்லாரும் இரவு ஊருக்குள் சென்றால் தடபுடலான விருந்து. எல்லாரும் வயிறு புடைக்க விருந்துண்டார்கள். வீதிக்கு வீதி இராமாயண மஹாபாரதப் பிரசங்கம் நடந்து கொண்டிருந்தது. அதில் கொஞ்ச நேரம் கழித்தனர். அடுத்தது விடியும் வரை குரவைக் கூத்தும் வேலனாட்டமும் என ஒரு நிமிடம் கூட இடைவெளிவிடாது நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன.

மக்கள் கொள்ளிட வெள்ளத்தை மிஞ்சிய ஆனந்த வெள்ளத்தில் பரவசமடைந்தனர். பார்க்கப் போனால் நாடே மகிழ்ச்சியில் இருந்தது போல் ஒரு எண்ணம் வரும். ஆனால் எல்லாரும் ஆனந்த

மாய் இல்லை. வயிற்றெரிச்சலுடன் இருந்தவர்களும் இருந்தார்கள். எண்ணிக்கையில் சிலராய் இருந்தாலும் மனதில் மிகுந்த வெறுப்போ வன்மமோ கொண்டு நின்றனர். மக்கள் கடல் பொங்கி வந்து மழபாடி நகரையே மூழ்க அடித்து விட்டதாகப் பார்ப்பவருக்கு எல்லாம் தோன்றியது. அந்த அலை போல் இருந்த கூட்டத்தில் நமக்குத் தெரிந்து குறைந்தது இருவர் வெறுப்போடு இருந்தனர். இதுவரை அந்த இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவில்லை. ஆனால் வெகு சீக்கிரத்தில் பார்த்துக் கொள்ளப்போகிறார்கள்.

இருவருள் முதலாமவர் ஆழ்வார்க்கடியான் நம்பி. சிவ புண்ணிய ஸ்தலமாகிய மழபாடிக்குச் செய்யப்படும் செலவுகளைக் கண்டு அந்த முன்குடுமிக்கார வீர வைணவன் மிகவும் கோபம் கொண்டதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்து ஏழு
## அழையா விருந்தாளி!

அடியானுக்குத் தஞ்சையில் சுத்தமாகப் பொழுது போக வில்லை. ஊரே காலியானது போலொரு எண்ணம். அவனுக்குத் தெரிந்த எல்லாரும் இன்னும் பத்து நாட்களில் நடக்கப்போகும் மழபாடி சிவன் கோயில் கும்பாபிஷேகத்துக்குச் சென்று விட்டனர்.

சோழ அரச குடும்பத்தினருடன் அவர்கள் பாதுகாப்புக்குப் பொறுப்பேற்றிருந்த வேளக்காரப் படைத் தலைவன் இளம் சம்புவராயன் கந்தமாறனும் சென்று விட்டான். சென்றவர்கள் தன் வளர்ப்புச் சகோதரியான நந்தினியையும் உடன் அழைத்துச் சென்று விட்டனர். வெகு நாள் கழித்துத் தன் வளர்ப்புத் தங்கை யுடன் அடியானால் சிறிது நேரம் செலவிடமுடிந்தது. ஆனால், இப்போது அவளும் மழபாடியில்.

'ஒரு கோயில் திருவிழாவுக்காக இப்படி எல்லாரும் செல் வார்களா?' என்றால், எல்லாரும் சென்றதற்கு முக்கிய காரணம் மழவராயர் அரச குலத்தில் பிறந்து, சோழ அரச குலத்தில் புகுந்த அரசர்க்கரசி செம்பியன் மாதேவிதான். சோழ அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அத்தனை பேரும் விதி விலக்கின்றி இந்தப் பெரும்



மூதாட்டியைத் தெய்வமாக மதித்துப் பாராட்டிக் கொண்டாடி அவருடைய விருப்பத்துக்கு மாறாக எதுவும் சொல்லாமல் நடந்து வந்ததில் யாதொரு வியப்பும் இல்லை .

"சுந்தரம்! என்னை மறந்தாயோ!" என்று ஒரு குரல் கொடுத்துச் சுந்தரமூர்த்திச் சுவாமிகளை அழைத்துப் பாடல் பெற்றாரே, அந்தப் பெருமான் வீற்றிருக்கும் மழபாடி இது என்று உலகுக்கு உணர்த்த ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் மழவரையாரின் செல் விக்கு. அதனால் இந்தப் பழமையான கோயிலுக்குத் திருப்பண் செய்ய வேண்டும் என்று செம்பியன் மாதேவி திருவுளங் கொண்டார்.

மழபாடியில் திருப்பணி செய்து நன்னீராட்டு விழா நடத்த வேண்டும் என்று தாய் சொன்னவுடன், "அப்படியானால் ஏன் வீண் கால தாமதம்? மற்ற காரியங்களை எல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். உடனே கட்டி முடிப்போம்" என்றார் உத்தமர். ஏற்கெனவே தில்லையில் தன் தாய் கேட்ட உபகாரத்தை ஆன்மீகக் காரணம் சொல்லி மறுத்துவிட்ட உத்தம சோழனுக்கு இது தன் தாயைத் திருப்திப் படுத்த நல்ல சந்தர்ப்பமாய்த் தெரிந்தது.

தனக்கு இஷ்டம் இல்லையென்றாலும் மழபாடிக்குச் செல்லும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது அடியானுக்கு. அவனுக்கு ஏன் மழபாடிக்குச் செல்ல இஷ்டமில்லை என்பதை நாம் கவனிக்கவேண்டும். மூன்று உலகும் பிரமிக்கும்படியாக ஆட்சி செய்த சோழரின் ஆன்மீக முகத்தை வெளிக்காட்டும் விழா அங்கு நடந்து கொண்டிருந்தது. சென்ற பதினெட்டு மாதக் காலத்தில் மழபாடி நகரில் கோயில் திருப்பணி நடைபெற்றது. அதற்குள்ளாகச் சைவ தர்மத்தை ரட்சிப்பதற்காவே அவதாரம் எடுத்தவர் உத்தம சோழர் என்று ஊரெல்லாம் பேச்சு. ஒற்றன் காதில்தான் எல்லாம் விழுந்து விடுமே! அது அடியானின் செவியில் விழுந்தவுடன் கோபத்தில் குதித்தான். இப்படி அரசனென்பவன் ஒரு மதத்துக்கே தன்னை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டால் அது மாபெரும் தவறு என்று கருதினான்.

அரச குடும்பத்துக்குப் பிடித்தமான வேலையிது என்று தெரிந்தும் தனது ஆட்சேபங்களைத் தெரிவிக்காமல் இல்லை அடியான். அவனது கோபத்தைச் சொல்ல வேண்டியவரிடம் சொல்லி விட்டான். மழபாடிக்குக் கிளம்பும் முன்பே, தஞ்சையிலேயே செம்பியன் மாதேவியைக் கண்டு கொட்டித் தீர்த்தான். சிவபக்தி யில் மூழ்கி, ஆலயத் திருப்பணி செய்து வரும் அந்தச் செம்பியன் தேவிக்கு நியாயத்தைப் புரிய வைக்க முயன்றான்.

அவனுக்கு நன்றாய்த் தெரியும் மழபாடித் திருப்பணியை நிறுத்த முடியாது என்று. அது நிறைவேறிவிட்டபடியால். ஆனால் அடுத் தடுத்து அரசரும் அவரது தாயாரும் போட்டு வைத்திருந்த திருப் பணித் திட்டங்களை திறுத்தலாம் என்று எண்ணினான். அடுத்துத் திருமுதுகுன்றம் என்ற விருத்தாசலம், தென்குரங்காடுதுறை முதலிய ஊர்களில் கோயில்களில் கருங்கல் திருப்பணி செய்வ தற்குச் செம்பியன் மாதேவியின் ஆரம்ப கட்ட வேலை தொடங்கி விட்டது. மழபாடி வேலை முடிந்தவுடன் சிற்பிகளெல்லாம் நேரே முதுகுன்றம் செல்ல வேண்டும் என்று அரசர் கட்டளை இட்டிருந்தார்.

அரசரின் தாயாய் இருந்தால் என்ன, தன் மனதில் பட்டதை வெளிப்படையாகச் சொல்லுபவன் அடியான்.

''அன்னையே! ஒரு கோயிலுக்கு இவ்வளவு செலவா?'' என்றான்.

''மகனே! அது என் தாய் வீட்டுக் குலக்கோயில் என்பதால் அல்ல. அதற்கு மகிமைகள் பல உண்டு'' என்று செம்பியன் மாதேவி சொன்னார்.

''இல்லை தாயே...'' என்று இழுத்தான் அடியான்.

''பிரஜைகளுக்கு அதிருப்தி வரும் என்று நினைக்கிறாயா, திருமலை?'' என்றாள் அரசி. இவன் கைதேர்ந்த ஒற்றன் என்று மூதாட்டிக்குத் தெரியும். அதனால் மக்களின் நாடித்துடிப்பை அறிந்து சொல்கிறானா என்று வினவினார்.

''கோயிலில் திருப்பணி நடந்தால் மழை பெருகும், ஆற்றில் வெள்ளம் பெருகும், தானிய அறுவடை கூடும், பசி ஒழியும், பிணி அகலும்'' என்றார்.

''தாயே, இதையெல்லாம் விஷ்ணு கோயில்களுக்குச் செய்தால் கூடத்தான் நடக்கும். ஊரில் எவ்வளவு பெருமாள் விண்ணக ரங்கள் இடிந்தும் சிதைந்தும் கிடக்கின்றன!'' என்றான் அடியான்.

''ஓ! அங்கு வருகிறாயா?'' மூதாட்டிக்கு எல்லாம் புரிந்தது.

''தாயே! நான் என்ன செய்யட்டும்? என் மனத்தில் ஏனோ உற்சாகமில்லை. என் மதம் தேயத் தேய எனக்கு மனச் சோர்வு அதிகமாகிறது. என் உடம்பில் உயிர் உள்ளவரையில் வைணவத் தின் மேம்பாட்டை நான் மறக்க முடியாது.''

''அப்படிச் சொல்லாதே, திருமலை. நீயும் மழபாடிக்கு என்னுடன் வா. அரசரிடம் முறையிடு. நிச்சயமாக அடுத்து பெரு மாளுக்கும் விண்ணகரத்தை எழுப்பச் சம்மதிப்பார்.''



அடியானுக்குத் தெரியும் ஜன்மத்துக்கு அது நடக்காது என்று.

''இல்லை, தாயே. எனக்கு மனம் கஷ்டமாகத்தானிருக்கிறது. இங்கிருந்தால் எனக்கு வாய் சும்மாயிராது. பின் பிரச்சனைதான் எழும். நான் அருகிலே ஏதாவது பெருமாள் கோயிலுக்குச் செல் கிறேன். உமது கண்களைத் திறக்கும்படி அவரிடம் வேண்டு கிறேன்'' என்று வருத்தத்துடன் சொன்னான் அடியான். என்ன சொன்னாலும் இவர் கேட்கப்போவதில்லை என்று விரக்தியுடன் வெளியேறினான் அந்தப் பரம வைணவ பக்தன்.

அப்படி வீராப்பாய்ப் பேசிய அடியானும் இப்போது மழ பாடிக்கு வரும் நிலை ஏற்பட்டிருந்தது. இன்று ஜனக்கடல் எனத் தோன்றிய கூட்டத்தில் நின்று கொண்டிருந்தான். அடியான் எதிர் பார்த்ததற்கு மேல் மழபாடி அமர்க்களப்பட்டுக் கொண்டுதா னிருந்தது. அன்றைய நாள் மழபாடி நகரில் மீண்டும் ஒரு பெரிய கொண்டாட்டம். சோழர் சக்கரவர்த்தி கோயிலுக்குத் தனது தானங்களை எடுத்து ஊர்வலமாய்ப் புறப்படுவதாக ஏற்பாடாகி யிருந்தது. அதனால் ஏகப்பட்ட கூட்டம். அவ்வளவு எடுத்துச் சொன்ன பிறகும் அரச குடும்பம் இவ்வளவு ஏற்பாடுகளைச் செய்திருக்கிறதே என்று கோபப்பட்டான் அடியான்.

கூடியிருந்த ஜனங்களை உற்றுப் பார்த்தான். ஆனந்தத்தைப் பார்த்தால் பெரும்பாலானோர் ஆன்மீக உணர்வுகளினால் உந்தப் பட்டு இங்கு வரவில்லை என்று முடிவு செய்ய முடிந்தது. எல்லாரும் கூடிப் பொழுது போக்குவதற்கான விழாவாகத்தான் இந்த விழாவைப் பொது மக்கள் எடுத்துக்கொண்டனர் என்பது அவனுக்கு ஆறுதலான விஷயம். சமூக வாழ்க்கையில் இப்படி பட்ட விழாக்களுக்கு முக்கியத்துவம் உண்டுதான். அதற்காக இந்த நாட்டில் சைவம் தலை தூக்கிவிட்டது என்று யாரும் மார்தட்டிக்கொள்ள முடியாது. எனினும் அரச குடும்பம் பொது மக்களுக்குச் சொன்ன செய்தி தெளிவாய் இருந்தது. 'சைவமே எங்கள் குல மதம். அதில் வேறொரு கருத்து இல்லை!' என்பதே அந்தச்செய்தி.

ஆனால் கூட்டத்தில் ஆங்காங்கே இருந்த சைவ சிரோன்மணி களைக் கண்டவுடன், அவர்கள் நெற்றியில் இருந்த திருநீற்றுப் பட்டைகளைக் கண்டவுடன், அவன் கோபம் இன்னும் அதிகரித்தது. அவர்களை வம்புக்கிழுக்க அவன் வாய் துடித்துக் கொண்டிருந்தது. அடியானுக்கு மிகவும் பிரேமையான விஷயம் சைவருடன் விவாதம் செய்வதுதான். ''அஞ்ஞான சிரோன் மணிகளே!'' என்று சைவப் பண்டிதர்களுக்கு இடையே சென்று பேச ஆரம்பித்தால் அது இன்றைய தினம் அடி உதையில்தான்

முடியும் என்று தெரிந்து கொண்டு விலகினான். எப்போது வாயைத் திறக்கவேண்டும், எப்போது இறுக மூடிக் கொள்ள வேண்டும் என்று அடியானுக்கு நன்றாய்த் தெரியும்.

இதில் பலரும் அடியானைப் பார்த்து, முக்கியமாக வைணவப் பாஷாண்டங்கள் தாராளமாய்ப் பூசப்பட்டிருந்த அவன் முகத்தைப் பார்த்து ஏளனச் சிரிப்புச் சிரித்தனர். ''சிவன் கோயிலில் உமக்கு என்ன வேலை?'' என்று கேட்காமல் கேட்டனர்.

மக்களெல்லாம் அரச குலத்தின் வரவை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டு நின்றார்கள். அரச குடும்பம் வந்தவுடன் ரசித்துக் கைதட்டிய மக்களை அண்ணாந்து பார்த்தான் அடியான். கோயில் வாசலில் ஜய கோஷத் தொனிகள் கேட்டன. அவன் மனதுக்குள் கோபம். சிவன் கோயிலுக்கு இவ்வளவு திருப்பணியா என்பது மட்டுமல்ல. இந்தத் திருப்பணியைக் கண்டு மக்கள் மிகவும் மகிழ்ச்சியாய் இருந்தனர். ஒரு சோக முகம் கூட இல்லை. ஆனந்தம் முகங்களில் விளக்கேற்றியது போல இருந்தது. 'அப்போது சைவம் இந்த நாட்டில் நன்றாய்வேரூன்றி விட்டதா?'

அப்போது அடியானுக்கு இயல்பாகவே ஒரு எண்ணம் வந்தது. கூட்டத்தை உற்றுக் கவனித்தான். எல்லாரும் சந்தோஷமாக இருக் கிறார்களா? இல்லை, அவனைப் போல் எவரேனும் மனக் கசப்புடன் நிற்கிறாரா என்று பார்க்க அவனுக்கு ஆர்வம்.

மற்றவரெல்லாம் ஏதோ தெய்வ தரிசனம் பார்த்தது போல் முக மலர்ந்து நின்றனர். கடல் போல் இருந்த கூட்டத்தில் ஆனந்தம் அலை போல் அடித்துமோதிக் கொண்டிருந்தது. புன்னகை பூக்காத முகமே இல்லை. குதூகலம் இல்லாத மனிதர்களே இல்லை. வாழ்த்தொலி மொழியாத வாயே இல்லை. இப்படி ஒவ்வொரு முகமாய்ப் பார்த்து வந்த அடியானுக்கு திடீரென இருதயமே நின்றது போல் ஒரு எண்ணம். கூட்டத்தை நோட்டம் விட்ட வனுக்கு இப்போது அத்தனை முகங்களிலும் ஒரே ஒரு முகந்தான் கண்ணுக்குத் தெரிந்தது. ஒருவன் மட்டும் கைதட்டவில்லை. எவ்வித சலனமுமின்றி நடப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தான். இந்தக் கூட்டத்தில் சந்தோஷமாய் இல்லாத முகம் அது ஒன்று தான். அதனால் மாபெரும் கூட்டத்தில் தனித் தீவாய் அவன் நின்றிருந்தான்.

அடியானுடைய மூளை நரம்பு ஒன்று அசைந்தது. நின்றிருந்த வன் யாரென்று ஓர் எண்ணம் அவன் உள்ளத்தில் உதயமாயிற்று. 'என்னைப் பார்த்து இங்கு உமக்கு என்ன வேலை என்று பலரும் கேட்டனரே? உண்மையில் இவனுக்கு இங்கு என்ன வேலை?'



எதற்கும் தயாராய் இருந்த ஒற்றனை பிரமிக்கச் செய்திருந்தது. ''ஆஹா! காலம் பொல்லாத காலம்! எதிர்பாராத விருந்தாளி வந்திருக்கிறான்'' என்று நினைத்துக் கொண்டான்.

மனம் பதைபதைக்க, உடம்பெல்லாம் நடுங்க, கால்கள் தள்ளாட, அடியான் சிலையென நின்றான். கண்களை அகலத் திறந்தான். எதிரில் இருந்த முகத்தை உற்றுப் பார்க்கலானான். சற்று நேரம் பார்த்துவிட்டு, அது பிரமையல்ல என்று தெரிந்து கொண் டான். பார்த்த கண்கள் அயர்ந்தன. நாக் குழறியது. தொண்டை யில் திடீரென்று ஈரம் வற்றியது. கூட்டத்தில் நின்றவன் ரவிதாசன் அல்லவா?

அவனைப் பார்த்துவிட்டுப் பயங்கரமும் திகைப்பும் அடைந்த கண்களுடன் மீண்டும் மீண்டும் அதே திக்கில் பார்வையிட்டான் அடியான். அவன் ரவிதாசன்தான். சந்தேகமேயில்லை. 'அவனுக்கு இங்கு என்ன வேலை? நம்மை நிம்மதியாக இருக்க விடமாட்டான் போலிருக்கிறதே' என்று நினைத்த அடியானுக்கு இன்னும் ஒரு கேள்வி புரியவில்லை. புரிந்திருந்தால் ரவிதாசனின் எண்ணப் போக்கு முழுவதுமாய்ப் புலனாகும் என்பது மட்டும் தெரிந்தது. 'இவன் ஏன் இன்னும் எட்டாத பழத்துக்குத் தாவித் தாவிக் குதித்து தவிக்க வேண்டும்?'

ரவிதாசனைச் சுற்றிலும் மக்கள் வெள்ளம். அதில் ஒருவர் கூட ஒரு சந்தேகப் பார்வையுடன் அவனைப் பார்க்கவில்லை. சோழர் கொடுத்த வளமையும் பாதுகாப்பும் இந்த மக்களுக்கெல்லாம் ஒரு ஐசுவரிய கர்வமும், அசைக்க முடியாத தன்னம்பிக்கையும் கொடுத் திருந்தன. தங்களுடைய பரம எதிரி தங்களுக்கு நடுவிலேயே நின்று கோயில் விழாவைப் பார்ப்பான் என்று யாரும் கனவில் கூட எதிர்பார்த்திருக்க மாட்டார்கள்.

'புரியாத ஜனங்கள். இங்கே இருந்தவர்களில் உண்மையானவர் யார், எதிரி யார் என்று யாருக்குத் தெரியும்? நாட்டில் எத்தனையோ விபரீதங்கள் நிகழ்ந்து வருகின்றன. அதுதான் அவர் களுக்குத் தெரியுமா? எப்போது யாரால் என்ன துரோகம் நடக்கும் என்று சொல்வதற்கு இல்லை என்பதுதான் புரியுமா?' என்று மனதுக்குள் திட்டினான்.

ஆனால், ரவிதாசனை யாரும் அடையாளம் காணாவிட்டாலும் பெரும் அதிசயமொன்றும் இல்லை. அவன் முகம் வெளியுலகத்தில் பிரபலமாக இல்லையென்பதால் நகருக்குள் ரவிதாசன் மாறு வேடங்களில் போவது வழக்கமாயிருந்தது. அவனுடைய அங்க

அடையாளங்களைக் கூர்ந்து கவனிக்கச் சோழ நாட்டு ஒற்றர்களுக்கு இதுவரை சந்தர்ப்பம் ஏற்படவில்லை.

அது மட்டுமல்ல, காவலர்கள் தன்மேல் சந்தேகம் கொள்ளாமல் இருக்கத் தெரிந்தவன் ரவிதாசன். அவனை நேரே பார்த்தவர்களுக்குத்தான் அடையாளம் தெரியும். ஆகையால் அவன் கோயில் திருவிழாவில் அடுத்து அமர்ந்திருந்தால் கூட அவனை அவர்களால் அடையாளம் காண இயலாது. அவனுடைய வயதான தோற்றமும் அந்த மரியாதையை வளர்த்தது.

அடியானுடைய கோப உணர்வுகள் பன்மடங்கு ஆயின. ரவிதாசனைப் பார்த்ததும் அவனுக்கு இயற்கையாகவே ஆத்திரம் பொங்கி வந்தது. ஊரை ஏமாற்றும் வேஷதாரி இவன். இவனுக்கு என்ன தைரியம்? எதிரியின் பாசறைக்குத் தனியாக வந்தானே. முன்பொரு தடவை, தன்னைக் காட்டில் கட்டிப்போட்ட கூட்டத்தின் தலைவன் இவன். 'அன்று மட்டும் கட்டை அவிழ்த்து ஓட்டம் பிடிக்காமலிருந்திருந்தால் நம்முடைய கதி யாதாயிருக்கும்!' என்று அடிக்கடி நினைத்துக் கொள்வான்.

ரவிதாசனைக் கூட்டத்தில் பார்த்தவுடன் அவன் பேரில் அவனுக்குப் பொங்கி எழுந்த கோபத்தைக் கொட்ட வேண்டும் என்று ஆவேசம் உண்டாயிற்று. சோழ வீரர்களை அழைத்து ரவிதாசனைத் துரத்திப் பிடிக்கச் சொல்லவேண்டும் என்று அவன் உடம்பிலுள்ள ஒவ்வொரு நரம்பும் துடித்தது. சில கண நேரத்திற்குள் அவன் உள்ளம் பற்பல ஆகாசக் கோட்டைகளைக் கட்டி விட்டது. சோழ வீரர்களைக் கூப்பிட்டு அவனைப் பிடிக்கச் சொல்லலாம். சாம்ராஜ்யத்திற்குப் பெரும் எதிரியைப் பிடித்து கொடுத்த பெருமை அவனையே சேரும்.

'இன்றைய தினம் உண்மையிலேயே என் வாழ்நாளில் அதிர்ஷ்ட தினம் ஆகப் போகிறதா?' என்று கூட நினைத்தான். இவனைப் பிடித்தால் பாண்டியரின் விடுதலைப் போராட்டமே அஸ்தமனமாகும் என்ற எண்ணம் அடியானுக்கு. ஆனால் அதை அவன் அடக்கிக் கொண்டான். எனினும் ஒரு விஷயம் அவன் கண்கள் வழியாக மனத்தில் நன்கு பதிந்தது. வேறு வீரர்கள் யாரையும் ரவிதாசன் தன்னுடன் மெய்க்காவலுக்கு அழைத்து வராதது அடியானுக்கு வியப்பை அளித்தது. சுற்றியிருந்தவர்கள் யாரும் அவனது ஆட்கள் போலத்தெரியவில்லை. காட்டில் அடியானைக் கட்டிப் போட்டு விசாரித்தவர்களே இவனது நம்பிக்கைக்குரிய சகாக்கள். அவர்கள் முகங்கள் அடியானின் உள் மனதில் நன்றாய்ப் பதிந்திருந்தன. அவர்கள் யாரும் அவனுடன் வரவில்லை.



ரவிதாசனின் முகத்தைப் பார்த்தபோது ஏதோ ஒரு விளங்காத மர்மம் அதில் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. 'ரவிதாசன் இங்கு ஏன் வந்திருக்கிறான்? நிச்சயமாகக் கும்பாபிஷேகத்தைப் பார்க்க வரவில்லை' என்று யூகித்தான். தனியொருவனாகத் தீங்கு ஒன்றும் செய்து விட அவனால் முடியாது. கணக்கற்ற சோழ வீரர்கள் இருக்கும் இடத்தில் அவன் தனியாக வரக் காரணம் என்ன? இவன் ஏதோ திட்டம் வைத்திருக்கிறான் என்பது இப்போது சர்வ நிச்சயமாயிற்று. அந்தத் திட்டத்தை நிறைவேற்ற இவன் இங்கே ஏதேனும் துப்பறிய வந்திருக்கிறானோ, என்னவோ- யார் கண்டது?

சும்மா உளவு பார்க்க வந்திருக்கிறானா? அல்லது ஏதோ தூர் நோக்கத்துடன் வந்திருக்கிறானா? அவன் செய்ய எண்ணிய தீங்கைக் கண்டறிவது முக்கியம். தொடர்ந்து அவனைக் கவனித்தால்தான் தெரியும் என்று முடிவெடுத்தான். அவன் முகத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் அடியான்.

மனம் போனபடி நடந்து பழக்கமுள்ள இந்தப் பிடிவாதக்காரப் போராளிக்குத்தான் என்னவொரு சக்தி! இவ்வளவு தோல்விகளைச் சுமந்த பின்னும் மீண்டும் ஒரு போராட்டத்துக்கு யாரும் முன்வர மாட்டார்கள். இவன்மட்டும் எப்படி வந்து விட்டான்? அவனிடம் இவ்வளவு தோல்விகளுக்குப் பின்னும் இவ்வளவு சக்தி இருக்கிறது என்பது வியப்பையும் பிரமிப்பையும் அளித்தது.

வீதிகளை நிறைத்திருந்த ஜனக்கூட்டத்தில் இடையிடையே சுந்தி கேடயங்களைத் தரித்த போர் வீரர்கள் காணப்பட்டார்கள். அவர்களில் பலருக்கு அடியானை நன்றாய்த் தெரியும். பிரதமரின் அந்தரங்க ஆள் அவன் என்று அவர்கள் அறிவார்கள். அதனால் அவர்களிடம் போய்ச் சொல்லலாம். ஆனால் 'அபாயம் அபாயம்' என்று ஒரு வேளை உரத்த குரலில் கூவிக் கொண்டே ஓடினால் குழப்பத்தில் அவன் மறையலாம். ஆனால் அவனைத் தேடுவதற்கு வீரர்களை ஏவி விட்டால், வெகு நேரம் அவன் மறைந்திருப்பது சாத்தியமல்ல. ஓடுவதும் சாத்தியமல்ல.

'பிடித்துக் கொடுப்பதா? இல்லை பின் தொடர்வதா?' என்று முடிவெடுப்பதற்கு முன்னால் இன்னொரு தடவை அவன்தானா அது என்று நன்றாய்ப் பார்க்க வேண்டுமென்று விரும்பினான். ரவிதாசன் கடைசியாக நின்றிருந்த இடத்தைப் பார்த்தான்.

வெகு நேரம் கண் கொட்டாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். கண்ணிமைகளை மூடித் திறக்கும் நேரம்தான் ரவிதாசன் இருந்த திக்கை அவன் கவனிக்க வில்லை. ஆனால்

ரவிதாசனை இப்போது காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டான் என்று அடியான் உணர்ந்தான். அடியானுக்கு விரக்தி. பாண்டியனைப் பணியச் செய்ய இந்த வாழ்க்கையின் நாட்கள் போதாது என்று அவனுக்கு புரிந்து விட்டது போல.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று இருபத்து எட்டு
## பகைவனின் பள்ளிப்படை

பதறினான் அடியான். 'சற்று முன் என் கண்களில் ரவிதாசன் தெரிந்தது உண்மையா? பிரமையா? பயந்தவனுக்கு இருண்டதெல்லாம் பேயென்பது போலப் பார்க்குமிடமெல்லாம் நமக்கு எதிரி தெரிகின்றானா?'

பின் முட்டி மோதிக் கூட்டத்துக்கு இடையில் சென்று ரவிதாசன் நின்றிருந்த இடத்தை அடைந்தான். அந்த இடத்தில் இப்போது நாட்டுப்பற்று மிக்க சோழ நாட்டுப் பிரஜைகள் நின்று ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர்.

பின் தாவித் தாவி நாலாபுறமும் பார்த்தான். கூட்டத்தின் விளிம்பில் தூரத்தில் ரவிதாசனின் முதுகு தெரிந்தது. தொங்கப் போட்ட தோள்களுட ன் விழாவைக் காணச்சகிக்காமல் அவன் வெளியேறிக் கொண்டிருந்தான்.

ரவிதாசன் கிழக்கு நோக்கி நடந்து கொண்டிருந்தபடியால், அவன் நிச்சயமாகப் பாண்டிய நாட்டுக்குத் திரும்பிப் போக வில்லை. அருகில் எங்கோதான் செல்கிறான். எப்படியாவது அவன் எங்கு செல்கிறான் என்று பார்த்தாலொழியத் தனக்கு மன நிம்மதி ஏற்படாது என்ற முடிவுக்கு அடியான் வந்தான்.

அவனைத் தொடர்ந்து சென்றால் ஒரு பெரிய மர்மமான காரியத்தைத் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைக்கும். 'எப்படி இருந்தாலும் மழபாடியில் தொடர்ந்து இருப்பதில் பயனில்லை. சிவனே உண்மையான கடவுளாய் இருந்தாலும், தான் வணங்கும் பெருமாளைவிட அவர் உயர்ந்தவராயிருந்தாலும் நான் அவரைத் திட்டிய அளவிற்கு எனக்குப் புண்ணியம் ஏதும் இங்கிருப்பதனால் கிட்டாது!' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.



ஆனால் உள்மனதில் ஒரு எச்சரிக்கை உருவெடுத்தது. 'இப்போதைக்கு ரவிதாசன் தனியாள். ஆனால் ஒருவேளை அவனுடன் வேறு சிலரும் சமீபத்தில் சேர்ந்து கொண்டால்? பின் நம் கதி? துணைக்கு ஆளைக் கூட்டிச் செல்ல வேண்டாமா?' என்று முதலில் தோன்றியது. பின்பு 'அதற்கெல்லாம் நேரம் இல்லை. கழுவும் போதே நழுவும் மீன் இவன். விட்டுவிடக்கூடாது. அபாயமென்றாலும் சமாளித்துக்கொள்ளத்தான் வேண்டும்' என்று தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தொடர்ந்தான்.

ரவிதாசன் செல்ல, அவனை அடியான் பின் தொடர, கலகலப்பு நிறைந்த மழபாடி நகரின் வீதிகளைக் கடந்து ஊர் எல்லையையும் அடைந்தனர். கொள்ளிடக் கரையோரமாகவே, முதல் காத தூரத்தை இருவரும் கடந்தனர். ஆனால் ஒரு முறை கூட ரவிதாசன் திரும்பிப் பார்க்கவில்லை.

'உயிருக்குப் பயந்தவன் நாலா பக்கமும் பார்க்க வேண்டாமா?' என்று தோன்றியது அடியானுக்கு. 'இன்றைக்கு இவன் என் கண்ணில் படாமல் இருக்கும் அளவுக்குக் கூட எச்சரிக்கையாய் இல்லையே!' ரவிதாசனுக்கு மந்திர தந்திரங்களில் விசேஷத் தேர்ச்சியுண்டு என்று அடியானுக்குத் தெரியும். அப்படியென்றால் தான் பின்னால் தொடர்வதை இன்னும் அவன் கண்டு கொள்ள வில்லையே என்ற ஆச்சரியம்.

ஆனால், அடியானுக்கு அவன் நடையில் ஒரு தளர்ச்சி தெரிந்தது. சோழரின் ஆட்டம் பாட்டம் அவன் மனமுடையச் செய்திருக்க வேண்டும். முன்னால் செல்கின்றவனுக்குத் தோல்வி மேல் தோல்வி. அதற்குப் பிறகும் இத்தனை காலமாக விடுதலை வேட்கையை மனத்திலேயே வைத்துக் கொண்டு அவன் போராடியதை நினைத்தால் வியப்பாயிருக்கிறது. அவன் தீட்டிய திட்டங்களுக்கும், செய்த பெரும் முயற்சிகளுக்கும் நியாயமாக இந்தத் தஞ்சைப் பேரரசு இதற்குள்ளே அவனது காலடியில் விழுந்து கிடக்க வேண்டும். இதெல்லாம் நடக்காமற் போய் விட்டதன் காரணம் என்ன? சோழர்களின் ஆன்மீக பலமா, சோழ நாடு செய்த தவமா? பாண்டிய நாட்டைப் பிடித்த சாபமா? எல்லாரையும் விட இந்த கேள்விகள் ரவிதாசனைத்தான் நோகடித்திருக்க வேண்டும்.

கொள்ளிடம் ஒரு இடத்தில் அகண்ட நதியாய் இருந்தது. நீர் அதனால் மிகவும் ஆழமில்லாமல் ஓடியது. சொல்லப் போனால் முட்டிவரை தான் நீரோட்டம். அந்த இடத்தை ஏற்கனவே தேர்ந்தெடுத்து வைத்தது போல ரவிதாசன் ஆற்றைக் கடந்தான்.

ஆற்றைக் கடந்து அடியானுக்கு அவனைத் தொடர்வதில் ஒரு கஷ்டமும் இல்லை. பல நூறு பேர் ஆற்றைக் கடந்து கொண்டிருந் தனர். ஆனால் எல்லாரும் எதிர்த் திசையில் மழபாடிக்குச் சென்று கொண்டிருந்தனர். அவர்களுக்கு இடையில் புகுந்து புகுந்து சென்றான் அடியான். பலரை அவன் இடித்தாலும் எங்கும் நிலவிய நல்லெண்ணத்தில் அவர்கள் சிரித்தபடியே சென்றனர்.

ஆற்றுக்கு அக்கரையில் சென்ற ரவிதாசனைத் தொடர்ந்தான் அடியான். இருபுறங்களையும் பார்த்து மரங்களடர்ந்த காடுகளின் வழியாகச் செல்வதைக் கண்ட அடியான் இனிக் கவலையில்லை என்ற முடிவுக்கு வந்தான். ஏதாவது கஷ்டமென்றால் ஓடிச்சென்று அடர்ந்த தாவரங்களுக்குள் புகுந்து மறைந்து கொள்வது அசாத்தியமான காரியம் அல்ல.

காலையில் புறப்பட்ட இரு விரோதிகளும் சூர்ய அஸ்தமன மாகக் கொஞ்ச நேரம் இருக்கும் முன் அடர்த்தியான காட்டுப் பாதையை அடைந்தனர். களைப்பையே அறியாத வரம் வாங்கி வந்தவன் போல நடந்து கொண்டே இருந்தான் ரவிதாசன். ரவிதாசனின் வேகத்துக்கு ஈடு கொடுக்கும் போது அடியானுக்கு மேல்மூச்சு வாங்கிவிட்டது. அது மட்டுமல்ல பிரச்சனை சோர் வடைந்த அடியானுக்கு.

ரவிதாசனோ சாலையை மட்டும் பார்த்து நடந்தான். இவனோ யாராவது எதிர்ப்பட்டால் மறைந்து கொள்ள வேண்டும் என்று சாலையையும் பார்த்து, ரவிதாசன் மேலும் ஒரு கண் வைத்துக் கொண்டு நடக்க வேண்டியிருந்தது. இதில் வழி வேறு நல்ல வழியல்ல; காடும் மேடும் முள்ளும் கல்லுமாயிருந்தது. ஜாக்கிரதை யாகப் பார்த்து நடந்து வர வேண்டியிருந்தது.

சிறிது தூரம் காட்டுப் பாதையில் சென்ற பிறகு, ரவிதாசன் போகும் திசையை வைத்து எங்கு செல்கிறான் என்று கண்டுபிடித்து விட்டான் அடியான். வழியைப் பார்த்தால் பாண்டியப் போராளிகள் வழக்கமாகக் கூடும் இடமான கங்க மன்னன் பிரிதிவிபதியின் பள்ளிப்படையாகத்தான் இருக்க வேண்டும் எனத் தெரிந்தது. அப்படியென்றால் இன்னும் சூர்ய அஸ்தமனம் கழித்த ஒரு நாழிகையில் அந்த பள்ளிப்படை வந்து விடும்.

குடந்தை நகருக்கு அரைக் காதம் வடமேற்கில் திருப்புறம்பியம் என்னும் கிராமம். தேவாரப் பதிகம் பெற்ற இந்தத் திருத்தலத்தின் அருகே ஒரு பள்ளிப்படைக் கோயில் இருந்தது. கொள்ளிடத்தி லிருந்து பிரிந்து காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவில் பாயும் நதி ஒன்றே ஒன்றுதான். அதற்கு மண்ணியாறு என்று பெயர். இந்த



மண்ணியாற்றின் வடகரையில் நடந்த ஒரு மாபெரும் போரில் உயிர் நீத்த கங்க மன்னன் பிரிதிவிபதியின் ஞாபகமாக ஒரு பள்ளிப்படை எடுக்கப்பட்டிருந்தது. அங்குதான் பாண்டியர்கள் எப்பொழுதும் கூடுவார்கள். இன்றும் பழக்க தோஷம் போல.

பாண்டியரின் நோக்கம் போலவே புறம்பியம் பள்ளிப்படையும் பாழடைந்து கிடந்தது. போர்க் களத்தின் மத்தியில் கட்டப் படுவதால் சில ஆண்டுகளிலேயே பள்ளிப்படையின் தளர்ச்சி தெரியும். கோயிலைச் சுற்றிச் சில காலம் அங்கு சிந்திய உதிரத் தினால் புல் பூண்டுகளே முளையாமல் கிடக்கும். பொது ஜனங்கள் அந்தச் சுற்று வட்டாரத்தையே தவிர்ப்பார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு அங்கே காடு மண்ட ஆரம்பிக்கும். பின் பராமரிப்பின்றிக் கோயிலும் நாளுக்கு நாள் தகர்ந்து போய்விடும்.

அதுபோலவே தற்போது புதர்களில் நரிகளும், மரக் கிளைப் பொந்துகளில் ஆந்தைகளும் கோட்டான்களும் வாசம் செய்தன. வேறு யாரும் வருவதில்லை; அதாவது பாண்டியப் போராளிகளைத் தவிர. தேச விரோதச் செயல்களுக்குப் பள்ளிப்படையைப் பயன் படுத்த நல்ல வாய்ப்புகள் இருந்தன. தூரத்திலிருந்து வருபவர் களுக்கு அடையாளம் சொல்ல எளிதான இடம். பொது மக்களின் தொந்தரவும் இல்லை. பாண்டியரைக் கண்டால் நரிகளும் ஆந்தை களும்கூட பயந்து ஓடி ஒளியும். பேய் பிசாசுகள் கூட அஞ்சும். அதனால் அதையே ரகசியக் கூட்டத்துக்கு உபயோகித்தனர்.

பொதுவாக எதிர்ப்புறமாக வரும் ஆட்களைச் சந்திக்கும் போதெல்லாம் யாருக்கும் முகமன் கூறிக் கொள்ளாமல் தலை குனிந்தபடியே சென்றான் ரவிதாசன். அடியானும் அதையே கடைப் பிடித்தான். ஆனால் பள்ளிப்படையை நெருங்க நெருங்கக் காட்டுப் பாதையில் சிலர் ஆங்காங்கே அமர்ந்திருந்தனர். அவர் களைப் பார்த்தவுடன் தன் இரு கையினாலும் ஏதோ சமிக்ஞை செய்தான் ரவிதாசன். விரித்த வலது புறங்கையின் மேல் விரித்த இடது கையை வைத்து, இரண்டு கட்டை விரல்களை ஆட்டி, மச்ச சமிக்ஞை பிடித்துக் காட்டினான். அதைப் பார்த்த எதிர் ஆளும் அதையே செய்தனர். பின்னர் உடனே எழுந்து அவனுடன் நடந்தனர்.

பல ஆட்கள் ரவிதாசனுடன் சேர்வது அடியானுக்கு ஆச்சரியத் தைக் கொடுக்கவில்லை. ஆனால் அதற்குப் பிறகு அவனுடைய கண்களோ அப்புறமும் இப்புறமும் நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக் கொண்டு வந்தன. காலை நேரத்தில்கூட இரு புறமும் மரங்களடர்ந்த அந்தக் காட்டுப்பாதையில் பிரயாணம் செய்வதே ஒரு பயம் நிறைந்த அனுபவம். அதிலும் இப்போது அபாயம்

கூடிவிட்டது. எதிரியின் ஆள்பலம் கூடிவிட்டது. இனி அவர்கள் கையில் மாட்டினால் அவ்வளவுதான். கட்டி வைத்து தோலை உரித்து விடுவார்கள்.

'போன முறையே பாண்டியன் அவ்வளவு சுலபமாக என்னை விட்டிருக்க மாட்டான். இன்னும் எத்தனை காலம் என்னை உயிரோடு வைத்திருந்து சித்திரவதை செய்ய வேண்டுமோ செய்திருப்பான். ஆகையால் இப்போது மிக எச்சரிக்கையுடன் செயல்படவேண்டும்!' என்று நினைத்துக் கொண்டான் வீர வைணவன்.

ஆனால் தளராமல் பின்தொடர்ந்தான் அடியான். பிரதமர் தன்னிடம் ஒப்புவித்திருந்த வேலைகளை இதுவரை செய்து முடித்து விட்டோம் என்ற பெருமித உணர்ச்சி அடியான் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்தது. அது மட்டுமா? பல ஆண்டுகளாகச் சோழவள நாட்டின் பாதுகாப்புக்குத் தன் சேவை உபயோகப் பட்டது. 'இப்போதும் ஏதோ ஒரு பெரிய மர்மமான காரியத்தைத் தெரிந்து கொள்ளக் கடவுள் அருளால் சந்தர்ப்பம் கிடைத்திருக் கிறது. இதை விட்டு விடக்கூடாது.' என்று தீர்மானித்துக் கொண்டு எண்ணிக்கையில் அதிகரித்து வரும் பாண்டியப் போராளிகளின் கூட்டத்தைப் பின் தொடர்ந்தான்.

காட்டில் மரங்கள் மிக அடர்த்தியாக இருந்த ஓரிடத்தை அணுகும்போது, மரங்களுக்கு இடையே திடீரென ஏதோ சத்தம் கேட்டது. காலையிலேயே இருண்ட காட்டுக்குள் சில மனிதக் குரல்கள் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தன. பள்ளிப்படைக் காட்டில் ஏக காலத்தில் எல்லாரும் வந்து சேர்ந்ததற்கான அறிகுறி தெரிந்தது. நெடுந்தூரப் பயணம் முடியப் போகிறது என்று யூகித் தான் அடியான். அந்தக் குரல்கள் களைப்புற்று இருந்த அடியானின் செவிகளுக்கு இன்பமளித்தன. ஆனாலும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய நேரம் இது என அவனுக்குத் தெரிந்தது.

'ஆகா! இவனைப் பின் தொடர்ந்து வந்தது ஏதாவது லாபம் தரும் போல!' என்று நினைத்த அடியான், யாரும் பாராத சமயத்தில் மிக அருகில் சென்று மறைந்து கொள்ள வேண்டும் என முடிவெடுத்தான்.

குறுக்கு வழியில் புகுந்த அடியான் மண்டிக் கிடந்த தாவரங் களினால் பல இன்னல்களை அனுபவித்துப் பள்ளிப்படைக் கோயிலுக்கு வெகு அருகில் சென்றடைந்தான். மற்ற இடங்களை விட இந்தப் பள்ளிப்படையைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த அந்தகாரம் அதிகமாகத் தெரிந்தது. போன முறை இவ்விடத்தில் ஒட்டுக்



கேட்டபோது இந்த வீர வைஷ்ணவ சிகாமணி பள்ளிப்படைக் கோயில் மண்டபத்தின் மீது தாவி ஏறிவிட்டான். கோயிலின் மேல் மண்டப விளிம்பில் அமைந்திருந்த காவல் பூத கணங்களுக்கு நடுவே அமர்ந்தபடி பாண்டியர் போராட்ட விஷயங்களை ஒட்டுக் கேட்டான். ஆனால் இந்த முறையோ மண்டபத்துக்கு மேலே ஏற வாய்ப்பில்லை. நினைத்தாலும் அவனால் முடியாது. வயதாகி விட்டது அல்லவா?

சப்தமின்றி நுழைந்த ரவிதாசனை திடீரெனக் கண்டு அங்கு ஏற்கனவே வந்தவர்கள் முதலில் சிறிது திகைத்து நின்றார்கள். பிறகு ஒருவரையொருவர் உற்சாகப்படுத்திக் கொண்டு முகமன் சொல்லிக்கொண்டனர்.

இந்தத் தனிமை மிகுந்த கனாந்தகாரத்தினிடையே பாண்டியப் போராளிகள் ஏற்கனவே குழுமியிருந்தார்கள். தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து ஒன்று கூடியவர்களை ஒரே நேரத்தில் இங்கு வரவழைத்தான் போலும். ரவிதாசனைத் தவிர எல்லாரும் மச்ச ஹஸ்த சமிக்ஞை செய்தே தாங்கள் யார் என்று உறுதி செய்து கொண்டிருப்பார்கள்.

மரத்துக்கு அருகில் நின்று சம்பாஷணையைச் சற்று ஒட்டுக் கேட்டு விட்டுப் போக முடிவு செய்தான் அடியான். 'இதுவரை கால் கடுக்க வந்ததற்குச் செவி குளிரச் செய்தி அறிந்தே போக வேண்டும்.'

நடுநிசியில் பள்ளிப்படைக் காட்டில் மரத்தின் பின்னால் நின்றிருந்த அடியான் கூடியிருந்தவரை எல்லாம் பார்த்துவிட்டு மலைத்தான். பாண்டியப் போராட்டம் நலிவடைந்து விட்டது என்ற எண்ணம் எவ்வளவு பிழையானது என்று இந்தக் கூட்டத் திற்கு வந்திருந்தால் சோழர்களுக்குத் தெரிந்திருக்கும். இந்தக் கூட்டமே அதன் உயிர்மூச்சு அடங்கவில்லை என்பதற்குப் பிரத்யட்ச உதாரணம்.

சோழர்கள் என்னடாவென்றால் சிவன் கோயில் திருப்பணி செய்வதில் மட்டுமே காலம் கழிக்கிறார்கள் என்ற கோபம் அடியானுக்கு.

இத்தனை நாளும் ரவிதாசன் உத்தேசித்திருந்த காரியம் ஏதும் நிறைவுவரை நடைபெறவில்லை. ஆனால் அவையெல்லாம் சோழர்களைக் கவலைக் குரியதாக்கின. இனிமேல் பாண்டியர்கள் வெளியில் சுதந்திரமாய்த் திரிந்தால் தங்களுக்குப் பாதகம் விளை யும் என்று அவன் நினைக்கலாம். வேட்டையாடி அவர்களைக் கொல்லலாம் என்று சற்று எச்சரிக்கையுடன் பிரிந்து வாழ்ந்த

வர்கள், எல்லாரும் பல நாள் கழித்து இன்று ஒன்று சேர்ந்திருந்தார்கள்.

அவர்கள் ஏதோ மிக முக்கியமான விஷயத்தைப் பற்றிக் கலந்தாலோசிக்கவே நள்ளிரவு நேரத்தில் அங்கே கூடியிருக்க வேண்டும். அவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன பேசுகிறார்கள் என்பதைத்தான் ஆழ்வார்க்கடியான் மரத்தின் பின்னிருந்து அவ்வளவு கூர்மையாகக் கவனிக்க ஆசை கொண்டான்.

அவர்கள் பேசுவது யாதாயிருக்கும் என்று கேட்க அடியானுக்கு ஆவல். ஆனால் இன்னும் அருகில் சென்றால் அகப்பட்டுக் கொள்வோம் என்ற பயம் சற்றிருந்தது. காட்டில் பழுவூர் இளவரசியை விடுவித்துத் தப்பியபின், இவன் மேல் அவர்கள் கோபமாய் இருந்தனர். இனிமேல் இவர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டால் கட்டிப்போட மாட்டார்கள். கொன்றே விடுவார்கள் என்கிற பயம்.

நல்ல மரமாய்த் தேர்ந்தெடுத்துப் பின்னால் ஒளிந்து கொண்டான் அடியான். பின்னாலிருந்து எட்டிப் பார்த்தான். கூடியிருந்த கூட்டத்தின் மத்தியில் ரவிதாசன் நின்றிருந்தான். ரவிதாசன் முதுகையே பல காத தூரம் பார்த்திருந்து விட்டு அவனை நேருக்கு நேரே பார்த்தவுடன் அவன் பேசுவதைக் கேட்க வேண்டும் என்ற ஆர்வத்தில் நூறு செவி முளைத்தது போலொரு உணர்வு.

கூடியிருந்தவர்களெல்லம் பாண்டிய நாட்டை உயிருக்கு மேலாக நேசித்தவர்கள். தேசப்பற்று என்பது ஒரு அபார சக்தி. ஜன்ம தேசத்தை விரும்பாதவன் மனிதனேயல்ல. பாலைவனப் பிரதேசமாய் இருந்தாலும், அது வளங்கொழிக்கும் சொர்க்க பூமியாகத் தோன்றும். அப்படியே இவர்களும் பாண்டியச் சக்கரவர்த்தியின் திருப்பணியில் உயிரையும் விடுவோம் என்று மாண்டு போன வீரபாண்டிய மன்னனின் இரத்தம் தோய்ந்த சிவந்த கையினால் அடித்துப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள்.

வந்த களைப்பைக்கூட வெளிக்காட்டாமல் ரவிதாசன் பேசத் தொடங்கிவிட்டான். ''ஒரு முக்கியமான காரியத்துக்காகத்தான் உங்கள் எல்லாரையும் வரும்படி சொல்லிச் செய்தி அனுப்பினேன்'' என்றான் ரவிதாசன். ரவிதாசன் பேசத் தொடங்கியவுடன் அதிர்ச்சியில் சில பறவைகள் சடசடவென்று சிறகை அடித்துக் கொண்டு மேலே பறந்தன. ஆச்சரியம் கொண்டவை பறவைகள் மட்டுமல்ல. அவன் குரலின் ஆழத்தைக் கேட்டபின் 'அமானுஷ்ய சக்தி கொண்டவனா இவன்? ஓய்வே தேவையில்லையா?' என்று கூடக்



களைத்துப்போயிருந்த அடியானுக்குத் தோன்றியது. உற்றுக் கவனிக்கலானான்.

''பாண்டிய நாட்டுக்கு இது பொல்லாத காலம், சோழன் மதுரையில் மிகப் பெரிய சைனியத்துடன் வசித்துக் கொண்டிருக்கிறான். அந்தச் சைனியந்தான் பாண்டிய விடுதலை முயற்சிகளைத் தடுத்து நிறுத்திக் கொண்டிருக்கிறது. ஆனால், அதைவிட அபாயம் ஒன்று தற்போது நேர்ந்திருக்கிறது' என்றவுடன் எல்லாரும் ஆர்வமாக அவனைக் கவனிக்கத் தொடங்கினார்கள்.

''எல்லாருக்கும் நினைவூட்ட விரும்புகிறேன். இதே திருப்புறம்பியம் பள்ளிப் படையில் நள்ளிரவில் ஒரு பயங்கரமான சபதம் எடுத்துக் கொண்டோம். சோழர் குலப் பூண்டே இந்த உலகில் இல்லாமல் அழித்து விடுவதாகச் சபதம் எடுத்துக் கொண்டோம். அதைப் பாதி நிறைவேற்றினோம். அது போலவே இதே காட்டில் தான் பாண்டிய மகராஜாவுக்கு மகுடாபிஷேகம் செய்தோம். ஆனால் மகராஜா நம் கட்டுப்பாட்டில் இன்று இல்லை'' என்றான் ரவிதாசன். ஒரு வியப்பொலி எழுந்தது.

''வெகு நாட்களாகவே அவர் நந்தினியின் கட்டுப்பாட்டில்தான் இருந்தார். எனினும் சோழர் கையில் இன்று சென்று விட்டார்'' என்றான்.

எல்லாருடைய முகமும் துவண்டதைக் கண்டு, ''தலைநிமிர்ந்து கர்வத்துடன் நிற்கும் காலம் எப்போது வருமோ என்று காத்திருக்கையில் நந்தினி செய்த காரியத்தினால் நாம் திகைத்து நிற்கிறோம். சோழனுடன் நட்புரிமை கொண்டாடுவது நாம் கனவிலும் நினையாதது. அவளுக்கு எப்படித் தோன்றியது? நாம் பிறந்த நாட்டுக்கு அபாயம் வந்திருக்கும்போது, எதிரியுடன் கைகோர்ப்பதா?'' எல்லாரும் நினைத்ததையே அவனது வார்த்தைகள் எதிரொலித்தன.

''நந்தினி சோழர்களின் விருப்பத்தின்படி நடக்கச் சித்தமாயிருக்கிறாள். அவருக்குத் தான் மகராஜா பட்டம் கட்டியிருக்கிறது. அவர்தான் நியாயமாக அடுத்த பட்டத்துக்கு வர வேண்டும். ஆனால் சோழருடன் கைகோர்த்துக் கொண்டு வந்தால் அதற்கு நாம் ஒப்புதல் அளிக்க முடியாது. இவர்தான் பாண்டிய நாட்டு மன்னர் என்று சோழன் சொன்னால் போதுமா? பாண்டிய நாட்டுப் பிரஜைகள் எல்லாரும் ஒப்புக் கொள்ள வேண்டாமா?''

''பல வகையான தோல்விகளினால் மனச் சோர்வு ஏற்பட்ட போதெல்லாம் 'மகராஜா இருக்கிறார்' என்ற தெம்பில் மீண்டும் ஊக்கமும் தைரியமும் அடைந்தேன். ஆனால், அவரையே

சோழர்கள் அபகரித்து விட்டனர் என்றவுடன் நம் போராட்டமே இன்று நடுத்தெருவில் நிற்கிறது என்று தோன்றுகிறது. இதை யெல்லாம் பற்றிக் கவலைப் படாமல் இனி நந்தினி சொப்பன சொர்க்கலோகத்தில் வாழ்வது போல் தஞ்சைபுரியில் வாழ்வாள். பின் மதுராபுரிக்கும் செல்வாள்.''

''உங்களுடன் மனம் விட்டுப் பேசி அடுத்த கட்ட நடவடிக் கையை முடிவு செய்யலாம் என்றுதான் அழைத்தேன். இது குறித்து எல்லாருடைய மனோநிலைமையையும் அறியலாம் என்று தான் இந்தக் கூட்டம்.''

''மகராஜாவை மீட்க வேண்டும், குலத் துரோகமும், ராஜத் துரோகமும் செய்த நந்தினியை கொல்ல வேண்டும்'' எனப் பல குரல்கள் எழுந்தன.

''இதற்கெல்லாம் தக்க சமயத்தில் பழிவாங்கியே தீர வேண்டும் என்பதில் எனக்கு மாற்றுக் கருத்தில்லை. பலரும் போர்க்களத்தில் உயிரைக் கொடுத்துச் சம்பாதித்த வீரப் புகழையெல்லாம் நாசமாக்கி விட்டாள். அவள் சாக வேண்டும். மகாராஜா மீண்டும் நம் கைக்கு வர வேண்டும். இனிமேல் சோழருடன் நமக்குச் சமரசமே இல்லை எனத் தெரிய வேண்டும். சோழர் நிழல் பட்ட பிறகு அந்த இருவருமே எனக்கு வேண்டாம். அபாய காலத்தில் நான்கைந்து வாரிசுகள் இருப்பார்கள் என்று தயார் செய்து வைத்தது நல்லதாய்ப் போனது. அமர புஜங்கனே நமக்கு இனி ஒரே தலைவர்.''

எல்லோரும் ஆமோதித்தனர். ''நான் திட்டமிட்டிருப்பது சோழ ரைப் பழி வாங்கத்தான். முக்கியமாகச் சோழனுக்கு வலிக்கும்படி ஒரு அடி கொடுக்க நான் திட்டமிட்டுள்ளேன்'' என்றான்.

''எப்போது? எப்போது?'' என்று ஆர்வம் கொண்ட குரல்கள் கேட்டன.

''அடுத்த வாரம். மழபாடிக் கும்பாபிஷேகத்திலேயே அவர் களும் அவர்கள் சிற்றசர்களும் ஒன்று சேர்ந்து இறைவனின் திருவடியைப் பிரார்த்திக்கிறார்கள். பாவம்! அப்போது, எல்லாரும் இறைவனின் திருவடியை அடைந்தாலும் அடையலாம்!'' என்றான் ரவிதாசன்.

❖ ❖ ❖



## அத்தியாயம் நூற்று இருபத்து ஒன்பது
## ''சோழருக்கு அபாயம்!''

**கா**னகத்தில் திடீர் மௌனம் ஏற்பட்டது. நிலைமையைக் கண்டபின் கோட்டான்கள் வாய் மூடி நின்றன. காற்றுக் கூட மூச்சைப் பிடித்தபடி நின்றது.

திட்டம் தீட்டியிருப்பான் தலைவன் என்று எல்லாருக்கும் தெரியும். ஆனால் இவ்வளவு பெரிய திட்டமா?

பாண்டியரின் விடுதலையில் உண்மையான பற்றுக் கொண்ட வன் தான் ரவிதாசன். சுதேச சமஸ்தானமாகப் பாண்டிய நாட்டை தன் வாழ்நாளில் பார்க்கவேண்டும் என்ற வெறியில் அவன் என்னவும் செய்வான் என்பதில் ஐயம் இல்லை. மதுரையில் நடந்த கோர சம்பவங்கள் எல்லாம் தினந்தினம் அவன் நினைவுக்கு வரும் போல. நினைவுக்கு வந்ததோடு மட்டும் இல்லை; அந்த அனுபவங் களையெல்லாம் அவன் திரும்பத் திரும்ப அனுபவித்துக் கொண் டிருந்தான் என்றும் எல்லாருக்கும் தெரியும். அந்த வலியே அவனுக்கு அமானுஷ்ய சக்தியைக் கொடுத்தது.

அதனால் மண்ணைக் கவ்விக் கீழே விழுந்தவுடன் தூசியைத் தட்டி மீண்டும் எழுவான். மீண்டும் திட்டம் தீட்டுவான். ஆனால் இயற்கையாக அடுத்தடுத்த திட்டம் செயல்படுத்த எளிமையாகவும் அதன் விளைவு சின்னதாகவும் இருக்கவேண்டுமல்லவா? அது மட்டும் ரவிதாசனிடம் கிடையாது. இப்போது அவன் சொன்னது மகாப் பெரிய திட்டமாயிருந்தது.

திட்டத்தின் விளைவுகள் கேட்பதற்கு செவிகளுக்கு இனிமை யாய் இருந்தாலும் திட்டத்தின் கடைசி நோக்கம் அளவில் அதிகரிக்கும்போது அதைச் செயல் படுத்துபவனுக்கு அபாயங் களும் அதிகரிக்கும், என்று எல்லாருக்கும் தெரியும்.

இதுவரை செய்ததையெல்லாம்விட ஒரு பெரிய சூழ்ச்சியை ரவிதாசன் மனதில் வைத்திருக்கிறான் என்றுத் தெரிந்தவுடன் பாண்டியப் போராளிகள் வாயடைத்துப் போயினர். யாரும் விவரம் கேட்காத நிலையில் ரவிதாசன் தானாகத் தன் திட்டத்தை விளக்கினான்.

''தென்னாட்டில் சோழன் இனி அசைக்க முடியாத சக்தி தான். ஒப்புக்கொள்கிறேன். அவனைச் சாய்ப்பதென்பது சாத்தியமா? சோழர்களுக்கு எதிராக எல்லா மன்னர்களும் சேர்ந்து பிரயத்தனம் செய்தாலொழிய அது சாத்தியப்படுமா என்று யோசித்தேன்.

அதற்கு பதிலாக எல்லா மன்னர்களையும் ஒரே நேரத்தில் கொன்று விட்டால் என்ன என்று எனக்குத் தோன்றியது'' என்றான்.

'ஒருவனைக் கொல்லவே பிரம்மப் பிரயத்தனம் பட்டாயிற்று. இந்த அழகில் எல்லோரையும், அதுவும் ஒரே நாளிலா?' என்று எல்லோரும் அவனை நம்பாமல் கேட்டனர்.

ரவிதாசன் தொடர்ந்தான் ''மன்னர்கள் ஒன்று கூடும் அத்தகைய சம்பவம் மழபாடியில் தான் நடக்கும். அந்த அரிய சந்தர்ப்பத்தை விடலாமா? சோழனைப் பழிதீர்க்கத் நமக்கு தங்களுடைய உதவியை அளிக்க ஒரு அரசன் கூட முன் வரவில்லை. போர்க் களத்தில் முன்னணியில் நின்று போரிடச் சித்தமாயுள்ள வீராதி வீரர்கள் தாம் தங்கள் அரசுரிமையை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்ற காலம் கப்பலேறிப் போய்விட்டது. சோழர்களைப் புகழ்பாடி அவர்களுக்கு இஷ்டமான காரியங்களைச் செய்திருப்பவன் தான் இன்று அரசனாய் இருக்க முடியும். சோழன் முன் மண்டியிட்டால் போதும், பின் அரசர் பட்டத்தைத் தக்க வைத்துக் கொண்டு அரண்மனைச் சுகபோகங்களில் திளைத்து வாழ்ந்திருக்கலாம். அவர்களுக்கெல்லாம் பேருக்கு ராஜ்ஜியம் கொடுத்து, சிற்சில உரிமைகளும், சலுகைகளும் சோழனால் அளிக்கப்பட்டன. அதற்கு நன்றிக் கடனாக, அவர்களெல்லாம் மழபாடிக் கோயிலில் தோரணமும் வாழை மரமும்கட்டிக் கொண்டிருப்பார்கள். பாய் விரித்திருப்பாகள். ஏன் சாப்பாட்டுப் பந்தலில் எச்சில் இலையைக் கூட எடுப்பார்கள். அதனால் அவர்களும் சாகத்தான் வேண்டும்.''

இன்னும் கேட்பவரின் முகங்களில் சந்தேகக்குறி தொடர்ந்தது. அதைப் போக்க ரவிதாசன் மேலும் தொடர்ந்து வாதிட்டான்.

அவர்கள் முகங்களைக்கண்டு மனம் தளரவில்லை ரவிதாசன். ''தோழா, நினைத்து பார். எல்லாரும் செத்தொழிந்தால், உடனே தமிழகமெங்கும் பயங்கரமான உள்நாட்டு யுத்தம் ஏற்படும். தலைமையற்ற சோழ நாடு விரைவில் சீர்குலையும். அப்போது பாண்டிய நாடு பழுத்த பழமாய் நம் கையில் வந்து விழும்'' என்று உரக்க ஆவேசத்துடன் கத்தினான்.

கூட்டத்தில் பலரும் சற்று அசந்தே போயிருந்தனர். 'கடத்திவந்த சின்னப் பெண்ணைக் காட்டில் காவல் காக்கக்கூட முடியவில்லை என்று தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் தமிழகத்தில் உள்ள எல்லா அரசகுல ரத்தத்தையும் கொள்ளிடத்தில் சிந்த வைக்கிறேன்' என்று சபதமிடுகிறானே ரவிதாசன் என்று மலைத்தனர்.



இடும்பனே முதலில் பேசினான். ஆனால் அவனும் விவாதம் எம்பந்தமாகப் பேசவில்லை ''ரவிதாசரே! இரைச்சல் போட வேண்டாம்; கொஞ்சம் மெதுவாகப் பேசலாம்'' என்றான்.

''ஆகா! இடும்பனா. இங்கு இப்படிப் பேசினால் என்ன? மரஞ் செடி கொடிகள் தான் நம் பேச்சைக் கேட்கும்! பட்சிகள் கேட்கும். ஏன் செத்துக் கிடக்கும் கங்க மன்னன் பிருத்விபதியின் ஆவி கேட்கும். நல்லவேளையாக அவை யாவும் போய்ச் சோழனிடம் சொல்லாது!'' என்றான் ரவிதாசன்.

ரவிதாசன் ஏன் என்றும் இல்லாதது போல உரக்க உரக்கப் பேசினான் என்று சிலருக்குப் புரியவில்லை. ஆனால் புதரின் மறைவில் இருந்த அடியானுக்குத் தெள்ளத் தெளிவாக ஒவ்வொரு வார்த்தையும் செவியில் விழுந்தது.

கூட்டத்தின் அடுத்த கட்டம் வந்தது. இப்போது ரவிதாசனுக்கு எதிராக ஓரிரு குரல்கள் கேட்டன. திட்டத்துக்கு எதிராகப் பேச்சும் வளர்ந்தது. சோழரைப் பழிவாங்க இது தக்க தருணமா என்று பலரும் கேட்டனர். ''நாம் பலமாய் இருந்த காலத்தையெல்லாம் விட்டுவிட்டு இப்படி பலவீனமாய் இருக்கும் நேரத்தில் இதையெல்லாம் செய்யமுடியுமா?'' என்றான் ஒருவன்.

''பல மாதக் காலமாக அரை வயிறு உணவு உண்டுதான் ஜீவித்து வருகிறோம். ஆரம்ப காலத்தில் நம்முடன் இருந்தவர்களில் பாதிப் பேர் பஞ்சத்திலும் நோயிலும் மடிந்து போனார்கள். நாம் எப்படி இந்தத் தாக்குதலை நடத்தப் போகிறோம்?'' என்றான் மற்றும் ஒருவன்.

ரவிதாசனுக்கு அடுத்தபடியாகக் கூடத்தில் உயர்ந்தவன் என்று கருதப்பட்ட பரமேசுவரன் அது வரை மௌனம் காத்தான். அவனுக்கு வியப்பு. 'அடிக்கு பதிலடி கொடுக்கவேண்டும் என்று எதற்காக இப்படி வீம்பு பிடித்துக் கொண்டு திரிகிறான் ரவிதாசன்? எப்போதும் உள்ள நிலையான தன்மை இப்போது அவனிடம் ஏன் இல்லை? ஏதோ வெறி அவன் கண்களை மூடுகிறது' என்று நினைத்துக் கொண்டான் பரமேசுவரன். முன்னைக் காட்டிலும் ரவிதாசன் முகத்தில் குரூரமும் கோபமும் அதிகமாக இருந்தன என எல்லோரையும் போல அவனுக்கும் தெரிந்தது.

இப்போது தன் கடமையெனக் கருதியதால் பரமேசுவரன் எழுந்தான் ''இந்த நிலையில் தாக்குதலைத் தொடங்கினால் நம் கதி என்ன ஆகுமோ தெரியாது. மாட்டினால் இம்முறை சிரச்சேதம் தான். இல்லை, கழுமரத்தின் மீது ஏற்றிக் கொல்லப்படுவதற்கும் வாய்ப்புண்டு. என் விசுவாசத்தை யாரும் சந்தேகிக்க வேண்டாம்.

அதுபோலவே காலனைக் கண்டு கவலை கொள்கிறேன் என்றும் நினைக்க வேண்டாம். சோழனை வீழ்த்தும் முயற்சியில் நான் மனத்திருப்தியுடன் சாவேன். ஆனால் போர்க்களத்தில் சாக விரும்புகிறேன். வீரன் என்றால் தன் புகழுடம்பை ஒரு போர்க் களத்தில் நிலைநாட்டிவிட்டு வீர சொர்க்கம் செல்லவேண்டும். கழுமரத்திலோ, புளிய மரத்தில் தொங்கும் கயிற்றிலோ சாக நான் விரும்பவில்லை'' என்றான்.

பரமேசுவரன் பேசினானே தவிர ரவிதாசனின் கண்களை நேரே பார்க்கத் தயங்கினான். பழுவூர் இளவரசியைப் பாதுகாக்காமல் தப்பிக்கவிட்டது அவனால் தான் என்று ரவிதாசன் அடிக்கடி குற்றம் சாட்டிக்கொண்டிருந்தான். 'அதனால்தான் பாண்டியரின் விடுதலைப் போராட்டமே திசை திரும்பியது' என்பான். பரமேசுவரனுக்கு அதனால் குற்ற உணர்வு அதிகரித்தது.

ஆனால் அதைவிடத் துயர் கொடுத்தது ரவிதாசன் அவனுக்குச் சொன்ன பரிகாரமே! ''நீயே லோகாவைத் தொலைத்தாய். அவர் களை விரட்டிச் சென்று நாமே நம் பொக்கிஷத்தைச் சோழன் காலடியில் விட்டு வந்தோம். எப்படிப் பரிகாரம் தேடப் போகிறாய் பரமேசுவரா?'' என்றான்.

''நான் வேண்டும் என்றேயா அவளை ஓடவிட்டேன்'' என்று முணுமுணுத்தான் பரமேசுவரன்

''உயிரைவிட மேலான வேலையது. அதில் அலட்சியம் காட்டியதே தேசக் குற்றம். அதனால் அவளை எங்கு கண்டாலும் நொடிப் பொழுதில் கண்டத் துண்டமாய் வெட்டிப் போடு. அதுவே உனது பிராயச்சித்தம்'' என்று சொல்லியிருந்தான் ரவிதாசன்.

அதைக் கேட்டு நடுங்கினான் பரமேசுவரன். அதன் பின் பல நாள் துயரில் ஆழ்ந்திருந்தான். 'பெண்ணைக் கொல்வதா? ஆகா, ஸ்த்ரீ ஹத்தி தோஷமென்பது ஏழு தலைமுறைக்குத் தொடருமே. ரவிதாசன் கூற்றை பின் பற்றினால் அது அவன் ஏழு பிறவிகளையும் பாதிக்கும் அல்லவா?' என்று பயந்தான்.

''ஆம், அது தான் உனக்கு விமோசனம். அது தான் உனக்கு தண்டனை'' என்று கட்டளையிட்டான் ரவிதாசன்.

அன்றிலிருந்து பரமேசுவரன் தன்னுடைய தவறுக்குப் பழுவூர் இளவரசியைக் கொல்வது தான் பாவ விமோசனம் என்று நம்பத் தொடங்கினான். அன்றிலிருந்தே அவன் முகம் சோபையை இழந்தது. வெகு நாள் கழித்து இன்று தான் கூட்டத்தில் பேசியிருந்தான்.



பரமேசுவரன் பேசியவுடன் பலரும் அடுத்தடுத்துப் பேச எழுந்தனர். அப்போது ரவிதாசன் நடுவில் குறுக்கிட்டு ''பரமேசுவரா, என்ன வார்த்தை சொல்லுகிறாய்? இப்போது இதைச் செய்யாவிட்டால் நமது சந்ததிகளும் நம்மைபோல நாடின்றி நாடோடிகள் போல. இல்லை, இல்லை பேய் பிசாசைப் போல் அலைந்து திரிந்து கொண்டிருக்க நேரிடும்'' என்றான்.

''ரவிதாசா, நீயும் நமது பாண்டிய வீரர்களும் உங்களுடைய வீரத்தை எல்லாம் காட்டுவதற்குரிய சந்தர்ப்பம் சீக்கிரத்தில் வரப் போகிறது. நீண்ட காலமாகப் பொறுத்து வந்திருக்கிறாய், இன்னும் சில நாள் பொறு. இப்போது சென்று மாட்டிக்கொள்ளாதே'' என்றது ஒரு வயதான குரல்.

அத்திசையில் எல்லோரும் திரும்பினார்கள். வயது முதிர்ந்த பாண்டியப் போராளி முத்தையன்தான் பேசியவர். கிழக்குப் பாண்டி நாட்டு திருப்புனவாயிலிலிருந்து இந்தக் கூட்டத்துக்காக வந்திருந்தார் அவர். இந்தத் தள்ளாடும் வயதிலும் தன் நாட்டின் விடுதலைக்கு ஏங்கும் ஒரு ஜீவன்.

ரவிதாசன் அவரை நோக்கினான். மரியாதையுடன் பேசினான். ''ஐயா! நான் சொல்வதைக் காது கொடுத்துக் கேளுங்கள். சோழர், பாண்டியர் என்ற இந்நாட்டின் இரு பழம் பெரும் குலங்களில் ஒன்று மட்டும் தான் தமிழகத்தில் காலம் கடத்த முடியும். பாண்டியரின் இந்த இழிநிலைக்குக் காரணமாக இருப்பது சோழர் குலம். அதைப் பூண்டோடு அழிக்கவேண்டும். சோழப் பேரரசை எதிர்க்க எவ்வளவு பெரிய படை திரட்டினாலும் போதாது. அதற்குத் தேவை மதி நுட்பம் தான். நல்ல சந்தர்ப்பம் தான். இவை இரண்டும் இருந்தால் இந்த மண்ணிலிருந்து வேரோடு பிடுங்கி அவன் திமிரைக் களைந்து விட முடியும் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்றான்.

அப்போது பாண்டிய நாட்டிலிருந்து திரும்பி வந்திருந்த இடும்பன் கேட்டான். ''எவ்வளவு முறை முயற்சித்தாலும் தோல்வியையே தழுவுகிறோமே, ரவிதாசா?''

ரவிதாசன் நற நறவெனப் பற்களைக் கடித்த சப்தம் மட்டும் கேட்டது.

''அநிருத்தன் இந்தத் தந்திரங்களில் சளைத்தவனல்ல. நம் செயலை முன்னமேயே யூகித்துக் கொண்டு அதைத் தடுத்து நிறுத்தி விடுகிறான் அநிருத்தன். ஆனால், இடும்பா! காற்று என்றுமே ஒரே பக்கமாக அடிக்காது. ஒரு முறை அவனை அவன் கும்பிடும் சாமி காப்பாற்றும். ஒரு முறை அவன் செய்த புண்ணியம் அவனைக்

காப்பாற்றும். ஆனால் எப்போதும் அது துணை நிற்காது அல்லவா? இந்த முறை பாண்டியருக்கே வெற்றி'' என்று நம்பிக்கை கொடுத்தான் ரவிதாசன்.

''ஒரு காலத்தில், வீர பாண்டியரின் தலை புழுதியில் உருண்டது. தலையைப் பல்லக்கில் வைத்து ஊர்வலம் விட்டார்கள்'' என்ற ரவிதாசனுடைய சிவந்து அகன்ற கண்கள் மேலும் அகன்று அனலைக் கக்கின. பல் வரிசைகள் ஒன்றோடு ஒன்று உராயும் சப்தம் நறநறவென்று கேட்டது.

''போனது போயிற்று. அதற்காக இனிமேல் என்ன செய்ய போகிறீர்கள்? இறந்துபோனது வீர பாண்டியனைக் கொன்ற ஆதித்தன்தானே. அவனைத்தான் கொன்றுவிட்டோமே?''

''அது மட்டும் போதாது. அவனைச் சேர்ந்தவர்களையும் பூண்டோடு அழித்துப் பழிக்குப் பழி வாங்குவோம். சோழ வர்க்கத்தை வாரிசுகள் உள்பட முழுமையாக நாசம் செய்வோம்'' என்று சபதம் செய்தான்.

''அந்தச் சோழகுலத்து இளநாகம் இப்போது அங்கு இல்லை யாம். எப்படியும் சோழ நாட்டுக்கு அவன் திரும்பி வந்து சேர சிலமாதங்கள் ஆகும். இன்று உத்தம சோழரைக் கொன்றால் பதவி யேற்க ஆளின்றித் தவிக்கும் சோழ நாடு. அன்று ஒரு நாள் சோழரின் ஆணிவேரையே கிள்ளி யெறிய நினைத்தோம். முடிய வில்லை. ஆனால் இன்று அதனைச் செய்யவேண்டும்.''

கடைசியாகத் தன் வாதத்தை முடித்தான் ரவிதாசன். ''பாண்டிய நாடு ஆழ்ந்த நித்திரையில் இருக்கிறது. இடிஇடித்தாலும் அதன் காதுக்குக் கேட்காது. தமிழகமெங்கும் எரிமலை வெடிக்க வேண்டும். அப்போது தான் அது விழிக்கும். நினைத்துப் பார். பல நாடுகளின் அரசர்கள் ஒரே நாளில் மாளுவார்கள்; சோழ அரசனையும் சேர்த்து. அந்தக் கொந்தளிப்பில் நாம் மதுரையில் தனி நாட்டை ஸ்தாபிக்கலாம். எளியவர்களைத் துன்புறுத்துவதில் களிப் படைகிறவர்கள் சோழர்கள். அவர்களைத் தட்டிக் கேட்க வேண்டாமா?''

''நிச்சயம் கேட்கவேண்டும். ஆனால் ஆள் பலம் கூடும் வரை காத்திருக்க வேண்டாமா?'' என்றனர் பலர்.

''ஹா ஹா'' என்று விரக்தியுடன் சிரித்தான் ரவிதாசன். ''ஜன்மத்துக்கு உன்னிடம் ஆள் சேராது. அங்கிருக்கும் மக்களுக்குச் சோழர் மேல் கோபமுண்டு. ஆனால் அதுவே வெறியாய் மாறிப் புரட்சி வெடிக்காது. சோழர்கள் புத்தி சாலிகள். மதுரையைத் தக்க வைத்துக் கொள்ளவேண்டும் என்ற ஆசை இருக்கும் வரையில் நம்



மக்களைச் சோழன் பட்டினியால் சாகவிட மாட்டான். எந்த ஒரு விடுதலைப் போராட்டமோ புரட்சியோ பசியினால் தான் தோன்றும் என்று அவனுக்குத் தெரியும். அடிமை நாடு என்று சரித்திரம் தூற்றுமே என்று வருத்தம் கொண்டவர்கள் அதிக மில்லை, மதுரையில் தரித்திரம் தாண்டவமாடவில்லை, மக்கள் பொங்கி எழ. மந்த அறிவு படைத்த மாந்தரைக் கொண்டு மதுரையை நிரப்பிவிட்டான் பிரம்மா'' என்று வருத்தப்பட்டான்.

எதற்காக இக்காரியம் என்று பலரும் யோசனை செய்தார்கள் என்று தெரிந்தது. 'நம்மைவிட்டால் பாண்டியர் போராட்டத்தை வழிநடத்தி செல்லவே ஆள் இல்லை. பின் நமக்கும் ஏதேனும் ஆனால் என்ன செய்வது?' என்று சிந்தித்தனர்.

சோமன் சாம்பவான் ''அது சரி ரவிதாசா? நம் கதி இதுதானா? காரியம் முடியும் வரையும், முடிந்த பின்னும்,எந்த நேரமும் சோழ ரிடம் அகபட்டுக்கொள்ள ஆயத்தமாக இருந்து தான் ஆக வேண்டுமா? திருடர்களும் கொள்ளைக்காரர்களும் வஞ்சகர் களும் கொல்லப்படுவது போலக் கழுமரத்தின் மீது சாவதற்கும் ஆயத்தமாகத் திரிய வேண்டியது தானா?'' என்றான்.

''ஏதேனும் யுக்தி செய்து தப்பினாலும் தப்பலாம்.''

''சோழர் அரச குடும்பத்தைக் கொன்றுவிட்டுத் தப்புவது கனவிலும் நினைக்க முடியாதக் காரியம்.''

''ஜன்மதேசம் அடிமையில் தவிக்கிறது. இதில் உன் சாவு தான் முக்கியமா? இல்லை என் உயிர் தான் முக்கியமா?'' என்று வினவினான் ரவிதாசன். பேசும் எல்லாவற்றிற்கும் ஒரு எதிர்ப்புச் சொல்லை வைத்துச் சமாளித்துவிட்டான் ரவிதாசன்

அவன் கோப வெறியில் இருக்கும்போது அவனுடன் பேசுவதில் பிரயோஜனம் ஒன்றும் இல்லை.

''நாம் எதைக் கடமை எனக் கருதுகிறோமோ அதற்கு ஆசாபாசங்களை விட்டுவிடவேண்டும். வேட்கை கொண்ட உத்தம சிலர்களே வெற்றி பெற முடியும் போராட்டமிது. சோழர் பேரரசு சந்ததியின்றி அழிந்து போகவேண்டும். பழிக்குப் பழி வாங்கி அந்த வம்சத்தையே பூண்டோடு அழித்துவிட வேண்டும்'' என்றான்.

''நாட்டைப் பிடிப்பதையெல்லாம் பின்புப் பார்த்துக் கொள்ள லாம். நாடு தானாக நம் கைக்கு வரும். முக்கியமாகப் பாண்டிய மக்கள் தங்கள் தனித்துவத்தை மறக்காமல் பழையதை நினைவில் கொள்ளும் வண்ணம் வைக்க வேண்டும்'' என்றான்.

ரவிதாசனுக்குச் சோழ வேங்கையை வீழ்த்துவதிலேயே வெறி. 'வியாக்ர ஸம்ஹாரி' என்று தன்னை அழைத்துக் கொள்வான். பகலில் அதே நினைவு, இரவிலும் அதே நினைவு என்று அனைவருக்கும் தெரியும். 'ஆனால் ஏன் இப்படி ரவிதாசன் பிடிவாதம் பிடிகிறான்?' என்று எல்லோரும் நினைத்தனர். அவன் கோபத்தில் தவறான முடிவை எடுத்துவிடுவானோ என்று பயம். பாண்டியர் விடுதலையின் மீதுள்ள குருட்டு அபிமானத்தைக் காட்ட நினைக்கிறான் ரவிதாசன். ஆனால் அது முடியாது. பத்துப்பேரால் என்ன புரட்டிவிட முடியும்? செயற்கரும் செயல்கள் பல புரிந்த பாண்டிய தளபதிகள் யாரும் பக்கத்தில் இல்லை. வாளைத் தூக்கியே பழக்கமில்லாதவர்கள் வேண்டுமானால் வரலாம்.

ஒருவராவது வாய் திறந்து பேசத் துணியவில்லை. 'எல்லோரும் மௌனம் சாதிக்கிறீர்கள்! நமக்கெல்லாம் அநாதைப் பிரேத ஸம்ஸ்காரம் தான் விதியென்றால் என்ன செய்ய முடியும்' என்று பலரும் நினைத்துக் கொண்டனர். ஏதாவது கேட்டால் 'ஜன்மதேசம் அடிமையில் தவிக்கிறது. இதில் உன் சாவு தான் முக்கியமா?' என்பான்.

மரத்தின் பின்னால் ஒளிந்து இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அடியான் நினைத்தான் 'மனிதனைக் கொடூர சித்தமுடையவனாக்கிவிடுவது இரண்டு தான். பெண்ணாசை. மற்றும் ஒன்று விடுதலை வேட்கை.'

தன் நினைவுகளை ஓரம் தள்ளிக் கூட்டத்தின் இடையேயிருந்து என்ன பேச்சு வருகிறது என்று மீண்டும் உற்றுக்கேட்டான் அடியான்.

கடைசியாக எல்லோருக்குமாகப் பேச சோமன் சாம்பவான் எழுந்து நின்றான்.

''ரவிதாசா, இப்போது என்ன அவசரம் என்று மட்டும் சொல்.''

ரவிதாசன் ''நீங்கள் எல்லாம் சொல்வதில் பல உண்மைகள் இருக்கின்றன. பருவம் வரும் முன் பறக்க நினைக்கிறோம். ஆனால் நம்மை இந்த இக்கட்டான நிலைக்குத் தள்ளி விட்டனர். இப்போது நான் எடுத்திருக்கும் காரியம் மட்டும் ஜயத்துடன் முடியட்டும்; அப்புறம் பார். தள்ளிப்போடுவதற்கு என்ற பேச்சே இல்லை. இன்னும் கொஞ்ச நாள் போனால் அது சாத்தியமில்லாமல் போகும்.இது போல சோழரின் உறவினர்கள், சிற்றசர்கள் எல்லோரும் ஓரிடத்தில் ஒன்றாகச் சேர்வது கடினமாகும்'' என்று வாதிட்டான்.



கடைசியாக ''ரவிதாசா! சோழன்தான் நம்மைச் சில நாட்களாய் கண்டுகொள்ளவில்லையே. சற்று அமைதி காப்போமே?'' என்றான் சோமன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று முப்பது
## ஓடுகிறான் ஒற்றன்

சோமனின் எச்சரிக்கையை கேட்டவுடன், ரவிதாசன் உரக்கச் சிரித்தான்.

''பசித்திருக்கும் புலியுடன் விளையாடாதே, என்று எச்சரிக்கிறாயா? கவலைப்படாதே. புலி பசியெல்லாம் போய் அசந்து தூங்குகிறது. நீரின் ஓரமாய் தாகத்தை தணித்தபடி படுத்திருக்கிறது. இனி நீரில் இருக்கும் மீனுக்கு அந்த புலியை அடைவது வெகு சுலபம். கரையோரம் உறங்கும் வேங்கையை ஒரு கடி கடித்து விட்டு மீண்டும் இந்தக் கானகக் கடலுக்குள் தஞ்சம் பெற வந்து விடலாம் என்று எண்ணுகிறேன்'' என்றான்.

''இல்லை ரவிதாசா, நான் சொல்ல வந்ததுஞ்ஞ்'' என்று மற்றும் ஒரு விவாதத்தை முன் வைக்க முயற்சித்தான் சோமன்.

ரவிதாசன் முகத்தை இறுக்கமாக வைத்துகொண்டு, பதில் சொன்னான், ''நன்றாய்த் தெரியும் சோமா. நாம் பெரும் அபாயத்தின் வாசலில் நிற்கிறோம் என்று. ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். நித்த நித்தம் விதியுடன் விளையாடி, விபரீதத்தின் விளிம்பில் குளிர்காய்ந்து பழக்கப்பட்டவர்கள் நாம்.''

எல்லொருடைய முகங்களிலும் கவலை ரேகை இழையோடியது. இது ரவிதாசனது வீணான மனோராஜ்யமா? ஆகாசக் கோட்டையா? தெரியாது. ஆனால் எல்லாரும் அவன் சொல்வதைக் கேட்கக் கடமைப்பட்டிருந்தார்கள். பாண்டியப் போராளிகளுக்கு வேறு தலைமையில்லை, அவனைத்தவிர. ரவிதாசன் முடிவு செய்துவிட்டால், பின் வாங்க மாட்டான் என்று எல்லாருக்கும் தெரியும். பலரும் பெரு மூச்சு விட்டனர்.

''சரி, உன் திட்டம் தான் என்ன?'' என்றான் பரமேசுவரன். எல்லோருமாக அவன் சொன்ன திட்டத்தில் ஓட்டைகளைக் கண்டுபிடிக்க முயன்றனர். அதை எப்போதுமே ரவிதாசன் ஒரு

கோபமும் இன்றி வரவேற்பான். திட்டத்தை முழுமையாக வெற்றி பெறவைக்க முதலிலேயே ஓட்டை உடைசல்களை அடைத்தாக வேண்டும். சோழன் தவறுகளை கண்டு பிடிப்பதற்கு பதிலாக இங்கேயே அதைச் சரி செய்துவிடலாம் என்ற எண்ணம், அதற்கு இந்த நம்பிக்கையற்ற கேள்விகள் எல்லாம் உதவும்.

முதலில் சோமன் கேட்டான் "பழி வாங்க வேண்டும் தான். ஆனால் ஆள் பலம் குறைந்திருக்கும் சமயம் ஏன்?" என்றான்.

ரவிதாசன் அதற்கு "எப்படிப் பழி வாங்குவது? எனக்கும் நேரே படையெடுத்துச் சென்று தஞ்சையை முற்றுகையிட வேண்டுமென்று தான் ஆசை. ஆனால் தஞ்சைக் கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழிகள் தூர்க்கப்படவேண்டும். மந்தை மந்தையாய் யானைகளைக் கொண்டு கதவுகளைத் தகர்க்க வேண்டும். அவற்றைக் கொண்டு நூற்றுக்கணக்கான வேல் முனைகள் பொருத்தப்பட்டிருக்கும் கோட்டைக் கதவுகளை முட்ட வேண்டும். இவ்விதமாக, ஏறக்குறைய ஒரு மாபெரும் படையைத் திரட்டிப் பல மாதக்காலம் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு முயலவேண்டும். இல்லையென்றால், நீடித்து முற்றுகையை நடத்திக் கோட்டையிலுள்ளவர்களைப் பட்டினி போட்டுப் பணியச் செய்வதென்று கனவில் வேண்டுமானால் காணலாம்; நிஜத்தில் முடியாது. இதெல்லாம் நடக்கும் காரியமா? அப்படியே படை திரட்டுவதென்றால் யார் உம் படையில் சேருவார்கள்? தேவி ஜயலக்ஷ்மியின் கருணாகடாட்சம் பாண்டியர் பக்கம் திரும்ப வெகு நாளாகும்" என்றான்,

"படை திரட்டினால் ஆயிரமாயிரம் பாண்டிய மக்கள் சேருவார்கள்" என்று சாதித்தான் சோமன்.

"இந்தப் பாண்டிய நாட்டுப் பிரஜைகளைப் பற்றித்தான் தாங்கள் நம்பிக்கைப்படுகிறீர்கள் என்றால், அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். அவர்களுக்கு ஒரு தொல்லையும் இல்லை. நிம்மதியாய்க் காலம் கழிக்கிறார்கள். சோழர்கள், பாண்டிய நாட்டு மக்களை நரகத்தையே காட்டிச் சொர்க்கம் என்று சொல்லிச் சாதித்து, அதை நம்பும் படியும் செய்து, நரகத்தில் சந்தோஷமாக இருக்கும்படியும் செய்துவிட்டார்கள்" என்று பதிலளித்தான் ரவிதாசன்.

இப்படிப் பல கேள்விகள் எழுந்தன. எல்லாவற்றிற்கும் ஏற்ற பதில்களைக் கொடுத்தான். பின் கடைசியாக "இங்கு பலருக்கும் என் திறமையின் மேல் நம்பிக்கையில்லை. நாடு எக்கேடு கெட்டுப் போனால் எனக்கு என்ன? என்னை விட்டு விடுங்கள். நீங்களும்



உங்கள் வேலை வெட்டியைக் கவனியுங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டாகும்" என்றான் விரக்தியாக.

உடனே எல்லோர் மனமும் இளகிவிட்டது.

"சரி ரவிதாசா, உன் திட்டதின்படியே செயல்படலாம்" என்றனர், எல்லோருமாக ஒருங்கிணைந்து.

புதரில் ஒளிந்திருந்த அடியானுக்கு இதயமே உடைந்தது. பலரின் ஆட்சேபங்களுக்கு இடையில் இந்த திட்டம் கைவிடப்படும் என்று ரஸ்மணி ஏங்கினான். 'சோழர் கோயிலை கவனித்து கொண்டிருக்கின்றனர். ஆபத்தை எதிர்கொள்ள ஆயத்தமாய் இல்லை. இப்போது இந்தத் திட்டம் நிறைவேறினால் கஷ்டம் தான்.'

எல்லாரும் சம்மதித்ததில் ரவிதாசனுக்குப் பேரானந்தம். "சோழனைப் பூண்டோடு அழித்துவிட்டோம் என்று முழங்கும் நாள் வெகு தூரத்தில் இல்லை. அந்தச் செய்தியைச் சொல்லும் வாய்க்கு கற்கண்டு வாங்கிப் போடுவேன்" என்றான் ரவிதாசன்

"இப்போது என் திட்டத்தை விவரிக்கிறேன்" என்று சொன்ன ரவிதாசன் அவனுக்கு முன்னால் வந்திருந்தவன் ஒருவனை அழைத்து. "இவன் தான் நமது மழபாடி ஒற்றன்" என்று அறிமுகப் படுத்தினான்.

எல்லோரும் அசந்து போயிருந்தனர். அவர்கள் நினைத்தபடி திடீரென யோசிக்கப்பட்ட திட்டம் அல்ல ரவிதாசனுடையது. பல மாத காலமாகத் திட்டம் தீட்டியிருக்கிறான். எல்லாருடைய நம்பிக்கையும் சற்று உயர்ந்தது.

"மூன்று மாதம் முன்பே இவன் மழவராயர் அரண்மனையில் வேலையாளாய்ச் சேர்ந்துவிட்டான். பெரிய விழா நடக்க போகிறது என்றவுடனே அரச குலத்தார் ஆள் சேர்ப்பார்கள். அதில் வேலை கேட்டு வருபவர்களின் அடையாளமோ பூர்வ சரித்திரமோ கேட்க மாட்டார்கள். அந்த நேரம் பார்த்து என் ஆளை மழவராயர் மாளிகையில் சேர்த்துவிட்டேன். அவ்வப்போது செய்தி வரும். அந்த அரண்மனையில் நடப்பது எல்லாம் இரவுக்கு இரவே எனக்கு தெரிய வரும்" என்று விளக்கம் அளித்தான்.

"அவன் வாயால் கேட்கலாமே?" என்று ரவிதாசன் சொன்னவுடன். ஒற்றன் மழபாடி விஷயங்களைத் தான் அறிந்த வரையில் விவரமாகக் கூறினான்.

ஒற்றன் தொடங்கினான்; "சோழர் அரச குடும்பம் வரப் போகிறது என்று மழபாடியெங்கும் சில மாதமாய் ஒரே பரபரப்பு. அரசரும் பலமுறை வந்து திருப்பணியை மேற்பார்வையிட்டார். அப்போது தினந்தோறும் மாலையில் மழவராயருடன் அரசர்

என்ன பேசப்போகிறார் என்று கேட்க நான் மிகுந்த ஆவலாய்த் தான் இருந்தேன்!''

''என்ன தெரிந்து கொண்டாய்?'' என்று ஆவலுடன் ஒரு குரல் கேட்டது.

''விழா முடிந்தவுடன் பாண்டிய நாட்டுக்கு அளவான விடுதலை தருகிறாராம் அரசர்'' என்றான் ஒற்றன்.

''பார்த்தீரா? நான் கருதியது சரியாய்ப் போயிற்று. பாண்டிய நாட்டுக்கு விடுதலை தருகிறாராம். நாம் என்ன பிச்சைப் பாத்திரம் ஏந்தியா வந்துள்ளோம். இனியும் பொறுத்துப் பயனில்லை. அவர்களுக்கு வந்த வாழ்வைக்கண்டு பொறாமையில் பொருமவில்லை. அவர்கள் நம்மை வாழவிட்டால் நாம் ஏன் அவர்கள் வம்புக்குச் செல்கிறோம்?''

ஒற்றன் தொடர்ந்தான் ''அரசர் தன்னுடைய முக்கிய மந்திரி பிரதானிகளுடன் மழபாடியில் இருக்கிறார். கூடவே சரித்திரத்தை மறந்து தரித்திரத்தைத் தழுவி வாழ்நாள் நடத்தும் சிற்றசர்கள் பலரும் இருக்கிறார்கள்'' என்றான். ''முக்கியமாகப் பொன்னியின் செல்வன் தஞ்சையில் இல்லை. மழபாடிக்கு வருவதாகவும் பேச்சில்லை'' என்றான்

உடனே ரவிதாசன் ''ஆகா, அந்தச் சோழகுலத்து இளநாகம் இப்போது அங்கு இல்லையாம். எப்படியும் சோழ நாட்டுக்கு அவன் திரும்பி வந்து சேர மாதங்கள் சில ஆகும். இன்று உத்தம சோழரைக் கொன்றால் பதவியேற்க ஆளின்றித் தவிக்கும் சோழ நாடு. நாம் நினைத்தால் தமிழகத்தின் தலைமையையே எறும்பின் தலையை கிள்ளுவது போலக் கிள்ளிவிடலாம்'' என்று முழங்கினான்.

ஒற்றனை நோக்கி ''மழபாடியின் கட்டுக் காவலைப் பற்றிச் சொல்'' என்று கட்டளையிட்டான்.

''மழபாடிக்கோ கோட்டையும் இல்லை, கொத்தளமும் இல்லை. அகழியும் இல்லை. கொள்ளிட நதி தான் ஒரே காவல். அதிலும் மக்கள் வெள்ளம் இந்த விழாவின் போது நீர் வெள்ளத்துடன் போட்டி போடும். வருபவர்களைச் சோதனை போடு என்று சொல்லவும் முடியாது. காவலை மேற்பார்த்துக் கொள்வது கந்தமாறன். சோழர்களின் புதிய வேளக்காரப் படைத் தலைவன்'' என்றான் ஒற்றன்.

''இந்தக் கடம்பூர் இளவரசன் இருக்கிறானே, அவனைப் பற்றித்தான் எனக்குக் கவலையாயிருக்கிறது'' என்றான் சோமன் சாம்பவான்.



''வேளக்காரப்படைத் தலைவனாம் அவன். அதனால் இனிமேல் அவன் நம்முடன் சேர வாய்ப்பே இல்லை. அதனால் அவனையும் நான் அகற்றப் போகிறேன். ஆனால் விந்தையிலும் விந்தை. அவன் மேல் கைவைக்காமல் அவனைக் கொல்ல போகிறேன்'' என்றான் ரவிதாசன்.

''அதெப்படி முடியும்? அம்பு எய்து கொல்லப்போகிறீரா?'' என்றான் இடும்பன்.

''இல்லை, இல்லை. அவனது அரசர் செத்தால் தன் தலையை அறுத்து கொள்ளவேண்டும் என்ற சபதம் ஏற்றிருக்கிறான் தெரியாதா? அதனால் நான் உத்தம சோழனைக் கொல்ல போகிறேன்'' என்றான்.

மறைந்திருந்த அடியானுக்கு அதிர்ச்சியில் மயக்கமே வந்தது. மாறன் மீது அவனுக்கு அளவற்ற வாஞ்சை வந்திருந்தது. இன்னமும் உற்றுக் கேட்டான்.

மழபாடி ஒற்றன் அமைதியாயிருக்க மீண்டும் ரவிதாசனே பேசினான். ''மழபாடியில் அபாயங்கள் அதிகமாக இல்லை. வெளியான் வேஷத்தில் மழபாடிக் கோயிலுக்குள் நானே பலமுறை பிரவேசித்தேன். கோயில் வாசலுக்குள் பிரவேசிப்பதில் எவ்விதக் கஷ்டமும் இருக்கவில்லை. ஜனங்கள் கோயிலுக்குள் வந்து கொண்டும், போய்க் கொண்டுமிருக்கிறார்கள். எந்த எதிரியின் படையெடுப்பை எதிர்பார்த்துக் கட்டுக்காவல் வைக்கப் போகிறார்கள்?'' என்றான்.

ரவிதாசன் தன் திட்டத்தை விலாவாரியாக விளக்கினான். ''எனக்கு ஆதரவாக ஐம்பது வீரர்கள் காளா முகர் போல வேடமிட்டு மழபாடிக்கு வருவார்கள். கோயில் கும்பாபிஷேகத்துக்கு முதல் நாள் அவர்களில் சிலர் யாக சாலைக்குத் தீவைத்து விடுவார்கள். கூரையின் மீது நெய்யைத் தெளித்தால் போதும். தானாய்ப் பற்றி கொள்ளும். அப்போது நம் வீரர்களுடன் கழுகெனப் பாய்வோம் கொள்ளிடத்தை கடந்து. மழபாடி நகரையே தீக்கு இரையாக்குவோம். அரசகுலம் அமர்ந்திருக்கும் மேடையை நோக்கிப் பாய்வோம். முடிந்த வரை வெட்டிச் சாய்ப்போம். கோயிலைவிட்டு வெளியேறும் முன் முக்கியமானவர்களை வெட்டிச் சாய்ப்போம். யார் யாருக்கு யார் என்று முன்பே சொல்லி விடுவேன்'' என்றான். ''அவர்களால் நம் குலம் படும் கஷ்டங்களெல்லாம் முடியுமானால் நாம் செத்தாலும் பரவாயில்லை.''

''நம்மைத் தவிர வருபவர்கள் யார் யார்?''

''எல்லாரும் நம் விசுவசிகள். சில முத்தரையரும் இருக் கிறார்கள். கலவரத்தில் உயிர் தப்புவதற்காக முயற்சி செய்வோம். முடியாதென்றால் சந்தோஷமாக மடிவோம். உயிர் தப்பித்தவர்கள் நம் போராட்டத்தை நடத்த மதுரைக்குச் சென்று ஆட்சியைப் பிடிக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்றான் ரவிதாசன்.

கற்பனையில் அவன் கண்களில் தீ பரவியது. கண்கள் சுழன்றன. ''எல்லோரையும் கொன்று குவித்த பின் தலைமையின்றித் தமிழகமே தவிக்கும். அன்று பாண்டியன் எழுந்து நின்று தலைமைப் பொறுப்பை ஏற்பான்'' என்று முழங்கினான்.

திட்டத்தை ஆவேசத்துடன் சொல்லி முடித்த போது அவன் கண்கள் பிரகாசித்தன. ''ஒரு காலத்தில் நம்மைக்கண்டு இடியுண்ட நாகம் துடிப்பது போல பயந்து ஓடினார்கள். மீண்டும் அப்படித் தான். பாண்டியரென்றால் பராக்கிரமசாலிகள் தான் என்று நிரூபிக்கும் நிர்ப்பந்தம் நமக்கு. இந்த சந்தர்ப்பத்தை விட்டால் கோழைகள் என்று நம்மை சரித்திரம் பயிலும் ஜனங்கள் நிந்திப் பார்கள்'' என்றான்.

ரவிதாசனின் திட்டத்தைக் கேட்டவுடன் எல்லோரும் அசந்து போனார்கள். அதிகம் அசந்தது மரத்துக்கு பின்னிருந்த அடியான் தான். அவனது பெருத்த உடல் நடுங்கியதில் அவன்சாய்ந்திருந்த மரத்தில் இலைகளே குலுங்கின.

அடியான் நினைத்து கொண்டான். ''காட்டில் வாழ்பவன் கருணையற்ற, அநாகரிகமான மிருகம். மனிதர்களைக் கொல்வது இவர்களுக்கு வாழைக்காயை கத்திரிக்காயை அரிவது போன்றது.''

எல்லாப் பேச்சும் முடிந்தது என்று அடியான் எண்ணிய போது ''ஒரு காரியத்தில் மட்டும் ஜாக்கிரதையாயிருங்கள். அந்த நாமம் இட்ட வேஷதாரி நம்மைக் கண்காணித்துக்கொண்டிருக்கிறான். அவனைக் கண்ட மாத்திரத்தில் கொல்லுங்கள். உடனே அவனை இவ்வுலகிலிருந்து அனுப்பி விட்டு மறுகாரியம் பாருங்கள்'' என்று எச்சரித்தான் ரவிதாசன்.

இவ்வாறு குரோதம் ததும்பிய குரலில் கூறிய குரூரமான வார்த்தைகளைக் கேட்டு கதிகலங்கிப் போனான் அடியான். ஒரு காலத்தில் நந்தினியின் சகோதரன் என்று தெரிந்ததால் பலமுறை இவன் நன்றாய் மாட்டியபோதுகூடப் போனால் போகட்டும் என்று விட்டுவிட்டார்கள். இனி நந்தினியே அவர்களுக்கு எதிரியா யிற்றே. புதரின் மறைவில் அடியான் மூச்சைப் பிடித்துக் கொண்டு நின்றான். திரும்ப அவர்களிடம் மாட்டிக்கொண்டால் தோலை உரித்துவிட்டுத் தான் மறு காரியம் பார்ப்பார்கள்.



ஆழ்வார்க்கடியானுடைய உடம்பு முழுவதும் நடுங்கிற்று. இன்னமும் கேட்க ஆசைதான். ஆனால் மனத்தைக் கெட்டிப் படுத்திக்கொண்டு, 'கேட்டது போதும். இன்னும் கொஞ்ச விஷயம் தெரிந்து கொள்ளலாம் என்று இருக்கக்கூடாது. இனித் தேவை வேகம். ஊருக்கு ஓடிச் செல்லவேண்டும். உயிரிருந்தால் தான் சித்திரம் எழுதமுடியும். மாட்டினால் யாரையும் எச்சரிக்க முடியாது' என்று முடிவெடுத்தான்.

மேற்குறித்த சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், கேட்டது போதும் என்று ஒரு ஓட்டம் பிடித்தான். அவன் மரத்தின் பின்னாலிருந்து அகன்று வெளியேறும் சொற்ப நேரத்தில், அந்த கூட்டத்தில் பலரும் அவனைப் பார்த்துவிட்டார்கள். துரத்தவும் ஆயத்தமானார்கள். ஆனால் ரவிதாசன் கையமர்த்தித் தடுத்தான்.

''ஏற்கனவே அபாயம் நிறைந்த திட்டம். அதை வேறு அந்த வைணவன் ஒட்டுக் கேட்டுவிட்டான். அவனைத் துரத்திப் பிடித்து சிறை வைக்கவேண்டும். ஏன் எங்களைத் தடுக்கிறீர் ?'' என்று பலரும் கோபித்தனர்.

மூச்சிரைக்க, திக்கு தெரியாமல் அடியான் ஓடிக்கொண்டிருந் தான். காட்டைப் பிளந்து கொண்டு தஞ்சையை நோக்கி ஓடினான். அவன் கேள்வியுற்ற விஷயங்கள் அவனது வேகத்தை மும்மடங்கு ஆக்கியிருந்தன. ஓடும்போது நினைத்தான் 'கடவுளே! என் காதில் விழுந்தது தவறா? இப்போதைக்கு மட்டும் தமிழகம் ஏமாந்து போனால் சரித்திரமே மாறிவிடுமே.'

ஒற்றன் அன்று நடந்த சம்பாஷணையில் முக்கியமான பாகத்தை கேட்கவில்லை. பாவம் உயிருடன் தப்பிக்க வேண்டும் என்ற ஆசையில் சீக்கிரம் கிளம்பிவிட்டான்.

ஓடும் ஒற்றனைக் கண்டபின் கூட்டம் அல்லோலகல்லோலப் பட்டது. கையுர்த்தினான் ரவிதாசன். அமைதி ஏற்பட்டது. ''வைணவன் இஷ்டம் போல ஓடட்டும். போய் நம் திட்டத்தை அநிருத்தனிடம் சொல்லட்டும். நான் கவலைப் படவில்லை'' என்றான் ரவிதாசன்.

❖ ❖ ❖

அத்தியாயம் நூற்று முப்பத்து ஒன்று

## இராமபாணமென விரைவான்!

"என்ன ரவிதாசா? நாம் பேசுவதை ஒட்டுக் கேட்டு வைணவன் இவ்வளவு நேரம் ஒளிந்திருந்தானா? அதுவும் உமக்கு முதலிலிருந்தே தெரியுமா?" என்றான் பரமேசுவரன். "பிடித்து நாலு உதை உதைத்திருக்கலாமே" என்று ஆதங்கப்பட்டான்.

போன முறை வைணவன் பழுவூர் இளவரசி தப்பிக்க உதவியது மட்டுமல்லாமல் பாண்டியர் காவலையும் கேலிக்கூத்தாய் ஆக்கி விட்டுத் தானும் தப்பிவிட்டான் என்ற கோபம் பரமேசுவரனுக்கு. அந்த சமயத்தில் ரவிதாசன் தஞ்சை சென்றிருந்தபடியால் பரமேசுவரனே குழுத் தலைவராய் இருந்து அந்த அவமானத்தின் பாரத்தை தன் தலையில் முழுவதுமாய்ச் சுமந்து கொண்டான்.

"போனால் போகட்டும்,விடு."

"என்ன ரவிதாசா பிதற்றுகிறாய். அவனே நம் ஜன்ம விரோதி யென்றும், ஆளைப் பார்த்த இடத்தில் கொல்லவேண்டும் என்று எவ்வளவு முறை சொல்லியிருப்பாய்?"

"சொல்லியிருக்கிறேன். ஆனால் அவனைக் கொல்ல இது தக்க தருணமல்ல."

"நமது மாபெரும் திட்டத்தை முழுவதுமாய் ஒட்டுக் கேட்டு விட்டு ஓடுகிறான். தஞ்சையில் சென்று வார்த்தைக்கு வார்த்தை அப்படியே அதை ஒப்பிப்பான். நாம் அங்கு சென்றால் வேளக் காரப் படை காத்திருக்கும். வேல் முனையில் நமக்கு வரவேற்பு நிச்சயம். ஒற்றனைக் கொல்ல இது தக்க தருணம் இல்லையா?"

"அவன் சேவகன். அவனை உதைத்து என்னவாகப்போகிறது? அவன் நான் சொன்னதையெல்லாம் போய்த் தஞ்சையில் சொல் வான். அவனுடைய எஜமானனுக்கு அடி விழும்" என்றான் ரவிதாசன் மர்மமாக.

ரவிதாசனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று எல்லோரும் நினைத்தனர். என்னவென்று விழித்தவர்களிடம் "எல்லோரும் நான் கத்திப் பேசியதற்கு ஆட்சேபித்தீர்கள். என் திட்டத்தை எதிர்த்தீர்கள். என்னை மனதுக்குள் திட்டினீர்கள். எல்லோரிடமும் மன்னிப்புக் கோருகிறேன்."

எப்போதும் பேசும் அவனது மெல்லிய குரலில் தொடர்ந்தான். "நண்பர்களே! நான் சொன்னதையெல்லாம் அகத்தின் ஏட்டி



லிருந்து அழித்துவிடுங்கள். இந்த வசனம் எல்லாம் அந்த மரத்தின் பின்னால் ஒளிந்திருந்த வேஷதாரி வைணவனுக்காகப் புனையப் பட்டவை" என்றான்.

அசந்து போன பலரும் ஒற்றனுக்காக நடந்த நாடகத்தில் தங்களை அறியாமல் பங்கேற்றதை நினைத்துச் சிரித்தனர்.

"அவன் என்னை மழபாடியிலிருந்து தொடர்ந்து வருகிறான். அவன் இருக்கிறான் என்று தெரிந்துதான் எல்லா விஷயங்களையும் சொன்னேன். ஏன் என்றால் இவன் பேச்சை நம்புபவர்கள் அங்கு அதிகம். கோயிலை நாம் தாக்கி சக்கரவர்த்தியைக் கொல்லப் போகிறோம் என்று நினைக்கிறான் அவன். அப்படியே நம்பவும் வைத்துவிட்டேன்."

பின் ஒரு நொடி மௌனம் காத்துவிட்டுத் தொடர்ந்தான் "யாராவது உத்தம சோழரைக் கொல்வார்களா? அவர் நீடூழி வாழ்ந்தால் தான் இப்படிப்பட்ட விடுதலைப் போராட்டங்கள் வளர முடியும். உத்தம சோழர் நீண்ட நாள் தஞ்சையில் ஆள வேண்டும். அப்போது தான் நாம் நம் சக்தியை மீண்டும் பெறுவோம். உதாரணத்துக்கு, அருள் மொழி ஆட்சியில் இருந்தால் நம்மால் தாக்குப்பிடிக்க முடியாது. அருள் மொழி நம்மை வேட்டையாடியே கொன்று விடுவான்."

எல்லோரும் ரவிதாசனை மெச்சினார்கள். ரவிதாசனின் ஒவ்வொரு சொல்லுக்குப் பின்னாலும் ஒரு உள்ளர்த்தம் இருக்கும். ஒவ்வொரு வரிக்குப் பின்னாலும் ஒரு திட்டமிருக்கும். அவன் அமைதிக்கு பின்னால் ஒரு புயலிருக்கும். கோபத்துக்குப் பின் ஒரு அமைதி இருக்கும். உண்மையில் ஒரு இரட்டை வாழ்க்கை வாழ்பவன் ரவிதாசன்.

எல்லோரும் பெரு மூச்சு விட்டார்கள். அப்போது ரவிதாசன் சொன்னதெல்லாம் வெறும் நடிப்பு என்றுதான் அர்த்தம். "நல்ல தாய்ப் போயிற்று! ஒற்றன் போய் அங்கு உளறுவான். வேறுவித மாகப் பாதுகாப்பெல்லாம் நடக்கும்."

"தோழர்களே, இப்போது கேளுங்கள் எனது உண்மையான திட்டத்தை" என்றான் ரவிதாசன். அதைச் சொல்லும் முன் நால்வரைச் சற்றுத் தள்ளி நின்று காவல் புரியச் சொன்னான்.

"கோதண்டத்திலிருந்து கிளம்பிய இராமபாணத்தைப் போல் நேரே அவன் அரசரிடமோ அநிருத்தனிடமோதான் செல்வான்." அடியான் போய்விட்டான் என்ற தெம்பில் வைணவ உதாரணங் களைக் கொடுத்தான் ரவிதாசன். "நமது திட்டம் இது தான் என்று அங்கு போய்ப் பிதற்றுவான்."

மனித இயல்புகளை ஏடுகள் போலப் படித்து வைத்திருந்தவன் ரவிதாசன். அவன் சொன்னது போல சரியாக அடியானும் மழபாடிக்கு நேரே விரைந்தான். உண்மையென நினைத்த செய்தியைச் சுமந்தபடி மூச்சிரைக்க ஓடிகொண்டிருந்தான் அடியான்.

அவன் மனதில் ''ஆகா! தஞ்சை என்றால் அரச குடும்பத்தை நன்றாய்ப் பாதுகாக்கலாமே'' என்ற எண்ணம் மேலோங்கியது. மழபாடியில் கோட்டையும் இல்லை. கொத்தளமும் இல்லை. பாண்டியர்கள் சூழ்சியை நிறைவேற்றத் தகுந்த இடம். ரவிதாசன் மழபாடியைத் தேர்ந்தெடுத்துவிட்டான் என்பதே தான் கேட்டது உண்மையென நிரூபித்தது என்று நம்பிக்கை கொண்டான்.

சூரியன் அஸ்தமித்து நன்றாக இருட்டியபின் பள்ளிப்படைக் காட்டில் இருட்டு தனக்கு பாதுகாப்பு கொடுத்தது. எனினும் தாமதிக்கக் கூடாது. இன்னும் அவர்களது கூட்டம் முடிந்தபாடில்லை. அவர்கள் இன்னும் பேசப்போவது யாதாயிருக்கும் என்று கேட்க ஆவல். ஆனால் இன்னமும் இங்கே காலம் கழித்தால் பின் அகப்பட்டுகொள்வோம் என்ற பயம். அதனால் தான் ஓடிவிட்டான்.

போகும் வழியில் களைப்பினால் கூட ஒரு நொடி அவன் தாமதிக்கவில்லை. தன் ஒற்றர் வாழ்க்கையில் அவன் கண்டறிந்ததில் மிக முக்கியத்துவம் வாய்ந்தது இது தான். அதைக் கொண்டு சோழர் பரம்பரைக்குப் பெரும் உதவி செய்ய முடியும். அன்பில் அநிருத்தருடைய அறிவாற்றலும், இராஜ தந்திரமும், சூழ்ச்சித் திறனும் உலகப் பிரசித்தமானது. அத்தோடு உத்தம சோழ சக்கரவர்த்தியிடம் அவர் மிகச் செல்வாக்கு உடையவர் என்பதும் உலகம் அறிந்தது. அவரிடம் பேசிப் பார்க்கலாம். முக்கியமாக வேளக்காரப்படைத் தலைவன் மாறன் தான் சொல்லுவதை ஏற்றுக் கொள்வான். அதனால் இந்த விபரீதத்தைத் தடுத்து நிறுத்தி விடலாம் என்ற நம்பிக்கை.

திருப்புறம்பயத்திலிருந்து வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்த அடியானுக்குப் பாதி வழியில் தான் குதிரை கிடைத்தது. இருட்டி ஒரு ஜாமத்துக்கு மேலாகும் வரையில் தட்டுத் தடுமாறி நடந்து வந்த அடியானைச் சுற்றிலும் கனாந்தகாரம் சூழ்ந்திருந்தது. முதலில் பக்கத்தில் ஊர் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

ஒரு ஊரை அடைந்து அதன் தலைவனிடம் அதிகார தோரணையில் பேசி அரசாங்க வேலைக்காகக் குதிரை வேண்டும் என்றான். கிராமத் தலைவனும் ஒரு குதிரையைக் கொண்டு வந்து காண்பிக்க, அதை பார்த்ததுமே அடியானுக்கு மனத் திருப்தியில்லை. எனினும் காரியத்தின் முக்கியத்துவத்தைக் கருதி அதைப் பெற்று கொண்டான்.



குதிரையை ஏற இறங்க பார்க்கிறான் வைணவன் என்ற வுடனேயே அந்த ஊர்த் தலைவன் ''அய்யா, இது தான் இந்த ஊரில் ஒரே குதிரை. இதைவிட்டால் மற்றவையெல்லாம் கோவேறு கழுதைகள் தாம்'' என்று வேறு எச்சரிக்கை செய்தான்.

எப்பேர்ப்பட்ட புரவியையும் தன்னால் செலுத்த முடியும் என்ற நம்பிக்கை கொண்ட அடியான் குதிரையைக் கண்டவுடன் ''இனிக் கவலை இல்லை'' என்று பெரு மூச்சு விட்டான். ஆனால் அச்சமயத்தில் தான் அவனுக்கு கவலையே தொடங்கியது.

குதிரையை ஒழுங்காகச் செலுத்துவதற்கு அடியான் பெரு முயற்சி செய்தும், பலிக்கவில்லை. போகும் வழியில் குதிரை செய்த சண்டித்தனம் ஒன்றுகூட பாக்கியில்லை.

சைவ மரபில் வளர்ந்த குதிரையாய் இருக்கும் போல. தன் முதுகின்மீதிருந்த பருமனான வைணவனை ஆக்கிரமிப்பாளனாகப் பார்த்தது அந்த புரவி. பலமுறை சேஷ்டைகள் செய்து அவனை வீதியில் உதறிவிடப் பார்த்தது. வைணவனும் லாகவமாக அதன் முதுகிலிருந்து அசைவதாகத் தெரியவில்லை.

மழபாடிக்குச் சற்று முன்னால் தான் குதிரையின் குறிக்கோளும் நிறைவேறியது. குதிரையின் சண்டித்தனத்தை கவனித்து வந்த அடியான் அந்த அபாயத்திலிருந்து சமாளிப்பதற்கு ஓரளவு ஆயத்தமாயிருந்தான். அடியான் மழபாடி ஊருக்குள் சென்றவுடன் பாண்டியர் உருவாக்கியிருந்த அபாயத்தைப் பற்றி யாரிடம் பேசுவது என்று தீவிரமாகச் சிந்தித்திருந்தான். அப்போது வெளி உலகை முற்றிலுமாக மறந்தான். ஒரு சண்டிக் குதிரையின் முதுகில் சென்று கொண்டிருந்தான் என்பது உட்பட எல்லாம் மறதியில் போனது.

அதை எப்படியோ உணர்ந்த புரவி, திடீரென அதி வேகமாக ஓடிச் சென்று ஒரு பள்ளத்தில் தடுக்கியது. குதிரை தன் முழு வீரியத்தையும் காட்டும் போது வேறு சிந்தனைகளில் ஈடுபட்டிருந்தபடியால், அடியானால் அதை எதிர்க்க முடியவில்லை. அதைச் சற்றும் எதிர்பாராத அடியான் வானத்தில் ஒரு குட்டிக் கரணம் அடித்து குதிரைக்கு முன்னால் போய்ப் புழுதியில் விழுந்தான். பின் பலமுறை அடியான் தரையில் பந்துபோல உருண்டான். வெற்றிச் சிரிப்புக்கு பதிலாக ஒரு கனைப்புக் கனைத்து அந்தக் குதிரை திரும்பி தன் நாட்டுக்கே ஓட்டம் பிடித்தது.

கீழே விழுந்தபோது அண்ட கடாகடங்கள் வெடித்து விடுவது போன்ற உணர்வு ஏற்பட்டது. கட்டாந்தரையில் விழுந்த அடியான் முதலில் குதிரை கிளப்பிய புழுதியைப் பார்வையிட்டான். பின் தன் உடலுக்கு ஏதாவது சேதாரம் உண்டா என்று பார்த்தான். பின் அந்தக் குதிரையை வாயார சபித்துவிட்டு மழபாடியை நோக்கி ஓட்டமும் நடையுமாக விரைந்தான். இன்னும் மழபாடிக்கு எவ்வளவு தூரம் என்று கணக்கிட்டான். வேறு குதிரை தேடலாமா என்று நினைக்ககூட இல்லை. உடையை வாரிச் சுருட்டிக்கொண்டு நடையை கட்டினான்.

எங்கேயாவது பாழடைந்த மண்டபம் அல்லது பழைய கோயில் இல்லாமலா போகும்? அதில் தங்கி இரவைக் கழிக்க அவன் ஆசைப்பட்டிருக்கலாம். பொழுது விடிந்த பிறகுதான் மேலே நடையைத் தொடங்க வேண்டும் என்று முடிவு கட்டிக் கொண்டு இருந்திருக்கலாம். ஆனால் அந்த வைணவனின் நெஞ்சில் பழைய தீரத்துவம் துளிர்த்து எழுந்தது. எங்கிருந்தோ ஒரு சக்தி பிறந்தது. 'எத்தனையோ ஆபத்தான நிலைமையில் துணிவுடன் ஒற்றன் வேலையில் வெற்றி பெற்றபின் தன் வாழ்நாளிலேயே கேள்விப் பட்ட மிகப் பெரிய சதியைப் பற்றி பிரதமரிடம் சொல்ல வேண்டாமா?'

திணறித் தடுமாறி, கடைசியில் ஒருவாறு சமாளித்துக் கொண்டு அவன் ஓடோடி வந்து சூர்ய உதயத்துக்குச் சற்றுப் பின்னே மழபாடியை அடைந்தான். அதற்குள்ளாகக் கோயிலைச் சுற்றிக் கூட்டம் அலை மோதியது. பாதைகளையெல்லாம் மக்கள் ஆக்கிரமித்திருந்தார்கள். ஒரே கூத்தும் கும்மாளமுமாய் இருந்தது. அந்தப் பேதை மக்களைக் கண்டால் அழுவதா சிரிப்பதா என்று அடியானுக்குப் புரியவில்லை. வஜ்ரநாதர் கோயிலின் உயரமான மதில் மேல் ஏறி அபாயத்தைப் பற்றிச் சொல்ல வேண்டும் போலிருந்தது. ஆனால் எவ்வளவு முக்கியமான காரியமாய் இருந்தாலும், சிவன் கோயில் மதிலை உபயோகிக்க கூடாது என்று அவனுடைய வைணவ வெறி வலியுறுத்தியது.

'அறியாமையில் ஆனந்தம் கொள்ளும் மாட்டு மந்தையைப் போல இருக்கும் சிவ பக்த கோடிகளுக்கு இன்னும் ஒரிரு நாட்களில் என்ன நடக்கப் போகிறது என்று தெரியாது' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டான். அதைத் தடுக்கும் சக்தி தன்னிடம் தான் இருக்கிறது என்றும் ஒரு சிறிய அகந்தை அவனுக்கு.



தூரத்திலிருந்து கூட்டத்தின் நடுவே இருந்த வந்தியத் தேவனை யும் மாறனையும் பார்த்துவிட்டான். உயரமான குதிரைகளில் அமர்ந்தபடி அவர்கள் கூட்டத்தைப் பார்வையிட்டுகொண்டிருந் தனர். அவர்களும் அவனைக் கண்டுவிட்டனர். வந்தியத் தேவனுக்கு அந்த வீரவைணவ சிகாமணி அடியானை மாறன் தூரத்திலிருந்தே சுட்டிக்காட்டினான்.

மூச்சிரைக்க வைணவன் ஓடிவந்ததைப் பார்த்த மாறனின் முகத்தில் ஆச்சரியம். சைவ மழபாடியில் தன் விருப்பத்துக்கு எதிராகத் தொடர்ந்து இருந்து வந்த வைணவ சிகாமணியை ஒரிரு நாட்களாகக் காணவில்லை என்று மட்டும் அறிந்திருந்தான். ஏதாவது வைணவக் கோயிலுக்குச் சென்று தான் ஒரு சிவத் தலத்தில் சேகரித்த பாவத்தை விட்டொழிக்கச் சென்றிருப்பான் என்று ஒரு புன் சிரிப்புடன் நினைத்துக்கொண்டான்.

'ஆனால் இப்போது இப்படி அரக்கப் பரக்க வருகிறானே?' உடம்பெல்லாம் தூசியும் இருந்தது. நடையிலும் ஏதோ அடிபட்டது போலிருந்தது.

அடியான் தன் உண்மையான சக்தியைப் புரிந்து கொள்ளாமல் 'அஞ்ஞான சிரோன்மணிகளே!...... என்று சைவ பண்டிதர்களுக்கு இடையே சென்று ஆரம்பித்திருப்பானோ? அதனால் அது இன்றைய தினம் அடி உதையில் முடிந்துவிட்டதோ?' என்று கூட நினைத்தார்கள்.

கூட்டத்தை முட்டி மோதி வந்த வைணவனை வரவேற்கக் குதிரை மீதிருந்து கீழே குதித்தார்கள் இருவரும். அவன் முதலில் சொன்ன சொற்கள் சம்புவராயரே. ''அபாயம் நெருங்குகிறது'' என்பதுதான்.

புரியாமல் மாறன் ''என்ன சொல்கிறீர் வைணவரே?'' என்றான்.

வந்தியத் தேவனோ ''மழபாடிக்குக் கொண்டு வந்த உணவு பொருட்கள் எல்லாம் தீர்ந்துவிட்டனவா?'' என்றான் சிரித்தபடி. ''இல்லை வைணவக் கோயில்களுக்கு தடை விதித்துவிட்டாரா உத்தமர்?'' என்றும் கேட்டுப் பரிகாசச் சிரிப்புச் சிரித்தான்.

விஷயத்தை சொன்னால் வாயில் ஈ புகுந்தால் கூட தெரியாது என்ற நிலையில் திறந்த வாயுடன் பார்த்திருப்பார்கள் என்று எண்ணிவந்த ஒற்றனுக்கு ஏமாற்றம். இந்த இருவருக்கும் புண்ணில் கோல் இடுவதுபோல் பேசக்கூடாது என்று தெரியவில்லையே. காட்டில் ஒளிந்திருந்து, அபாயத்தை எதிர்கொண்டு, ஓடோடி வந்து, சண்டிக் குதிரையின் முதுகிலிருந்து கீழே விழுந்த தன்னை இப்படிப் பரிகாசிக்கின்றனரே. அந்த நொடியில் சோழ தேசம்

எப்படியோ கேடு கெட்டுப் போகட்டும் என்று விட்டுச் செல்ல நினைத்தான்

ஆனால் தன் கடமையை நினைவில் கொண்டு பொறுமையாக "நகைச்சுவைக்கு இது நேரமில்லை" என்றான்.

"சரி, என்ன விஷயம் சொல்லுங்கள்"

உடனே அடியான் காட்டில் தான் ஒளிந்து கொண்டது முதல் பாண்டியரின் சதியாலோசனையை ஒட்டு கேட்டது வரையில் எல்லா விவரங்களையும் சவிஸ்தாரமாய்ச் சொன்னான். மளமள வென்று பாடம் ஒப்பிக்கிறவனைப்போல் எல்லாவற்றையும் சொன்னான். அவனுடைய படபடப்பும் விரைந்து ஓடி வந்த களைப்பும் பரபரப்பை அளித்திருக்க வேண்டும்.

வந்தியத் தேவன் நம்பவில்லை. 'நாமத்தைப் போட்டுக் கொண்டு சிவன் கோயிலுக்கு வந்துவிட்டான். இங்கெல்லாம் அவன் விவாதம் எடுபடாது. உதைதான் மிஞ்சும். அதனால் விழா ஒழுங்காக நடக்காமல் செய்ய ஏதாவது புரளி கிளப்புகிறானா வைணவன்?' என்ற சந்தேகம் வந்தது அவனுக்கு.

மாறன் அப்படியல்ல. அவனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. ரவிதாசன் இலேசுப்பட்டவன் அல்ல. அவனைப் போலவே நினைத்துப் பார்த்தான் மாறன். இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பம் இனி ஜன்மத்துக்கும் ரவிதாசனுக்குக் கிடைக்காது. ஒரே இடத்தில் ஜன நெரிசலுக்கு இடையில் சோழர் அரச குடும்பம் முழுவதும். அவர்களுடைய ஆதரவாளரான ஏகப்பட்ட சிற்றசர்கள். அத்துடன் பாண்டிய விடுதலை இயக்கத்துக்கு துரோகம் செய்த நந்தினி. அடுத்த பாண்டிய சக்கரவர்த்தியின் இடத்துக்கு அவன் விருப்ப மின்றி வர நினைக்கும் சிறுவன். அனைவரும் ஓரிடத்தில்.

மாறனுக்கு தனது பொறுப்புகள் ஞாபகம் வந்தன. 'தம்முடைய நம்பிக்கைக்கு முழுதும் பாத்திரமாக பாவித்து இவ்வளவு பெரிய பொறுப்பை நம்மை நம்பி ஒப்படைத்திருக்கிறார் சக்கரவர்த்தி. அவர் காவலுக்கு மட்டுமல்ல. இந்த விழாவுக்கு வரும் மக்கள் எல்லாரையும் பாதுகாக்கும் பொறுப்பு நம்முடையது' என்று நினைத்து கொண்டான்.

வைணவன் சொன்னதைப்பற்றி தனக்கு உள்ளுக்குள் இருந்த அபிப்பிராயத்தை மாறன் வெளியே காட்டிக் கொள்ளாதபோதும் வந்தியத் தேவன் அப்படியில்லை. "இவ்வளவும் உன் காது வரையில் வந்து எட்டியிருப்பதை நினைத்தால் எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது" என்றான் வந்தியத் தேவன். அவனுக்கும்



ரவிதாசனுடன் பழகிய அனுபவம் இருந்தது. இப்படித் தொடர்ந்து ரவிதாசன் திட்டத்தை முழுவதுமாக விளக்கியிருப்பானா என்ன?

'இந்த வைணவன் சொல்வது எவ்வளவு உண்மை. அவன் கனவு கண்டது போல பெரிய பெரிய விஷயங்களையெல்லாம் சொல்வானோ?' என்று மாறனுக்குக் கூடத் தோன்றியது.

அவன் சொல்லுவதை அவர்கள் முழுவதுமாய் நம்பவில்லை என அடியானுக்குப் புரிந்தது. ரவிதாசன் என்ற விஷப் பாம்பினால் நாட்டுக்கு நேர்ந்திருக்கும் தீங்குகளுக்கு எல்லையே இல்லை. இப்படி அபாயம் நிறைந்த சூழ்நிலையில், நேரம் தாமதிக்காமல் எப்படி இவர்களுக்குப் புரிய வைப்பது எனத் திணறினான். பின்னர் ரவிதாசன் சொன்ன ஒரு வார்த்தை அவன் மூளைக்கு ஞாபகம் வந்தது. அதையே பிரம்மாஸ்திரமாகப் பிரயோகித்தான்.

மாறனை நோக்கி "ரவிதாசனின் வீர முழக்கங்களைப் பற்றி உனக்குச் சொன்னேனல்லவா? ஒன்று மட்டும் சொல்ல மறந்தேன். ரவிதாசன் முக்கியமாக ஒன்று சொன்னான். அதுவும் உம்மைப் பற்றி" என்றான்.

"அது என்ன?" என்று மாறன் ஆவலுடன் கேட்டான்.

"'உம்மையும் கொல்லப்போகிறானாம்" என்றான் மாறனைப் பார்த்து.

"நன்றாய் வந்து முயற்சிக்கட்டுமே" என்ற இளம் சம்புவ ராயனின் இதழ்களில் புன்னகை. "அது எல்லா எதிரி வீரர்களுக்கும் இருக்கும் உரிமையல்லவா?"

வைணவன் முடித்தபாடில்லை. "உம்மைத் தொடாமலேயே ஆயுதமின்றிக் கொல்லப்போகிறானாம்" என்றான்.

"அது எப்படி என்று சொன்னானா, வைணவனே?" மாறனுக்கு ஆர்வம் மிகுந்தது.

"சக்கரவர்த்தி உத்தமரை அவன் இந்த மழபாடி நகரில் கொன்று விட்டால், வேளக்காரப்படையின் உறுதிப்படி நீர் தலையை அறுத்துத் தற்கொலை செய்து கொள்ளவைக்கவேண்டும் என்ற திட்டம் ஒன்றைத் தீட்டியிருக்கிறான்."

புயல்காற்றுப் போன்ற சிந்தனைகள் அதுவரை அவன் மனதைக் பந்து போல கடைந்து கொண்டிருந்தன. ஆனால் ஒரு நொடிப் பொழுதில் கந்தமாறன் மனத்தில் தெளிவு ஏற்பட்டது. அவனது கையிலிருந்த கத்திக் காயம் ஆறிப்போய் வெகு நாட்களான போதும் லேசாக வலிப்பது போல் ஒரு பிரமை ஏற்பட்டது அவனுக்கு.

அந்த ஒரே கணநேரம் அவன் ரத்தம் உறைந்தது. அந்த நொடியில் ஒற்றன் சொன்னதைப் பூரணமாக நம்பினான் மாறன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று முப்பத்து இரண்டு
## இவளால் தான் இந்த இடரா?

அடியான் வந்து விஷயங்களையெல்லாம் சொல்லி முடித்த பின் மாறன் சொல்லி முடியாத பரபரப்பை அடைந்துவிட்டான்.

''உண்மையாகவா?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டான். நல்ல யூகசாலி அடியான். அதுவும் சொந்தச் செவிகளில் கேட்டு அவன் சொன்னதை நம்ப மாறனுக்கு சங்கடம் ஏதும் இருந்திருக்கக் கூடாது. ஆனால் அடியான் கூறிய கதை அவ்வளவு அதிசயமா யிருந்தபடியால் மாறன் மனம் மிகவும் குழம்பி விட்டது.

'மழபாடியில் காவலுக்கு ஆயிரமாயிரம் வீரர்கள். மேலும் ஆதரவுக்குச் சிற்றசர்களின் படைகள். இவ்வளவையும் தாண்டி எப்படி ரவிதாசன் வருவான்? எப்படி நினைத்ததை முடிப்பான்?' என்ற எண்ணம் குழப்பத்தைப் பன்மடங்காக்கியது.

மழபாடியே ஜன நெரிசலில் தவித்தது. நதி பாதாளம் நோக்கிப் பாய்ந்து விழும் போது அலறுமே, அந்த சப்தம் போல, பேரிரைச்சல் சதா கேட்டுக்கொண்டே இருந்தது. மாறனுக்கு அருவருப்பாய் இருந்தது. அந்த இரைச்சலில் அவனால் சரியாக யோசிக்கமுடிய வில்லை. ஆனால் அந்த மக்களே அவன் பொறுப்பை ஞாபகப் படுத்தினர். 'இவ்வளவு பேரின் பாதுகாப்பும் இந்த வைணவன் சொல்வதில் அடங்கியிருக்கிறதா?' என்ற எண்ணம்.

மாறனாவது இந்த விஷயத்தின் சாதக பாதகங்களை மனதுக்குள் விவாதித்தான். வந்தியத் தேவனோ ''நாம் வீணாக அலட்டிக் கொள்ளவேண்டாம், மாறா. இது இந்த வைணவனின் பிரமை'' என்பது போலவே பேசிவந்தான்.

''முதலில் நானும் அப்படித்தான் நினைத்தேன் வல்லா. வேளக் காரப்படைத் தலைவனாக நான் எப்படிச் செயல்படுகிறேன் என்று அநிருத்தர் இவன் மூலமாகச் சோதிக்கிறார் என்று கூட எனக்கு தோன்றியது. ஆனால் கடைசியில் ஒரு வார்த்தை சொன்னானே வைணவன்; என்னைத் தொடாமலேயே கொல்லப்போகிறேன்



என்று ரவிதாசன் சொன்னதாக. அதனால் தான் எனக்கு ஒற்றனின் வார்த்தைகளின் மேல் நம்பிக்கை பிறந்தது. அப்படியொரு கற்பனையை ரவிதாசனையன்றி வேறு யாராலும் செய்திருக்க முடியாது. என்னை எந்த அளவுக்கு ரவிதாசன் துவேஷிக்கிறான் என்பது எனக்குத்தான் தெரியும். அவனது மாபெரும் திட்டத்தை கெடுத்தவன் நான். அவன் நாட்டுப் பொக்கிஷத்தைக் கண்டு பிடித்து அவனுடைய பரம எதிரியிடம் ஒப்படைத்தவன் நான். அதனால் அவன் என்னைத் தன் குல நாசினியாகத்தான் மீதி வாழ் நாளுக்கும் பாவித்திருப்பான்'' என்றான்.

''வேரோடு மரங்களைப் பெயர்த்து விடும் மத்த கஜங்களை ஒத்த வீரர்கள் இந்த நாட்டைப் பாது காக்க, நாம் ஏன் கவலைப் படவேண்டும்? பாண்டிய நரியின் தந்திரமெல்லாம் நம்மிடம் பலிக்குமா...?'' என்றான் வந்தியத் தேவன்.

''அந்த நரி வரும் போது மத்த கஜங்கள் தூங்கிக் கொண் டிருக்கக் கூடாதல்லவா?'' என்றான் மாறன். ''பாண்டிய விடுதலை அவ்வளவு சீக்கிரமாக நடைபெறாது. வெகு காலம் காத்திருக்க வேண்டியிருக்கலாம் என்று இருந்தவனுக்கு நாமாக ஒரு சந்தர்ப்பத் தைக் கொடுத்து உதவிவிட்டோமா?''

மாறன் யோசிக்க யோசிக்க அவர்கள் தாக்குதல் நடத்தச் சரியான இடம் இதுவே எனத் தோன்றியது.

''இந்தக் கும்பாபிஷேகத்தையே தன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்குப் பயன்படுத்த ரவிதாசனுக்குத் தெரிந் திருக்கிறது. இந்த நகரிலிருந்து மக்கள் கூட்டமாகச் சீக்கிரம் வெளியில் போவதற்கு முடியாத வண்ணம் சாலைகளின் அமைப் பும் இருக்கிறது, வல்லா! இதில் கொள்ளிடம் வேறு கோயிலுக்கு வெகு அருகிலேயே பாய்கிறது. அவன் தடையின்றி உள்ளே வர அதை உபயோகிக்கலாம். ஆனால் மக்கள் தப்பியோட அதுவே தடையாகவும் இருக்கும்'' என்றான்.

'கரிகால் வளவன், பெருநற்கிள்ளி, இளஞ்சேட் சென்னி, தொடித்தோட் செம்பியன் முதலிய சோழகுல மன்னர்கள் சீரும் சிறப்புமாகச் சோழ நாட்டை ஆண்டிருந்த காலத்துக்குப் பிறகு ஏறக்குறைய ஐந்நூறு அறுநூறு வருஷ காலம் சோழர் குலத்தின் பேச்சு மூச்சையே காணோம். இன்று மீண்டும் தலையெடுத்துக் கோயில் கட்டிப் பெயரெடுக்கப் பார்க்கிறார்கள். அப்போது இந்த ஆபத்தா?' என வருந்தினான். 'மழபாடிக் கோயிலில் மணிமாட மண்டபங்களின் தூண்களில் அழகிய தேவ கன்னிகைகளின் சிலைகளை அமைத்திருக்கிறார்கள். இறைவனின் திருவிளையாடல்

களைச் செதுக்கி வடித்திருக்கிறார்கள். ஒருவேளை அத்தகைய செலவையும் சிரமத்தையும் ஒரு கோட்டைச் சுவரைக் கட்ட உபயோகித்திருந்தால் இந்தக் கஷ்டம் இன்று இல்லை' எனவும் அவனுக்குத் தோன்றியது.

''சரி, என்னதான் சொல்கிறாய்?'' என்று வந்தியத் தேவன் விசாரித்தான்.

''பிரதமரிடம் வைணவனை அழைத்துச் செல்வோம். விஷயம் தலைக்கு மேல் சென்று விட்டது. இனிமேல் பிரதமர் தான் முடிவெடுக்கவேண்டும். முடிவெடுக்கும் பாரத்தை அவர் தலையில் போட்டுவிடுவோம்'' என்றான் மாறன்.

மௌனமாக வந்த ஆழ்வார்க்கடியானை ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டு, ''வல்லா! ஏதோ தவறு நடக்கப்போகிறதாகத் தோன்றுகிறது! ஜாக்கிரதையாகவே நடந்துகொள்ள வேண்டும்'' என்றான் மாறன்.

''அப்படியெல்லாம் எனக்கு தோன்றவில்லை மாறா. இந்தக் கும்பாபிஷேகம் சீரும் சிறப்புமாய் நடக்கும். பார்த்துக்கொண்டே யிரு. ரவிதாசன் இந்தப் பக்கம் கூட எட்டி பார்க்கமாட்டான்'' என்று ஆறுதலாய்ச் சொன்னான் வந்தியத் தேவன்.

''ரவிதாசனின் சக்திகளை இந்த ஜன்மத்தில் மறக்க மாட்டேன்! எந்த ஜன்மத்திலும் மறக்கமாட்டேன். என் குலத்தைச் சீரழித்த பாதகன் மேல் என்றாவது பழி வாங்குவேன்!'' என்றான் மாறன்.

''நீ தான் ஏற்கனவே பழிவாங்கிவிட்டாயே. பாண்டிய மணி மகுடத்தைக் கண்டு பிடித்து அவன் திட்டங்களையெல்லாம் பொடிப் பொடியாக்கிவிட்டாயே! ''

''ஆம் வல்லா. அவனிடம் தோற்றதும் நானே, ஜெயித்ததும் நானே. ஆனால் கணக்கு இன்னும் முடிந்தபாடில்லை.. இந்த துவேஷம் தொடர்கிறது. சொர்க்க லோகம் பிரம்மலோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய எந்த உலகங்களில் நாங்கள் இருவரும் சந்தித்தாலும் அந்தப் பகைமை தொடரும் போல. அவன் ஒரு முறை காட்டில் என்னைக் கொல்லாமல் விட்டு விட்டான். நானும் அவனைக் கொல்லாமல் விட்டேன், வெவ் வேறு காரணங்களினால். அதற்கு இருவரும் இப்போது வருத்தப் படுகிறோம்.''

பிரதமரைக் காணச்செல்லும் வரை, இந்த விவாதம் அவர் களுக்குள் இன்னும் முடியாமலே இருந்தது. ''இந்தச் செய்தியின் வரவினால் சக்கரவர்த்தியைப் பாதுகாக்கும் நம்முடைய காரியம்



ஒன்றுக்குப் பத்து மடங்கு கடினமாகி விட்டது. நான் அவரை நிழல் போலத் தொடரப்போகிறேன்'' என்றான் மாறன்.

மூவராலும் அதிசீக்கிரத்தில் பிரதமரின் ஜாகைக்குச் செல்ல முடியவில்லை. மழபாடியின் நெரிசலான வீதிகளில் எப்போதும் இல்லாதது போல 'ஜே ஜே' என்று ஜனக் கூட்டமாயிருந்தது. மாடு பூட்டிய வண்டிகளும், குதிரை பூட்டிய ரதங்களும் மனிதர் தூக்கிய சிவிகைகளும் ஒன்றையொன்று நெருக்கியபடி சென்று வீதியை அடைத்தன. ஸ்திரீகளும் புருஷர்களும் விதவிதமான வர்ணப் பட்டாடைகளும் ஆபரணங்களும் அணிந்து அங்குமிங்கும் உலாவினார்கள். இளவரசிகளும் அவர்கள் தோழிகளும் மற்றும் பல இளமங்கையரும் கூட்டமாக நின்றார்கள்- எல்லாரும் ஆடை ஆபரணங்களினால் ஜொலித்துக் கொண்டு மகிழ்ச்சியினால் மலர்ந்த முகங்களோடு உலா வந்தனர்.

போகும் வழியெல்லாம் மக்கள் ஆனந்த வெள்ளத்தில் இருந்தனர். இந்தச் செய்தி பரவிவிட்டால் மழபாடி மாநகரம் களையற்றுக் கலகலப்பற்று, சோபிதமில்லாமல் அசாதாரணமான அமைதி குடிகொண்ட நகரமாய் விளங்கிவிடும் என்று மாறனுக்குத் தெரியும். சிறிய நகரம், அதில் பெரிய கூட்டம், ஒரு சின்னப் புரளியைக் கிளப்பிவிட்டால் கூடப் போதும். பெரும் கலவரத்தை ஏற்படுத்திக் கூட்டம் தலை தெறிக்க ஓடும். ஆயிரம் பேர் நசுங்கிச் சாவார்கள். ஆனால் ரவிதாசன் அப்படிப் பட்ட திட்டத்தைச் செய்ய மாட்டான் என்று அவனுக்கு தோன்றியது. ரவிதாசன் இரத்த பலி கேட்பதற்காகத்தான் வருகிறான். அது நிச்சயமாகப் பொது மக்களின் ரத்தமல்ல. அதனால் எதுவும் உறுதியாய்த் தெரியும் வரை செய்தியைப் பரவவிடக்கூடாது.

பிரதமரின் இல்லத்தை நெருங்கியபோது மூவரின் வேகமும் திடீரென்று குறைந்தது. அவர் கேட்கப்போகும் பல குறுக்குக் கேள்விகளுக்கு இவர்களிடம் பதில் இல்லை என்பதை நன்கு அறிந்திருந்தார்கள்.

அரசகுடும்பம் மழவராயர் மாளிகையில் தங்கி விட்டது. பிரதமருக்காக மழபாடியை சேர்ந்த ஒரு வணிகரின் பெரிய வீடு ஒதுக்கப்பட்டிருந்தது. கொள்ளிடக் கரையில் இருந்த அவ்வீட்டில் பிரதமர் குடும்பத்தினர் அனைவரும் வந்து தங்கியிருந்தனர். அவர்களுடன் நந்தினியும் அவள் வளர்த்த சிறுவனும் கூட இருந்தார்கள்.

நந்தினி தஞ்சை வந்ததிலிருந்து பிரதமர் குடும்பத்தில் ஒருத்தி யாகத்தான் வாழ்ந்து வந்தாள். சிறு பிள்ளையாக இருக்கும் போது

அவளும் அந்தணர் குடும்பத்தில் வாழ்ந்ததால் அவளுக்குப் பிரதமரின் உறவினர்களுடன் பழகுவதில் கஷ்டமேதுமில்லை. பல ஆண்டுகள் தனிமையில் கழித்துவிட்டு சமுதாயத்தில் கலந்து உறவாட எண்ணும் சமயத்தில் அன்பு செலுத்தி மதிப்புடன் நடத்தும் அநிருத்தரின் குடும்பம் அவளுக்கு மிகவும் ஆதரவாய் இருந்தது. அவர்களது ஆதரவில் நந்தினிக்கு ஓரிரு மாதங்களில் பழைய சோபையெல்லாம் கூட வந்துவிட்டது.

தஞ்சையில் இருக்கும் போது நந்தினி பெரிதாக வெளியே செல்வதில்லை. முதலில் மழபாடி வரக்கூட மறுத்த நந்தினி, பின் இரண்டு காரணங்களுக்காக அங்கே வர ஒப்புகொண்டாள். தனியாகத் தஞ்சையில் இருப்பது உசிதமில்லை என்பதோடு, மழபாடி கும்பாபிஷேகத்தை ஒட்டியே பாண்டிய நாட்டின் விடுதலை அறிவிக்கப்படும் என்றும் பிரதமர் எடுத்துச் சொல்லியிருந்தார். அதுவே சரியென அவளுக்கும் பட்டது. சிறுவனை அழைத்துக்கொண்டு பிரதமர் குடும்பத்துடன் கிளம்பிவிட்டாள். மற்றவரெல்லாம் 'கும்பாபிஷேகம் எப்போது ஆரம்பிக்கும்?' என்று ஆவலுடன் காத்திருக்கையில், நந்தினி மட்டும் 'எப்போது அது முடியும்?' என்று யோசித்திருந்தாள். முடிந்த பின் தான் பாண்டிய நாடு தன் கைக்கு வரும் என்றும் ஏங்கிக்கொண்டிருந்தாள்.

கவலை தோய்ந்த முகங்களுடன் நம் கதாபுருஷர்கள் மூவரும் பிரதமர் தங்கிய வீட்டுக்குச் சென்றனர். வீட்டுத் திண்ணையில் எதிர் பாராமல் அவர்கள் நந்தினியைப் பார்க்க நேர்ந்தது. என்ன பேசுவது, ஏது பேசுவது என்று புரியாமல் மூவரும் திண்டாடினார்கள். தவறான வார்த்தையை நந்தினியிடம் இப்போது விட்டு விட்டால் அது பெரும் விபரீதமாகிவிடும். 'ரவிதாசன் மழபாடியைத் தாக்கப்போகிறான் என்ற செய்தி அறிந்தால் நந்தினி எப்படிச் செயல்படுவாள் என்று சொல்ல முடியாது' என்று மூவருமே குழம்பினர்.

அதுமட்டுமல்ல. பிரதமர் வீட்டில் நந்தினியைக் கண்டபின் மூவருக்குமே ஒரு எண்ணம் வந்தது. 'இவள் இங்கு இருப்பதனால் தானோ இந்த குழப்பமெல்லாம்?' என்றும் நினைத்து கொண்டார்கள். மாறன், 'சும்மாயிருந்த சங்கை ஊதி கெடுத்து விட்டோமா?' என்று கூட நினைத்தான்.

நந்தினிக்கும் அம்மூவரையும் பார்த்ததில் சற்று அதிர்ச்சி தான். பெயருக்கு அவளும் மூவருக்கும் முகமன் சொன்னாள். சகோதரன் திருமலையின் நிலையைப் பார்த்தவுடன்தான் அவள் முகத்தில் ஒரு சந்தேகக் குறி தோன்றியது. காட்டில் வாழ்ந்தவளுக்கு



இயற்கையாகவே ஒரு பய உணர்வை இம்மூவரின் வரவு ஏற்படுத்தியது..

காட்டில் நெடுநாள் வாழ்ந்தவள் அவள். அதுவும் எதிரியின் மூச்சுக்காற்று அவள் முதுகின் மீது எப்போதும் படும்படி வாழ்ந்திருந்தாள். வாழ்வுக்கும் சாவுக்கும் நடுவே சிறிய நூல் அளவே இடைவெளி அவள் காட்டு வாசத்தில். அதனால் அவளது மனமானது சுற்றுப்புரத்தில் சிறிய மாற்றங்களையும் துல்லியமாகக் கண்டறியும் திறன் பெற்றிருந்தது. காட்டில் திடீரென பட்சிகள் ஓசை செய்தாலோ, காட்டு வழியில் நடக்கும் போது, பக்கவாட்டில் மரக் கிளை முறியும் சப்தம் திடீரெனக் கேட்டாலோ அது அபாயத்தை குறிக்கும் என்று தெரியும் அவளுக்கு. இந்த பய உணர்வே அவள் தஞ்சைக்கு வந்தபின் மிகவும் கஷ்டப்படுத்தியது. எல்லா சப்தங்களுக்கும் பயந்து பயந்து இருந்தவளுக்கு மெல்ல மெல்ல அந்த உணர்வுகள் குறையத்தொடங்கின. ஆனால் இப்போது மூவரின் முகத்தையும், முக்கியமாக அதனுடன் அண்ணன் திருமலையின் உடையின் நிலையையும் பார்த்தபின் இந்தக் கும்பாபிஷேகம் தடையின்றி நடக்காது என்றறிந்தாள்.

மழபடியில் பிரதமருக்கு வேலைப் பளு அதிகமாக இல்லை. அவர் அந்தப்புரத்தில் உறவினருடன் நேரம் கழித்து கொண்டிருந்தார். மூவரும் அவரைப் பார்க்க வந்திருக்கிறார்கள் என்ற செய்தி உள்ளே சென்றவுடன் அவசரஅவசரமாய் வெளியே வந்தார்.

''வாருங்கள், வாருங்கள்'' என்று அவர் சொல்லி முடித்தவுடன், திருமலை சோழத்திரு நாட்டுக்கு நிகழ இருக்கும் ஆபத்தை பற்றிச் சொல்லப் பிரயத்தனப்பட்டான். அதைக் கவனியாமல் அவனது அலங்கோல நிலையைக் கண்ட பிரதமர், ''திருமலை, என்ன ஆனது உனக்கு? முதலில் அதைச் சொல்'' என்றார்.

மரத்தின் மறைவிலிருந்து அடியான் தான் கண்டதை அப்படியே சொன்னான். அவருக்கும் தூக்கி வாரிப்போட்டது. இந்த வார்த்தைகளைக் கேட்டு முதன் மந்திரி அநிருத்தர், திடுக்கிட்டார். அவர் முகத்தில் வியப்பும் கவலையும் ஒருங்கே பிரதிபலித்தன.

உடனே பிரதமர் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார் ''ஆகா! அவர்களுடைய முயற்சி மட்டும் பலித்தால் அது எவ்வளவு நாசமாகப் போய்விடும்?'' என்றார்.

மாறனை நோக்கி ''வேளக்காரப் படைத்தலைவரே! இது சாத்தியமா?''

''என்னைக் கேட்டால் ரவிதாசன் ஊருக்குள் வருவதை யாராலும் தடுக்க முடியாது. நேற்றைய முன் தினம் கூட வந்து

பார்வையிட்டுச் சென்றிருக்கிறான். பாண்டியன் படையெடுத்து வருவதாகச் சொல்லவில்லையே. ஏதோ சதி செய்து அரசருக்கு ஆபத்து உண்டாக்குவதாகத்தான் கூறுகிறான். வைணவர் ஓடி வந்த பின்னர் ரவிதாசன் என்ன பேசினான் என்று தெரியாது. ஆனால் பண்டியன் பெரும் படை திரட்டியதற்கான அறிகுறிகள் ஏதும் இல்லை'' என்றான்.

யாரும் பேசாத நிலையில் மாறன் தொடர்ந்தான். ''பாண்டியர்கள் ஊருக்குள் வரும் கூட்டத்தோடு சேர்ந்து வந்துவிடுவார்கள் என்று எண்ணுகிறேன். யார் பாண்டியன், யார் சோழன் என்று எப்படிச் சோதனை போடுவது? அதுவும் ஒரு லட்சம் பேரை எதிர்பார்க்கிறோம். கூட்டத்தோடு கலந்து வராவிட்டால் இரவோடு இரவாகக் கொள்ளிட நதியைக் கடந்து வருவான்'' என்றான் மாறன்.

தங்கள் கருத்துகளை வந்தியத் தேவனும், அடியானும் வெளியிட்டார்கள். எல்லோரும் பேசியவுடன் பிரதமர் திருமுகத்தில் குடிகொண்டிருந்த கவலைக் குறி மறைந்து ஒரு தீர்மானம் உதித்ததாகத் தெரிந்தது. ''ரவிதாசனுக்கோ அடி மேல் அடி. பாண்டியக் கிரீடம் எதிரியிடம் போனவுடன் தலை தப்பியது தம்பிரான் புண்ணியமென்று ஓட்டம் பிடிக்கத் தோன்றவில்லையே அவனுக்கு. நம்மை எப்படியெல்லாம் வதைக்க வேண்டுமோ, அப்படியெல்லாம் வதைத்துவிட்டுத்தான் அவன் நிம்மதி கொள்வான் போல. சதா நம் தலைமாட்டில் உலாவி நம் பிராணனை வாங்குகிறான்?''

'இந்த சாம்ராஜ்யம் இந்த நிலைக்கு வளர எவ்வளவு முட்டுக் கட்டைகள், தோல்விகள், எல்லாம் சந்திக்க வேண்டியிருந்தது? இனிமேலும் எவ்வளவு மிரட்டல்கள்?' என்று சிந்தித்தபடியே மௌனமாயிருந்த பிரதமரைப் பார்த்து ''என்ன செய்வதென்று நீர் தான் எம்மிடம் சொல்லவேண்டும்'' என்றான் மாறன்.

பிரதமர் மிகவும் கலக்கமுற்றிருந்தார். அவர் முகத்தில் கவலை இழையோடியது. ஏதோ சொற்களை அவரது இதழ்கள் சதா முணுமுணுத்தன. ''சக்கரவர்த்திக்குத் தெரியப்படுத்தாமல் இருக்க முடியாது'' என்றார் பிரதமர். ''அரசன் காதுக்கு இந்த செய்தியை எட்டவிடவேண்டும். புறப்படுங்கள்'' என்றார். ''அரசரிடம் உமக்கு என்ன தோன்றுகிறதோ, அதை தைரியமாகச் சொல்லுங்கள்.''

'என் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதில் எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. எனக்கு என்ன பயம்? கும்பாபிஷேகத்தைத் தள்ளி



வையுங்கள் என்று கோருவேன்' என்று நினைத்த மாறன் ''கும்பாபிஷேகத்தை ஒத்திப் போட, அரசர் மட்டும் சம்மதித்தால்..'' என்றான்.

''அரசர் சம்மதிப்பதற்கு என்ன? திவ்யமாகச் சம்மதிக்கிறார். மக்களின் நலனுக்காக எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறார்'' என்றார் பிரதமர்.

மக்களுக்கும் தனக்கு ஏற்படப்போகும் ஆபத்தை எண்ணி அரசர் அனலில் இட்ட மெழுகைப்போல் உருகிப் போவார் என்று கருதியவர்களுக்கு ஏமாற்றம் தான் மிஞ்சியது.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று முப்பத்து மூன்று

## நம்பாமல் நகைத்தனர்!

தஞ்சையில் உத்தமர் கொலுவீற்றிருக்கும் மண்டபத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் போது மழபாடியின் அரசவை மிகச் சிறியதே. சோழச் சக்கரவர்த்தி மழபாடியில் வந்து எங்கே அரசாங்க விஷயங்களைக் கவனிக்க போகிறார் என்று இருந்தவர்களுக்கு இன்று எதிர்பாராத வேளை.

அரசவையில் பிரதான அரியணையில் சோழ அரசர் இருக்க, அருகில் மழவராயர் அமர்ந்திருந்தார். அரசரைச் சுற்றி பல சிற்றரசர்களும் அமர்ந்திருந்தனர்.

கும்பாபிஷேகத்துக்கு ஓரிரு நாட்களே இருக்கும் போது, 'அரசியல் ரீதியாக ஒரு விவாதம் நடத்தவேண்டும்' என்று பிரதமர் சொல்லியவுடன் அரசருக்குக் கொஞ்சம் கோபம் தான். கோயிலில் கவனிக்கவேண்டிய வேலைகள் எவ்வளவு இருந்தன. எனினும் பிரதமர் விஷயம் முக்கியம் என்றால் தான் தன்னை இந்தச் சூழ்நிலையில் தொந்தரவு செய்வார் என்றும் அவருக்குத் தெரியும். அதனால் உடனே ஒப்புக்கொண்டார்.

மந்திராலோசனை சபை கூடிற்று.

நடக்கபோவதைச் சொன்னால் அனைவருக்கும் தூக்கி வாரிப் போடும் என நினைத்தனர் மாறனும் வந்தியத் தேவனும். ஆனால் அப்படி ஒன்றும் இல்லை.

''அரசே! இந்த விழாவையொட்டி பெரும் ஆபத்து தங்களையும் இந்த நாட்டையும் நெருங்குகிறது என்ற செய்திகள் கிடைத்துள்ளன'' என்றான் மாறன்.

அரசருடைய முகத்தில் சிறிது வியப்புக் குறி காணப்பட்டதே தவிர, கவலை தோன்றாதது கண்டு, மாறன் வியந்தான். மழபாடி கும்பாபிஷேகத்தில் அழையா விருந்தாளியாக எதிரியை அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பது அவருடைய முகபாவத்திலிருந்து நன்கு தெரிந்தது.

''ஆபத்து என்று என்ன முகாந்திரத்தைக் கொண்டு சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார் அரசர், தம் காதுகளையே நம்பாதவர் போல்.

மாறன் பின்னர் சோழரின் பிரதம ஒற்றன் காட்டில் கண்ட அனுபவத்தின் சாராம்சத்தைச் சொன்னான். ''அரசே! கொஞ்சம் கூடக் காலத்தை வீண்போக்குவதற்கில்லை. உடனடி நடவடிக்கைகள் தேவை. தங்கள் முடிவும் தேவை'' என்றான்.

அரசர் அதற்கு மேல் பேசவில்லை. ஆனால் அரசவையில் ஒரு கொந்தளிப்பை வேளக்காரப் படையின் தலைவனுடைய கூற்று உண்டாக்கியிருந்தது.

பரிகாசமான குரலில் சிலர் கேள்விகள் கேட்டனர். ''எதிரிப் படைகளைக் கதிகலங்க அடித்த அசகாயசூரர்கள் வீராதிவீரர்கள் நீங்களெல்லாம் இருக்க, எதிரிகள் பத்துப் பேரைக்கண்டு நாம் ஏன் பயப்படவேண்டும்?'' என்றார் சிற்றசர் ஒருவர். அவர் குரலில் நையாண்டி தெளிவாய் தொனித்தது.

அவர் கேட்டதும் நியாம் தானே! சோழரை வீழ்த்தலாம். ஆனால் அதை நிறைவேற்றுவது எளிதல்ல. பெரும்படை திரட்டிக் கொண்டு, தக்க ஆயுத பலத்தோடு பாண்டியன் வரவேண்டும். அதற்கு அவகாசம் வேண்டும். ஒரு நூற்றாண்டு ஆகும் என்று கூடியிருந்தவருக்கெல்லாம் தெரியும்.

''இப்படிக் குள்ள நரியைப் போல எதிரி வருவதற்கெல்லாம் வேளக்காரப் படைத்தலைவர் அஞ்சக்கூடாது'' என்றார் மழவராயர்.

அவர்களில் பலருக்கு ஏற்கெனவே மாறன் மீது அதிருப்தி உண்டு. இளம் பிராயத்தில் பெரும் பொறுப்பை ஏற்றவன் என்பதனால் பலரும் அவன் மேல் கோபமாய் இருந்தனர். அரசரின் நல்ல அபிப்பிராயத்தை எப்படியோ கவர்ந்துவிட்டான் இந்த சம்புவராயன் என்று பலரும் எண்ணினார்கள். அவனைச் சரியான இடத்தில் அமர்த்த இதுவே நல்ல சந்தர்ப்பம் என்றும்



நினைத்தனர். அதனால் ஆளுக்கு ஆள் வாய்க்கு வந்ததெல்லாம் பேசினர்.

''வேளக்காரப் படைத் தலைவரின் இழுத்த இழுப்புகெல்லாம் நாடு செல்ல முடியாது'' என்றார் ஒருவர்.

''பிரமையும் மனப்பிராந்தியும் வேளக்கார படைத் தலைவனை தாக்கிவிட்டதோ?'' என்றார் மற்றும் ஒருவர் .

ஒவ்வொருவராகத் தம் அபிப்பிராயங்களைச் சொல்லலானார்கள். எல்லாம் மாறனுக்கு எதிராகவே இருந்தன. ஆனால் அவர்களிலெல்லாம் மிகவும் கோபமாய் இருந்தது மழவராயர் தான். தன் நாட்டிலல்லவா இந்தத் தாக்குதல் நடக்கும் என்று சொல்கிறான் மாறன். ''மழபாடியில் யாரும் பாண்டிய உளவாளிகள் உலவவில்லை என்பதற்கு நான் உத்திரவாதம்'' என்றார் மழவராயர். ''இது என்ன கடம்பூரா? பாண்டியர்கள் வந்து பழிதீர்க்க.''

மாறனின் நாட்டில் நடந்த ஆதித்தனின் கொலையைப் பற்றி மறைமுகமாகக் குத்திக்காட்டினார் மழவராயர். விட்டிருந்தால் மழவர் அரசன் இன்னும் சரமாரியாக வசை பாணங்களைப் பொழிந்திருப்பார். ஆனால் பிரதமர் பேசவில்லை என்பதை அரசர் கவனித்து விட்டார்.

'வீரம் மிகுந்த படைத் தலைவர்கள் மட்டும் இருந்தால் போதாது ஒரு நாட்டுக்கு. புத்தியிற் சிறந்த ஒற்றர்கள் கூட வேண்டும். பின்னர் அவர்கள் உயிரைப் பணயம் வைத்து உளவறிந்து வந்து சொல்வதைக் காது கொடுத்துக் கேட்காமல் அதைக் கேலியாக்கினால் தகுமோ?' என்று பிரதமர் யோசித்தார்.

கல்வி கேள்வியற்றவர்கள் சொல்லியிருந்தால் அவர் நம்பியிருக்க மாட்டார். 'தானே பயிற்சி கொடுத்துப் பல நாள் உபயோகித்த அடியான் கூறுகிறான். இந்த நேரத்தில் அவன் செயல்பாட்டைச் சோதிக்கக்கூடாது' என்று நினைத்த பிரதமர் ஒரு பெருமூச்சு விட்டார். அச்சமயம் அவருடைய முகக்குறி மிகவும் முயற்சி செய்து மௌனம் காப்பதற்கு ஆயத்தமாகிறவரைப் போலக் காணப்பட்டது.

இந்த சபையில் அவர் என்ன பேசினாலும் எடுபடாது. மன்னர், வேறு விஷயம் என்றால் பிரதமர் சொல்வதைக் கேட்பார். ஆனால் கோயில் விழா என்பதால் இப்போது அவரது அபிப்பிராயத்தைக் கூடக் கேட்கவில்லை.

பிரதமர் வாய் திறக்கவேயில்லை. அவரது கவலையுற்ற முகத்தை ஓரக் கண்ணால் கண்டு கையை உயர்த்தினார் அரசர். மழவ

ராயரும் மற்ற அரசர்களும் புரிந்து கொண்டு மௌனம் காத்தார்கள்.

மௌனம் ஏற்பட்டவுடன் சபையில் மீண்டும் மாறன் பேசினான். ஏதோ ஒரு பெரிய விபரீதத்தை எதிர்பார்த்து அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்று மன்றாடினான். மாறனுக்கு மனதுக்குள் கோபம். 'இந்த மூடர்களின் பிடிவாதத்தினால் தன்னுடைய காவல் திட்டமெல்லாம் சின்னா பின்னமாகி விடும் போலிருக்கிறது! அலட்சியப் புத்தி காட்டுகிற நேரமா இது? இப்படிப்பட்ட சமயத்தில் கும்பாபிஷேகத்தை நடத்தப் போவது உசிதமா என்றுகூட யோசிக்கவில்லையே?'

வேளக்காரப்படையின் கையாலாகாத்தனத்தினால் எதிரி சோழ வேந்தனை நெருங்கினான் என்ற அவப்பெயர் தான் மிச்சமாகும். சோழ நாட்டின் தலைசிறந்த ஒற்றன் தன் கண்ணால் கண்டதை வந்து சொல்கிறான். யாருக்கும் அக்கறை உண்டாகவில்லையே? இவர்களுடன் வாதமிட்டுக் கொண்டிருக்கும்போது ரவிதாசன் தன் திட்டத்துக்கு நன்கு ஆயத்தமாகிவிடுவான்" என்று வருத்தப்பட்டான்.

மீண்டும் மீண்டும் எடுத்துரைக்க முற்பட்டான் மாறன்.

"விஷயங்கள் தெளிவாகும் வரை, கும்பாபிஷேகத்தைத் தள்ளி வைக்கும்படி ஆக்ஞையிடும்படியாக மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்" என்றான்.

அரசர் முகம் மாறியது. இப்போது அவர் குரலில் எப்போதும் இருக்கும் கனிவுக்கு பதிலாக கோபம் தென்பட்டது எல்லோருக்கும் ஆச்சரியம்.

"கந்த மாறவேள்! இரண்டு ஆண்டுகளாக இந்தக் கோயில் திருப்பணி நடைபெறுகிறது. கல்லைக் கொண்டு உயிர்ச்சிலைகளைச் சமைத்திருந்தனர் சிற்பிகள். ஆனால் அவற்றுக்கெல்லாம் என்னவொரு அழகு என்று ஊராரெல்லாம் என் காது படவே பேசுகிறார்கள். இந்த தினத்துக்காக எவ்வளவு பேர் காத்திருக்கிறார்கள் தெரியுமா? அந்த அசாதாரண அழகு படைத்த சிலைகளையெல்லாம் சகல ஜீவராசிகளையும் படைக்கும் பிரம்ம தேவனே நாலிரு கண்களினால் பார்க்கவேண்டும், பொறாமையில் வெம்பித் தன் படைப்பை நிறுத்திவிடுவான் என்றே சொல்கிறார்கள்."

அரசர் முதலில் இங்கு வந்த போது இந்தக் கோயிலின் பெரும் பகுதி இடிந்து பாழாய்க் கிடந்தது. இடிந்த சுவர்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொடுக்க வேண்டும் என்று வந்தவர் பின் வேலையில் முழுவதுமாக ஈடுபட்டுக் கும்பாபிஷேகம் வரை நடத்திவிட்டார்.



அரசர் நல்லதே நடக்கும் என்று உரைக்க சான்றாகத் தன் கதையை சொல்லலானார். "பூப்பறிக்கும் ஊமை ஸ்த்ரீ ஒருத்தி என்னை செல்வக் கண்மணியாக எண்ணி மடியில் வைத்துக் கொண்டும், தோளில் போட்டுக் கொண்டும் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்தாள். ஆனால் அவள் ஊமையென்பதால், ஒரு தாலாட்டுக் கூடக் கேட்க அருகதையில்லாதவன் நான் என்று நினைப்பதுண்டு. ஐந்து வருஷத்துக்கு முன்னால் நான் இந்த அரண்மனையில் பிரவேசித்த புதிதில் என்னைப் பற்றி ஒருவருக்கொருவர் அனுதாபத்துடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு பேசினார்கள். பூப்பறித்த சிறுவன் எப்படி இவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆளப் போகிறான் என்றார்கள். பின்னர் என் மீது ஒருவர் கூடக் குற்றங்கூறி நிந்திக்கவில்லை. எல்லாம் அவரால் தான்" என்று வஜ்ரநாதர் குடியிருந்த கோயில் பக்கமாகக் கையை காட்டினார்.

"இந்த நாட்டைக் காப்பாற்றி அருளும்படி வஜ்ரநாதரிடம் முறையிட்டுக் கொள்கிறேன். திரிநேத்திரதாரியான சிவபெருமான் அருளால் ஒன்றும் அபசகுனமாக நடக்காது. உன் பலமென்ன என் பலமென்ன என்று ஆடுகிறோம், தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடுபவனை மறந்துவிட்டு" என்றார்.

மாறன் மௌனமாய்க் கேட்டுகொண்டிருந்தான். "சோழர் சாம்ராஜ்யத்துக்கு தெய்வீக சக்தி ஆதரவாய் இருக்கிறது. அதற்கு யாரும் எந்தவிதமான கெடுதலும் செய்ய முடியாது. அவர் அருளால் இந்த மாபெரும் விழாவுக்கு இடையூறு நேர்ந்துவிடாது என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது" என்றார் அரசர்.

"நீங்கள் சொல்லவேண்டிய யோசனையெல்லாம் சொல்லுங்கள்; கேட்டுக் கொள்கிறேன். ஆனால் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி நான் முன்னமே முடிவு செய்து விட்டேன்" என்ற தோரணையில் அரசர் பேசியது அவனுக்கு எரிச்சலை உண்டுபண்ணியது. மாறன் மீண்டும் "இந்தச் சோழ சாம்ராஜ்யத்தில் பட்டப்பகலில் அவ்வளவு பெரிய அசம்பாவிதம் நடந்தால் சரித்திரம் என்ன சொல்லும்?" என்று எடுத்துரைத்தான். "கும்பாபிஷேகத்தைத் தள்ளிவைக்கும் படி ஆக்ஞையிடும்படியாக மன்றாடி வேண்டிக்கொள்கிறேன்" என்று மீண்டும் கோரினான்.

அரசர் தொடர்ந்தார். "எனக்கு என்ன நேர்ந்தாலும் நானே பொறுப்பு. வேளக்காரப்படையின் சொல்லை மீறி நானே செய்யும் காரியமிது என்று வேண்டுமானால் சொல்லிவிடுகிறேன்.

சாசனம் எழுதி வைத்துவிடுகிறேன்'' என்றார். அரசன் அகாலமாக மாண்டால் வேளக்காரப் படைத் தலைவன் தன் உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டும் என்று ஒரு நடைமுறையிருந்தது.

கந்தமாறவேளின் முகம் சுருங்கிற்று. இதற்கு மேலும் அரசருடன் வாதமிட அவன் விரும்பவில்லை. பின் தவறாய்ப் போய்விடும். தன் உயிருக்கு பயந்து பேசுகிறான் என்று சுற்றியிருந்தவர்கள் ஏசக்கூடும். மூச்சுவிட முடியாமல் திணறும் உணர்ச்சி மாறனுக்கு உண்டாகியது.

தன் முறையீட்டை அரசர் ஏற்றுக்கொள்ளவில்லை என்று மாறனுக்குக் கோபம். ஆனாலும் குரலை அடக்கியே பேசினான்.

''ஐயனே! இந்தப் புராதன சோழ சிம்மாசனம் தங்களைப் போன்ற உத்தமரைப் பெறுவதற்கு எத்தனையோ காலம் தவம் செய்திருக்க வேண்டும்! தங்கள் கட்டளையைப் பின்பற்ற நான் கடமைப் பட்டுள்ளேன். நான் இப்போது என்ன செய்வது என்று சொல்லுங்கள்'' என்றான்.

முகம் தளர்ந்த மாறனைக் கண்டபின் சக்கரவர்த்தியின் உள்ளம் கனிவடைந்தது. நாள் ஆக ஆக, இந்தப் பதவியில் இருக்கும் பதற்றம் குறைந்து முதிர்ச்சியுடன் முடிவுகள் எடுப்பான் என்று நினைத்துக்கொண்டார்

''வேளக்காரப்படை தலைவரே! எங்கெல்லாமோ வெகு தூரத்துக்கு, நடவாத காரியங்களுக்கு இடையிலேயே போய் விட்டீரே? அப்படியெல்லாம் ஒன்றும் நேராது! நீர் கவலைப்பட வேண்டாம்'' என்று ஆறுதலுடன் ஆரம்பித்தார்.

''தங்களிடம் தெரியப்படுத்தியதுமே எங்களுடைய மனத்திலிருந்த பாரம் நீங்கிவிட்டது என்று என்னால் இருக்கமுடியவில்லை மன்னா'' என்றான் மாறன். ''ஆயிரம் பேர் வந்தாலும் பரவாயில்லை. ஆனால் ரவிதாசன் சூழ்ச்சி நிறைந்தவன்''

ஆயிரம் ஆட்சேபங்கள் தெரிவித்தாலும் அரசர் ஒப்புகொள்ளவில்லை. ''ஏதாவது செய்ய வேண்டுமென்றால் காவலைக் கூட்டுங்கள். ஆனால் பொது மக்களுக்குக் கஷ்டம் விளைவிக்காதீர்கள். மக்களின் மனங்கோணாமல் நான் நடந்து கொள்ள வேண்டாமா?'' என்றார். ''சம்புவராயரே, கும்பாபிஷேகத்தை நிறுத்துவது உசிதமல்ல; கும்பாபிஷேகத்தைத் தேதி குறிப்பிட்டவுடன் தள்ளிப்போடுவது தெய்வக்குற்றமாகும். அதுமட்டுமல்ல. வீண் குழப்பம் வேறு ஏற்படும். இவ்வளவு பேரையும் வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக் கொள்கிறீர்! அது சாத்தியமா?



[illegible] நாளை நம்மைக் காக்கும் அரசனுக்கே நம்மை காப்பாற்ற தைரியம் இல்லை என்பார்களல்லவா?''

மாறன் சக்கரவர்த்தியின் முன் நின்றான். ''அரசர்கரசே! ஆபத்துக்கள் இருக்கின்றன. எம் உயிரை கொடுத்தும் உம்மை எல்லாம் காப்போம்.''

''எங்கள் பாதுகாப்புக்கு மட்டும் உம்மை அமர்த்த வில்லை'' விசித்திரமாகப் பார்த்த மாறனை நோக்கி ''வஜ்ரநாதரும் எமது காவலுக்கு தக்க ஏற்பாடு செய்வார். இந்தப் பயனற்ற வாழ்க்கையை முடித்துக்கொள்ள நேரம் வந்தால் நம்மால் என்ன செய்ய முடியும்? கடவுளுடைய விருப்பம் நான் உயிரோடு இன்னும் சில காலம் இருக்கவேண்டும் என்பது என்றால் பிழைப்பேன். நீர் உமது கடமையைச் செய்யுங்கள். நான் என் பிராத்தனையைச் செய்கிறேன்'' என்றார் அரசர்.

''அரசே! பாதுகாப்புக் கருதி விழாவில் சற்று மாற்றங்கள் ஏற்படுத்த வேண்டுகிறேன், கருணைகூர்ந்து பணித்தருள்க'' என்றான் மாறன்.

அரசர் சிரித்தார். ''உங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்தி விட்டீர்கள். சாத்தியமென்றால் நானே ஏற்றுக் கொள்கிறேன். ஒன்றும் ஆகாது. நீங்கள் நிம்மதியாக இருங்கள் சம்புவராயரே. நடப்பது நடக்கும். ஆனால் இங்கு நடைபெறவேண்டியதும் அப்படியே திட்டமிட்டபடி நடக்கவேண்டும். குறிக்கப்பட்ட நேரத்தில் கோயில் விழா நடக்கும். அதற்கு உட்பட்டுச் செயல்படுங்கள், காவலுக்கு உங்களுக்கு எது உசிதமாகத் தோன்றுகிறதோ, அப்படியே செய்யுங்கள்'' என்றார். பேசாமல் தலையசைத்தான் மாறன்.

''வேளக்காரப் படைத் தலைவா! என்னை ரொம்பவும் மன்னிக்க வேண்டும். நீங்கள் கோரும் உதவி என்னுடைய சக்திக்கு அப்பாற்பட்டது'' என்றார் அரசர். ''கோயில் விஷயமின்றி வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால் ஒப்புகொண்டிருப்பேன். சாம்ராஜ்ய பாரத்தை, ஏற்றுக் கொண்டு சிம்மாசனத்தில் வீற்றிருந்து ஆளுவது சுகமல்ல. நிரந்தர பாரம். உம்மை 'இது செய் அது செய்' என்று இதுவரை நான் கட்டளையிட்டதில்லை. அத்தகைய ஆக்ஞை பிறப்பிக்கும் நிலைமையையும் நீர் எமக்கு கொடுத்ததில்லை. எனினும் சம்புவராயரே. இது கடவுளின் காரியம். அவன் என்ன நினைக்கிறானோ அதுவே நடக்கும்.கோர கிருத்யங்களைச் செய்யும் அரக்கர்களை அழிக்க ஆண்டவன் அவதாரம் எடுத்து வரவில்லையா? அவர்களுடைய தீய செயல்களைப் பற்றி வருந்தி

வருந்தி அந்த அரக்கர்கள் மாண்டு போக வில்லையா? அடியேன் சைவத்துக்கு இன்னும் நிறையச் சேவை செய்யவேண்டும். சகல ஜீவன்களையும் காப்பாற்றக் கடமைப்பட்ட கடவுள் இருக்கிறார். அவரிடம் பாரத்தைப் போட்டு விட்டு உமது வேலையை செய்யுங்கள்'' என்றார் அரசர்.

சிற்றசர்களுக்கெல்லாம் கோபம். 'இப்படிப் புத்தியற்ற ஒன்றைச் சொல்கிறான் இவன். இவனிடம் அரசன் ஏன் பரிவு காட்டுகிறார்?' என்று.

இன்னமும் பேச எத்தனையோ விஷயங்கள் இருந்தன. ஆனால் அரசர் விடவில்லை. வேறு யாராவதென்றால் அதிகார தோரணையில் மாறன் பேசியிருப்பான். தலை குனிந்தபடியே வெளியே நடந்தான்.

சரித்திரத்தில் முதல் முறையாகப் பிரதமர் அநிருத்தர் சபைக்கு வந்து ஒரு வார்த்தை கூடப் பேசாமல் வெளியேறினார்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று முப்பத்து நான்கு
## 'காவலைக் கூட்டுங்கள்!'

அரசரிடம் பேசிவிட்டுவந்த பின்பு மாறனின் நெற்றியில் வேர்வை துளிர்த்தது. ரத்தம் கொதித்தது. கை கால்களில் நடுக்கம் தெரிந்தது. சபையில் நேர்ந்த அவமானத்தை நினைத்த போது மாறனின் இருதய அடிவாரத்திலிருந்து பாராங்கல் போன்ற ஏதோ அடிக்கடி கிளம்பி மேலே சென்று அவன் தொண்டையை அடைத்துக் கொண்டது போலிருந்தது.

தான் பதவியேற்ற அன்று எவ்வளவு மகிழ்ச்சி காண்பித்தார்கள் எல்லாரும். இன்று தன்னைப் பகைவன் போல, இல்லை, இல்லை கோமாளியைப் போல பாவிக்கிறார்கள்.

மாறனுக்குக் கோபம். தன் அறிவில் தெளிவில்லை என்று சொல்லாமல் சொல்லிவிட்டாரே சக்கரவர்த்தி. அதற்காகவாவது ரவிதாசன் வரவேண்டும். சுற்றியிருந்த சிற்றசர்களெல்லாம் வாய்க்குள்ளேயே சிரித்தனரே. ஒருவேலையும் இல்லையென்று தான் இந்தப் பதவியை சம்புவராயனுக்குக் கொடுத்தனர். ஆனால் அவனோ அது புரியாமல் இதில் அபாயம், அதில் சதி என்று



வருகிறான் என்று அவன் காதுபடவே சிலர் பேசினார்கள். அவைக்குள் அனைவரும் நகைத்தார்களே; அதற்காகவாவது வர வேண்டும் ரவிதாசன். அவனையும் அவன் சகாக்களையும் கையும் களவுமாய்ப் பிடித்து, சங்கிலியால் பிணைத்துக் கொண்டு போய் பிரதமரிடம் நிறுத்தவேண்டும். 'வரமாட்டான் என்றீரே! வந்து விட்டான் பாருங்கள்' என்று அவரிடம் சொல்ல அவன் இளம் உள்ளம் துடித்தது.

அர்த்தமற்றது என்று மற்றவர் சொன்ன அபாயம் உண்மையானது என்று அறிந்தான். ஆனால் எதிர்த்துப் போரிடுவது என்றால் யாரிடம் போரிடுவது? எதிரி இருக்கிறான் என்று தெரிகிறது. ஆனால் எங்கே என்று தெரியவில்லை. அரசர் வேறு பிடிவாதமாயிருக்கிறார். ஆனால் அவன் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்டான்.

'இன்னும் மூன்று நாட்கள் தான். தாக்குப் பிடித்துவிட்டு அரச குடும்பத்தைத் தஞ்சை கோட்டைக்குள் அழைத்து சென்று விடலாம். பின் பாண்டியரை ஒரு கை பார்க்கலாம்' என்று நினைத்தான்.

கோயிலைச் செப்பனிட்டு இன்னும் ஓராயிரம் ஆண்டுகள் நிலையாய் நிற்கும்படி செய்து கொண்டிருந்தார் சக்கரவத்தியும் அவர் தாயும். அதை வரவேற்று மழபாடியில் வரலாறு காணாத கூட்டம் அலைமோதி மாறனின் வேலையை இன்னமும் கடினமாக்கியது.

மாறன் உருவிய வாளுடன் குதிரையின் மேல் சென்று கொண்டிருக்கையில் வழிவிட்டுப் பக்கத்தில் நின்றபடி மக்கள் அவனை வாழ்த்தினர். கோயில் மதில் பக்கத்தில் கிராமத்து ஜனங்கள் - ஸ்திரீகள், புருஷர்கள், வயோதிகர்கள், சிறுவர் சிறுமியர் அனைவரும் ஆங்கங்கே கும்பல் கும்பலாக நின்று கொண்டிருந்தனர். பல்லாயிரக்கணக்கான மக்களின் நடுவே யார் பாண்டியன் என்று கண்டுபிடிப்பது? வேஷம் அணியவே தேவையில்லை. அவ்வளவு அதிகமாக மக்கள் வந்திருந்தனர்.

கோயில் திருவிழாவில் கோர வடிவம் கொண்ட காபாலிகர்களும் இருந்தார்கள். காவியுடை தரித்த சன்னியாசிகளும் இருந்தார்கள். அதுமட்டுமா? அதுவரை கோயில் பக்கமே தலை வைத்துப் பார்க்காத கட்டிளம் காளைகள் ஏராளம். கன்னி தேவதைகளும் அதற்கேற்ற எண்ணிக்கையில். நவயௌவனப் பிராயத்தினர் ஏராளமாய் இருந்ததால் இட்டத்தட்ட மதனோத்சவம் அரங்கேறிக் கொண்டிருந்தது. எல்லாவிதமான பொது

மக்களும் எதை பற்றியும் கவலைப் படாமல் இருந்தார்கள். பல இடங்களில் திருமணப்பேச்சும், வியாபாரப் பேச்சும் நடந்து கொண்டிருந்தன. 'சோழரின் அரவணைப்பில் நாங்கள் ஜாக்கிரதை யாய் இருக்கிறோம்' என்று நினைத்துக் கொண்டு நிம்மதியாய் இருந்தனர் சோழ தேசத்துப் பிரஜைகள்.

சுற்றியிருந்த கூட்டத்தில் பல சிற்றரசர் குலப் பெண்களும் அடக்கம். எல்லோர் பார்வையும் இந்த வேளக்காரப்படைத் தலைவனின் மேல் தான். மாறனும் லோகாவைச் சந்திக்காமல் இல்லை. தூரத்திலேயே அவளைக் கண்டுவிட்டான். பட்டப் பகலில் பூரணச் சந்திரன் பிரகாசிப்பதுபோல் இருந்தது லோகாவின் முகம். மாறன் நெருங்கியவுடன் அவளது தோழிகளோ அவளைக் கேலி செய்ததால் நாணி முகம் குனிந்து மழபாடியின் தரையை ரசித்தபடி நின்றாள்.

கடைசி நிமிடத்தில் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் அவனைப் பார்த்தாள். அவனை நோக்கி ஒரு பார்வையை வீசிவிட்டுச் சென்றாளே! ஆயிரம் அம்புகள் வந்து இதயத்தைச் சல்லடை போல் ஓட்டை போட்டிருக்கவேண்டுமே! வேளக்காரப்படைத் தலைவன் புரவியிலிருந்து விழாமல் இருக்கப் பெரும் முயற்சி செய்திருக்க வேண்டுமே? ஆனால் அப்படி ஏதும் இல்லை. இன்றைய தேதியில் அவன் மனதை முழுவதுமாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது ரவிதாசன் தான்.

இதுவரை அவனுடைய உள்ளத்திலேயிருந்து ஒரு கணநேர மாவது லோகா அப்பாற்பட்டதுண்டா? அவளையே வெளி யேற்றிய பெருமை இந்த ரவிதாசனுக்கு உண்டு. காலை, மாலை எனப் பார்க்காமல், கனவு, நினைவு என்று வித்தியாசப்படுத்தாமல் ரவிதாசனையே நினைத்துக் கொண்டிருந்தான் மாறன்.

மாறனுக்குக் காலம் ஓட மாட்டேன் என்றது. இன்னமும் இரு தினங்கள் இருந்தன விழாவுக்கு. நேரத்தைப் போக்குவது கடின மாக இருந்தது. சிரத்தையுடன் செய்த தனது காவல் ஏற்பாடுகள் தாக்குப் பிடிக்குமா என்று தெரிந்து கொள்ள ஆவல். எதிரியை நேருக்கு நேர் பார்க்க ஆவல். 'ரவிதாசன் என்ன தான் செய்யப் போகிறான்? அரசரை எப்படி நெருங்குவான்?' என்றறிய ஆவல்.

தன்னுடைய வாழ்க்கையில் இதுவரை என்றும் அனுபவித் தறியாத போட்டியுணர்வை அவன் அனுபவித்தான். மழபாடியில் வேறு யாரும் இல்லாதது போல ஒரு உணர்வு. அரசர், ஆசைக் காதலி, நண்பன் வந்தியத் தேவன், லட்சோபலட்சம் மக்கள் எல் லோரும் பார்வையிலிருந்து மறைந்தனர். அவனும் ரவிதாசனும்



மட்டும் கொள்ளிடக்கரையில் தனியாக நிற்பது போல ஒரு உணர்வு. அவர்கள் இருவருள் ஒருவர் தான் நாளை உயிருடன் இருக்க வேண்டும் என்ற வெறி.

'அவன் மட்டும் என் கையில் மாட்டட்டும். கழுவிலே ஏற்றப் போகிறேன்!' என்று மனதுக்குள் சொல்லிகொண்டே இங்கும் அங்குமாய் நோட்டம் விட்டான் மாறன்.

ஒரு நொடி கூட வந்தியத் தேவன் மாறனை விட்டு அகலவே இல்லை. இப்போது தான் நண்பனுக்குத் தன் முழு ஆதரவு தேவைப்பட்டது என்று அறிந்து அவனுடனேயே இருந்தான்.

இருவருமாய் இருக்கும் போது கூட மாறனின் கண்கள் மட்டும் இங்கும் அங்குமாய் அலைந்தன. வந்தியத் தேவனின் வார்த்தைகள் அவன் காதில் விழுந்தனவா என்பதே சந்தேகம்.

''என்ன சம்புவராயரே. விபரீதம் ஒன்றும் ஆகாது. நாங்கள் [illegible] கவனியுங்கள்'' என்று கிண்டல் செய்தான் வந்தியத் தேவன். அவன் முகத்தில் புன்னகை அரும்பியது.

''இல்லை, வல்லா! தஞ்சையென்றால் கோட்டை மதிலைக் காக்கப் பத்தாயிரம் வீரர்களைக் குவித்திருக்கலாம். இவ்வூருக்குச் சுற்றிலும் மதிலே இல்லை. எதிரி கொள்ளிடம் வழியாகவும் வரலாம். கொள்ளிடம் கோயிலுக்கு முன்னால் கடல் போன்று விரிந்து பரந்து கிடக்கிறது'' என்று சொல்லி ஆற்றை கவனித்தான்.

வெள்ளம் வந்து பாய்ந்த ஆற்றில் நீர் நிரம்பித் ததும்பி நின்றது. படகுகள் பலவும் ஏற்கனவே அந்த ஆற்றை நிரப்பிகொண் டிருந்தன. எப்படித்தான் இவ்வளவு படகுகள் வந்தனவோ? மற்ற பக்தர்களுடன் ரவிதாசனின் கூட்டத்தினர் ஆற்றைக் கடந்தும் வரலாம் என்ற பயமும் இருந்தது மாறனுக்கு. மழபாடிக்கு ஒரு புறம் முழுவதும் கொள்ளிடம். பலரும் திருவையாற்றுப் பக்கத்தி லிருந்து வருவார்கள். அவர்கள் ஆற்றைக் கடந்தே வரவேண்டும். நூற்றுக்கணக்கான படகுகள் கோயிலுக்கு நேரே நின்றிருந்தும் வந்தும் போயும் இருந்தால் சரிவராது.

உடனே கோயிலுக்கு நேர் எதிரே கொள்ளிட கரையில் அமைந்திருந்த படகுத் துறையை அகற்றி அதைச்சற்று தூரத்தில் கட்டும்படி கட்டளையிட்டான். வேளக்காரப் படைத் தலை வனுக்கு எதிர் வார்த்தை பேச யாரிருக்கிறார்கள்? ஒரே நாளில் எல்லாப் பலகைகளும் கழற்றிச் சற்று தூரத்தில் துறை அமைக்கப் பட்டது. படகுகளெல்லாம் அங்கு சென்று தான் கரையடைந்தன.

எதிரி எந்தப் பக்கத்திலிருந்து வருவான் என்று யோசித்தபடி நாலாபுரமும் ஆராய்ந்தான். கொள்ளிடத்துக்கும் கோயிலுக்கு

மிடையே ஒரு சிவந்த மண் சாலை. கோயிலுக்குப் பின் புறம் வயல்கள். அவற்றில் கரும்பும் நெல்லும் தழைத்திருந்தன.

கொள்ளிடத்தில் வெள்ளம் வந்தால் பனை மர உயரம் பிரம்மாண்டமாக எழுந்து வரும். இந்த ஊரே மூழ்கிப் போய் விடும். நீர் வஜ்ரநாதர் சன்னதி வரை வரும். ஆனால் அடிக்கடி வராது. குடகு மலையில் பெரும் மழை பெய்து காவிரி நிரம்பிய பின் தான் கொள்ளிடத்துக்கு நீர் வரும். எனினும் கரையோரம் கோயில் மட்டும் தான். இங்கே குடியிருப்பது வெள்ளத்திற்குப் அபாயம் என்று வேறு மேட்டுப்பாங்கான இடங்களுக்கு மக்களெல்லாம் குடியேறிப்போய் விட்டார்கள். அதுவரை சந்தோஷம். பகைவன் மறைவதற்குக் கோயிலின் அருகில் இடமில்லை.

சூரியன் மறைந்து நன்றாக இருட்டுவதற்குள்ளே மழபாடி நகரெங்கும் பல வகை விளக்குகள் ஏற்றப்பட்டன. இயற்கையாக எதிரி இப்போது தான் வருவான் என்று நினைக்கத் தோன்றும். ஆனால் மாறனுக்கு அப்படியில்லை. அவனுக்குத் தெரியும். இருட்டுக்காகப் பாண்டியன் காத்திருக்கவில்லை என்று. அவன் வலிமையை விளம்பரப்படுத்தவே இந்த முயற்சி. திருடனைப் போல் இருளில் மறைந்து மறைந்து வரமாட்டான் என்று அவனுக்கு நன்றாய்த் தெரியும்.

பாண்டியன் அரசரைக் கொல்லவே வேண்டாம். ஏதாவது ஒரு பயங்கரக் காரியத்தை இவ்வளவு காவலுக்கு நடுவே நிகழ்த்தி விட்டாலே போதும்; அவன் வெற்றி பெற்றது போலத்தான். எல்லாச் சிற்றரசர்களும் விருந்தாளிகளாக வரவிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் இவர்கள் இம்மாதிரி சதிக் காரியத்தில் பிரவேசிப்பதன் காரணம் புரிந்தது. 'சோழர்கள் கடவுள்கள் அல்ல. நம்மைப் போல மானிடர் தான். அவர்களைத் தோற்கடிக்க முடியும்' என்று காட்டுவதன் மூலம் சிற்றசர்களுக்கு இடையில் அதிருப்தியை ஏற்படுத்தலாம். எல்லாச் சிற்றசர்களுக்கும் ஏதோ ஒரு காலத்தில் சோழர்களுடன் ஒரு சிறிய மோதலாவது இருந்திருந்தது. அதை இந்தச் சம்பவம் நினைவூட்டவேண்டும். பின் சரித்திரம் தன் வழியே எல்லோரையும் அழைத்துச் செல்லும்.

அரசவையில் அவ்வளவு பேரும் சேர்ந்து கும்பாபிஷேகத்தை ஒத்திபோடுவது சாத்தியமில்லையென்று சொல்லும் போது அந்த ஒரு முகமான அபிப்பிராயத்துக்கு மாறாக ரவிதாசன் வருவான் என்று நம்பி அடியானும் மாறனும் பார்த்துக்கொண்டிருந்தனர்.

ஆம். வீர வைணவனும் கொள்ளிடக் கரையின் மேலேறி எல்லாப் பக்கமும் பார்த்துக்கொண்டிருந்தான். பாண்டியர்



குழுவில் பலரை அவனுக்கு நன்றாய் அடையாளம் தெரியும். அன்றிரவு மூவரும் ஒரு கணமும் கண்ணுறங்கவில்லை.

காலையிலிருந்து வேலைப்பளு அதிகம். சரித்திரப் பிரசித்தி பெற்ற மழவர் கோட்டை மிகவும் பெரியதல்ல. ஆனால் கோட்டைக்குள் இருந்த அரண்மனை, அந்தபுரம், மண்டபங்கள் நெற்களஞ்சியங்கள் குதிரைக் கொட்டாரங்கள் வரை சோதனை போட்டான் மாறன்.

வெகு தூரத்தில் புகை மடலம் போலப் புழுதி கிளம்புகிறதா என்று பார்க்க காவலுக்கு மழபாடியின் எல்லைகளில் ஆட்களை நிறுத்தினான். ஆனால் அவனுக்குத் தெரியும் படையெடுப்புப் போல ஒன்றை நிகழ்த்துவதற்குப் பாண்டியரிடம் ஆள் பலமில்லை என்று. பகைவர்கள் ஏற்கனவே ஊடுருவியிருக்க வேண்டும். அவர்களை இப்போது இனம் கண்டு பிடிக்கவேண்டும்

சகஜமான கோயில் விழா என்று எடுத்து கொள்ள முடியாது. அலைப்புடைத்து கொண்டு காவலைக் கூட்ட தோன்றினாலும், கெடுபிடி அதிகமாக உள்ளது என்று மக்களெல்லாம் முறையிடத் தொடங்கினார்கள். அதற்கு மேலும் காவலை அதிகரிக்கும் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றுவது சாத்தியமாய் இல்லை.

கோயிலைச் சூழ்ந்து வெளிப்புறத்தில் உயரமான மதில் சுவர் இருந்தது. அந்த மதில் சுவருக்கு ஒரு வாசல் மட்டுமே இருந்தது. வாசலிலும் சில அரண்மனைச் சேவகர்கள் காவல் புரிந்தார்கள். ஆனால் அவர்கள் எல்லோரும் தஞ்சையிலிருந்து வந்தவர்கள். அவர்களை அகற்றிவிட்டு வேளக்காரப்படையினரைக் காவலுக்கு வைத்தான். கோயில் வாசலில் நின்றது சிறியப் படைதான்; ஐம்பது குதிரைகளும் ஆயிரம் காவலாட்களும் இருக்கலாம். கோயிலின் சுற்றுப் பிரகாரத்தை மட்டுமே அவர்கள் காத்தனர். அதைத் தவிர கோயிலின் பிராகார மதிலுக்குப் பின்னால் சாரம் கட்டித் தலையை மட்டும் வெளியே காட்டும்படி பல வீரர்களை நிறுத்தினான். எதிரிக்குக் கண்ணில் தென்படாமல் அவர்கள் எல்லோரையும் கவனிக்க ஏற்பாடுகள் செய்தான். கும்பாபிஷேக நேரத்தின் போது அரச குடும்பம் மட்டும் தான் கோயிலுக்குள் பூஜைக்கு அனுமதிக்கப்படும். என்று அரசரிடம் உறுதி வாங்கிக் கொண்டான்.

திடீரென்று தைரியம் பிறந்தது. 'சீ! இந்தச் சிறிய விஷயத்துக்கு இவ்வளவு பயமா? பாண்டியர் பத்து பேர் தான் இருக்கும்.' சற்று துணிவு பிறந்தது. 'இவ்வளவு ஆட்களையும் குதிரைப் படையையும் யானைப்படையும் தாண்டி எப்படி வருவான்? ஆனால் அவன்

வர வேண்டும். வந்து வகையாக என் கையில் சிக்க வேண்டும். அக்கு வேறு, ஆணி வேறாக பிரித்து எறிந்து விடுவேன்' என்று நினைத்தான். வேட்டையாடிவிட்டு வளையில் நரி புகுந்து கொள்வது போல், பாண்டிய வனங்களுக்குள் புகுந்து கொண்டிருக்கும் ஆபத்துதவிகளை பிடித்து கொடுப்பதற்குப் பல முறை முயற்சித்தும் முடியவில்லை. ஆனால் இதுவே சிறந்த சந்தர்ப்பம்.

அதைப்போலவே சிந்தித்த வல்லவராயனும் "மாறா! பார் நம் சோழரின் பலத்தை.. இதையெல்லாம் மீறி, அதுவும் வேளக்காரப்படையை மீறி இந்த உள் சக்கரத்துக்குள் பாண்டியனால் பிரவேசிக்க முடியும் என்று நினைக்கிறாயா?" என்றான்.

இவ்வளவு பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. கோயிலுக்குள் அன்னியர் அப்படி நுழையவே முடியாது. அப்படி ஒன்றும் விபரீதமாகப் போய்விடாது என்ற எண்ணம் வந்தியத்தேவன் மனத்தில் தோன்றியது.

"வல்லா! நம்மைச் சுற்றி ஒரு ஒற்றன் இருக்கிறான். இந்தச் சந்தேகம், எனக்கு வெகுநாளாகவே உண்டு. நமது ஒவ்வொரு நடவடிக்கையும் காட்டுக்குள் உள்ள ரவிதாசனிடம் செல்கிறது. பரம இரகசியமாய் வைத்திருக்க வேண்டும் என்று நினைக்கும் பலவிஷயங்கள் அவனிடம் போய் விடுகிறது. அதை வைணவனும் ஊர்ஜிதம் செய்கிறான். இப்போதும் நமது காவல் ஏற்பாடுகள் அவனுக்குத் தெரிந்திருக்கும். அதனால் திட்டத்தை மாற்றிவிடுவான் என நினைக்கிறேன்?" என்றான் மாறன்.

கண்கள் நாற்புறமும் சுழன்று சுழன்று தேடியும் மாறனுக்குச் சந்தேகப்படும் படியாய் ஏதும் தென்படவில்லை. ஆனால் அது அவன் தைரியத்தைக் கூட்டவில்லை. அவன் எதிர்பார்ப்புக்கும் மேலாக ஒரு திட்டத்தைத் தீட்டியிருந்தானா ரவிதாசன்? கோயிலுக்கு வெளியில் நின்ற பதினாயிரம் முகங்களில் பகைவனின் முகம் எது என எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? உள்ளத்தில் குமுறி எழுந்த இயலாமை மாறனுக்கு. தன்னை யாரும் அடையாளம் காணாமல் ஊருக்குள் வர என்ன முறைகளை ரவிதாசன் கையாண்டானோ தெரியாது. கூட்டத்தில் அவன் இருந்தாலும் அவனைத் தாக்கும்படி வீரர்களை ஏவுதல் இயலாத காரியம் என்று தெரியும். அப்படிச் செய்தால் ரவிதாசன் எண்ணியவாறே நடந்து விடும். கட்டுமீறிக் கிளம்பிய யானையின் சக்தி கொண்டவன் ஏதாவது கூட்டத்தில் குழப்பத்தை ஏற்படுத்துவான். மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டு அங்குமிங்கும் ஓடுவார்கள். அந்த குழப்பத்தில் பாண்டியர்கள் என்னவெல்லாம் செய்வார்களோ?



'நாளைக் காலை எப்படியிருக்குமோ?' என்ற கவலை. 'கேலிக் கூத்தாய் ஆகப்போகிறோமோ. இல்லை லட்சோபலட்சம் மக்களின் பக்தியைக் கவர்ந்த சோழர் குடும்பத்துக்கு ஏதேனும் ஆபத்து நேரிடுமோ? தப்பி தவறி ஏதேனும் நடந்துவிட்டால் பழியைத் என் தலையின் மேல் தான் போடுவார்கள்' என்று நினைத்தான்.

அடியானைப் பார்த்து மாறன் "பாண்டியன் வந்தால் நிச்சயம் அவனுக்கு சாவு தான் காத்திருக்கிறது. ஆனால் வரவில்லை என்றால் இருவருக்கு உத்தியோகம் பறிபோகும் என நினைக்கிறேன் என்றான்."

கேள்விக்குறியுடன் பார்த்த அடியானிடம் "உமக்கும் எனக்கும் தான்" என்றான் மாறன் விரக்தியான சிரிப்புடன்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று முப்பத்து ஐந்து

## "வஜ்ரநாதருக்குக் கும்பாபிஷேகம்"

மழபாடியில் அந்தி சாயும் நேரம்.

ஆனால் ஊரெங்கும் விழாக்கோலம் அடங்கவில்லை. இந்தக் கும்பாபிஷேக விழாவை முழுமையாகக் கொண்டாடும் தீர்மானத்தில் இருந்தனர் சோழ நாட்டுப் பிரஜைகள். அப்போது ஒரு விசித்திரக் கூட்டம் கோயிலுக்குள் நடந்து கொண்டிருந்தது.

வெளிக் கதவுகள் தாளிடப்பட்டிருந்தபடியால் அப்பிராந்தியத்தில் மக்கள் வெள்ளம் படையெடுக்காத ஒரே பகுதி வஜ்ர நாதர் கோயில் தான். அங்கு சிம்மத்தின் கர்ஜனை போல ஒரு குரல் கேட்டது. "உயிரைப் பணயம் வைத்துச் சக்கரவர்த்தியைக் காவல் காக்கும் வீரர்களே!" என்று தன் முன் கூடியிருந்த வேளக்காரப்படை வீரர்களுக்கு அறிவுரை கொடுத்துக் கொண்டிருந்தான் அதன் தலைவன்.

"அனைவரும் நன்றாய்க் கேளுங்கள். நாளை நடைபெறவிருக்கும் இந்தத் திருவிழாவில் அரசரும் சோழர் குடும்பத்தினரும் கலந்து கொள்ளப்போகிறார்கள். கூட்டம் அலை மோதும் என்பதாலும், இது ஆன்மீகம் சம்பந்தப்பட்ட விழா என்பதாலும் நம்மால் சீரிய முறையில் பாதுகாப்புக் கொடுக்க முடியாது. பலரும்

மன்னர் பெருமானை நெருங்குவார்கள். அதை அவர்களுடைய முக்கியத்துவம் கருதி நம்மால் தடுக்க முடியாது. விருந்தாளிகள் எல்லாம் இந்தப் பிரதேசத்தில் அரசியல் முக்கியத்துவம் பெற்ற வர்கள். ஆனால் இன்னும் ஒரு விருந்தாள் வருவானென எதிர் பார்க்கிறேன். இல்லை, ஏற்கனவே மழபாடிக்கு வந்து விட்டானா என்றும் தெரியாது'' என்றான் மர்மமாக.

''அவன் தான் நம் ஜன்ம விரோதி. வீர பாண்டியனின் மரணத் துக்கு இன்னமும் பிரதி பலியைக் கேட்டுத் திரியும் பாண்டிய நாட்டு ஆபத்துதவி. அவர்கள் இந்த விழாவில் அரசரைத் தாக்கக் கூடும் என்று சந்தேகமற்ற தகவல் கிட்டியுள்ளது'' என்றான்.

வேளக்காரப் படையினரில் பலருக்கு அது ஒரு வெறியையே கிளப்பிவிட்டது. ''உள்ளே வந்தால் அவனை கொல்ல வேண்டும்! அரசருக்காக எங்கள் உயிரையும் கொடுப்போம்!'' போன்ற கோஷங்கள் படையினரிடமிருந்து கேட்டன.

கையை உயர்த்தி அமைதி ஏற்படுத்தினான் மாறன். வீரர்களிடம் இந்த விஷயம் கொந்தளிப்பை எற்படுத்தியிருந்தது நல்லது தான். அப்போது தான் அவர்கள் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாப்பை கவனிப்பார்கள் என்று அவனுக்குத் தெரியும்.

''பாண்டியன் உள்ளே வந்தால் அது நம் படைக்கு என்றும் அழியாத அவமானத்தை உண்டுபண்ணக் கூடியது. மகத்தான களங்கம் நான் தலைவனாய் இருக்கும் போது ஏற்படுவதை என்னால் ஒருநாளும் சகிக்க முடியாது. நீங்கள் வீரர்களாய் இருக்கும் போது வேளக்காரப் படையின் சரித்திரத்தில் அப்படி ஒரு மாசு படியவும் விட மாட்டீர்கள் என்றும் எனக்கு தெரியும்'' என்றான்.

''ஆனால் நம் கைகள் கட்டப்பெற்றுள்ளன. இந்த ஊருக்குள் இன்று சுமார் ஒரு லட்சம் பேர் கோயில் விழாவுக்காக ஆவலுடன் காத்திருக்கிறார்கள். அவர்களில் யார் பாண்டியர் என நம்மால் கண்டு பிடிக்க இயலாது. அரசர் வேறு நம்மை மிகவும் நிதானம் காட்டும்படியும், பொதுமக்களுக்குக் கஷ்டம் விளைவிக்காமல் செயல்படவும் சொல்லியிருக்கிறார்'' என்றான். ''அதனால் பாண் டியன், அரசனிடம் நெருங்காமல் பார்ப்பதே நமக்கு மழபாடியில் வேலை. அவனைப் பிடிப்பதைப் பின்பு பார்த்துக்கொள்ளலாம்'' என்றான்.

பின்னர் தன் திட்டத்தை முழுவதுமாக விளக்கினான் மாறன். விளக்கியபின் உணர்ச்சிவசப்பட்டதாலும் வியப்பாலும் கம்மிய குரலில் ''வீரர்களே! இது நம் படையின் செயல்பாட்டைச்



மாறிக்கக்கூடிய நிகழ்வு. அதனால் கண்ணும் கருத்துமாய்ச் செயல்படவேண்டும். சூரியன் உதிக்க இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதுதான் இருக்கின்றது. இப்போதைக்குச் சென்று உறங்குங்கள். நாளைக் காலை சரித்திரம் மாறாமல் நாம் தடுக்கவேண்டும்'' என்றான்.

மாறன் தன் வீரர்களை உறங்கச் சொல்லிவிட்டு, கோயிலுக்கு வெளியே நடந்தான். இன்னும் ஊர் அடங்கவில்லை. ஆங்காங்கே சாலையோரங்களில் அரங்கேறிய கூத்துக்கள் இன்னும் முடிந்த பாடில்லை. பெரும் ஆரவாரத்துக்கு இடையில் அவற்றை ரசித்துக் கொண்டிருந்தனர் பொது மக்கள்.

பாடலையும் ஆடலையும் ரசித்துகொண்டிருக்கும் மக்களைப் பார்த்து மாறனுக்கு ஒரு நினைப்பு. 'ஆயிரமாயிரம் கூரிய வாள் களும் வேல்களும் போர்க்களத்தில் ஒன்றோடொன்று உராயும் போது மின்னல்கள் போலத் தெரியும் காட்சியைக் கண்டறி யாதவர்கள் இவர்கள். அதை இதுவரை ரசித்திராதவர்கள். அதனால் தான் எதை பற்றியும் கவலைப் படாமல் கேளிக்கைகளில் தொடர்ந்து மகிழ்ச்சியடைந்து கொண்டிருந்தார்கள். இதில் சோழர் கொடுக்கும் பாதுகாப்பினால் கவலைகளும் குறைந்துள்ளன. ஆனால் ஒன்று. நாடகத்தை பார்க்கும் போது தன் அருகில் அமர்ந்திருப்பவன் பாண்டிய நாட்டு ஆபத்துதவியாக இருக்கலாம் என்று தெரிந்தால் நாடகத்தை ரசிப்பானா?'

முக்கியமான அந்த நாளும் பொழுது விடிந்தது. வானத்தின் அந்தகாரத்தைக் கிழித்துக் கொண்டு உதித்தான் சூரிய தேவன். அவனது தீட்சண்ய ஒளி உலகெங்கும் இருளை அகற்றி வெளிச் சத்தை தந்தது. அது மட்டுமல்ல. மாறனுக்கும் அவன் வாழ்வில் குறித்த நாட்களில் இதுவே முக்கியமான நாள் என்றும் அறிவுறுத்தியது.

மேகமற்ற வானில் உதய சூரியனின் வெயில் சுளீரென்று அடித்தது. அதைப்பற்றிக் கவலைப்படாமல் கொள்ளிடக்கரை கரையில் ஒரே மக்கள் பிரளயந்தான்! அதில் எழும்பிய சப்தமும் சமுத்திர கோஷம் மாதிரி இருந்தது. கும்பாபிஷேகம் என்பது கோயில் கோபுரங்களின் மேலும், உயரமான விமானங்கள் மீதும் நடப்பதால் மக்கள் கூட்டம் சுற்றிலும் பரவியே இருந்தது. ஆங்காங்கே தரிசனம் கிட்டும் ஒரு நல்ல இடத்தைத் தேர்ந் தெடுத்துக் கொண்டு மக்கள் நின்றிருந்தனர்.

கோயிலின் பிரதான வாயில் கதவுகள் பூட்டபெற்றிருந்தன. அரச குடும்பத்தினரும் சிற்றரசர்கள் எல்லோரும் ஏற்கனவே

கோயிலுக்குள் சென்றுவிட்டார்கள். அவர்களை அடையாளம் கண்டு உள்ளே அனுப்பும் பொறுப்பை வந்தியத் தேவன் தானே ஏற்றுக் கொண்டிருந்தான். இன்னும் அரசர் மட்டும் தான் கோயிலுக்குள் வரவேண்டும். வந்தபின் பிரதானக் கதவுகளைப்பூட்டி மாறன் நிம்மதிப் பெருமூச்சு விடுவான்.

அந்த மக்கள் கடலின் நடுவில் ஒரு ரதம் காணப்படுகிறது. ரதத்தின் மேல் புலிக் கொடி பறக்கிறது. ரதத்தில் சாந்தமே வடிவமுள்ள ஒருவர் வீற்றிருக்கிறார். நானாவித ஆபரணங்களும் பூட்டியிருந்த புரவிகள் இழுத்த தங்கத் தகடு வேய்ந்த ரதமும் சற்று சிரமத்துடன்தான் கூட்டத்துக்கு இடையே வந்தது.

ஜோதிடர்கள் குறித்த நேரத்துக்கு ரதத்தில் அரசர் வந்தார். அவருடன் சாரதியைத் தவிர தேரில் இன்னும் ஒருவனும் இருந்தான்- வேளக்காரப்படைத் தலைவன்!

கோயில் வாசலில் வந்து நின்றது தேர். உடனே ஆயிரக் கணக்கான மக்களின் குரல்கள் கோஷித்த சத்தம் வானை அளாவிற்று. அந்தக் கோஷத்துடன் கலந்து, சங்குகளும், கொம்புகளும், தாரைகளும், தப்பட்டைகளும், முரசங்களும், பேரிகைகளும் ஏக காலத்தில் முழங்கின.கோயில் வாசலில் யானைகள் இரண்டு நின்றிருந்தன. அவை அணிந்திருந்த தங்க முகபடாங்களும், அவற்றின் தந்தங்களுக்கு அணிந்திருந்த வெள்ளிப் பூண்களும் அழகுக்கு அழகு சேர்த்தன.

அவற்றிற்குப் பாகர்கள் சொல்லிக்கொடுத்தது போல அரசர் தேரிலிருந்து இறங்கியவுடன் இரண்டு குன்றை ஒத்த கஜங்களும் மண்டியிட்டுப் பிளிறின. யானைகளின் பிளிறலை எதிர்பார்க்காத மாறனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ரோமம் சிலிர்க்கச் செய்தது. அவன் கை வாளுக்குச் சென்றது. அதை உணர்ந்த அரசர் ஆதரவாய் அவன் தோள் மேல் கையை வைத்து அமைதிப் படுத்தினார்.

கோயிலின் பிரதான வாசல் கதவையொட்டி மதில் மேல் வந்தியத் தேவன் நின்றிருந்தான். அவன் உள்ளிருக்கும் வேளக்கார படையினரிடம் சைகை காட்டவே கோயில் கதவுகள் திறக்கப்பட்டன.

அரசர் கோயிலுக்குள் நுழையும் முன் "என்ன சம்புவராயரே , பாண்டியன் வந்துவிட்டானா?" என்றார் நகைத்து கொண்டே.

'விரைவில் எதிர் பார்க்கிறோம், அரசே' என்று சொல்லத் துடித்தது மாறனின் மனம். மரியாதை நிமித்தமாக அப்படிச் சொல்லமுடியவில்லை.



முதலில் ராஜ கோபுரம். ஏறக்குறைய இருநூறு அடி தூரத்துக்கப்பால், இரண்டாவது கோபுரம் ஒன்று காணப்பட்டது. இரண்டு வாசல்களுக்கும் நடுவில் கீழே கருங்கல் தளம் அமைந்திருந்த இடத்தில் தான் யாக சாலைகள் நடந்தன.

கதவைத்தாண்டி சக்கரவர்த்தி உள்ளே பிரவேசித்தாரோ இல்லையோ, மாறன் கையினால் சமிக்ஞை செய்யவும், அருகில் காவல் வீரர்களில் இருவர் வெளிக்கதவைப் பூட்டி விட்டனர்.

அரசர் நுழைந்தவுடன் அந்தணர்கள் வேதம் ஓதினார்கள். அவர்கள் குரலின் பிரதித்வனியேபோல் ஓதுவார்கள் தமிழ்மறையாம் தேவாரத்தை ஓதினார்கள். கோய்லுக்கு வெளியே மக்கள் பெரும் இரைச்சலில் ஈடுபட்டார்கள். இந்த சப்தங்கள் எல்லாம் தனக்கும் தன் படையினருக்கும் இடையே தொடர்பு கொள்வதை கடினப்படுத்தும் என்று முன்பே யூகித்திருந்த மாறன் அனைவருக்கும் சைகையினால் நன்கு புரியும் படி பயிற்சி அளித்திருந்தான்.

கோயிலுக்குள் பல நூறு வேளக்காரப்படை வீரர்களைக் ஒளித்திருந்தான் மாறன். அவனே அரசரின் பின்னால் நடந்தான். அரசருக்குப் பின்னால் நடக்கும் போது அண்ணாந்து பார்த்தான் மாறன். வந்தியத் தேவனும், வீர வைணவனும் மதில் மேல் நின்றிருந்தார்கள். உள்ளேயும் வெளியேயும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்தனர். மதில் மேல் அவர்கள் மட்டுமல்ல. மதில்சுவரின் மேல் ஆங்காங்கு வீரர்கள் இருந்து காவல் புரிந்தனர். நந்திகளுக்கு நடு நடுவே அவர்கள் தலைகள் தெரிந்தன. மதிலின் மேல் சிற்பி அமைத்த கற்சிலைகளைப் போல் வெகு நேரம் நின்று கொண்டிருந்தார்கள்.

மாறனுக்கு ஒரு சந்தேகம் 'காற்றுக் கூடக் கோயிலுக்குள் பிரவேசிக்க முடியாத படி வியூகம் அமைத்தாயிற்று. இவ்வளவு காவலை மீறி ரவிதாசன் வருவானா?'

கோயிலுக்குள் என்ன நடந்தது என்று மாறன் கவனிக்கத் தொடங்கினான். எங்கும் ஒரே புகை மண்டலம். ஹோம குண்டத்தில் அக்கினி பகவான், ஊற்றிய நெய்யையும் ஆண்டவனுக்கெனக் கொடுக்கபட்ட விசேஷப் பொருட்களையும் ஏற்று அவர்களிடம்கொண்டு சேர்க்க ஆயத்தமாய் இருந்தார்.

அரசர் உள்ளே நுழைந்தவுடன் கொடிக்கம்பத்துக்கு எதிரே தரையிலே விழுந்து நமஸ்கரித்தார். பின் உள்ளே நடந்தார். கோயிலின் உட்புறம் சௌந்தரிய கோலமும், அழகும் பொலிவும் கொண்டிருந்தது. கோயிலுக்குள்ளே ஒரு தீப வரிசைக்குப்பின் இன்னொரு

தீப வரிசையாக முடிவின்றி ஜொலித்துக் கொண்டிருந்தது. அலங்கார தீபங்கள் அற்புதமான சிற்பத்திறமுடைய தூண்களின் நடுவே வஜ்ரநாதரின் தோற்றத்தை எடுத்துரைத்தன. அரசர் கொடி கம்பத்தைத் தாண்டியவுடன் அந்தத் திவ்வியமான சந்நிதியின் மகோந்நதமான தோற்றம் அவரை ஆட்கொண்டது. சுற்றியிருந்தவர்களையெல்லாம் மறந்தார்.

கோயில் கும்பாபிஷேகம் மிக விமரிசையாகத் தொடங்கியது. வானில் கழுகுகள் பறந்ததைக் கண்டபின், ராஜ கோபுரத்தின் மேலிருந்து காவி நிறக்கொடி ஆட்ட பெற்றது. பின்னர் கோபுரம் மற்றும் விமானங்களுக்கு மேலிருந்த கும்பங்களுக்குப் புனித நீர் ஊற்றபெற்றது. இவற்றைக் கண் குளிர மக்கள் பார்த்தனர். அரசகுடும்பத்தினர் பக்தியோடு தரிசித்தனர்.

இந்தக் காட்சியைப் பாராதது வேளக்காரப்படையினரும் அதன் தலைவர் மாறனும்தாம். பழக்க தோஷத்துக்காக வந்தியத் தேவனும் அடியானும் கூட அதையெல்லாம் பார்க்க முடியவில்லை. இவர்கள் எல்லோரும் கூட்டத்தையே கவனித்தனர்.

விழா முடிந்து விட்டது. ஆனால் பாண்டியரால் ஒரு புழு பூச்சிக்கு கூடச் சேதம் ஏற்படவில்லை. மதிய விருந்து முடிந்தவுடன் கூட்டமும் கலைந்தது.

வேளக்காரப்படைத் தலைவன் நிம்மதியாய் இருந்திருக்க வேண்டும். மூன்று நாள் கண் அயரமல் காவல் காத்தவன் நல்லதொரு மரத்தை பார்த்து அதன் நிழலில் உறங்கியாவது இருக்கலாம். ஆனால் அவன் கோபத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்தான்.

'இப்படிச் சந்தி சிரிப்பதற்கு விட்டிருக்கக்கூடாது' என்று ஒரு மனம் கூறியது. 'பொறுபுணர்ச்சியில்லாத நிர்மூடன் இந்த வைணவனால் எல்லாம் நேர்ந்தது' என்று அடியானை வேறு சபித்தான்.

எதிரி தலையைக் காட்டாதது அவனுடைய இருதயத்தில் பெரும் வேதனையை உண்டாகியது. வந்தியத் தேவனிடம் முறையிட்டான். "இந்தப் பதவிக்குத் தகுதியாவதற்குப் பிரயத்தனம் செய்து வந்தேன். எல்லாம் கேலிக்கூத்தாய்ப் போனது. அடியானின் பேச்சை கேட்டுவிட்டு இப்படி எல்லோருக்கும் முன்னால் மடையரானோம்" என்றான்.

"அவன் இவ்விதம் யூகத்தில் தவறு செய்வான் என்பது தெரிந்திருந்தால் . இந்தச் செய்திக்கு முக்கியத்துவம் கொடுப்பது அவ்வளவு உசிதம் இல்லை எனத்தோன்றியிருக்க வேண்டும். இனி ஜன்மத்துக்கும் அந்த வைணவன் கூறுவதை நான் கேட்க மாட்டேன்" என்று சபதம் செய்தான்.



வந்தியத் தேவன் ஆறுதலாய் விளக்கினான். "மாறா! நீ செய்து கொண்டிருந்த சங்கல்பத்தை மறந்து, எப்படிச் செயல்படமுடியும்? இதில் வெறொரு கருத்தே இருக்க முடியாது. அபாயம் இருக்கிறது என்று நீ நம்பினால் அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்து அதைச் சரிகட்ட வேண்டும். அதை நம்பவில்லையென்றால் நீ அரசனிடமே சென்றிருக்கக் கூடாது"

ரவிதாசனைப் பற்றி அடியான் வந்து சொன்னது மாறனைத் தடுமாறச் செய்துவிட்டது. 'அந்தத் தடுமாற்றத்தில் தடம் புரண்டு விட்டோமோ?' என்ற சந்தேகம். இல்லை, இல்லை ஒருவேளை ரவிதாசனுக்கு வேறு நோக்கம் ஏதேனும் இருக்க முடியுமா?' என்றும் தொடர்ந்தது குழப்பம். 'அரசரைத் தாக்குவதைக் காட்டிலும் இன்னும் வித்தியாசமான நோக்கம் அவர்கள் வைத்திருந்தாலும் வைத்திருக்கலாம் அல்லவா?' என்று பல கேள்விகளை மனதுக்குள் அடுக்கினான்.

அப்போது வேளக்கார படைத் தலைவனை அழைத்துவரச் சொல்லி அரசர் ஆள் அனுப்பினார். "என்ன கேட்பாரோ? மானம் போகிறது" என்று வைணவனை சபித்தான் அவன்.

நல்லவேளையாக அரசருடன் யாரும் இல்லை. ஆனால் மாறனுக்குத் தெரியும். சிற்றசர்கள் எல்லோரும் தனித்தனியே விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருப்பார்கள் என்று.

அரசர் முன் வணங்கிவிட்டு நின்றான் மாறன். அவனது யூகத்தைப் பற்றியோ அது தவறாய்ப் போனதைப் பற்றியோ அவர் ஒன்றும் சொல்லவில்லை. எனினும் ஒரு மர்மப் புன்னகை இருந்தது அவர் முகத்தில். 'உமது யூகத்தை வெற்றி கொண்டது என் பக்தி' என்று மட்டும் அவர் சொல்வது போலிருந்தது.

மாறன் முகத்தை நிமிர்த்தாமல் குனிந்த வண்ணம் நின்றான். "ஐயனே! என்ன காரியமாக என்னை வரச்சொல்லிப் பணித்தீர்கள்?" என்று மாறன் கேட்டான்.

"சம்புவராயரே! அண்ட பகிரண்டங்களையெல்லாம் படைத்துக் காத்துவரும் பெருமான் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆனந்த நடனம் பயில்கிறார் என்று மட்டும் நினையாதீர். ஆடும் போதே அவர் ஓரக்கண்ணால் நம்மையெல்லாம் பார்வையும் இடுகிறார்" என்றார் அரசர். மாறன் மௌனமாக இருந்தான். அவன் உருவாக்கிய குழப்பத்தினால் ஏற்பட்ட வருத்தம் இன்னும் அவருக்குத் தீரவில்லையென்று தோன்றியது.

மாறன் சற்று மௌனமாயிருந்துவிட்டு, "அரசே! எதிரி வருவான் என்று யூகித்துத் தவறு செய்து விட்டேன். என்னை மன்னிக்க

வேண்டும்'' என்றான். சொல்லும் போது அவனுக்கே 'தான் இதற்கு ஏற்றவன் இல்லையோ?' என்ற சந்தேகம் வந்தது. இந்தப் பதவி வகிப்பதில் ஆசை குறைந்தது.

''அப்படியேன் நினைக்கிறீர்கள்? உமது சிறப்பான காவல் ஏற்பாடுகளைக் கண்டு அவன் ஊர் எல்லையிலேயே நின்றிருக்கலாம் அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி. ''வேளக்காரப்படையினர் பசி பட்டினி பாராமல், இராத் தூக்கமில்லாமல் காவல் காத்தனர் என்று கேள்விப்பட்டேன். அதைக் கண்டு அஞ்சிக்கூட எதிரி வராமல் இருந்திருக்கலாம் அல்லவா?'' என்றார் அரசர். மேலும் ''முன்பு சிற்றசர்கள் கூறிய கடுமொழிகளையெல்லாம் மறந்து விடுங்கள். தேவையில்லாத கோபத்தை எல்லாரும் உம் மீது காட்டினார்கள் என்று எனக்கே தோன்றியது'' என்றும் சொன்னார்.

''தங்களின் பெருந்தன்மைக்கு அளவே இல்லை, அரசே'' என்று மாறன் கூறியபோது அவனுடைய குரலிலும் முகத்திலும் பெருமிதம் கொப்பளித்தது.

அப்போது அரசரோ ''இதில் என்ன பெருந்தன்மை? ஒரு பலமான படையிருந்தால் எதிரி வருவதில்லை தானே? அது அந்த நாட்டின் படைக்குப் புகழா? இல்லை இழுக்கா?'' என்று வினவினார்.

அரசர் முகத்தை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தான். கல்லையும் கனிய வைக்கக்கூடிய மொழிகளைப் பேசத்தெரிந்தவர் உத்தமர்.

''இளம் சம்புவராயரே. நான் உம்மை அழைத்தது வேறு விஷயத்துக்காக. மழவர் குல வழக்கப்படி அவர்கள் குல தெய்வக் கோயிலுக்குச் சென்று பெண்கள் இன்று பொங்கல் வைக்க வேண்டுமாம். அதனால் இன்று மாலை ஊர்வலம் செல்லும். அரசியாரும் செல்கிறார். 'கண்டராதித்தம்' என்று என் தந்தையின் பெயரை அக்காலத்தில் அவ்வூருக்குச் சூட்டியிருக்கிறார்கள். அதற்குக் காவல் ஏற்பாடுகளை கவனியுங்கள். நீரும் அவர்களுடன் சென்று வாருங்கள்'' என்றார்.

மாறனுக்கு அதில் பூரண சம்மதம் இல்லை என அரசரால் அவன் முகக்குறியிலிருந்து யூகிக்க முடிந்தது. 'தாம் கண்டராதித்தத்தில் இருக்கும்போது மழபாடியில் ஏதாவது ஏடாகூடமாக நடக்கக் கூடாது அல்லவா?' என்று பயந்த மாறன், ''மகாராஜாவுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டு, நான் இங்கேயே இருக்கலாம் என்று நினைக்கிறேன்'' என்றான்.



''என் உயிரைக் காக்க வாளின் மேல் ஆணையாக வாக்களித்திருக்கிறீர் என்று நான் அறிவேன். வேளக்காரப்படையினர் தக்கவீரர்கள் என்றும் நாடறியும். சொன்ன சொல் தவறாதவர் என்றும் எல்லோருக்கும் தெரியும். நான் இந்தக் கோயிலுக்குள் தான் இரவு வரை இருக்கப்போகிறேன். எனக்குக் கோயிலுக்குள் ஆபத்து ஏற்படக் கூடுமென்று எதிர்பார்க்கவில்லை. ஆயிரம் வீரர்கள் புடை சூழ நான் இருக்கிறேன். அதையெல்லம் விட என் அப்பன் வஜ்ரநாதன் வேறு இருக்கிறான். நீர் பெண்களோடு செல்லுங்கள்'' என்றார் அரசர்.

பின்னர் ஒரு நொடி யோசித்தார் அரசர். சொல்லலாமா வேண்டாமா என்று சிந்தனை செய்தார் போல. பின் ''சிற்றசர் வீட்டு இளவரசிகளெல்லாம் கூட அந்தக் கோயிலுக்குப் பொங்கல் வைக்கச் செல்கிறார்களாம்'' என்று சொல்லிக் கண் சிமிட்டினார்.

மாறனுக்கு நாணம். அதை விட பிரமிப்பு. 'லோகாவைபற்றி இரண்டு நாட்களாகத் தான் நினைக்கவேயில்லையே?'

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று முப்பத்து ஆறு
## 'கண்டராதித்தம்'

கொள்ளிடக் கரையில் இருந்த மழபாடி நகரை, ஆற்றைப் படகில் கடந்து அடையலாம்.

ஆனால், அவ்வூருக்குத் தரை மார்க்கமாக வருவதென்றால் இரு வழிகள் தான் இருந்தன. திருவையாறு வழியாகத் திருமானூரை அடைந்து வரலாம்; இல்லை, தெற்கிலிருந்து திருச்சிராப் பள்ளியிலிருந்து புல்லம்பாடி வழியாகவும் வரலாம்.

இந்த இரண்டாவது வழியில் வந்தால், மழபாடியை அடைவதற்குச் சற்று முன்னே 'கண்டராதித்தம்' என்ற கிராமம் வரும். அது செம்பியன் மாதேவியார் சோழ சக்கரவர்த்தியாம் கண்டராதித்தரை மணந்த அன்று, சோழ அரச குடும்பத்தினர் தங்கிய கிராமம். மழவராயர்கள் அந்த கிராமத்துக்கே சோழ மகாராஜாவான தங்கள் மாப்பிள்ளையின் பெயரைச் சூட்டிப் பெருமை கொண்டனர். கிராமத்தின் பெயர் வேண்டுமானால் புதிதாய் இருக்கலாம்; ஆனால், அங்கேதான் தொன்றுதொட்டு குலதெய்வத்தை கும்பிட்டு வந்தனர் மழவராயர்கள்.

அக்காலத்தில் தமிழகத்தில் பரவியிருந்த நாலு பெரிய சமயங்களுக்கும் பக்த கோடிகள் தங்கள் ஈடுபாட்டை அர்ப்பணம் செய்திருந்தார்கள். சிவபெருமானையும் பார்வதி தேவியையும் கும்பிடும் மக்கள் இருந்தனர். திருமாலும் திருமகளும் பிரதான தெய்வங்கள் என்று சொல்லும் மக்களும் இருந்தனர். புத்தர் பெருமானையும், சமண சமயத்தை ஸ்தாபித்த வர்த்தமான மகா வீரரையும் கூட மக்கள் வழிபட்டனர். ஆனால் எல்லோருடையச் சமய சார்புக்கும் அப்பாற்பட்டு இன்னமும் கிராம தேவதைகளின் வழிபாடும் முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தான் இருந்தது.

மற்ற எல்லாக் கோயில் விழாக்களுக்கும் இந்த கிராம தேவதைகளின் ஒத்துழைப்பை நாடி, பலி கொடுப்பதும், பொங்கல் இடுவதும் பரவலாக நடந்து வந்தது. அது போலத்தான் இந்தக் கும்பாபிஷேகம் நிறைவேறியபின் வேண்டுதலை நிறைவேற்ற முற்பட்டனர் சோழர்களும் மழவராயர்களும்.

ஊர்வலம் கிளம்பியபின் நிழடர்ந்த சாலை வெகு தூரத்துக்குக் கொள்ளிடக் கரையை ஒட்டியே சென்றது. வெயில் கொளுத்தும் உச்சி வேளையில் கூட வெப்பம் அந்த சாலையில் தெரியாது. போகும் வழியெல்லாம் நடந்து வந்த பெண்கள் வம்பு பேசி கொண்டே சென்றனர். ஒரே சிரிப்பும் கும்மாளமுமாய் இருந்தது. இதை கவனித்த சிவிகையில் வரவேண்டிய சோழர் அரச குலத்து பெண்கள்கூட தனிமையில் ஏன் தவிக்க வேண்டும் என்று கீழே இறங்கி மற்றவர்களுடன் நடந்தனர்.

கொள்ளிடக் கரையோ வனத்தை ஒப்பிடும் அளவுக்குச் சோலை போல இருந்தது. அந்தச் சாலையில் பெண்களின் ஊர்வலத்தைப் பார்ப்பவருக்கு ஏதோ பட்டாம் பூச்சிகளின் ஊர்வலம் ஒன்று செல்வது போலத் தோன்றும். பெண்கள் எடுத்துச் சென்ற வெள்ளிக் குடங்களில் அவர்கள் கரங்களில் அணிந்திருந்த வளையல்கள் மோதியபோது பல வகையான கீதங்கள் வந்தன. அத்துடன் கிண் கிணிச் சிரிப்பு சப்தங்களும் கேட்டன. மொத்தத்தில் ஒரு நகரும் திருவிழாவைப் போலத்தான் இருந்தது ஊர்வலம்.

ஆற்றுப் பாசனத்தில் செழிப்பாய் இருந்த கிராமங்கள் அந்தச் சாலையை ஒட்டியே இருந்தன. கண்டராதித்தம் கிராமத்தை நோக்கி வழி நெடுகிலும் பொது ஜனங்கள் கோலாகல கோஷங்களோடு ஊர்வலத்தை வரவேற்றனர். வாத்திய முழக்கங்களும் கேட்டன. வழி நெடுகிலும் வேடிக்கை பார்த்த முதியோர், ஆண்கள், பெண்கள் இவர்களோடு தத்தம் கட்டைவிரல்களை ருசி பார்த்தபடி சின்னஞ்சிறு குழந்தைகளும் நின்றிருந்தனர்.



கண்டராதித்தம் கோயிலுக்குப் பிரயாணம் ஆரம்பித்தவுடன் உள்ளத்தில் உற்சாகத்துடன் எல்லோரும் இருந்தனர். கிளம்ப மனமில்லாமல் வந்த மாறனுக்குக் கூட இப்போது மனச்சோர்வு குறைந்தது.

உண்மையைச் சொல்லப் போனால், முதலில் ஊர்வலம் மழபாடி மாநகரின் அழகிய விசாலமான வீதிகளைக் கடந்து வயல் சூழ்ந்த பாதைகளில் போகத் தொடங்கியபோதே, மாறனுக்கு பதற்றம் ஏற்பட்டது. 'திரும்பி வரும் போது இதே பாதையில் அந்தி நேரத்தில் வர நேரிடுமே!' என்று நினைத்தான். 'அதில் என்னவெல்லாம் அபாயங்கள் இருக்குமோ?' என்றும் பயந்தான்.

சூழலுக்கு ஏற்றாற்போல் மாறனை நோக்கி லோகா அடிக்கடி காதல் கணைகளை வீசினாள். எனினும் வேளக்காரப் படைத் தலைவன் அதைப் பொருட்படுத்தாமல் அக்கம் பக்கத்தில் கவனமாய்ப் பார்த்தபடியே சென்றான்.

அதுமட்டுமல்ல, மாறன் இரவெல்லாம் காவலுக்காக உறங்காமல் மழபாடி நகரைச் சுற்றியிருந்தான். அதனால் தலை சுழல்வது போல் அவ்வப்போது அவனுக்கு ஒரு உணர்வு. எனினும் வழியெங்கும் ஆபத்துக்களுக்காக கவனமாய் நோட்டம் விட்ட படியே சென்றான்.

லோகாவும் விடுவதாக இல்லை. எனினும் அவளிடம் இருந்த அந்த அபூர்வக் கவர்ச்சி கூட மாறனை இன்று ஈர்க்கவில்லை. அவன் கவனிக்க வேண்டும் என்று உரக்கச் சிரித்தாள்; குரலை உயர்த்திப் பேசினாள். அதை ஆசைக் காதலன் கவனிக்கவில்லையே என்று அவளுக்கு ஏமாற்றம். ஆனால் அதை கவனித்த குந்தவைக்கோ கோபம். லோகா அவ்வப்போது மாறனைப் பார்ப்பதையும் அவன் கவனத்தைக் கவர்வதற்காகச் செய்த விஷமங்களும் குந்தவையின் கழுகுக் கண்களுக்கு தப்பவில்லை.

அது மட்டுமல்ல லோகாவுக்கு ஏமாற்றம். ஊர்வலத்தில் வந்த பல இள நங்கையர் வாலிப வேளக்காரப்படைத் தலைவரை வைத்த கண் வாங்காமல் பார்த்தார்கள். 'சம்புவராயர் குலக் கொழுந்தான தாங்கள் எங்களை கடைக்கண்ணால் பார்த்தால் அது எங்களுடைய பாக்கியந்தான்' என்பது போன்ற பார்வையைச் சதா செலுத்தினார்கள். அவனுடைய கம்பீரமான தோற்றத்தைக் குறித்துத் தங்களுக்குள் இரகசியமாய்ப் பேசிக் கொண்டு கலகல வென்று சிரித்தார்கள். அதை கவனித்த லோகாவுக்கு வயிறு பற்றிக் கொண்டு வந்தது. போய் அந்த பெண்களை கன்னத்தில் இரண்டு சாத்துச் சாத்தலாமா என்று கூடத் தோன்றியது.

ஊர்வலத்தில் பெரும்பான்மையாக இளைஞர்களே சென்றதால் பிரமாதமான குதூகலம் உண்டானதில் ஆச்சரியமில்லை. அருகிலிருந்த கொள்ளிடம் போல உற்சாகம் கரைபுரண்டு ஓடத்தொடங்கியது.

எனினும், மாறனுக்கோ காலையில் நடந்த அவமானத்தை ஆன மட்டும் முயன்றும் மறக்க முடியவில்லை. எல்லாரும் அவனைப் பார்த்து மனதுக்குள் சிரிப்பது போலவே அவனுக்கு தோன்றியது. 'இதைத்தவிர சிற்றசர்கள் வீட்டில் வேறு பேச்சே இருந்திருக்காது' என்று பொருமினான். மாறனுக்கு இன்னும் ஒரு கோபம். தன் சங்கடத்தை தான் மறந்தாலும் ஞாபகப்படுத்துவது போல கூட்டத்தில் வீர வைணவனும் இருந்தான். முகத்தைத் தொங்கப்போட்டு கொண்டு நடந்தே வந்தான்.

'இவன் எதற்காக நம்முடன் வருகிறான்?' என்ற கேள்வி மாறனுக்குத் தோன்றியது. இனிமேல் அந்த வைணவனுடன் தான் வாழ்நாளில் சகஜமாகப் பேசவேமுடியாதென்று எண்ணினான். 'இன்னும் ஒன்று தான் பாக்கி. பறையறைந்து நாடு நகரமெல்லாம் 'இந்த வேளக்காரப்படைத் தலைவன் பதற்றக்காரன். சொந்தத்தில் சிந்திக்க முடியாதவன்' என்று தெரியப்படுத்தவேண்டும்; அவ்வளவு தான்! எல்லாம் இவனால் ஏற்பட்டது' என்ற கோபம்.

"மாறா! என்ன ஒரேயடியாக மௌனத்தில் ஆழ்ந்து விட்டாய்?" என்று வந்தியத் தேவன் கேட்டதும், மாறன் சிந்தனை உலகிலிருந்து வெளி உலகத்துக்கு வந்தான்.

"இந்த வைணவனால் நான் பட்ட அவமானத்தை நினைத்து நொந்து கொண்டிருக்கிறேன் வல்லா" என்றான்.

வந்தியத் தேவன் அதை ஒப்புக்கொண்டான். மாறனிடம் "இது முழுவதும் வைணவனின் தவறு தான். ஏதோ கானகத்தில் படுத்துறங்கிக் கனவு கண்டுவிட்டு நம்மையெல்லாம் நம்பவைத்து விட்டான்" என்று சொன்னவுடன் மாறன் "அவனுக்கு வயதாகி விட்டபடியால் ஒற்றர் வேலைக்கு முழுக்கு போட்டுவிட்டு திவ்யப் பிரபந்த க்ஷேத்திரங்களுக்கு விஜயம் செய்ய மட்டுமே தகுதியுண்டு" என்று பிரஸ்தாபித்தான்.

ரவிதாசன் காலையில் வராமல் போனதிலிருந்து மாறனது சித்தக் கடலில் கொந்தளிப்பு அதிகமாயிற்று. ஒவ்வொரு கணமும் 'நாம் உசிதமான முறையில் நடந்து கொண்டோமோ, இல்லையோ?' என்ற சந்தேகம் அடிக்கடி தோன்றியது. ஏன்? இந்த வேளக்காரப்படைப் பதவியின் மேலேயே ஒரு வெறுப்பு ஏற்பட்டது. கடைசியாக இந்தப் பெண்களின் ஊர்வலத்தை பாதுகாக்கவே



தான் தகுதியானவன் என்று நினைத்துவிட்டனரோ?' என்ற கோபம்.

'அடியானுடைய வீர தீர சாமர்த்தியங்களைப் பற்றியும் புத்தி சாதுர்யத்தைப் பற்றியும் வானளாவப் புகழ்வார்களே. எல்லாம் வீணா? அவன் சொன்னதை அப்படியே நம்பியிருக்கக் கூடாது' என்று அடியானைத் திட்ட திட்ட, பாதுகாப்பு ஏற்பாடுகளின் மீது மாறனுக்கிருந்த சந்தேகம், அவநம்பிக்கை எல்லாம் போய் விட்டது. 'ரவிதாசன் இனி வரமாட்டான்' என்னும் நம்பிக்கையும் உண்டாயிற்று.

'சக்கரவர்த்தியின் கட்டளையை மீறித் திரும்பவும் கோயிலுக்குச் சென்று விடலாமா?' என்று ஒருகணம் சிந்தித்தான். 'அப்படிச் சென்றால் அங்கே காவல் கூடும். ஆனால் அன்பாய் பெரிய உத்தமர் கோபம் கொள்ள வாய்ப்புண்டு' என்றும் தோன்றியது.

மாறன் தனக்கு வழியில் இருப்பதையெல்லாம் சொல்லிக் காண்பிக்க ஒரு மழவர் நாட்டு வீரனை அருகில் வைத்துக்கொண்டான். இந்த வழியையோ செல்லும் கோயிலையோ இதற்கு முன் தான் பார்த்து ஆபத்துகளை எடைபோடவில்லையே என்ற பதற்றம் ஒரு புறத்தில் இருந்தது. எனினும் குல தெய்வக் கோயிலுக்குச் செல்லும் வழியில் சுற்றும் முற்றும் நாலாபுறத்திலும் எந்த அபாயத்தையும் காணவில்லை. 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பது போல எதைப் பார்த்தாலும் சந்தேகக்கண்ணுடன் பார்க்கிறோமா' என்ற ஐயமும் வந்தது.

தன்னைத் தவிர இந்தக் கூட்டத்தில் எல்லோரும் சந்தோஷமாக இருந்ததைக் கண்டான். எல்லாரையும் பார்த்த மாறன் தன்னைப் போல முகத்தை 'உம்ம்' என்று வைத்துக்கொண்டு வந்தவர் தன்னையும் தவிர இன்னும் இரண்டு பேர் என்று கண்டு கொண்டான். ஒன்று வீர வைணவ சிகாமணி திருமலை. தான் பார்த்து வந்த உளவு இப்படி தப்பாகப் போனதே என்று வருத்தம் அவனுக்கு. பாண்டியர், கும்பாபிஷேக விழாவைத்தாக்கி பெரும் சேதம் செய்திருந்தால் கூட சந்தோஷப்பட்டிருப்பான் போல!

மற்றும் ஒருவருக்கும் முகத்தில் மலர்ச்சி இல்லையென்றால் அது வானதி தேவியார் முகத்தில் தான். பொன்னியின் செல்வருடைய தர்ம பத்தினியான வானதியின் முகமோ மகிழ்ச்சியாய் இல்லை. இந்தத் திருவிழாவில் தன் கணவனைத் தவிர அனைவரும் இருந்தார்கள், அரச குடும்பத்தில், என்பதில் அவளுக்கு வருத்தம்.

'பொன்னியின் செல்வர் எங்கேயோ பத்திரமாக இருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஒருவேளை இந்த விசேஷத்தின் முடிவில் அவரைச் சந்திப்போமா?..' இவ்வாறு எண்ணியபோது வானதியின் உள்ளத்தில் அளவில்லாத கிளர்ச்சி ஏற்பட்டது. ஒருநொடிக்குத் தான். பின் அதற்கு நேர்மாறான மனச்சோர்வு அவளை ஆட்கொண்டது. 'அருங்குணங்களுக்கெல்லாம் உறைவிடமாக விளங்கிய அவரையே நான் நினைத்திருக்கிறேனே? என் உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் யாருக்கெனக் கொடுத்திருந்தேனோ, யாரை தெய்வமாக எண்ணி பூஜித்தேனோ, இம்மையிலும் மறுமையிலும் இவரே பதியாக வேண்டும் என்று எண்ணினேனோ- அவர் உள்ளத்தில் என் நினைவு கூட எஞ்சி நிற்கவில்லையா?' என்ற தாபம் நெஞ்சை அடைத்தது. 'என்னை இப்படித் தவியாய்த் தவிக்க விட்டுச் சென்று விட்டாரே?' என்ற சோகம் பொங்கி வந்தது.

வானதியோ பல தினங்களாகத் தூக்கத்திலே விழித்த இரவுகள் தான் அதிகம். மனமொத்த தங்களுக்கிடையில் குறுக்கே வந்து நின்றது என்ன என்று தெரியாமல் குழம்பிப் படுக்கையில் புரண்டு புரண்டு தூக்கத்துக்குச் அறைகூவல் விட்டிருந்தாள். இராதூக்கம் பகல் தூக்கம் என்று ஏதுமில்லாமல் உடல் மெலிந்தாள்.

பொன்னியின் செல்வரும் அவளும் ஒருவருக்கொருவராகவே படைக்கப்பட்டவர்கள் என்று நினைக்கத் தொடங்கிவிட்டாள். ஆனால் இப்போது இளமைப் பிராயத்தில் காதலனைப் பிரிந்து பட்ட கஷ்டங்கள் சொல்லத்தரமல்ல. பரம ஏழைகள் கூட குடும்பத்துடன் ஆனந்தமாக வாழும் போது தனக்கு மட்டும் ஏன் இந்த கதி என்று தினமும் வானதி நினைப்பதுண்டு. கணவனும் மனைவியும் பரஸ்பரம் கொண்ட அன்பே இன்று ஊரின் கண்களுக்குச் சந்தேகமாக இருந்தது. வானதிக்கு வினாடி கூட மன அமைதி இல்லாமற் போனது. எவ்வளவு தான் சங்கடத்தை மறைக்க முயற்சித்தாலும் அவள் நடையுடை பாவனைகளில் எல்லாம் மாற்றம் ஏற்பட்டிருந்தது.

கொள்ளிடக் கரையோரமாகவே ஊர்வலம் சென்றது. பெரு மழை பிடித்துக் கொள்ளும்போது, கொள்ளிடம் ஆற்றில் வெள்ளம் பிரமாதமாய்ப் பெருகும் காட்சியைப் பார்க்க முடியும். பல முறை கொள்ளிடமும் கரையை உடைத்துக் கொண்டு சுற்றுப் பிரதேசங்களை வெள்ளத்தில் மூழ்கடிக்கும் அபாயமும் உண்டு. எனினும் ஆண்டில் ஒன்பதுமாதம் ஆற்றை நடந்தே கடக்கலாம் என்ற நிலை தான். வெள்ளத்தை முன்னிட்டே தமிழக ஆறுகளிலெல்லாம் கொள்ளிடத்துக்குத்தான் உயர்ந்த கரை. சில சமயங்



களில் உயர்ந்த கரையினால் ஆற்றில் ஓடும் நீர் முழுவதுமாக மறைக்கப்பட்டுவிடும். ஆறும், அங்கு நடக்கும் சம்பவங்களும் வெளியே முற்றிலுமாகத் தெரிவதில்லை.

ஊர்வலம் சென்று கொண்டிருக்கையில் திடீரென்று வெண் நாரைக் கூட்டம் ஒன்று ஜலக் கரையிலிருந்து கிளம்பி ஆகாசத்தில் பறக்கத்தொடங்கியது. ஊர்வலத்தின் மேளதாளங்கள் பட்சிகளை பயம் கொள்ள வைத்திருக்க வேண்டும்.

ஆற்றங்கரைக்கு அப்பால் ஏதோ வெள்ளை நிறத்தில் கோர உருவுடைய ஒன்று திடீரென சப்தித்துக் கொண்டு எழுந்தது என ஓரக் கண்ணில் பார்த்தான் மாறன். 'வஜ்ர சரீரம் கொண்ட வெண்பூதம்' ஒன்று அதுவரை ஒளிந்திருந்தது போல ஒரு பிரமை அவனுக்கு ஏற்பட்டது. அந்தக் காட்சியும் சிறகடிக்கும் சப்தமும் ஒன்று சேர்ந்து அவனுடைய திகிலை நூறு மடங்கு அதிகமாக்கிற்று.

அதிர்ந்து போன மாறன் உடனே புரவியிலிருந்து கீழே குதித்து வாளை உருவினான். அதன் பின் நாரைகளைப் பார்த்தவுடன் அசடு வழிந்தது மாறனின் முகத்தில்! ஒரு நிமிடம் பதறிப் போன கூட்டத்தினர் எல்லோரும் சிரித்துவிட்டனர். பெண்களின் சிரிப்பொலியில் அந்தப் பிரதேசமே சந்தோஷப்பட்டது. வெட்கித் தலை குனிந்தவன் மாறன் மட்டும் தான்.

இன்னும் சற்று நேரத்தில் "அதோ பாருங்கள், அந்த மண்டபத்தை!" என்று மழவர் நாட்டு வீரன் சுட்டிக் காட்டினான். சற்று தூரத்தில் கொள்ளிட ஏரிக் கரையின் மீது ஒரு சிறு மண்டபம் காணப்பட்டது. நிர்மானுஷ்யமான இடத்தில் இருந்தது அந்தக் கோயில். சிறிய மலைபோலிருந்த கொள்ளிட கரையின் மேல் செங்கல்லினால் கட்டபெற்றது அது. கொள்ளிடம் அவ்வப்போது கொள்ளும் சீற்றத்தினால் சிதைந்து போகத் தொடங்கிவிட்டது. வாரந்தோறும் யாரும் வந்து வழிபட்டுப் பிரஸாதம் வாங்கிச் சென்றதாகத் தெரியவில்லை. ஆடிக்கொன்று அமாவாசைக்கு ஒன்று என்று தான் பூஜாரியே அங்கு விஜயம் செய்வார் போலிருந்தது. கோயிலின் மேல் தீட்டப்பெற்ற வர்ணங்கள் காற்றுக்கும் வெயில் மழைக்கும் மங்கிப்போய்விட்டன. ஓரிரு செங்கல்கள் கூடக் கழன்று இன்றைக்கோ நாளைக்கோ விழுவதென்ற முடிவில் இருந்தன.

வேறு ஒரு சந்தர்ப்பம் என்றால் மாறன் அவ்விடத்தை ரசித்திருப்பான். கரையின் மேல் அரசமரமும் ஆலமரமும் ஓங்கி வளர்ந்திருந்தன. மாலை நேரத்தின் மங்கிய வெளிச்சத்தில் இருப்பது போலொரு பிரமையை அந்த அடர்ந்த மரம் ஏற்படுத்தியிருந்தது.

சூரிய கிரணங்கள் பட்டு தக தகவென்று பொன்மயமாய்த் திகழ்ந்து கொண்டிருந்தன அந்த மரங்கள். கப்பும் கிளையுமாய் ஒன்றோடு ஒன்றாய்ப் படர்ந்து கைகோர்த்து வெயில் நுழையாதவாறு தாவா வலையொன்றை ஏற்படுத்தியிருந்தன.

கோயிலுக்கு முன்னால் பலரும் வேண்டுதல் செய்து பொங்கல் இட்ட இடங்கள் வட்ட வட்டமாகக் கருகிப் போயிருந்தன. கோயிலின் பக்கத்தில் பலி ஆடுகளின் மண்டையோடுகளும் கிடந்தன. கோயிலின் விழாக்களை இவையிரண்டுமே வரு வோருக்கு விளக்கின.

அங்கு பூஜை போட்டுவிட்டுத் தான் கும்பாபிஷேக வேலை யைத் தொடங்கியிருக்கிறார்கள். அன்று அந்தணரும் மழவராயர் குடும்பமும் வந்திருப்பார்கள். திருவிழா முடிந்த பின் பொங்கல் வைத்து நன்றி செலுத்தவேண்டும். அதற்குச் சோழர் அரசகுலப் பெண்கள் வந்திருக்கிறார்கள்.

மிகவும் அமைதியான அவ்விடத்தில் திடீரென்று பறவைகள் கூச்சலிடும் சப்தம் கேட்டது. மரங்களின் மீது உறங்கிக் கொண் டிருந்த பட்சிகள் சில ஏதோ சலசலப்பினால் விழித்துச் சிறகுகளை அடித்துக் கொண்டன. மாறனின் பார்வை உடனே மரங்களின் மேல் சென்றது. வந்தியத் தேவனோ ஒரு கையை ஆறுதலாய் மாறனின் தோள் மேல் வைத்தான். "நாம் வந்ததால் தான் பறவைகள் பயந்துவிட்டன" என்றான்.

இந்த முறையும் பறவைகள் பறந்ததைப் பார்த்து வேளக்காரப் படைத் தலைவன் தன் வாளை உருவுவான் என்று எதிர்பார்த்துப் பெண்கள் எல்லாரும் சிரித்தனர். அந்தச் சிரிப்பின் ஒலி அந்த ஆற்றங்கரையெங்கும் கேட்டது.

ஆனால், பறவைகள் பயந்தது முற்றிலுமாக வேறு விஷயத்துக்கு. ஆற்றின் நடுவில் வெள்ளம் சுழித்துக் கொம்மாளமிட்டு அதிவேக மாக ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் கரையோரமாக நீர் அமைதி யாய்தான் இருந்தது. கொள்ளிடக் கரைக்குக் கீழே நாணல் புதர்கள் மண்டிக்கிடந்தன. அதில் பத்துக்கும் மேற்பட்டவர் வெகு நேரமாகக் காத்திருந்தார்கள்.

மார்பளவு நீரில் நின்றிருந்த இடும்பன் "ரவிதாசரே. இன்னும் கொஞ்ச நேரம் இங்கேயே இருந்தால் வாள்கள் துருப்பிடிக்க ஆரம்பித்துவிடும்" என்று சொல்ல, ரவிதாசன் சிரித்தான்.

அந்த மெல்லிய சிரிப்பைக் கேட்டே மரங்களின் மீதிருந்த பறவைகள் சிறகுகளைச் சடசடவென்று அடித்துக்கொண்டும் பீதி கொண்ட குரலில் கூவிக்கொண்டும் வானத்தில் பறந்தன.

* * *



## அத்தியாயம் நூற்று முப்பத்து ஏழு
## 'பதுங்கிய பாண்டியர்'

கொள்ளிடக் கரையின் ஓரத்திலேயே மார்பளவுக்குத் தண்ணீர் இருந்தது. பொதுவாகக் கரைக்கு வெகு தூரத்தில் தான் நீர் ஓடும். ஆனால் குடகு நாட்டில் வருணபகவானின் பெருங் கருணையால் தமிழகத்தில் பாயும் காவிரியும் சரி, கொள்ளிடமும் சரி, கரைகளைத் தொட்டுக்கொண்டுதான் ஓடின.

கரையையொட்டி நாணல் புதர்களுக்கு நடுவே ஒரு தனி உலகமே உயிர் வாழ்ந்தது. ஆயிரமாயிரம் தவளைகளின் கோஷம் காதைத் துளைத்தது. அவற்றைப் பிடிக்க நீர்ப் பாம்புகள். அவ்வப்போது தலையை வெளிக்காட்டிய தவளையைக் கொத்திச் செல்ல வெண் நாரைகள் ஆற்றோர மரங்களின் மேலே பொறுமையுடன் அமர்ந்திருந்தன. இவற்றுடன் அதிசயமாகச் சில மனிதர்களும் இருந்தார்கள்.

காலையில் சூரியன் எழும் முன்பே பானைத் தெப்பம் ஒன்றில் வந்து இங்கு அவர்கள் இறக்கிவிடப்பட்டிருந்தனர். அப்போ திருந்தே இந்த மார்பளவு நீரில்தான் நின்றிருந்தனர். பானைத் தெப்பம் மிக ஜாக்கிரதையாக யார் கண்ணிலும் படாமல் மீண்டும் எதிர்க் கரைக்கு எடுத்து செல்லபட்டது.

சோழரைப் பழிவாங்கும் நடவடிக்கையில் ஈடுபட்டிருந்த அந்தப் பாண்டிய ஆபத்துதவிகளில் பலருக்கும் தெரியவில்லை இது தீட்சண்யமான ஆசையா? இல்லை சுத்த பைத்தியக் காரத்தனமா என்று?' இரண்டையும் வேறு படுத்திப் பார்க்க முடியவில்லை. உடைமை, உள்ளம், ஆவியென எல்லாவற்றையும் ஆக்கிரமித்து விட்டது இந்த விடுதலை வேட்கை. அதன் விளை வாக சுயபுத்தியுடன் இருப்பவன் செய்யத் துணியாத காரியங்களை யெல்லாம் இந்த வேட்கை அவர்களைச் செய்யத்தூண்டியது.

தன் வாழ்நாளில் நடக்காமல்கூடப் போகலாம் என்ற ஒரு போராட்டத்தின் மீது இவ்வளவு பற்றா என்று பார்ப்போருக்கு வேடிக்கத்தோன்றும். ஆனால் அது அப்படித் தான்!

இந்தத் திட்டத்தைத் தீட்டிய ரவிதாசனுக்கு தளர்ந்து போன பாண்டிய சமுதாயம் மறந்துவிட்ட விடுதலைப் போராட்டத்தை மீண்டும் கிளர்ந்து எழச் செய்யவேண்டும் என்ற ஆசை. துணி வோடு நடைபோட வைக்க வேண்டும் என்ற வெறி. சண்டை யென்பது நடந்தே ஒரு யுகம் ஆனது போலிருந்தது. போர் என்ற

நாமதேயத்தையே காணோம். பின் வேறெப்படி நாட்டுப்பற்றை வளர்ப்பது என்று அவனுக்கு தெரியவில்லை.

தங்கள் பந்து மித்திரர்கள் சுகமாய் இருந்தால் போதும் என்ற எண்ணம் பலருக்கு. பாண்டிய நாட்டில். ஏன், போராளிகள் பலர் கூட ஆதித்தன் செத்ததும் தங்கள் வாழ்வின் உன்னத இலட்சியம் நிறைவேறிவிட்டதென்னும் எண்ணங்கொண்டனர்.

தற்போது ரவிதாசன் செய்யவிருந்த வேலை கிராமப்புறத்தில் 'சிறங்கைக் கீறி ஆற்றியது' என்பார்களே,' அது போலத்தான். இதுமட்டும் நடந்தால் பாண்டிய விடுதலைப் போராட்டம் நிமிர்ந்து உட்கார்ந்து 'என்ன சேதி?' என்று கேட்கும் என்று அவனுக்குத் தெரியும்.

நந்தினி செய்த காரியத்தால் தான் விஷயம் முற்றிப்போய் விட்டது. அதன் பின் தான் ரவிதாசன் ரௌத்ராகாரம் அடைந்து இந்தத் திட்டத்தை திட்டிவிட்டான். பங்கேற்கும் பலருக்கும் முழு மனதுடன் ஈடுபட விருப்பமில்லை. இது உகந்த சமயமா என்றும் அவர்களுக்குத் தெரியவில்லை. 'சோழனின் சக்தியையும் அடிக்கடி சோதிக்கக்கூடாதல்லவா?' என்ற அச்ச உணர்வுகளும் இருந்தது.

'ஆனால் பாண்டிய நாட்டு விடுதலை எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று ரவிதாசன் சென்றுவிட்டால், பின் இந்த போராட்டத்தின் கதி என்னாவது?' என்றே உடன் வந்தனர். அவனுடைய தலைமையின் கீழ் தியாகம் செய்ய யாரும் பின் வாங்க மாட்டார்கள் என்பதிலும் ஒரு உண்மையிருந்தது. சொத்து சுதந்திரம், நிலம் புலம் என்று தேடிச் செல்லாமல் இவ்வளவு நாள் சோழருடன் மோதியவனுக்கு இந்த விவகாரத்தின் முழுக் கஷ்ட நஷ்டங்களும் தெரியும் என்றே நம்பினர்.

ரவிதாசனுக்கு எந்த அளவுக்கு விடுதலை வெறி பிடித்திருந்தது என்பதற்கு இதுவே சான்று. மற்றவருக்கும் அதே அளவுக்கு வெறி உண்டாகவேண்டும் என்று, கிளம்பும் முன் ''மதுரை நகரம் பற்றி எரிந்து நாசமாவதற்குக் காரணமானவன் சோழன். மதுராபுரியில் வீதியெங்கும் செத்த பிணங்கள், எல்லா இடங்களிலும் பிணமெனும் நிலையை வெகு விரைவில் எட்ட முயற்சித்த அடிபட்டவர்கள். தீப்பற்றி எரியும் வீடுகள். இங்கும் அங்கும் உற்றார் உறவினரைத் தேடும் மக்கள். ஜனங்களின் புலம்பல். பெண்களின் ஓலம். அப்பப்பா! அந்தக் காட்சியைப் பார்த்தவன் வாழ்நாளுக்கு உறக்கம் கொள்ளமாட்டான்'' என்றான்.

மேலும் ''சேவூரில் வீழ்ந்து கிடந்தேன். உடலில் இருந்த வலியை எல்லாம் விடச் சோழர்களுடைய வெற்றி கோஷமும் ஜயபேரிகை



களின் முழக்கமும் சேர்ந்து காது செவிடுபடச் செய்கின்றன; என் மனதை நோகடித்தன. பாண்டிய நாட்டு விடுதலைக்கு என்னுடைய உயிரை ஈடாக வைக்கமுடிந்தால் அதற்காக நான் ஓராயிரம் ஜென்மம் எடுப்பேன்'' என்றான்.

இதையெல்லாம் ஞாபகப்படுத்தியவுடன் மற்றவர்களுக்கு ரவிதாசன் தீட்டியிருந்த திட்டம் அவ்வளவு மோசமானதாகத் தெரியவில்லை. காலையிலிருந்து மார்பளவுக்கு ஆற்றில் நின்றதும் ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. 'இந்தச் சோழரின் ஆட்டமும் இறுமாப்பும் கூடிய சீக்கிரத்தில் அடங்கப் போகிறதல்லவா?' என்பதை எண்ணிய போது ஓரளவு ஆறுதல் உண்டாயிற்று. குளிர்ந்த கொள்ளிட நீரும் கூட வெது வெதுப்பாய் இருந்தது. அவர்களுடைய ஆத்திரத்தை அதிகப்படுத்த இன்னொரு காரணமும் சேர்ந்துகொண்டது. நந்தினி சோழருடன் அன்னியோன்னியமானது எரிச்சலை உண்டு பண்ணியது.

அப்போது இடும்பன், ''நம்மால் முடியுமா? ரவிதாசா'' என்றான்.

''தேவர்களையெல்லாம் அடிபணிந்து குற்றேவல் புரிய வைத்த தசகண்ட இராவணனுக்கு முடிவு வந்தபோது, இரண்டு மனிதர்களும் ஒரு சில வானரங்களும் சேர்ந்து அவனைக் குலத்தோடு நாசமாக்கி விடவில்லையா?'' என்றான் ரவிதாசன்.

மேலும் தொடர்ந்தான். ''பாண்டிய விடுதலைப் போராட்டம் ஒரு சண்டித்தனம் செய்யும் குதிரையைப் போல நடந்து கொண்டிருக்கிறது. முன்னால் பத்தடி இழுத்தால், பின்னால் பதினைந்தடி இழுத்துச் செல்கிறது. இருக்கும் ஆட்களை வைத்து வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகள் மிகச் சொற்பம். யுத்தம் என்றால் பதினாயிரக்கணக்கான வீரர்கள் தேவை. அவ்வளவு பேர் பாண்டிய நாட்டில் போராடும் திறனுடன் இன்று இல்லை. சேனா சமுத்திரத்தை தேவையான அளவு திரட்ட முடியாது. ஆனால் அதன் உணர்வை ஏற்படுத்த முடியும். நமது குறைந்த எண்ணிக்கையும் கூட ஒரு விதத்தில் நமக்கு சாதகம் தான். இதை வைத்து கொண்டே இவ்வளவு பயமுறுத்துகிறான் பாண்டியன் என்றால் பெரும் படை வைத்திருந்தால் என்ன செய்வான் என்று சோழன் யோசிக்க வேண்டும்.''

''பின் ஏன் கும்பாபிஷேகத்தைத் தாக்கப்போவதாகச் சொன்னாய்?''

''மூன்று நாள் கண் மூடாமல் காவல் காத்திருப்பார்கள். ஒன்றும் அபாயம் வரவில்லையென்றவுடன் ஒரு மெத்தனம்

வந்துவிடும். அதற்காகத்தான். முக்கியமாக, கும்பாபிஷேகம் முடிந்தவுடன் விரக்தியில் இருப்பான் வேளக்காரப்படைத் தலைவன் மாறன். அதனால் நமக்குப் போர்க்களம் இந்தக் கண்டராதித்தம் தான்'' என்றான்.

காலையில் பலத்த காவலுக்கு இடையில் சம்பவம் ஏதுமின்றி கும்பாபிஷேகம் நடந்து முடிவுற்ற செய்தி ரவிதாசனுக்கு வந்து விட்டது. அதுவரை சோழர்கள் ஏமாந்தார்கள். மழபாடி நகரில் நுழைவதற்கு ரவிதாசன் கையாளக்கூடிய யுத்திகளைப்பற்றி அவர்கள் நினைத்திருப்பார்கள். ஆனால் அதைபற்றி அவன் யோசிக்கவில்லையே. ஏன் என்றால் அவன் திட்டம் முழுவதுமாக வேறுவகையானது. அந்த வைணவ ஒற்றன் ஒளிந்திருந்ததை ரவிதாசன் பார்த்துவிட்டான். வேண்டுமென்றே 'அரசரைக் கொல்லப் போவதாகவும். பொன்னியின் செல்வர் ஊரில் இல்லாத தால் நாட்டில் குழப்பம் விளையுமம் என்றும் சொன்னான். இவன் போய் என்ன சொன்னாலும் அந்த ஊரில் நம்புவார்கள் என்று அவனுக்கு தெரியும்.

''கோயில் சுவர் மீது நூலேணியுடன் ஏறுவோம் எனக் காத்திருந்தார்கள். அதன் பின் சண்டை போடவேண்டும் என்ற துடிப்பே போயிருக்கும். பலத்த எதிர்ப்பு இல்லாமல் நம் காரியத்தை சாதித்து விடலாம்.''

''நம் காரியம், நம் காரியம், என்கிறாயே. அது என்ன?'' என்றான் இடும்பன்.

''ஒரு காலத்தில் நரபலி கொடுக்கும் காபாலிகர்கள் கையில் இருந்தது இந்தக் கரைக்கு மேலிருந்த கோயில்.நாமும் நரபலி கேட்கிறோம்!''

ஒருவர் முகத்தில் கூட ஈயாடவில்லை. ''இத்தனை காலமாக நீங்கள் செய்திருக்கும் வேலையெல்லாவற்றையும் விட முக்கிய மான வேலையை உங்களுக்கு இப்போது தரப் போகிறேன். அதில் ஒரு அணுவளவுகூடப் பிசகாமல் சர்வ ஜாக்கிரதையாய்ச் செய்து முடிக்கவேண்டும். இரத்த தாகமும் யுத்த வெறியும் கொண்டிருந்த சோழருக்கு அதே மொழியில் பதில் சொன்னால்தான் புரியு மென்று இல்லை. அவன் மதுரைக்குப் போட்டுவைத்திருந்த திட்டத்துக்கு நமக்கு ஒப்புதல் இல்லை எனக் காண்பிக்க இது போதாதா? நந்தினியைக் கொன்று மகாராஜாவை மீட்க வேண்டும். முடிந்தால் அந்த சம்புவராயனையும் கொல்ல வேண்டும்'' என்றான்.



ஆலம் விழுதுகளைப் பிடித்துக் கொண்டு கரையோரமாக சாய்ந்துகொண்டு இருந்த பாண்டியரெல்லாம் சற்று நேரத்தில் அந்த விழுதுகளை இடுப்பிலும் கட்டிக் கொண்டனர். ஆற்றின் வேகம் அதிகரித்தது போலொரு எண்ணம். குடகு மலையில் ஒரு வாரத் துக்கு முன்னால் பெய்த மழையின் குளிர் தெரிந்தது. தண்ணீரின் வரத்தும் அதிகரித்தது. எவ்வளவு நேரம் தான் சிலையைப்போல் அசைவற்று நிற்பது, அதுவும் நீரினுள். பொறுமை குறைவது போலிருந்த சமயத்தில் ரவிதாசன் ''சரி! தயாராகுங்கள். ஊர்வலம் மழபாடியிலிருந்து கிளம்பிவிட்டதாம்'' என்றான்.

''உனக்கு எப்படித் தெரியும்?''

''பொங்கல் வைக்க எல்லாரும் வருகிறார்கள் என்று ஒற்றன் செய்தி அனுப்பிவிட்டான்.''

எல்லோருக்கும் அதிர்ச்சி. அரை நாளாகத் தங்களுடன் நீரிலும் சகதியிலும் நின்றிருந்த ரவிதாசனுக்கு மட்டும் எப்படிச் செய்தி வந்தது.

''எப்படி அனுப்பினான்?''

''எதிர் கரையிலிருந்து காவிக் கொடியை ஆட்டினானே.''

'ரவிதாசன் எல்லாவற்றையும் யோசித்துவிட்டான்' என்றவுடன் ஒரு புதுத் தெம்பு பிறந்தது ஆபத்துதவிகளிடம். புத்துணர்ச்சியும் பிறந்தது. 'அப்போது வெற்றி நிச்சயம் தான்.'

மாறனிடம் அரசன் பேசிய ஓரிரு நாழிகை நேரத்துக்குள் செய்தி போய்விட்டது பாண்டியருக்கு. ரவிதாசன் சொன்னது போலச் சற்று நேரத்துக்கெல்லாம் கரையின் மேல் மங்கள இசை, பெண் களின் பேச்சுக் குரல் போன்ற சப்தங்கள் கேட்கத் தொடங்கின.

ஆற்றங்கரைக்குச் சோழர் ஊர்வலம் வந்துவிட்டதற்கான அறி குறிகள் தெரிந்தன. பாண்டியர் இங்கிருப்பார்கள் என்று தங்கள் சொப்பனத்தில் கூட நினைத்திருக்க மாட்டார்கள் என்று ரவிதாசன் சொன்னது உண்மை தான். கரைக்கு அப்பால் ஒரே பேச்சும் கும்மாளமுமாய் இருந்தது. வந்து சேர்ந்த ஊர்வலத்தின் குதூகலத்தையும் கோலாகலத்தையும் ஆற்றில் கழுத்து வரை குளிர்ந்த ஜலத்தில் நின்றவர்களால் நன்கு உணர முடிந்தது.

முதலில் மாறன் கரையின் மேலேறி நாலாபுறமும் சுற்றிப் பார்த்தான், ஆற்றங்கரை வழக்கம் போல அமைதி குடி கொண்டு விளங்கிற்று. ஆற்றங்கரை அரச மரத்தடியில் கோயில் கட்டி அம்மன் விக்கிரகத்தை முற்காலத்தில் பிரதிஷ்டை செய்து விட்டனர். கோயிலின் சுவரோரத்தில் செடி கொடிகள் ஏராளமாய்

இருந்தன. கொள்ளிடக் கரை மீது ஒரு பாதையும் கூட இருக்கும். மக்கள் நீரைப் பார்த்துக்கொண்டே நடக்க சௌகரியமாக இருக்குமோ என்னவோ? அந்தப் பாதை சற்று அகன்றிருந்த இடத்திலிருந்தது கிராம தேவதையின் ஆலயம். ஒரு குறுகலான ஒற்றையடிப் பாதையின் மூலமே கோயிலுக்குச் செல்லவேண்டும். கோயில் இருக்கும் இடத்தை நாலே எட்டில் மேலேறி நோட்டம் விட்டான் மாறன்.

கோயிலைச் சுற்றி வர முடியாது. நாலாபுரமும் மூங்கில் புதர்கள் மண்டிக் கிடந்தன. அங்கும், கோயிலுக்குப் பின்புறமாக இருந்த பெரிய வேப்பமரத்துக்குப் பின்னாலும் யாரேனும் மறைந்து கொண்டு நிற்கிறார்களா என்று தேடினான். ஏற்கனவே வருடக் கணக்காக புதர்களும் கொடிகளும் மண்டிக் கிடந்ததாகத் தெரிந்தது. பல ஆண்டுகளாக மனித சஞ்சாரமே இல்லையெனத் தெரிந்தவுடன் திருப்தி கொண்டான். ஆள் நடமாட்டத்துகே வாய்ப்பில்லை என இப்போது சந்தேகமறத் தெரிந்துவிட்டது. நெடுங்காலமாகப் பூஜை முதலியவை ஒன்றுமில்லை. இந்தக் கும்பாபிஷேகத்தை ஒட்டியே இந்த ஏற்பாடுகளெல்லாம். கோயிலுக்கு எதிரில் அழகாக இழைக் கோலம் போட்டு ஏழெட்டு அடுப்புகளும் விறகும் பொங்கல் வைக்கத் தயாராய் இருந்தன.

வேளக்காரப் படைத் தலைவன் கோயிலை சுற்றிச் சுற்றி ஆராயும் வரை எல்லோரும் பொறுமையிழந்துபோய் கரைக்குக் கீழே நின்றிருந்தனர். வந்தியத் தேவன் மாறனிடம் சென்று "அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய், மாறா! இந்த இடத்தில் என்ன அபாயம் இருக்க முடியும்? சீக்கிரம் பொங்கல் வைக்க அனுமதி கொடு" என்றான்.

வந்தியத் தேவனிடம் "சிறிது அலட்சியம் காண்பித்தாலும் போதும் வல்லா. காலத்துக்கேற்ற கோலம் போடும் வேலையில்லை இந்த வேளக்காரப்படைத் தலைவர் பதவி!" என்றான். சொல்லிவிட்டு மாறனும் அனுமதி கொடுக்கவே பூஜைக்கான வேலைகள் தொடங்கின.

வந்தியத் தேவனும் "ஒப்புக்கொள்கிறேன் மாறா! அதற்காக ஏன் 'உம்ம்' என்று முகத்தை வைத்து கொண்டு இருக்கிறாய்? வஜ்ர நாதர் அருளால் எல்லா அபாயமும் தீர்ந்தது. நீ விழிப்போடு இருப்பதில் ஏக சந்தோஷம். எனினும் நம்மைப் பரலோகம் அனுப்பப் பாண்டிய வீரர்கள் யாரும் இங்கு வரப்போவதில்லை" என்றான்.



மேலும் "ரவிதாசன் என்னதான் கிராதகனாக இருந்தாலும், கோயில் விழாவுக்கு வருவான் என்று எனக்குத் தோன்றவில்லை. பதற்றப்படாதே. பெண்கள் பொங்கல் வைக்கும் போது உட்கார்ந்து இளைப்பாறு. தஞ்சைக்குச் சென்று மற்றதைப் பார்த்து கொள்ளலாம். பார், உன்னை வைத்த கண் வாங்காமல் பார்த்த பழுவூர் இளவரசியின் முகம் வாடியிருப்பதை" என்றும் சொன்னான் வந்தியத் தேவன்.

விசாலமான கருநீல நிற வண்டுகளையொத்த கண்கள் இமை கொட்டாமல் மாறனையே பார்த்துக் கொண்டிருந்தன. அதைக் கூட அவன் இவ்வளவு நேரம் கவனிக்கவில்லை. லோகாவின் பக்கம் திரும்பி பேருக்காக ஒரு குறுநகை புரிந்துவிட்டு மீண்டும் தன் வேலையை கவனிக்கலானான். மலர்ந்து விழித்த அந்த நயனங்களினால் கூட அவனது கற்பனைக் குதிரைகளுக்குக் கடிவாளம் போட முடியவில்லை. மாறன் சில நாள் முன்புவரை அவனுடைய சுண்டுவிரலால் ஏவிய காரியங்களை தன் சிரசினால் செய்யகூடிய நிலையில் இருந்தான் என்றால் யாராலும் நம்பமுடியாது. அந்த அளவுக்குத் தன் வேலையில் மும்முரமாக இறங்கிவிட்டான் மாறன்.

மொத்தம் பத்துப் பொங்கல்கள் வைக்க ஏற்பாடாகியிருந்தது. அவற்றை வைக்கும் பெண்கள் மேலே ஏறினால் இன்னும் மூவரோ நால்வருக்கோ தான் அங்கே இடம். ஆகையால் எல்லாரையும் வரிசையாக மேலே சென்று கோயிலில் சுவாமி கும்பிட்டுக் கீழே வரச்சொல்லிவிட்டான் மாறன்.

ஆற்றங்கரையின் மேல் எல்லோரும் நடமாடிக் கொண்டிருந்தனர். முக்கியமானவர்கள் மட்டுமே மேலே இருக்கலாம் என்று பொங்கல் வைக்கும் குந்தவை, வானதி, லோகா, மற்றும் மழவராயர் வீட்டு பெண்களை மட்டும் மேலே அழைத்தான் மாறன். மற்றவரையெல்லாம் கீழிறங்கும்படி கேட்டுக் கொண்டான். நந்தினியைப் பார்த்ததும் அவளையும் மேலே அழைத்தான். வால் போல ஒட்டிகொண்டு அந்தச் சிறுவனும் மேலே வந்தான். மேட்டின் மேல் இரண்டு வேல் ஏந்திய வீரர்கள். மற்றும் மாறன், வந்தியத் தேவன். அடியான் கூடக் கீழேயே இருந்தான்.

பாழும் மண்டபம் ஒன்று சாலையோரமாக இருந்தது. கோயில் விழாக்களில் அங்கு ஏதேனும் விசேஷம் நடக்கும் போல. காவலுக்கு வந்த வீரர்கள் எல்லாம் அதில் நின்றுவிட்டனர்.

மாறனுக்குக் கோயிலைப் பார்த்தால் ஒரு கலக்கமும் ஏற்படவில்லை. காரணமில்லாத பயம் கொண்டோமே என்று வேறு

நினைத்துக் கொண்டான். கொள்ளிடக் கரை மிகவும் உயரமாக இருந்தது. அங்கிருந்து பார்த்தால் புதிய படகுத் துறை தெரிந்தது. பானைத் தெப்பத்தில் பலரும் வந்துபோய்க் கொண்டிருந்தனர். பரிசல் துறையைச் சற்று தள்ளிவைத்திருந்தான் மாறன். எதிர்க் கரையிலிருந்து வருபவர்கள் சற்று தூரம் நடந்து வரவேண்டியிருந்தது. எனினும், கோயிலுக்கு அது அதிகப் பாதுகாப்பு என்று முடிவு செய்தான். ஆனால் இப்போது அது கண்டாராதித்தத்துக்கு வெகு அருகில் இருப்பது போல ஒரு பயம். உடனே கரையோரமாகச் சென்று ஆற்றுக்குள் எட்டிப் பார்த்தான்.

வேனிற்காலத்தில் பாலைவனம் போல காட்சி தரும் கொள்ளிடம். ஆறு வறண்ட காரணத்தினால் ஊற்றெடுத்தே குடி தண்ணீர் எடுக்க வேண்டியிருக்கும். ஆனால் இன்றோ நீல நிறத்தில் ஆற்றில் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. கரையோரயாக்ச் சகதியும் நாணல் புதர்களும் அடர்ந்து கிடந்தன. படகு ஒன்று வந்தாலோ ஆள் நீந்தி வந்தாலோ அரைக் காத தூரத்தில் கண்ணுக்கு எட்டிவிடும். அப்படி யொன்றும் பாது காப்புக் குறைவாக இல்லை. மிகவும் பாதுகாப்பான இடம் தான். அதனால் அபாயம் ஒன்றும் இல்லை என்று முடிவு செய்தான் வேளக்காரப் படைதலைவன். 'நான் இங்கு வராமல் கோயில் பாது காப்பை பலப்படுத்தியிருக்கலாம்' என்றும் நினைத்தான்' மாறன்.

மாறனின் குரல் தெளிவாகக் கீழே கேட்டது. கோயிலைச் சுற்றி இருக்கும் சூழ்நிலையை அப்படியே மாறனின் வார்த்தைகளை வைத்தே ரவிதாசன் கற்பனை செய்து கொண்டான். யார் யாரெல்லாம் இருக்கிறார்கள், என்னவெல்லாம் செய்கிறார்கள் என்று, புரிந்து கொண்டான்.

பொங்கல் அடுப்பு ஏற்றிய புகையைக் கீழே ஆற்றிலும் சுவாசிக்க முடிந்தது. இன்னும் சில வினாடிகள் பொறுத்திருந்துவிட்டு ஆலமர விழுதுகளைப் பற்றி மேலே ஏறவேண்டும் என்று முடிவெடுத்தான் ரவிதாசன்.

ஆற்றையொட்டிய நாணல் புதர்களில் இதுவரை மறைந்திருந்த மனிதர்களுடைய உடம்புகள் நடுங்கின. அற்றின் மேலே தவழ்ந்து வந்த குளிர்ந்த காற்றினாலா, ஈரத்தினாலா அல்லது பரபரப்பினாலா என்பது தெரியவில்லை.

கைகள் வேறு வாள்களை சரியாய்ப் பிடிக்க முடியாமல் வழுக்கின. அதனால் பற்களால் வாளைக் கடித்து கொண்டு விழுதுகளைப் பிடித்து முதலில் ஏறினான் ரவிதாசன்.

❖ ❖ ❖



### அத்தியாயம் நூற்று முப்பத்தெட்டு

## கண்ணெதிரே எதிரி!

**மா**றன் ஒப்புதல் கொடுத்தபின் கொள்ளிடக் கரையின் மீது கோயில் பூஜைகள் நடந்தன. பூஜை முடிந்தவுடன் கோயில் மணியும் அடிக்கப்பட்டது. பெண்கள் பொங்கல் வைக்கத் தொடங்கினர். மாறனும் வந்தியத் தேவனும் ஆற்றையொட்டியே நின்றனர்.

அங்கிருந்து பார்க்கக் கொள்ளிடம் மிகவும் பிரமாதமாக இருந்தது. வீரநாராயண எரியைப் போல மீண்டும் ஒரு அதிசயக் காட்சியை எப்போதும் வாழ்க்கையில் பார்க்க முடியாது என்று எண்ணியிருந்த மாறனுக்கு வியப்பு. கரையின் மேலேயிருந்து ஆற்றை நோக்கினால் கண்ணுக்கு எட்டிய தூரத்துக்கு ஒரே நீர் தான். 'இது என்ன கடலா, கொள்ளிடமா?' எனக் கேட்கத் தோன்றும்.

இதற்குள் மறுபடியும் வாத்தியங்களின் கோஷம் முழங்கத் தொடங்கி விட்டது. சற்று அடங்கியிருந்த மக்களின் பேச்சு ஒலியும் மீண்டும் பொங்கி எழுந்தது. கரையின் மேல் இடம் கிடைக்காதவரெல்லாம் சாலையோரமாக அமர்ந்து களைப் பாறினார்கள்.

அப்போது அந்த சப்தங்களையெல்லாம் மீறி மாறனின் காதில் பல ஒலிகள் விழுந்தன. தெளிவாயில்லாத புதுப் புது சப்தங்கள் கொள்ளிட ஆற்றிலிருந்து கேட்டன. ஆனால் உரக்க கேட்கும் சப்தமல்ல. அந்த இடத்தை பார்த்தால் பயம் ஏற்பட நியாயமில்லை என்று நினைத்து அப்போது தான் அமைதி பெற்றிருந்த மாறனுக்கு சந்தேகம். 'என்ன சப்தம்? ஆற்றில் நீர் ஓடும் சப்தமா? இல்லை, வெள்ளம் அதிகரிக்கிறதா? அதனால் கரை உடையப்போகிறதோ என்னவோ?' என பயந்தான்.

அப்படி அவன் கவனத்தைக் கவர்ந்திழுத்தது என்னவென்று கண்டறிய முடிவெடுத்தான். ஓரடி முன்னெடுத்து ஆற்றுக்குள் எட்டிப்பார்க்கலாம் என்று சென்றவனுக்கு முகம் வெளிறிப் போனது.

மாறனின் கண்களில் முதலில் தெரிந்தது அவநம்பிக்கைதான். நின்றவன் சட்டென்று நெருப்பை மிதித்து விட்டவனைப்போலத் துள்ளினான். மாறனின் தலை ஒரு கண நேரம் சுழன்றது. கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. கொள்ளிட

ஆற்றிலிருந்து கரையின் மேலே யாரோ எட்டிப்பார்த்தது மாறனின் இதயத்தின் அடிவாரத்திலிருந்து உடம்பின் மேலுள்ள ரோமக் கால்கள் வரையில் நடுங்கச் செய்த சொல்லமுடியாத காட்சி.

அது யாரெனத் தோன்றிய சந்தேகம் ஒரு கணத்திற்குள்ளேயே தீர்ந்து விட்டது. பழி தீர்க்க வன்மங் கொண்ட ரண பாதகன் ரவிதாசனை மாறன் இங்கே சற்றும் எதிர்பார்க்கவில்லை.

உள்ளத்தில் இனந்தெரியாத பீதி குடிகொண்டது; ரவிதாசனின் முகமானது மாறன் மனதில் ஆழமாய் பதிந்திருந்தது. 'ஆகா! விஷமம் செய்ய வந்துவிட்டான்! கதி கலங்கடிக்க வந்துவிட்டான்! மக்கள் நிறைந்த மழபாடியில் வருவான் என்று நினைத்து விட்டோமே? இந்த ஜன சூன்யமான பகுதியில் அவன் வருவான் என்று யூகிக்கவில்லையே?'

திகைத்து நின்ற மாறன் மறுகணம் அந்தத் தலை தெரிந்த இடத்தை நோக்கி விரைந்து ஓட முயற்சித்தான். ஆனால் கால்கள் கனத்துப்போய் கற்கள் போலாயின. அதற்குள்ளாகக் கரையின் மேலே ஒரே சமயத்தில் நான்கைந்து தலைகள் எட்டிப்பார்த்தன. மாறனுக்குப் புரிந்தது. ஆற்றங்கரையில் இருந்த ஆலமரத்தின் விழுதுகள் நீர்வரை சென்றிருந்தன. அதைப் பிடித்துக் கொண்டு பாண்டிய ஆபத்துதவிகள் மேலே ஏறியிருக்க வேண்டும்.

உடம்பெல்லாம் சொட்ட நனைந்தபடி மேலே ஏறினான் எதிரி. அவன் பல்லில் கடித்திருந்த வாள் தண்ணீரில் நனைந்ததில் பளபளத்தது. நீரில் நெடுநேரம் நனைந்து மேலேறியவர்கள் பார்ப்பதற்குச் சற்று மெலிவடைந்த யமகிங்கரர்களைப் போலிருந் தனர்.

மாறனது உள்ளத்தில் பொங்கித் ததும்பியது கோபமா, வியப்பா, இல்லை பயமா? மாறனின் குரல்வளையை ஒரு விஷ நாகம் சுற்றி வளைத்து பின் மெல்ல மெல்ல இறுக்குவது போல அவனுக்கு தோன்றியது. திகைத்து ஸ்தம்பித்து, கண்ணால் காண்பதை நம்புவதா வேண்டாமா என்றும் நிச்சயிக்க முடியாமல்-அப்படியே நின்றான். 'கடவுளே இதெல்லாம் உண்மைதானா? நான் பார்க்கும் காட்சி நிஜமான காட்சிதானா? அல்லது ஒரு கொடூரமான துயரக் கனவு ஏதேனும் காண்கிறேனா?'

'அவர்கள் தான். சந்தேகமில்லை. இந்தச் சோழ சாம்ராஜ் யத்தின் மகோந்நதத்தை அவனால் ஒன்றும் செய்யக்கூட முடியாது. ஒரு கொசுக்கடியளவேனும் சாதிக்கமுடியாது என்று நினைத்த போது வாளேந்தி வந்தானே. அவனுக்கென மழபாடியில் லட்சம்



பேர் காத்திருக்கக் கண்டராதித்தத்தில் வந்தானே? முக்கியமாக ரவிதாசனால் ஏதேனும் துன்பம் விளைவிக்கமுடியும் என்ற யோசனையைக் காலையிலேயே என் உள்ளத்திலிருந்து வேரோடு பிடுங்கி எறிந்து விட்டேன். இப்போது பார்த்து வருகிறானே' என்று அதிர்ந்தான் மாறன். 'குடிகெடுக்க அஞ்சாத வஞ்சகனாயிற்றே அவன். ஆள் பலம் குறைந்தபோது வந்து விட்டானே?' என்ற சலனமும் அவன் மனதில் இருந்தது.

இந்தப் பாவிகள் நெஞ்சிலே விஷம் உள்ளவர்கள். ரவிதாசன் ஏன் மழபாடிக்கு வரவில்லை என்பது அப்போதுதான் மாறனுக் குத் தெளிவாயிற்று. தன்னையறியாமல் மாறன் கரைக்குக் கீழே நின்றிருந்த அடியானை நோக்கினான். வைணவன் மேல் தனக்கு நிந்தையும் கோபமும் ஏற்பட்டிருந்தது தவறு என்றறிந்தான். வைணவன் எச்சரித்தது சரி தான். அரசர் முதல்கொண்டு யாரும் அவற்றைப் பிரமாதமாக எண்ணவில்லை. மனமார்ந்த வந்தனத்தை செலுத்தவேண்டிய இடத்தில் கடுஞ்சொற்களைப் பிரயோகித்தது தவறு என உணர்ந்தான். இணையில்லாத ஒற்றன் தான் அவன்; சந்தேகமேயில்லை. இப்போது திரும்பி ஒரு வார்த்தை வந்தனம் சொல்லவேண்டும் போலிருந்தது. ஆனால் நேரே சென்று அவனிடம் பாராட்டுத் தெரிவிக்கும்வரை உயிர் நம்மிடம் இருக்குமா? கேள்வியும் குறுக்குக் கேள்வியுமாய் கேட்டு பலமணி நேரம் தன்னைப் சங்கடபடுத்திய சபையினர் எல்லாரும் பத்திர மாக மழபாடியில் இருக்கின்றனர். தான் மட்டும் அபாயத்தைச் சந்திக்க வேண்டியிருக்கிறதே?

அடியானின் சோகம் குடிகொண்ட வதனத்தில் புன்னகை தோன்றிற்று. அவன் செய்த எச்சரிக்கை எவ்வளவு உண்மையானது என்பது வெகு சீக்கிரத்திலே மாறனுக்குத் தெரியவந்ததில் வைணவனுக்கு ஓர் ஆனந்தம்.

மாறனுக்கு இன்னும் ஒன்றுத் தெளிவாய்ப் புரிந்தது. 'நம்முடைய பிரயாண விவரங்கள், எல்லாம் பண்டியனுக்குத் தெரிய வருகிறது என்று அடியான் சொன்னது உண்மைதான். இந்தக் கோயிலுக்கு நாம் வரப்போகிறோம் என்று நமக்கே மதியம் கும்பாபிஷேகம் முடிந்த பின்னர் தான் தெரியும். ஆனால் ரவி தாசனுக்கோ அது முன்பே தெரிந்து விட்டது. நாம் கிளம்புவதாக உத்தேசம் கொள்ளும் முன்பே இவன் ஆயத்தமாகக் காத்திருக் கிறானே? யாரை நம்புவது, யாரை நம்பாமல் இருப்பது என்று தெரியவில்லையே?' என்று நினைத்தான். சௌகரியப்படும்

இடத்தில் தாக்குதல் நடத்த அதுவே அவனுக்கு ஏதுவாக இருந்திருக்கிறது.

அவன் வரவை எதிர் நோக்கி ஆயிரம் காலாட்படைகளை அங்கு நிறுத்தியிருக்கிறோம். பிரபல்யத்தை தேடியும் தன் வலிமையைப் பெரும் ஜனத்திரளுக்கு நிரூபணம் செய்யவும் அவன் திட்டம் தீட்டியிருந்தான் என்று நினைத்தது தவறு என்று இப்போது புரிந்தது. அதிகக் கூட்டமில்லாத வேறொரு இடத்தை தேர்ந்தெடுத்த பின்பே காலையில் அவன் மழபாடிக்கு வரவில்லை. ஆனால் தற்போதைய முக்கியமான கேள்வி- ரவிதாசனின் நோக்கம் என்ன என்பதுதான்.

'நாம் நினைத்த இடத்தில் வராமல் இங்கு வந்த காரணம், நாம் நந்தினியை அழைத்து வந்தது தான்' என்று யூகித்தான்.

'நான் அவசியம் போக வேண்டும்' என்று மன்னர் பெருமான் சொன்னது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று' என்று மாறன் நினைத்தான். எனினும் பிற்பகலில் அஸ்தமிக்க இன்னும் ஓரிரு ஜாமம் இருந்த போது இந்த ஆளில்லாத பிரதேசத்தில் கொண்டு வந்து மாட்டி விட்டதே விதி என்றும் நொந்தான் மாறன்.

அதே நேரத்தில் உடைவாளை உறையிலிருந்து உருவி எடுத்தான். 'வல்லா அபாயம்!' என்று அழைக்க நினைத்தான். சொல் ஏதும் வெளிவரவில்லை.

ஆனால், நல்ல வேளையாக அபாயம் என்பது வல்லவரையனுக்கும் தெரிந்திருந்தது. அவனுடைய கையும் இயல்பாக உடைவாளிடம் சென்றது.

ஒரு வார்த்தை கூடப் பரிமாறிக்கொள்ளாமல் வந்தியத் தேவனும் மாறனும் உடனே என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்து கொண்டார்கள். நின்ற இடத்தில் நிலையாக நிற்க வேண்டும். பின் வாங்கினால் இன்னும் சில எதிரிகளுக்கு ஆற்றங் கரையில் இடம் அளித்ததாக ஆகிவிடும். தடுப்புச் சுவர் போல நிற்கவேண்டும் என்று அந்த வீர வாலிபர்கள் எண்ணினார்கள். அந்த எண்ணத்தை உடனே காரியத்தில் நிறைவேற்றினார்கள்.

அந்நியர் வந்துவிட்டனர் என்றவுடன் பெண்களுக்கிடையே பரபரப்பு அறிகுறிகள் காணப்பட்டன. பெண்களையெல்லாம் பின்னால் தள்ளிவிட்டு முன்னால் வந்து வந்தியத் தேவனும் மாறனும் வாள்நீட்டி நின்றனர்.

கொள்ளிடக் கரையின் கீழ் பத்து பதினைந்து வீரர்களாவது இருப்பார்கள். ஆனால் கரையின் மேல் எல்லோருக்கும் இட



மில்லை. அதுவும் போராடும் போது சற்று மேடான இடத்திலிருந்து போராடுபவனுக்கே ஜெயலக்ஷ்மி ஆதரவாய் இருப்பாள். சரியான இடமாகத்தான் ரவிதாசன் தேர்ந்தெடுத்துக்கொண்டிருந்தான்.

பாண்டியரில் முதலில் முன்னேறியவர்கள் பின்னால் வருபவர்களுக்கு ஏதுவாக வியூகம் அமைத்தனர். வழுக்கும் விழுதுகளில் ஏறுவது என்னவோ கஷ்டம் தான். அதைத் தெரிந்து கொண்டு சோழர் யாரும் ஏறுபவரைத் தாக்காமல் பார்த்துகொண்டான் ரவிதாசன். பல முறை மேலே ஏறிவருபவரை எட்டி உதைக்க முயன்ற மாறனால் கரையோரமே செல்ல முடியாமல் தடுத்தனர். மொத்தம் பன்னிரெண்டு பேர் கரையின் மேல் ஏறிவிட்டனர் என்று மாறன் கணக்கெடுத்தான். அவனைச் சுற்றிலும் வீரர்கள் வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

'வீல் வீல்' என்று பெண்களின் கூக்குரல்கள் நாலாபுறமும் எழுந்தன. அபாயத்தைக் கண்டு நாற்புறமும் சிதறிச் சென்றிருப்பார்கள். எனினும் இடத்தின் அமைப்பைக் கருதி அப்படிச் செய்ய முடியவிலை. ஒரு புறம் கொள்ளிடம் எவ்வளவு கீழிருந்ததோ அது போலவே மறுபுறம் நிலமும்.

முதல் முறையாக வாள்கள் மோதியபோது 'டணார் டணார்' என்ற சப்தம் ஆற்றின் கரையையே அதிரச் செய்தன. மாறனும் வந்தியத் தேவனும் ஆளுக்கு மூன்று பேருடன் போராடிக் கொண்டிருந்தனர். ஆனால் பெருமாளின் சக்ராயுதம் போலச் சுழன்று மூன்று பேரையும் திணறடித்தார்கள்.

மின்னல் ஒளியுடன் கண்ணைப் பறித்த அந்த வாள் சுழன்ற வேகத்தினால் இரண்டு பாண்டியர்கள் முதலில் அடிபட்டுக் கீழே விழுந்தனர். பாண்டியருக்குப் போர்ப் பயிற்சி போதாது என்று தெரிந்தாலும் கூடுதலான ஆள் பலமிருந்தது என்னவோ உண்மை தான். இன்னும் எவ்வளவு பேர் ஆற்றுக்குள் இருக்கிறார்களோ என்று நினைத்து அவனுக்கு முதலில் மலைப்பாயிருந்தது.

இருவர் கீழே விழுந்தவுடன் பாண்டியரும் ஜாக்கிரதையாகப் போராடத் தொடங்கினர். தங்களுக்கு இனியும் சேதம் ஏற்படாமல் எட்டி நின்றே போராடினர். வாள்கள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து 'கிளாங், கிளாங்' என்று ஒலித்தன.

போர் நடக்க ஆரம்பித்துச் சில நிமிஷ நேரந்தான் உண்மையில் ஆயிற்று. ஆனாலும் அதன் வீரியத்தினால் நெடுநேரமாகத் தோன்றியது. வாள் ஏந்திய ஆஜானுபாகுவான வீரர்கள் இருவரும் ஒரு நொடி கூட ஓய்ந்திருக்க முடியவில்லை. ஏதோ பேசி வைத்து

கொண்டு வந்தது போல ஒருவர் பின் ஒருவராகப் பாண்டிய நாட்டவர் வாளைச் சுழற்றினர். மாறனையும் வந்தியத் தேவனை யும் முதலில் களைப்படையவைப்பதே அவர்களின் நோக்கமா யிருந்தது.

ஆரம்பத்தில் நல்ல சுறுசுறுப்பைப் பெற்றிருந்த மாறனின் வாள் வீச்சு இப்போது வேகம் குறைந்திருந்தது. இருவரும் மாபெரும் வீரர்கள் தாம். அவர்களைப் போரில் வென்று தடுக்கக் கூடிய வர்கள் வடபெண்ணையிலிருந்து குமரிமுனை வரையில் யாரும் கிடையாதுதான். எனினும் இருவரால் பத்துப் பேரை எப்படிச் சமாளிக்க முடியும்? முக்கியமாக எவ்வளவு நேரம் சமாளிக்க முடியும்?

நங்கூரம் பாய்ச்சிய கப்பல் போல நின்ற இடத்திலேயே நின்றான் மாறன். ஒரு அங்குலம் கூடப் பாண்டியரால் முன்னேற முடியவில்லை. சில சமயம் மாறனைப் பின்னால் தள்ள அவனைச் சுற்றி நான்கைந்து பேர் என வாள் போர் நடத்தினார்கள். மாறனின் வாள் வீச்சைப் பார்ப்பவருக்கெல்லாம் அளவில்லாத பரபரப்பு உண்டாயிற்று.

மாறனோ கைகளில் வாளை ஏந்தி பயங்கரப் போர் புரிகிறான். அவனைச் சுற்றிலும் எதிரிகள் சூழ்ந்து கொண்டு தாக்குகிறார்கள். தன்னந்தனியாக நின்று அவ்வளவு பேரையும் திருப்பித் தாக்கு கிறான். அவனுடைய கை வாளோ அடிக்கடி மின்னலைப் போல் ஜொலிக்கின்றது. பிரமாதமாகக் கைகலந்த சண்டை நடக்கிறது. பாண்டிய வீரர்கள் திடீர் திடீரென்று கீழே விழுந்தார்கள்.

ஒரு நிலையில் மாறனுக்கு ரவிதாசனுடன் மிகவும் நெருக்க மான சண்டை நடக்கத்தொடங்கிற்று. ஒருவரின் உஷ்ணமான மூச்சு இன்னொருவர் முகத்தின் மீது விழுந்தது. ரவிதாசனின் நாசியில் அனல் மூச்சையும், விழிகளில் இரத்த சிவப்பையும் மாறனால் உணர முடிந்தது.

மாறன் அப்போது ரவிதாசனின் கண்களை உற்றுப் பார்த்தான். 'ஆகா! என்ன ஆழம் அவனது கண்கள். பாதாளம் போல இருந் ததே. அவனது வெறி கண்ணின் மூலம் மற்றவருக்கு புலனானது. அதில் இருந்த கோபம் தெரிந்தது. முடிவான குறிக்கோள் தெரிந்தது.' மாறன் இவனுடன் உட்கார்ந்து உணவு உண்டிருந் தான். இவனுக்கு அஞ்சி மரத்தின் மேல் ஒளிந்திருந்தான். இவனிடமிருந்து தன் ஆருயிர்க் காதலியைக் காப்பாற்றியிருந்தான். இவன் எறிந்த கத்தி அவனது உடலைத் தீண்டியிருந்தது. இவனுக்காக கோயில் கும்பாபிஷேகத்தில் காத்திருந்தான். 'சற்றும்



எதிர்பாராமல் இங்கு வந்து இப்படி எட்டிப்பார்க்கிறானே?' என வியந்தான் கந்தமாறன்.

மேலும் 'இன்றைக்கு இந்த விஷயத்தைப் பற்றி ஒரு முடிவு செய்ய வேண்டும். இன்னும் எவ்வளவு நாள்தான் ரவிதாசனைச் சகித்துக் கொள்ளப்போகிறாய்?' என தனக்குத் தானே வின வினான். 'ஆபத்துதவிகளின் அடிச்சுவடு கூட இல்லாமல் இன்று துடைத்து எடுத்து விடவேண்டும்' என்று முடிவு கட்டினான்.

அதே எண்ணம் ரவிதாசன் மனதிலும் இருந்தது. அதனால் இந்த இருவரில் ஒருவர் தான் போரின் இறுதியில் உயிருடனிருப்பார் என்பது தெளிவானது.

மாறன் மாபெரும் வீரன்தான். நிச்சயமாக எந்த நிலையிலும் அவன் கோழையல்ல. எனினும் இந்த நிலையில் அவன் கலக்கமுற வில்லை என்று சொல்ல இயலாது. கத்தியெடுத்துச் சண்டை போடத்தெரியவேண்டாம். கணக்குத் தெரிந்தால் போதும். நந்தினியின் மேலும் லோகாவின் மேலும் எவ்வளவு வெறுப்புக் கொண்டிருந்தான் ரவிதாசன் என்பது மாறனுக்குத் தெரியும். அதனால் இன்னும் உத்வேகமாகப் போராட எண்ணியவன் தத்தளித்துக் கொண்டிருக்கையில் 'இன்னும் எவ்வளவு நேரம்தான் தானும் மூவர் நால்வருடன் போராட முடியும்?' என்று நினைத் தான். 'இன்னும் கொஞ்ச நேரம் ரவிதாசன் தாக்குப் பிடித்தால் இருட்டிவிடும். பின் யாரை வெட்டுகிறோம் யாரைக் காப்பாற்று கிறோம் என்று தெரியாது' என்ற பயம் வேறு. 'நிச்சயம் இதர சோழ வீரர்கள் மேலே வந்துவிட முடியும்' என்று தெரியும். 'ஆனால் அதற்குள்ளாகத் தாங்கள் மடிந்து போய்விடுவார்கள். பெண்கள் பக்கத்திலும் சேதம் ஏற்படும். வேண்டும் வரை போராடிவிட்டு ஆற்றுக்குள் குதித்து விடுவான் ரவிதாசன். இன்று பாண்டியர் தோற்க வாய்ப்பேயில்லை!'

வேறேதாவது யுக்தி செய்ய வேண்டும் என்ற எண்ணம் மறு படியும் மாறனின் மனதில் உதித்தது. ஆனால் கடவுள்களெல்லாம் கைவிட்டு விட்டனரோ என்ற எண்ணம் மட்டும் இருந்தது. இதற்கு வேறு யுக்தியே இல்லை. அப்பேற்பட்ட நிலையிது என அவனுக்குத் தெரியும்.

அப்போது பார்த்துக் கையிலிருந்த வாளைச் சுழற்றிக் கொண்டே, ''கந்தமாறா! தண்ணீரில் பார்!'' என்றான் வந்தியத் தேவன். அவன் குரலில் பரபரப்புத் தெரிந்தது.

இன்னும் பல பாண்டிய வீரர்கள் நீந்தியோ படகிலோ வருகிறார்கள் என்று பயந்து மாறன் பார்த்தான். பார்த்தவுடன் ஒரு பேராந்தம்.

ஆற்றின் மத்தியிலுள்ள ஒரு ஓடம்; அதிலிருந்து நீருக்குள் குதித்து ஒரு மனிதன் நீந்தி வந்து கொண்டிருந்தான். இந்த யுத்தப் பிரதேசத்தை நோக்கியே நேரே அவன் வருகிறான் என்று தெரிந்தது.

அந்தப் போரின் பரபரப்பிலும் நீந்தி வருபவர் பொன்னியின் செல்வர்தான் என்று ஓரக்கண்ணால் பார்த்துத் தெரிந்து கொண்டான். 'இந்தப் புராதன சோழ சாம்ராஜ்யத்தின் மாபெரும் வீரன் வந்துவிட்டான். ஆனால் அவன் வரும் வரை தாக்குப் பிடிக்க வேண்டுமே?' ஆனால் புது சக்தி பிறந்தது. மாறன் உத்வேகத்துடன் போராடத் தொடங்கினான்.

தினம் தினம் பார்த்து நேசித்த வீரனின் அங்க அசைவுகள் மறக்குமா என்ன? மனதிலிருந்துதான் அகலுமா? பொன்னியின் செல்வர் ஆற்றில் நீந்தி வருவதை பார்த்த பலரும் அவரை அடையாளம் கண்டு கொண்டனர். அவரது தோற்றப் பொலிவை அநேகர் ஞாபகம் வைத்திருந்தனர். பெண்களுக்கிடையே கூட ஆனந்தம்.

விமோசனம் வந்துவிட்டது. வேறொரு மாற்றுத் திட்டம் தீட்ட நினைத்தவனுக்குக் கடவுளாகப் பார்த்துத் திட்டம் தீட்டிவிட்டார்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று முப்பத்து ஒன்பது

## ஓடத்திலிருந்து குதித்தான்

மழபாடிக் கோயில் விழாவுக்கு வந்த மக்கள் அதி விரைவாக நகரை விட்டுக் கிளம்பித் தத்தம் ஊர்களுக்கு போய்க்கொண்டிருந்தார்கள். அதனால் ஜன நெரிசலால் திருவையாறு சாலை முழுவதுமாக அடைபெற்றிருந்தது. எதிரில் செல்வோருக்குச் சுத்தமாக வழியே இல்லை.

விரைந்து மழபாடிக்குச் செல்ல எண்ணிய பொன்னியின் செல்வருக்குத் தடையாக நின்றது எதிரே வந்த மக்கள் கடல் தான். ஆயிரக்கணக்கான மக்கள் எதிர்த் திசையில் வந்து கொண்டிருந்தார்கள் என்பதால், பொன்னியின் செல்வர் எவ்வளவு தான்



முயற்சித்தும் பயனில்லை. எப்படியோ முட்டி மோதிக் கொள்ளிடம் ஆறு வரை வந்துவிட்டார்.

ஆனால் ஆற்றின் இரு கரையிலும் நின்றிருந்த கூட்டத்தைப் பார்த்தால் அவருக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. 'கொள்ளிடம் முழுதும் இப்படி அமளிதுமளிப்படுகிறதே!' என்று வியந்தார்

அதனால் இன்னமும் தெற்கே சென்று ஆற்றை கடக்கலாம் என்று முடிவெடுத்தார் பொன்னியின் செல்வர். கொள்ளிடக் கரைக்கு முன்பே வலது பக்கமாய் திரும்பிய பாதையில் புரவியைச் செலுத்தினார். சற்று தூரம் சென்றவுடன் ஆற்றுக்கு எதிர்ப் பக்கம் மழபாடிக் கோயிலின் கோபுரம் தென்பட்டது. கும்பாபிஷேகத்துக்காகப் புதிதாக வர்ணம் அடிக்கப்பெற்று புதுப் பொலிவுடன் கோயில் இருந்தது எனத் தெரிந்தது. கோயிலுக்கு அருகில் படகுத் துறை இல்லை. அதற்கு ஏற்றாற் போல் ஆற்றுக்கு எதிர்ப் பக்கமும் படகேதும் இல்லை. 'பாதுகாப்புக் கருதி படகுத்துறையைத் தள்ளி வைத்திருப்பார்கள்' என யூகித்தார்.

பூவனத்தில் கருவூராருடன் வனவாசம் செய்துகொண்டிருந்த பொன்னியின் செல்வர் கொள்ளிடத்தின் மறுகரையில் என்ன செய்து கொண்டிருக்கிறார்?

கருவூராரின் வலியுறுத்தலுக்கு இணங்கிய பொன்னியின் செல்வர் தஞ்சை திரும்பினார். திரும்பி வந்தபோது தன் தஞ்சை அரண்மனையே வெறுமையாய் இருந்தது. விசாரித்ததில் அரச குடும்பத்தினர் அனைவரும் மழபாடிக் கும்பாபிஷேக விழாவுக்குச் சென்று விட்டனர் என்று அறிந்து கொண்டார். நெடுந்தூரம் வந்த களைப்பு அடங்க அவர் அரண்மனையில் ஓய்வெடுத்திருக்கலாம்- எப்படியிருந்தாலும் ஓரிரு நாட்களில் மழபாடிக்குச் சென்றவர்கள் திரும்பி வந்துவிடுவார்கள் என்று. ஆனால் தமக்கையிடம் 'மழபாடி விழாவன்று திரும்பிவிடுகிறேன்' என்று கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடுத்தது நினைவுக்கு வந்தது. அதுமட்டுமல்ல நேரே அங்கு சென்று மனைவியையும் குழந்தைகளையும் உடனே பார்த்துவிடவேண்டும் என்கிற ஆவல். வானதியைக் காண வேண்டும். குழந்தைகளைக் கொஞ்சவேண்டும் என்ற அவரது பெருந்தாகம் சமுத்திரத்துக்கு சமமாக இருந்தது. அரண்மனையில் கட்டியிருந்த அதிவேகமான குதிரை ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொண்டார். கொள்ளிடம் வரை வந்துவிட்டார். அதன் பின் தான் ஜன சாகரத்தைக் கண்டு அதில் சிக்கித் தவித்தார்.

பொன்னியின் செல்வர் கிளைப்பாதையில் இன்னும் சற்று தூரம் புரவியைச் செலுத்திச் சென்றார். ஆற்றங்கரையில் ஓரே ஒரு

படகு இருந்தது. 'இங்கு ஏறினால் படகு மழபாடிக்குச் சற்று தெற்கே இறக்கிவிடும். பரவாயில்லை! எப்படி என்றாலும் கும்பாபிஷேகம் முடிந்த அறிகுறிகள் தென்படுகின்றன' என்று நினைத்துக் கொண்டார். கும்பாபிஷேக தினத்தன்று வந்து அவரைச் சந்திப்பதாக சகோதரி குந்தவைப் பிராட்டிக்குத் தான் கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றியே ஆகவேண்டும் என்று உறுதி பூண்டவருக்குத் திருப்தி.

புரவியை ஒரு மரத்தில் கட்டினார். பின்னர் படகோட்டியிடம் "எந்த ஊரில் இந்தப் படகு அக்கரையேறும்?" என்று கேட்டார். முகமெங்கும் அம்மைத் தழும்புகள் நிறைந்த அந்த ஓடக்காரன் "கண்டராதித்தம்" என்றான்.

ஓடக்காரன் விந்தையாகப் பொன்னியின் செல்வரைப் பார்த்தான். எல்லாரும் மழபாடியை விட்டு வெளியேறும் சமயத்தில் இவர் ஒருவர் மட்டும் ஏன் அங்கு செல்கிறார்? அவனுக்கு வியப்பு! இன்றைய முழு தினமும் யாருமே இந்த திசையில் பயணிக்கவில்லை. எல்லோரும் எதிர்த் திசையில் தான். அதுவும் கோயில் விழா முடிந்த பின்புதான். எனினும் இப்போது படகை எதிர்க் கரைக்கு இவர் ஒருவரை ஏற்றிச் சென்றால் திரும்பி வரப் பலரும் கிடைப்பார்கள் என்று எண்ணிய ஓடக்காரர் படகு செலுத்த ஆயத்தமானார்.

படகுக்கூலி என்னவென்று முடிவானபிறகு ஓடம் நீரில் இறக்கப்பட்டது. நதியில் பூரணப் பிரவாகம் ஓடிகொண்டிருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் தண்ணீர் மயமாய் இருந்தது. லாகவமாகப் படகைச் செலுத்தினார் ஓடக்காரர். ஆனால் ஒரே கஷ்டம்! ஏதோ பேசிக்கொண்டே வந்தார். ஆனால் ஒன்றும் அருள்மொழியின் காதுகளில் விழவில்லை.

படகில் ஏறிய பொன்னியின் செல்வருக்குப் பல எண்ணங்கள். எல்லாம் மனைவியைப் பற்றியது தான். இதுவரை வானதி தனக்குச் செய்திருந்த பணிவிடைகளுக்கு ஈடாகச் சொல்வதற்குக் கதைகளிலும் காவியங்களிலும் கூட உதாரணம் இல்லை. 'நான் சென்றதினால் வானதி எப்படி மனம் கசந்து போயிருப்பாள்? ஒரு வேளை நான் விட்டுச் சென்றதற்காக என்னை துவேஷிக்கத் தொடங்கியிருப்பாளோ?' என்று யோசித்தவருக்குத் தெரியும், தன்னைக் கண்டவுடன் வானதி முகத்தில் பழையதையெல்லாம் மறந்து நாணங்கலந்த புன்னகை மலரும் என்று . 'எங்கு சென்றாய்? எதற்குச் சென்றாய?' என்றுகூடத் தன் வாழ் நாள் முடியும் வரை அவள் கேட்கமாட்டாள். அப்படிப் பட்டவளின் உள்ளத்தைப்



பற்றிக் கொஞ்சம் அலட்சியமாக இருந்து விட்டோமே!' என்று வருந்தப்பட்டார்.

'காதலென்பது சுத்தப் பொய்யும் புளுகும்தான். அதில் சிக்கித் திக்கு திசையைப் பற்றிகூடக் கவலைப்படாமல் இந்த ஊரைவிட்டு வெளியேறினேனே! விதியெனும் சாகரத்தில் ஒரு சிறு மீனை இரைத்தவன் நான். ஆனால் இனி எனக்கு நானே திட்டமாக அறிவித்துக் கொள்வது போல வானதியின் மனதுக்கு ஏற்ற கணவனாய் மாறவேண்டும்' என்று உறுதி பூண்டார்.

தன் மனைவியான அந்த மகா உத்தமியின் உள்ளத்தில் தான் குத்திய முள்ளின் வலியைத் தானே இப்போது அறிந்திருந்தார். அதற்கு வாழ்நாளெல்லாம் அவள் அருகிலேயே இருந்து சிசுருஷை செய்யவேண்டும் என்று முடிவு செய்தார்.

ஆற்றின் மத்தியில் வந்தவுடன் துடுப்பு வலித்துப் படகைத் தள்ளும் சத்தம் மட்டும் கேட்டது. கொள்ளிடத்தின் மேல் காற்று தடையின்றிப் பாய்ந்ததால் 'ஙொய்' என்ற மனோகரமான சத்தமும் கேட்டது. அந்த சுகமான அமைதியில் பொன்னியின் செல்வருக்கு ஒரு தெளிவு பிறந்தது. வருங்காலத்தைப் பற்றி எத்தனையோ மனோராஜ்ய இன்பக் கனவுகளைக் கண்டு கொண்டே பொன்னியின் செல்வர் படகில் பயணித்தார்.

போகப் போக ஓடத்தை தள்ளுவது சற்று சிரமமாகத்தான் இருந்தது. "இந்த ஆண்டில் வழக்கமாக மாரிக்காலம் ஆரம்பிக்க வேண்டிய காலத்துக்கு முன்பே குடகு நாட்டில் ஆரம்பித்து விட்டது. காவேரி ஆற்றிலும் அதன் கிளை நதிகளிலும் தண்ணீர்ப் பிரவாகம் வர வர அதிகரித்து வருகிறது" என்று படகோட்டி எடுத்துச் சொன்னார். கரை வரைக்கும் ஓடும் கொள்ளிடத்தைப் பார்த்தவுடனேயே பொன்னியின் செல்வருக்கு அது புரிந்து விட்டது. ஆனால் ஒரு சங்கடமும் இன்றி அக்கரையை அடையலாம் என்பதில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. சிறு வயது முதல் துடுப்புப் பிடித்த கரங்கள் அவனுடையவை. இந்த வயதிலும் கிழவன் திடமாக இருந்தான். தனியொருவனாய்ப் படகை அக்கரைக்கும் இக்கரைக்கும் தினந்தினம் பல முறை செலுத்துவான் எனத் தெரிந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் மழபாடி நகரில் கூட்டம் கலையும் சத்தம் காற்றிலே மிதந்து வந்தது. காலையில் முடிந்த கும்பாபிஷேகத்தைப் பார்த்து விட்டு மக்கள் வெள்ளம் கலையத் தொடங்கியது எனப் புரிந்து கொண்டார். மழபாடியையே ஊராய்க் கொண்ட கனதனவான்களின் மாட மாளிகைளும் ஆற்றுக்கு

அப்பாலிருந்து தெளிவாய்த் தெரிந்தன. அப்போது மழபாடி ஊருக்குத் தெற்கே ஆற்றங்கரையின் மேலே ஏதோ விழா ஒன்று நடந்து கொண்டிருந்ததை கவனித்துவிட்டார் பொன்னியின் செல்வர்.

"அங்கே என்ன?" என்றார்.

"அதெல்லாம் அரசகுலப் பெண்கள் பூஜைக்குப் போகிறார்கள். கண்டராதித்தம் என்னும் குலதெய்வக் கோயிலுக்கு. நம்மைப் போன்ற சாமானியரெல்லாம் அங்கு சென்றால் தோலை உரித்து விடுவார்கள்" என்றான் படகோட்டி.

பொன்னியின் செல்வர் மனதுக்குள் சிரித்துக் கொண்டார். 'தான் யாரென்று இந்த படகோட்டிக்குத் தெரிய நியாயம் இல்லை. ஏன்? கண்ணாடியில் பார்த்தால் தனக்கே தான் யாரென்று தெரியாது. அவ்வளவு மாற்றங்கள்!'

ஆனால் சற்று ஆர்வத்துடன் அந்தக் கூட்டத்தை ஆராய்ந்தார். ஓடத்தில் வந்து கொண்டிருந்த பொன்னியின் செல்வருக்குப் படகி லிருந்து காணும் போது முதலில் உருவங்கள் மங்கலாகத் தெரிந்தன. அதன் பின் தெளிவாகப் புலனாயின.

அவரது கூர்மையான கண்களுக்கு ஏதோ பூஜை அந்த கரையோரக் கோயிலில் நடந்து கொண்டிருந்தது என்பது தெரிந்தது. பல பெண்களும் அரசகுலத்துக்கு ஏற்றாற்போல் நகையும் உடை யும் தரித்திருந்தார்கள். நன்றாய்த் தேடியதில் அந்தக் கூட்டத்தில் தன் மனைவியும் தமக்கையும் கூடத் தெரிந்தார்கள். அவர் கண்களை அந்த திசையில் கவர்ந்திழுத்த காரணம் விதியாகத்தான் இருக்கவேண்டும். ஊருக்குள்போய் விசாரிக்கும் முன்னால் இப்படி மனைவியை தூரத்திலிருந்தே பார்ப்பதில் ஒரு சந்தோஷம். ஊருக்குள் சென்று தேடித் தன் மனைவியைப் பார்ப்பதைக் காட்டிலும் பத்து மடங்கு அதிக சந்தோஷம் உண்டாயிற்று.

'சரி, வேறு யாரெல்லாம் இருக்கிறார்கள்?' என்று பார்த்தார். வந்தியத்தேவனும் யாறனும் இருந்தார்கள். இடுப்பில் வாள் சொருகியவாறு பெண்களுக்குக் காவலுக்காக வந்திருந்தார்கள். 'அருகில் அந்தச் சிறுவன், தன் மகன் ராஜேந்திரனாய் இருக்க வேண்டும். அவன் கையைப் பிடித்து நிற்பவள் பழுவூர்ப் பெண்ணல்லவா?' பொன்னியின் செல்வருக்கு இருதயம் ஒரு முறை அடிக்க மறந்தது. எனினும் முன் போன்ற ஒரு வெறி அவர் மனதில் இப்போது இல்லை. கருவூராரின் சமீபத்தில் சில காலம் இருந்தது அவர் மனதில் ஒரு பக்குவத்தை ஏற்படுத்தியிருந்தது.



குடும்பத்தினரைப் பார்த்து விவரிக்க முடியாத ஒரு இன்பத்தை உணர்ந்தார். ஆனால் பொன்னியின் செல்வர் ஒரு முடிவுக்கு வந்திருந்தார். அங்கு சென்றால் தேவையில்லாத பரபரப்பு. 'ஏன் சென்றாய்? எங்கு சென்றாய்?' என்று பலருக்கு முன்னால் கேள்விகள் எழுப்பபடும். 'வீண் சங்கடம். மழபாடி சென்று விடுவோம்' என்ற முடிவை எடுத்தார். மனத்தில் குடிகொண்டுள்ள ஆர்வத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டார். 'நாம் அங்கு சென்றால் பூஜை கெட்டுப் போய்விடும். படகுத் துறைக்கு செல்லும் படியே படகுசெல்லட்டும். பின் சந்தித்து கொள்ளலாம். அங்கிருந்து நடந்து சென்றால் பூஜை முடியவும் சரியாய் இருக்கும்' என்று நினைத்தார். கடவுள்களின் விருப்பம் வேறுவிதமாக இருந்தது. பொன்னியின் செல்வர் அப்படி எண்ணிக் கண்ணிமைக்கும் நேரம் கூட ஆகவில்லை. போக வேண்டாம் என்று எண்ணிய போதும் அங்கு என்ன நடகிறது என்று அறிய அவருக்கு ஆவல். படகு கரையை நெருங்க நெருங்க இன்னும் உற்று நோக்கினார்.

அங்கே அவர் கண்ட காட்சி உண்மையில் அவரை திடுக்கிடச் செய்தது. ஆற்றங்கரையின் மேலிருந்த ஆல மரத்தின் விழுதுகள் ஆற்றின் நீரைத் தொடுமளவுக்கு நீண்டிருந்தன. அவ்விடத்தில் ஏதோ ஒன்று அவர் கண்களை உறுத்தியது. மாலை வெயில் பட்டு ஏதோ பள பள என்று மின்னியது. மறுவினாடி மறைந்தது. பழக்கப்பட்ட அவருடைய கண்களுக்கு அப்போது கரைக்குக் கீழே பலவித அசைவுகளும் தெரிந்தது.

'எல்லோரும் நிற்கும் இடத்தின் கீழே ஆற்றில் ஏதோ அசைவுகள் தெரிகின்றனவே? அது என்ன?'

மேலும் 'அதில் ஏதோ மர்மம் இருக்கிறது. கரையில் இருப்பவர்கள் இவர்களை கவனித்ததாகவே தெரியவில்லையே' என்றும் ஆதங்கப்பட்டார்.

முதலில் 'கூடுதல் காவலுக்காக அங்கு சோழ வீரர்கள் நிற்கிறார் களோ?' என்று யோசித்தார். ஆனால் உள் மனம் சொன்னது, நீரில் நிற்பவர்கள் அந்த விழாவுக்குச் சம்பந்தபட்டவர்கள் இல்லை என்று. வேறேதோ விபரீதம் என்று அறிந்து நெஞ்சு ஒரு கணம் ஸ்தம்பித்தது. விவரமில்லாத பயங்களும் கவலைகளும் மனத்தில் தோன்றி அவரை வதைத்தன.

கொள்ளிடக் கரையோரமாக நாணல் புதர்களில் நான்கைந்து தலைகள் தெரிந்தன. பின் அவை நாணல் புதர்களுக்கு இடையே மறைந்தன. அதற்கு பதிலாக இன்னும் சில தலைகள் வெளி வந்தன. மாறி மாறி மூழ்கிவரும் ஒரு கும்பல் அங்கு ஒளிந்து

கொண்டிருந்தது. எதற்காக? மனதுக்குள் பற்பல எண்ணங்கள் மின்னல் வேகத்தில் தோன்றின.

இன்னும் மேலே இருப்பவர்கள் வரவிருக்கும் அபாயத்தை உணராமலிருப்பது அவருக்குப் பெரும் வியப்பையளித்தது. கரையின் மீது எல்லோரும் பூஜையில் ஈடுபட்டிருந்தனர். பலரும் கண்களை மூடிப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். சிலர் பொங்கல் வைத்துக்கொண்டிருந்தார்கள். அபாயம் அருகில் இருப்பதை யாரும் யூகிக்கவில்லை. வந்தியத் தேவனும் மாறனும் கூட வேறு திசையில் தான் பார்த்துக் கொண்டிருந்தனர். 'சமயா சமயம் தெரியாமல் மேலே இருந்தவர்கள் இப்படி அக்கரை யில்லாமல் இருக்கிறார்களே! மேலிருந்தவர்களுக்கு அடுத்து உள்ள விபரீதம் தெரியவில்லையே!' என்று நினைத்தவுடன் பகீர் என்றது.

'ஐயோ! எப்படியாவது அவர்களை எச்சரிக்க வேண்டுமே' என்று பதறினார். ஆனால் ஆற்றின் நடுவிலிருந்து கத்தினால் யாருக்கும் கேட்காது. படகு சென்றடைய ஒரு யுகமாகும் போல. அதுவரை காத்திருக்கவும் முடியாது.

பாண்டிய நாட்டைச் சேர்ந்த சிலர் இரகசியமாகச் சதி வேலை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று இடும்பன் பூவனத்திலிருந்து கிளம்பும் முன் சொன்னானே. அது தான் இது! நிலைமை மிஞ்சிப் போய் விட்டது. அறியாத கூட்டத்தினுள் அதிரடியாகப் புகுந்து விட முயல்கிறார்கள் எதிரிகள்.

இருதயம் பதை பதைத்தது. "படகை அந்தப் பக்கம் திருப்பு" என்றார். திடீரென இவன் குரலில் அதட்டும் தோரணை தோன்றியவுடன் படகோட்டி திரும்பினான்.

"அப்பனே! அதெல்லாம் முடியாது!"

பொன்னியின் செல்வர் ஒரு முடிவுக்கு வந்தார். இனி இவனுடன் பேசிப் பயனில்லை என்று முடிவு கட்டினார். இப்படி நதிக்கு அப்பால் தன் குடும்பத்தைப் பார்த்துவிட்டு அவர்களுக்கு ஏதோ அபாயம் என்று தெரிந்தபிறகும் அவரால் சும்மாயிருக்க முடியவில்லை. வெண்ணெய் திரண்டு வரும் சமயத்தில் தாழியுடையப்போகிறதா? கண்மூடித் திறக்கும் நேரத்தில் இளவரசர் முடிவெடுத்துவிட்டார். சட்டெனப் படகிலிருந்து கொள்ளிடத்துக்குள் குதித்தார்.

படகோட்டிக்கு வியப்பு. தன்னுடன் வந்தவர் திடீரென ஆற்றில் ஏன் குதித்தாரென்று. 'அப்படி என்ன தலை போகிற அவசரம்? இன்னும் சற்று நேரத்தில் ஓடமே கரை ஏறப்போகிறது! ஏதோ சித்த பிரமை பிடித்துவிட்டது போல.' குதித்தவன்



பைத்தியக்காரன் என்று முடிவுகட்டிப் படகைக் கரைக்கு செலுத்தினான்.

நீரோ குளிர்ச்சியாய் இருந்தது. உடம்பெல்லாம் அப்போது நடுங்கியதை உணர்ந்தார் பொன்னியின் செல்வர். மூச்சு முட்டியது. உடனே நீந்த தொடங்கினார். நீருக்குள் சென்றவுடன் தான் வெள்ளத்தின் வேகம் அவருக்கு புரிந்தது. மேலே அமைதியாய் இருந்த பிரவாகம் உண்மையில் வேட்டை நாய்கள் உறுமுகின்ற மாதிரி சப்தம் செய்து கொண்டு ஓடிக்கொண்டிருந்தது. நீருக்கடியில் தான் அதை அவரால் உணர முடிந்தது.

நதியின் பிரவாகமானது அவரைத் தனது வழியில் இழுத்துச் செல்ல முயன்றது. அந்தப் பிரவாகத்தின் திசைக்குக் குறுக்கே நீரைக் கிழித்துக் கொண்டு நீந்துவதென்பது மிகவும் கடினமாக இருந்தது.

எனினும் ஆற்றுடன் போராடி ஆற்றங்கரையை அடைந்தார் பொன்னியின் செல்வர். மார்பளவுக்கே தண்ணீர் இருந்தது. கரையோரமாகக் கோரைப் புதர்கள் அடர்த்தியாய் மண்டி யிருந்தன. அதில் ஆற்று வெள்ளத்தில் மிதந்து வந்த நுரைத் திரள்களும், உதிர்ந்த இலைகளும் குப்பைகளும் புதர்களில் சிக்கியிருந்தன. ஆனால் எதிரி இல்லை!

கொள்ளிடத்தின் வேகத்துக்கு ஈடு கொடுத்து அவர் கண்ட சாதித்தத்தை அடையும்முன்பே பாண்டிய வீரர்கள் கரையேறிப் போர் தொடங்கி விட்டார்கள். அவர் கரை ஏறுவதற்குள்ளே மேலே போர் வாள்கள் மோதும் 'டணார் டணார்' சப்தம் கேட்டது.

நனைந்த உடலுடன் ஆலம் விழுதுகளில் பற்றிக் கொண்டு ஏறுவது அசாத்தியமாயிருந்தது. கையும் வழுக்கியது. விழுதும் வழுக்கியது. அதனால் பலமுறை திரும்ப ஆற்றுக்குள் விழுந்து விடுவோம் என்று தோன்றியது. எனினும் பொன்னியின் செல்வர் ஒரு வெறியுடன் மேலே ஏறினார்.

நேரம் ஆக ஆக நெஞ்சுத் துடிப்பு அதிகமாயிற்று. மேலே ஏறிய வுடன் எதை எதிர்பார்ப்பது என்று தெரியவில்லை. போவதற்குள் போர் முடிந்து விடக்கூடாதே என்று வேண்டினார்.

கரையின் மேல் ஏறி பார்த்தபோது துவந்த யுத்தம் நடந்து கொண்டிருந்தது. ஆனால் இரு பக்கங்களும் சம பலத்துடன் போராடவில்லை. பத்துப் பேருடன் வந்தியத் தேவனும் மாறனுமாகத் தனியே போராடிக்கொண்டிருந்தது தெரிந்தது.

மாறனையும் வந்தியத் தேவனையும் எதிரிகள் தாக்கி நெருக்கிக் கொண்டிருந்தார்கள். நெருக்கப்பட்டவர்களின் நிலை நெருக்கடியான கட்டத்தை அடைந்திருந்தது. 'தன்னிடம் ஆயுதமும் இல்லையே' என எண்ணினார் பொன்னியின் செல்வர்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பது
## வந்தான் மாவீரன்

**"யா**ரது?" தமது ஆட்களெல்லாம் மேலே வந்து விட்டனரே என்று நினைத்த ரவிதாசனுக்கு அதிர்ச்சி. தானும் மற்ற பாண்டிய நாட்டவரும் வந்த வழியிலேயே வரும் இவன் யாரென்று நினைத்தவன், விழுதைப் பிடித்து ஏறி வந்தவனை ஒரு நொடியில் அடையாளம் கண்டு கொண்டான்.

ரவிதாசன் பலமுறை சோழநாட்டுக்குள் மாறுவேடம் தரித்து ஊடுருவியிருந்தான். அப்போதெல்லாம் எவ்வளவு முறை இவன் தேரிலும் புரவியிலும் பவனி வருவதையும், அதைக்கண்டு சோழ நாட்டு மக்கள் அமர்க்களம் செய்வதையும் பொறாமையுடன் பார்த்திருந்தான். அவன் வரும் போது காதுகள் பிளக்க மக்கள் செய்த ஆரவாரத்தைக் கேட்டு வயிற்றெரிச்சல் கொண்டிருந்தான். அவனது புன்னகையை பார்த்து அவன் கழுத்தை நெரித்து கொல்லவேண்டும் என்ற வெறி எத்தனை முறை ரவிதாசனுக்கு வந்திருந்தது? 'மறக்கும் முகமா அது? ஆனால் இங்கு இவன் எப்படி?'

ஆழம் விழுதுகளைப் பிடித்துக் கொண்டு ஆற்றிலிருந்து தொப்பலாக நனைந்து கரையின் மேலேறி வந்த பொன்னியின் செல்வர் மேலே எட்டிப் பார்த்தார். ஓடிச் சென்று காலால் அவரை எட்டி உதைத்து ஆற்றுக்குள் மீண்டும் தள்ளிவிடவேண்டும் என்று ரவிதாசனுக்கு ஆசை. அவன் தீட்டியிருந்த திட்டத்தில் இப்படி ஒரு நிகழ்வே இல்லையே?

ஆனால் அப்போது பார்த்து வந்தியத் தேவனுடன் வாள் போர் செய்து கொண்டிருந்தான் ரவிதாசன். பரமேசுவரனையும் அவனையும் சேர்த்துத் தாக்கிக் கொண்டிருந்த வந்தியத் தேவனை சமாளிப்பதே சிரமமாயிருந்தது.



அதுவரை ரவிதாசனுக்குப் பாண்டியர் கையோங்கியதில் அளவில்லாத திருப்தி உண்டாகியிருந்தது. கரைக்கு மேலே இருக்கும் சிறு இடத்தைப் பாண்டிய வீரர்கள் ஆக்கிரமித்துவிட்டார்கள். அவர்களைத் தவிர மாறனும் வந்தியத் தேவனும், சோழ நாட்டுப் பெண்களும் தான். இருந்த இரண்டு வேல் பிடித்த சோழ வீரர்களையும் யமலோகம் அனுப்பியாயிற்று. வேறு யாருக்கும் நிற்கக்கூட இடம் இல்லை. கீழே நின்றவர்களெல்லாம் பார்வையாளர்கள் தான். சோழ நாட்டு வீரர்கள் ஒன்றும் செய்ய இயலாமல் கரைக்குக் கீழே நின்றிருந்தனர்.

அதுவரையில் ரவிதாசன் மிகவும் உற்சாகத்துடன் போராடினான். மாறன் வந்தியத் தேவன் என்ற இரு வீரர்களில் ஒருவன் அடிபட்டு விழுந்தாலும் போதும்; தான் சண்டையிலிருந்து விடுபட்டு நந்தினியின் அருகே இருந்த சிறுவனிடம் செல்லலாம் என்ற முடிவில் இருந்தான் ரவிதாசன். அங்கு சென்றால் ஒரே வெட்டில் நந்தினியைக் கொன்றுவிட்டு சக்கரவர்த்தியைக் கைப்பற்றி ஓடிச் சென்று ஆற்றுக்குள் குதிக்கலாம் என்று ஏற்பாடு. மற்றவர்கள் மீதமுள்ள வீரனைக் கொன்றுவிட்டுத் தப்பிக்கும் வழியை பார்க்கவேண்டும் என்று ஏற்கனவே அறிவுறுத்தியிருந்தான்.

இதுவரை இரு வீரர்களும் மிகவும் சாமர்த்தியமாகப் போராடினர்கள். அவர்களும் எவ்வளவு நேரம்தான் களைப்பில்லாமல் பத்துப் பேரைச் சமாளிக்க முடியும் என்று யோசித்தபடி போராடிக் கொண்டிருக்கும் சமயத்தில் அருள் மொழி வானத்திலிருந்து குதித்தாற்போல் வந்துவிட்டான்! இல்லை! இல்லை! பாதாளத்திலிருந்து புழுவைப் போல எட்டிப் பார்க்கிறான்.

வந்தியத் தேவனும் பொன்னியின் செல்வருடைய வருகையை கவனித்திருக்க வேண்டும். ஒரு உத்வேகத்துடன் போரிட்டான். அவர் தட்டுத் தடுமாறிக் கரையேறும் வரை யாரும் அவரை அண்டாமல் பார்த்துக் கொண்டான்.

எல்லோரும் வெகு உற்சாகமாக இருந்தார்கள். இதற்கு முக்கியமான காரணம் பொன்னியின் செல்வருடைய எதிர்பாராத வருகை தான். ஆட்சேபணைக்கு இடமின்றி பொன்னியின் செல்வர் தான் இந்தப் பிராந்தியத்திலேயே மஹா வீரர். அவரை வாள் போரில் சமாளிப்பதென்பது எதிரிக்கு இலேசான காரியம் அல்ல.

குந்தவையும் வானதியும் ஆனந்தக் கடலில் மூழ்கினார்கள். வானதியின் குதூகலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. தன் கணவன் திரும்பி வந்ததில் அவளுக்கு மிகவும் சந்தோஷம்

உண்டாயிற்று. நன்றாகப் பார்த்தாள். உண்மைதான்; அவளுடைய கண்கள் அவளை ஏமாற்றவில்லை. மணாளன் வந்துவிட்டார் என்று ஆனந்தம், சந்தோஷம். நிம்மதி.

வானதியின் மனத்தில் இது நாள் வரை இருந்தது கவலையா, கஷ்டமா, குறையா, குற்றமா என்று யாருக்கும் தெரியாது. ஆனால் எல்லாம் ஒரு வினாடியில் பறந்துவிட்டன.

கணவன் திரும்பி வருவானா என்ற அவள் மனத்தில் ஏற்பட்டிருந்த சந்தேகம் நீங்கிற்று. பொன்னியின் செல்வன் தன்னுடைய காதலை மறந்து விடவில்லை என்பதும் புரிந்தது.

'மணந்தால் இவனைப் போலொருவனை மணக்க வேண்டும். இல்லாவிடில் கன்னிகையாயிருந்து காலம் கழிப்பது மேல்' என்று பெண்களெல்லாம் நினைக்கும் அவரை மணக்கும் பாக்கியத்தை அடைந்தேன். அவரை இழந்துவிட்டோமோ என்று நினைக்கும் போது மீண்டும் காணும் பாக்கியத்தையும் கொண்டேன்' என்று ஆனந்தித்தாள். இந்த ஆனந்தம் என்றென்றைக்கும் நீடித்திருக்க வேண்டுமென்ற ஆசைதான் அவளுக்கு.

கூட்டத்தில் இருந்த எல்லோரும் பொன்னியின் செல்வருடைய வருகையைக் கண்டு ஆனந்தம் கொண்டனர். அதற்கு விதி விலக்கு நந்தினி தான். ஏன் என்றால் அவள் அந்தக் கூட்டத்தில் இல்லவே இல்லை! அவள் மட்டுமல்ல. அவள் கூட இருந்த அந்த சிறுவனையும் காணவில்லை. ரவிதாசன் போராடும் போது தொடர்ந்து அவள் மீதே ஒரு கண் வைத்திருந்தான். ஆனால் பொன்னியின் செல்வனுடைய வருகையினால் அவனது கவனம் கடுமாறிற்று அந்த நொடியில் நந்தினி எங்கேயோ மறைந்து விட்டாள்.

ஊர்வலமாய் வரும் போது நந்தினி கூட சந்தோஷமாய்த் தான் இருந்தாள். இந்தக் கும்பாபிஷேகவைபவம் முடிந்தவுடன் மதுரை மகுடாபிஷேகத்துக்குத் தேதி குறிக்கலாம் என்று உத்தம சோழர் அவளிடம் வாக்குக் கொடுத்திருந்தார். நந்தினிக்குத் தெரியும் அது அன்பினாலோ நேர்மை நெறியினாலோ இல்லை என்று. 'பாண்டியரின் துஷ்டத்தனத்தை அடக்கி அவனைக் கட்டுக்குள் வைத்திருக்க எவ்வளவு நாள் தான் சோழனால் முடியும்?'

பாண்டிய வம்சாவளியை துரத்திவிட்டு மதுரையில் அரசர்களாயிருந்து செங்கோல் செலுத்தி வந்தார்கள் சோழர்கள். பாண்டியர் வம்சத்தின் கடைசி அரசரான வீரபாண்டியன் சந்ததியில்லாமல் காலமானான் என்று எல்லாரும் நினைத்துப் பெருமூச்சு விட்டனர். பிறகு தான் தெரியவந்தது, அவனுக்கு பல வாரிசுகள் இருப்பதாகவும் அவர்களைச் சுற்றிப் பாண்டிய ஆபத்துதவிகள்



குழுக்களை அமைதிருப்பதாகவும். இனி சோழருக்கு நிம்மதி வேண்டுமென்றால் மதுரையில் அந்த வம்சத்தின் ஒருவன் ஆளவேண்டும் என்ற நிர்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

சோழருக்கு மதுரையிலிருந்து வரும் வருவாயை விடச் செலவு தான் அதிகம். தேவையில்லாமல் அங்கே படைகளை நிறுத்தி வைத்திருக்க வேண்டும். விடுதலையைக் கொடுத்து விட்டொழித்து விடலாம் என்று உத்தமர் முடிவெடுத்துவிட்டார்.

நந்தினி ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். சோழரின் அரவணைப்பில் தானும் அந்த சிறுவனும் இருக்கும் நிலையில் ரவிதாசன் தன்னை ஒன்றும் செய்ய மாட்டான் என்று நினைத்திருந்தாள். கும்பாபிஷேகத்தின் போது மாறன் பரபரப்புடன் நடத்தி வந்த காரியங்களினால் தன் பாதுகாப்பின் மீது தனி கவனம் செலுத்தி வந்தாள். சிறுவனையும் தன்னுடைய பார்வையிலிருந்து அகல விடுவதில்லை.

சற்றும் எதிர் பாராத போது ரவிதாசன் வந்து தாக்கி விட்டான் என்றவுடன் மிகவும் பிரமிப்பு அடைந்தது நந்தினி தான். இந்தத் தாக்குதல் தன்னைக் கொன்று இந்தச் சிறுவனை மீட்டுச் செல்லவே என்று அறிந்து கொண்டாள். அவ்வப்போது ரவிதாசன் தன் மீது செலுத்திய விசேஷமான பார்வையில் அது தெளிவாய்த் தெரிந்தது. அதுவும் போர் நடப்பதைப் பார்த்தால் ரவிதாசன் திட்டமிட்டது நடந்துவிடுமென்றும் புரிந்தது. மாறனாலும் வந்தியத் தேவனாலும் வெகு நேரம் தாக்குப் பிடிக்க முடியாது என்று அவளுக்கு புரிந்தது.

'வழியோடுபோகிற சனியனை விலைக்கு வாங்கியது போல் வாங்கிக் கொண்டோமே' என்று நினைத்தாள் நந்தினி. சரியான சந்தர்ப்பத்துக்காகப் பார்த்துக் கொண்டிருந்தாள். திடிரென ரவிதாசனின் கவனம் சிதறியது. அதன் காரணம் என்னவென்று ஆராய நந்தினி காத்திருக்கவில்லை. இன்னும் ஒரு நொடி பொறுமை காத்திருந்தால் அவள் பொன்னியின் செல்வரையும் தரிசித்திருப்பாள்; வேறு விதமாகவும் முடிவு எடுத்திருப்பாள்.

நந்தினியின் ஆகாசக் கோட்டையெல்லாம் அப்படியே பொலபொலவென்று உதிர்ந்து ஒன்றும் இல்லாமல் போனது. சோழர் சாம்ராஜ்யத்திற்குள் அடங்கிக் கப்பங்கட்டிக் கொண்டு வருவதாயிருந்தால் இவனுக்குப் பாண்டியர் நாட்டுக்கு அரசன் என்ற பட்டம் கட்டுகிறேன் என்று சொல்லித்தான் கூட்டி வந்தார்கள். ஆனால் இவ்வளவு பெரிய ஆபத்து வரும் என்று அவள் நினைக்கவில்லையே. அவளுக்கு இந்தப் போரின் முடிவு எவ்வகையில்

இருந்தாலும் தோல்விதான். ரவிதாசன் சோழரை வீழ்த்தித் தன்னையும் கொன்று இந்தச் சிறுவனைக் கைபற்றினாலும் தோல்வி தான். நேர்மாறாக ரவிதாசன் மாண்டாலும் தன்னால் இந்த சோழருக்கு உபயோகம் இருக்காது என்று உதறிவிடுவர்கள். ஏன் சிறையில் கூட தள்ளிவிடுவர்கள். சீதை விரும்பிய மாய மானைப் போனது எல்லாம். இனி உயிரைத் தக்க வைத்து கொள்வதே முக்கியம் என்று முடிவெடுத்தாள். பார்த்தால் மாறனும் வந்தியத் தேவனும் வெல்வது போலில்லை. அப்படியே வென்றாலும், பாண்டியர் தரப்பில் இவ்வளவு எதிர்ப்பா என்று பிரதமர் எண்ணக்கூடும். அதனால் திட்டங்கள் மாறலாம். அதனால் இங்கு இனியும் இருப்பது சரியில்லை. கூட்டத்தில் தேடினாள். சிறுவன் ராஜேந்திரனோடு விளையாடிக் கொண் டிருந்தான். சட்டென அங்கு சென்றாள்.

நந்தினி சிறுவனின் கையை கெட்டியாகப் பிடித்து இழுத்தாள். கோயிலின் பின்னாலிருந்த புதர்களுக்குள் அவனுடன் சென்று மறைந்தாள். இரவுக்குள் எங்காவது சென்று ஒளிந்து கொள்ளவேண்டும். இன்னும் சில ஆண்டுகளுக்கு வெளியில் தலை காட்டக் கூடாது என்று முடிவெடுத்தாள். நந்தினிக்கு முதலில் அந்தச் சிறுவனிடம் என்ன சொல்வதென்று தெரிய வில்லை. 'இதுவரை சோழர்களை அரக்கர்கள் என்று கூறிவிட்டு இப்போது அவர்களிடம் ஏன் வந்தாய்?' என்று அவன் கேட்டு விடுவானோ என்ற பயம்கூட அவளுக்கு. ஆனால் அவன் ஒன்றுமே அதைப் பற்றிக் கேட்கவில்லை. தனிமையிலேயே வாழ்ந்துவிட்டு இப்போது மனிதர்களைப் பார்க்க அவனுக்கும் ஆனந்தமாய்த்தான் இருந்தது. ஆனால் மீண்டும் தனிமையில் வெளியேறியவுடன் நிச்சயமாகக் கேள்விகள் கேட்பான். சமாளித்தாகவேண்டும்.

நந்தினி அங்கிருந்து நழுவியதை யாரும் கவனிக்கவில்லை.

குந்தவைக்கோ இருப்புக் கொள்ளவில்லை. 'இருதய அந்தரங் கத்தில் பகவானை பிரார்த்த்ததன் பயனாகவே யமபாசத்தி லிருந்து அவன் உயிரை மீட்டுவிடத் தம்பி வந்துவிட்டான். அவள் வளர்த்த தம்பி சரியாக சொல்லிவைத்தது போல வந்துவிட்டான்.' பெருமூச்சு விட்டார்கள் பலரும். மகளிருக்கு மட்டுமல்ல, வீரர்களுக்கும் தான்.

அந்த அஸகாய சூரனை வைத்து எவ்வளவு போர்களை வென்றுள்ளது சோழ சைனியம். இப்போது சரியாக வந்து விட்டார். வியர்த்து விறுவிறுத்துக் களைத்துப்போகும் நிலைக்கு



வந்திருந்த வந்தியத் தேவனுக்குப் பொன்னியின் செல்வனுடைய வரவு புத்துயிர் தந்திருந்தது. இந்த சோழ சாம்ராஜ்யத்திலுள்ள லட்சோப லட்சம் ஜனங்களின் அன்பு நிறைந்த உள்ளங்களின் இடம்பிடித்த கோமகன் வந்துவிட்டான்.

நெடுநாளாகப் பாராத மாபெரும் வீரரின் வாள் வீச்சு அபாரமாயிருக்கும். பொன்னியின் செல்வன் வாளை சுழற்றும் காட்சியைப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். அவன் சுழன்று சுழன்று போராடுவதில் அவன் தலை முடி தனியாக ஒரு நாட்டியம் ஆடுமே. காணவேண்டிய காட்சியது.

'அவரைப் போல் ஒரு வீரர் இல்லை. ஆனால் அவருக்கும் வாள் ஒன்று வேண்டுமல்லவா?' என்று நினைத்தான் மாறன்.

தரையில் ஒரு வாள் கிடந்தது. கீழே கிடந்த கத்திகளில் ஒன்றைப் பார்த்துவிட்டான் மாறன்.

பாண்டியப் போராளி ஒருவனின் கையிலிருந்து அது விழுந் திருக்க வேண்டும். இருவருடன் லாகவமாக போராடியபடியே அந்த வாளின் கைப்பிடியின் மேல் காலால் ஒரு மிதி மிதித்தான் மாறன். அந்த வாளும் வானில் வட்டமிட்டு பொன்னியின் செல்வரிடம் பறந்து சென்றது.

வாள் காற்றில் வட்டமிட்டபோதே "பொன்னியின் செல்வா" என்று கத்திவிட்டுத் தன் போரைத் தொடர்ந்தான் மாறன். பொன்னியின் செல்வரும் அந்த வாளைச் சரியாகப் பிடித்து கொண்டார். அவர் கைக்கு வாள் எட்டியவுடன் அதை எடுத்துச் சுழற்றத் தொடங்கிவார்.

'பொன்னியின் செல்வா' என்ற அக்குரலை கேட்டவுடன் போராடிகொண்டிருந்த இடும்பன் தானாகத் திரும்பினான். இடும்பனோ வந்தியத் தேவனுடன் போராடிக் கொண்டிருந்தான். என்ன தான் சமாளித்தாலும் அவனால் எவ்வளவு நேரம் தாக்குப் பிடிக்க முடியும் என்ற நினைப்பில் வந்திய தேவன் களைப் படையும் விதமாகப் போரிட்டனர் பாண்டியர்.

பொன்னியின் செல்வரின் பெயரைக் கேட்டவுடன் இடும்பனுக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. அந்த மாவீரனைக் கொன்று தன் பழியைத் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்று விரும்பினான். அண்ணனையும் தம்பியையும் கொன்றவன் என்ற புகழ் என்றென்றும் அவனுக்கே உரியதாக வேண்டும் என்று ஆசைப்பட்டான்.

திரும்பிய இடும்பன் நகர்வதற்குள் பொன்னியின்செல்வன் இரண்டு பாண்டிய வீரர்களைக் காயப்படுத்தியிருந்தார். அவர்கள்

தரையில் விழுந்தனர். அடுத்து யார் என்று அவர் தேடும்போது இடும்பனுக்கு ஒரு சந்தேகம்.

'யாரது? போராடுகிறவன் மிகவும் பழக்கப்பட்ட மனிதன் போலிருக்கிறானே. தலைவிரி கோலமாக ஈர உடையுடன் போராடுவது பொன்னன் போலிருக்கிறதே?' என்று சந்தேகம் வந்தது இடும்பனுக்கு. யானைத் துதிக்கையின் பிடியிலிருந்து காப்பாற்றுவது என்பது அவ்வளவு சுலபமான காரியமா?... அப்படிக் காப்பாற்றியவனை மறக்கத்தான் முடியுமா?

'தன் பிராண சிநேகிதன் என்று கருதிய பொன்னன் இங்கு என்ன செய்கிறான்? கையில் வாளைவைத்துக்கொண்டு என்ன செய்கிறான்? கண்களே ஏமாற்றாதீர். அது பொன்னனே தான். ஆனால் எப்பேற்பட்ட வாள் வீச்சு! எப்படிக் கற்றுக் கொண்டான்? முக்கியமாக இந்த அமளியில் யார் பக்கம் போராடுகிறான்? ஒரு வேளை இவ்வாறு இருக்குமோ? தன்னை பூவனத்திலிருந்து பின் தொடர்ந்து வந்து தனக்கு ஆதரவாக போராடுகிறானோ? ஆனால் ஒரு நொடி அவனுக்கு தலை சுற்றியது. அதிர்ச்சி, ஆச்சரியம், இவன் பொன்னன் அல்லவா? இது என்ன கனவா? காட்டில் நம்முடன் இருந்தவன் இன்று 'பொன்னியின் செல்வன்' என்று பெயர் சொல்லி அழைக்கப்பட்டானே' என்ற சந்தேகங்கள் எழுந்தன.

எனினும் அவன் வாய் அவனையும் அறியாமல் வளைந்தது. ''நண்பா பொன்னா!'' என்று இடும்பன் கத்தினான். வாள்களின் 'டணார் டணார்' சப்தத்துக்கு மேல் அந்த பழகிய குரல் கேட்டது பொன்னியின் செல்வருக்கு. அந்தக் கூச்சலில் அவனது அன்பு வார்த்தை அவருக்குத் தெளிவாய் கேட்டது. திரும்பினார்.

பொன்னின் செல்வருடைய வெறி பிடித்த முகத்தைக் கண்ட இடும்பன் மெல்லிய புன்னகை புரிந்தான். ''நண்பா'' என்றான் மீண்டும்.

அவனைக் கண்டு ஒரு முறை புன்னகைத்தார். ஆனால் 'இனி அவன் பேசினால் நம் உறுதி குலையும்' என்று நினைத்தாரோ பொன்னியின் செல்வர்?

இல்லை, இப்படி இருக்குமோ? மாறன் விட்டெறிந்த வாள் அவர் கையில் இறுக்கமாய் இருந்தது. இருவரைக் கொன்ற குருதி அதன் மேல் இன்னமும் இருந்தது. கத்தி கையில் வந்தவுடன் மாறினாராத் தெரியாது.

அந்த ரத்தக்கறை அவர் வீரர் என்பதை நினைவுப்படுத்தியதோ? இல்லை, க்ஷத்ரிய ரத்தத்தை சிந்தியவன் இடும்பன் என்று அந்த வாளின் மீதிருந்த ரத்தம் ஞாபகப்படுத்தியதோ? அல்லது,



எப்பேர்ப்பட்ட சோழ சமஸ்தானத்தின் பட்டத்துக்குரிய இளவரசனைக் கொன்றவன் இடும்பன் என்று அறிவுறுத்தியதோ?

மூன்று மாதக்காலம் உயிருக்கு உயிராய்ப் பழகிய இடும்பன் இவன் அல்லன். வடதிசைப் படையின் மாதண்ட நாயகராகிய ஆதித்த கரிகாலரைச் சதி செய்து கொன்றவன் இவன். சோழர் ரத்தத்தைத் தரையில் சிந்தியவன்' என்று எண்ணம் தோன்றியது. அதற்கு மேல் ஒரு நொடி கூட யோசிக்கவில்லை பொன்னியின் செல்வர். உடனே திடீரென ரௌத்ராகாரம் அடைந்தது அவர் முகம்.

ஏனோ தெரியவில்லை, தான் பழகி நேசித்த நண்பன் இவனல்ல என்று இடும்பனுக்குப் புரிந்திருக்க வேண்டும். அவன் முகத்தில் சபாடவில்லை.

ஆத்திரம் அவ்வாற்றின் பிரவாகத்தைப் போல் அளவிட முடியாததாயிற்று. பொன்னியின் செல்வர் அந்த வாளை இடும்பனின் இருதயத்துக்குள் செலுத்தினார்.

அது அவன் இதயத்துக்குள் நேரே சென்றிருக்க வேண்டும். வாயிலிருந்து ஓரத்திலிருந்து ரத்தம் உடனடியாக வந்தது. இடும்பன் நண்பனை நம்பாமல் பார்த்தான். பின் எல்லாம் அவனுக்கு விளங்கியது.

பொன்னியின் செல்வர். வாளை உருவினார். இடும்பன் அப்படியே பின்னால் சாய்ந்தான். ஆற்றங்கரையில் உயிரற்று அவன் விழுந்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்து ஒன்று
## வேல் பாய்ந்தது!

தினந்தினம் மரணத்தை எதிர்பார்த்தே வாழும் போராளிக்குக் கூட யமதர்மன் பாசக்கயிறுடன் நெருங்கும் போது அது ஒரு வியப்பைத் தரும் அனுபவமாகத்தான் இருக்கும்.

கொள்ளிடக் கரையில் குற்றுயிராய்க் கிடந்தான் பரமேசுவரன். தன் உடலிலிருந்து வெளிவந்த குருதி வெள்ளத்தில் கிடந்தபோதும் உயிரைத் தக்கவைத்துக் கொண்டு தானிருந்தான்.

பாண்டியப் போராளிகளுக்கும் சோழர்களுக்கும் நடந்த போரில் அவன் வந்தியத் தேவனின் வாளினால் காயப்பட்டுக் கீழே விழுந்திருந்தான். எனினும், எவ்வகை ஆயுதம் தன்னைத் தாக்கியது என்று அவனுக்கு சரிவரத் தெரியவில்லை. ஆனால் சக்ராயுதம் போல மூன்று சோழ வீரர்கள் பாண்டியர் படையை துவம்சம் செய்து கொண்டிருந்தார்கள் என்று தெரிந்தது. அவர்களில் யாரோ வீசிய வாள் தான் தன்னை வெட்டியிருக்க வேண்டும் என்று விழுந்து சற்று நேரத்தில் யூகித்து கொண்டான்.

முதலில் அவனுக்கு வலி தெரியவில்லை. தரையில் விழுந்தபோது பட்ட அதிர்ச்சியில்தான் வலி முதலில் புரிந்தது. தனது ஆடையெல்லாம் ஈரமானது போல இருந்தது- அதுவும் மிதமான சூடு கொண்ட நீரில் நனைந்தது போல ஒரு எண்ணம் பரமேசுவரனுக்கு. சற்று நேரம் தரையில் கிடந்த பின் தன்னை நனைத்தது தனது ரத்தம்தான் என உணர்ந்தான். பாண்டிய நாட்டு ரத்தம் இப்படி வீணாகிறதே என்று ரவிதாசன் அடிக்கடி சொல்வானே. அந்தப் பாண்டிய நாட்டு ரத்தம்.

விழுந்தவனை யாரும் கண்டு கொள்ளவில்லை. செத்தொழிந்தான் என்று சோழர்கள் நினைத்திருப்பார்கள். அவர்கள் நினைப்பதிலும் தவறில்லை. தங்கள் உயிரைக் காத்துக் கொள்ள மீதியிருக்கும் பாண்டிய வீரர்கள் போராடிக் கொண்டிருப்பார்கள். அவர்களைச் சொல்லியும் குற்றமில்லை.

ஆனால் ஒன்று. கீழே விழுந்ததில் அவனது மூளை தெள்ள தெளிவாக வேலை செய்யத்தொடங்கியது. சுற்றிலும் நடக்கும் போர் சப்தங்களை அகற்றி ஒரு அமைதியான சூழலை அவன் மனம் ஏற்படுத்திக்கொண்டது. முதலில் அந்தத் தெளிவான நிலையில் சில விஷயங்கள் புரிந்தன.

தன் சரித்திரத்தில் எல்லாம் முடிந்தது என யூகித்துக் கொண்டான். அதுமட்டுமல்ல, பாண்டியர் விடுதலைப் போராட்டத்தில் ஒரு சகாப்தமும் முடிந்தது. ரவிதாசன் மீண்டும் கணக்கில் தவறு செய்திருந்தான். கூட்டிக் கழித்துப் பார்த்தபோது பாண்டிய ராஜ்ஜியம் கிட்டவில்லை. பெரியதொரு பூஜ்ஜியமே மிஞ்சியது.

ஆனால் பரமேசுவரன் இருந்த நிலையில் அதைப் பற்றியும் கவலைப்படவில்லை. இனி தான் உயிர் பிழைக்க வழியில்லை என அறிந்தான். அவனது வலியைப் பொறுத்துக் கொண்டு காலனின் பாசக்கயிற்றுக்குக் காத்திருக்க வேண்டியது தான். அப்போது அவன் வாழ்வின் ஏக்க துக்கங்களும், கோப தாபங்களும் மனக்கண் முன் தொடர் படமாக அரங்கேறின. எல்லாத் தாபங்களுக்கும்



முன் தனது கடைசித் தோல்வியெனத் தான் கருதிய பழுவூர் இளையரச் தப்பிச் சென்ற நிகழ்வு அவன் கண்முன்னால் வந்தது.

ஒரு காலத்தில், சேவூரில் பாண்டியர் படைகள் வெருண்டு நாலாபுறமும் ஓடினார்கள். அந்த வெட்கமே பல நாள் அவனுக்குப் ஆறாகவில்லை. மீண்டும் குலத்தை நிலைநாட்ட ரவிதாசன் செய்த வியூகத்தைக் கெடுத்த பாவம் இவனை மட்டுமே சேர்ந்தது. அந்தப் படலத்துக்காகவும் அதில் இவன் பங்குக்கும் என்றாவது ரவிதாசன் தன்னைப் பூரணமாய் மன்னித்துவிடுவான் என்று நம்பியிருந்தான் பரமேசுவரன். ஆனால் நாட்கள் செல்லச்செல்ல அவனுக்கு நம்பிக்கை குறைந்தது. 'தவறு செய்தவனுக்குப் பரிகாரம் செய்யச் சந்தர்ப்பம் கொடுக்கக்கூடாதா?' என்று கடவுளை தினந்தினம் திட்டினான் பரமேசுவரன்.

சாக இன்னும் நேரம் இருந்தது என உணர்ந்தவன் படுத்திருந்தபடியே தன் தலையை லேசாக உயர்த்திச் சுற்றுப்புறத்தை கவனித்தான். 'என்னதான் நடக்கிறது?' என்று கவனிக்க ஒரு ஆர்வம் எழுந்தது.

கொள்ளிடக் கரையில் இருந்த கிராம தேவதை கோயிலின் வாசலில் மாபெரும் வாள் வீச்சு நடந்து கொண்டிருந்தது. அதன் விளைவாகக் கோயிலுக்கு முன் பெண்கள் இட்டிருந்த பொங்கல் பானைகளெல்லாம் சிதறிக்கிடந்தன. அவற்றின் அடியில் இருந்த விறகுத் துண்டுகள் இன்னமும் புகைந்து கொண்டிருந்தன.

கோயிலுக்கு ஒரு புறம் மூன்று வீரர்கள் கதை காவியத்தில் வரும் அர்ஜுனனைப் போல, வீமனை போல, அபிமன்யூவைப் போல வாள் கொண்டு சமர் புரிந்து கொண்டிருந்தனர். எதிரி என்றாலும் வீரத்தையும் வாளோடு வீரன் விளையாடும் திறமையையும் ரசிக்காமல் இருக்க முடியவில்லை பரமேசுவரனால். பாண்டிய வீரர்களும் சாகும் வரை போராடுவது என வீரத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர். இரண்டு குழுக்களுக்குமே உயிருடன் எதிரிகளை கைப்பற்ற எண்ணம் இல்லை. வாள்கள் மோதிய 'டணார் டணார்' சப்தம் அவனது மன அமைதியைக் கலைத்தது.

எல்லாம் முடிந்தது என்று பரமேசுவரனுக்கு தெரியும். படுத்திருந்த இடமெல்லாம் ஈரம். தன் உதிரம். அவசரமாய்க் கசிந்த அவன் ரத்தம் உடலை இன்னமும் ஈரமாக்கிகொண்டிருந்தது. அவனுடைய உடல் பாகங்கள் கெஞ்சின. தலை சுழன்றது. கண்கள் இருண்டு வந்தன. கண்ணை மூடித் தூங்கச் செல்ல வேண்டும் போலிருந்தது. 'எழாமல் போனால் கூடப் பரவயில்லை' என்று

பரமேசுவரன் முடிவு செய்தான். எனினும் ஏதோ ஒரு ஆர்வத்தில் மெல்ல மெல்ல அவன் தலையை, கோயிலின் வேறு புறமாகத் திருப்பிப் பார்த்தான்.

அங்கு ஒதுங்கியே நின்ற சோழர் குலப் பெண்களை பார்த்தான் பரமேசுவரன். மிகவும் அழகாக வியூகம் அமைத்துப் பெண்களுக்கு ஒரு கீறல்கூட ஏற்படாமல், அவர்களை ஓரம் தள்ளிவிட்டார்கள் சோழ வீரர்கள். அவர்களின் வாளுக்கு பதில் சொல்லிவிட்டே பெண்களின் பக்கம் காலெடுத்து வைக்க முடியும் பாண்டியர்கள்.

எனினும் எல்லாரும் நின்றிருந்தது கொள்ளிட கரையின் மேட்டில். கீழிறங்கும் படிகளோ போரினால் தடைபட்டிருந்தது. அதனால் பெண்களால் சண்டை முடியும் வரை கீழிறங்க முடியாத நிலைமை. குளிருக்குக் கூடி நிற்கும் பறவைகள் போலப் பட்டு புடவை அணிந்த அந்த இளவரசிகள் ஒன்றுகூடி நின்றிருந்தார்கள்.

ஓரக்கண்ணால் பெண்கள் பக்கம் நோட்டம் விட்டான். பெண்களின் கூட்டத்தில் பலரும் அலங்காரத்துடன் நின்றிருந்தார்கள். ஆனால் பரமேசுவரன் கண்களுக்கு வேறு யாரும் கண்களில் தெரியவில்லை. பழுவூர்ப் பெண் மட்டும்தான் தெரிந்தாள். அவளைப் பார்த்தவுடன் பரமேசுவரனுக்குக் குற்ற உணர்வு மீண்டும் அதிகரித்தது. தான் பழுவூர் இளவரசியைத் தப்பிக்கவிட்டதால் தான் இன்று இந்த நிலை. 'இல்லையேல், கதையே வேறு விதமாய்ச் சென்றிருக்கும்.'

எல்லோருக்கும் முன் தன்னைத் திட்டிய ரவிதாசனின் வார்த்தைகள் காதில் ஒலித்தன. ''ஒரு நாள் பரமேசுவரா, மதுரையைக் கைப்பற்ற நாம் நடத்தும் போராட்டம் தோற்றுப் போகும். அதன் காரணங்களை அலசி ஆராய்ந்து, ரிஷி மூலம் நதி மூலம் தேடிப் போனால் பரமேசுவரர் எனும் முட்டாளின் காரியத்தால்தான் அது நிகழ்ந்தது என்று தெரியும். இன்று நீ பழுவூர் இளவரசியைத் தப்பிக்க விட்டது எவ்வளவு பெரிய இழப்பு என உனக்குத் தெரியாது. பின்னால் தெரியும்'' என்று அடிக்கடி திட்டுவானே. அது மீண்டும் கேட்பது போல இப்போதும் அவன் காதில் ஒலித்தது.

ஆனால் தன் தோல்வியினால் இழப்பு இன்னமும் பன்மடங்கானது. அதை ரவிதாசனே எதிர்பார்க்கவில்லை. ஓடிச் சென்ற மாறனும் லோகாவும் பாண்டிய குலப் பொக்கிஷங்களைக் கண்டுபிடித்து இன்னொரு மாபெரும் அடியையும் கொடுத்து விட்டனர் பாண்டியர்களுக்கு.



பாண்டியர் விடுதலைக்காக உடல் பொருள் ஆவியை அர்ப்பணம் செய்யச் சித்தமான இந்த வீராதி வீரர்களுக்கு சாவு பெரிதல்ல. ஆனால் ஒன்றும் சாதிக்காமல் செல்கிறோமே என்று வருத்தம். அதுமட்டுமல்ல, ஒரு அவப்பெயர் கொண்டு போகப் போகிறோமா என்று கூடத் தோன்றியது. இப்போது செத்தால் என்றென்றும் தம்மை ரவிதாசன் என்னவென்று நினைப்பான்? பாண்டியர் போராட்டத்தைக் குழிதோண்டிப் புதைத்தவன் என்று தானே சொல்லுவான். 'மீண்டும் எழவேண்டும். ஒரு வாளை எடுக்க வேண்டும். போராடவேண்டும்.' பரமேசுவரன் எழ முயன்றான். முடியவில்லை. உடம்பில் வலி மட்டுமே மிஞ்சியது.

'என்ன செய்ய முடியும் நம்மால்?' என்று மீண்டும் சாய்ந்தான், தரையில். அப்போது பக்கத்தில் ஏதோ அவனுக்குத் தென்பட்டது. 'மின்னுகிறதே. அது என்ன?' என உற்றுப்பார்த்தான். அவன் கைக்கு எட்டிய தூரத்தில் கூரிய பிரகாசமான வேல் ஒன்று தரையில் கிடந்தது. அடர்ந்த ஆலமரத்தின் நடுவே வந்த சூரியனின் கதிரொளி அதன் மேல் பட்டு அது வெள்ளி போல மின்னியது. அதைப் பார்த்தவுடன் சாகக்கிடந்தவனை ஒரு தைரியப் பிசாசு பிடித்துகொண்டது. திரும்பி பெண்களை மீண்டும் ஒரு முறை பார்த்தான் பரமேசுவரன்.

சற்று தூரத்தில் லோகா மற்ற பெண்களுடன் நின்றிருந்தாள். சண்டையின் திசை மாறியதை அறிந்த பெண்களுக்கு பயம் போனது; பிரமிப்பு வந்தது. இப்போது சோழ வீரர்களின் போராடும் திறனை ரசித்துகொண்டிருந்தார்கள். முகமெல்லாம் பிரகாசித்தன.

லோகாவுடைய முகத்தைப் பார்த்தால் பரமேசுவரனுக்கு உடம்பெல்லாம் பற்றி எரிந்தது. இப்போது பார்த்து புன்னகைக்கிறாளே என்ற வெறி. 'ஒன்று அவளையாவது கொன்றுவிட வேண்டும், அல்லது தானாவது செத்துப் போய்விட வேண்டும்' என்று தோன்றியது.

அப்போது பரமேசுவரனுக்கு, தான் செய்த மகத்தான குற்றத்துக்குப் பரிகாரம் செய்ய ஒரு வழி தோன்றியது. என்ன தான் அவனைத் திட்டினாலும் ரவிதாசன் என்றால் அவனுக்கு உயிர். 'எப்படியிருந்தாலும் சாகப் போகிறோம்.ஆனால் என்றென்றும் ரவிதாசன் நம்மைப் பற்றிய நல்ல நினைவுகள் கொள்ள ஒரு வழியிருக்கிறது' என அவனுக்கு தோன்றியது.

பரமேசுவரன் கீழே விழுந்து கிடந்தான். அவன் பட்டிருந்த காயத்தால் மீண்டும் எழுந்து அவனால் போராட முடியும் என்று

சோழர்கள் நினைக்கவேயில்லை. ஆனால் அவன் உயிர் மூச்சிருக்கும் வரை பாண்டிய நாட்டுக்காக உழைத்திருக்க வேண்டும் என்று எண்ணினான்.

படுத்துக் கிடந்த பரமேசுவரனோ ஒரு ஈட்டி தன் கைக்கு எட்டிய தூரத்தில் இருந்தான். இதுவரை அவனுக்கு என்று ஆதரவாய் இராத தெய்வங்களை இப்போது கும்பிட்டான். ''தாயே மீனாக்ஷி! எனக்கு சக்தி கொடு'' என்று வேண்டிக் கொண்டு மெல்ல மெல்ல ஈட்டியை நோக்கி நகர்ந்தான். உடலெங்கும் ரணமாய் இருந்தது. தீ பற்றியெரிவது போல வலி. ஆனால் யுகம் போலத் தோன்றிய சில நொடிகளில் அந்த ஈட்டியை அவன் கை எட்டியது.

மெல்ல மேலே கையை நீட்டி அந்த வேலைப் பிடித்தான். விரல்களால் அழுத்திப் பிடித்தான். அப்போது அவன் மனதில் பல எண்ணங்கள் ஓடின. 'சாகும் தறுவாயில் தன் உள்ளத்தில் குமுறிகொண்டிருந்த தோல்வியது. வெற்றி கிட்டும் சமயத்தில் அந்தப் பழுவூர் பெண் குறுகிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டாள்! அதனால் அவளே முதன்மையான எதிரி. வாழ்க்கையில் அதுவரையில் அவன் அனுபவித்திராத திருப்தியை தரக்கூடிய காரியமிது. சாகும் தறுவாயில் வரப்போகிறது. எதிர் பாராமல் கிடைத்த இந்த சந்தர்ப்பத்தை நிறைவேற்றும் வரை இந்தப் பாழும் உடலில் ஜீவன் ஒட்டிக்கொள்ள வேண்டுமே.'

உட்காரப் பார்த்தவனால் முடியவில்லை. பெண்கள் கூட்டத்திலிருந்த லோகாவை உற்றுப் பார்த்தான். மங்கலாக தெரிந்தது எல்லாம். 'காலம் இன்னமும் இல்லை. சீக்கிரம் செயல்பட வேண்டும்' என்று எச்சரித்தது அவன் மனம்.

ஆனால் மனம் இன்னமும் ஒன்றை சொன்னது. 'ஒரு பெண்ணைக் கொல்வதா? உனக்கு மட்டும் ஏன் அப்படிப் பிசகான எண்ணம் தோன்ற வேண்டும்? சாகும் போது இப்படி நீசனாகி விட்டாயே?'

குழம்பியது ஒரு நொடிக்குத்தான். பின்பு 'மனம் சொல்வதையெல்லாம் கேட்டால் நரகம் தான். அந்த பிசகைச் செய்துவிடு' என்றது அவன் தேசப்பற்று. கடைசியாக இராஜ்யத்தின் நன்மைக்காகவே அந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்யத் துணிந்திருந்தான். வீரனின் தர்மத்தை மறந்தான். தனக்கு இந்தப் பெண்ணால் நேர்ந்த கர்வபங்கத்தைப் பழிவாங்கியே ஆக வேண்டும் என்று நினைத்தான் பரமேசுவரன்.



இந்தப் போராட்டத்துக்குத் தன் உறுதியை சரித்திரத்தில் நிலை நாட்டுவதற்காக எப்படியாவது பிரயத்தனம் செய்தான். 'ஸ்த்ரீ ஹத்தி' தோஷம் என்ன? ஆயிரம் ஆயிரம் ஜன்மங்கள் தன்னை சரித்திரம் பிடித்த நரகத்தில் வைத்தாலும் சரி. சாகும் முன் தான் செய்த தவறுக்கு பிராயசித்தம் தேட வேண்டும்' என்று நினைத்தான் பரமேசுவரன்.

முக்கியமாக, சாகும் போது தான் செய்யும் இந்தச் செயலால் ரவிதாசன் தன்னை நினைக்கும் போதாவது இனி நல்லவனாய் நினைத்துக்கொள்வான். அதனால் எல்லவற்றுக்கும் இன்று ஒரு முடிவு கட்ட வேண்டும்.

தவறுக்கு விமோசனம் தேட நினைத்தவனுக்கு அபாரமான வாய்ப்பு. ஆனால் அதுவரை உயிர் இருக்க வேண்டுமே? ஈட்டி எறிய சக்தி வேண்டுமே? பரமேசுவரன் லோகாவை நோக்கினான். மெல்ல தட்டுத் தடுமாறித் தரையிலிருந்து வேலை எடுத்து உயர்த்தினான்.

பெண்கள் கூட்டத்தில் நின்றிருந்த வானதிக்கு அன்றைக்கு என்றுமில்லாத உற்சாகம் ஏற்பட்டிருந்தது. ஆசைக் கணவன் வந்து விட்டான். இனி அவனை விட்டு ஒரு நிமிஷ நேரமும் பிரிந்திருக்க மனம் வராது என்று நினைத்துகொண்டிருந்த வானதி அவனது வாள் வீச்சை கண்டு ரசித்துகொண்டிருந்தாள். கணவன் புரிந்த சாகசங்களைபற்றிக் கேள்விதான் பட்டிருந்தாள். நேரே பார்க்க இப்போது ஒரு அரிய சந்தர்ப்பம். மாறனும் வந்தியத் தேவனூர் ஆளுக்கு இரண்டு பேருடன் போராடி கொண்டிருந்தனர். பொன்னியின் செல்வனைச் சுற்றி மூன்று பேர். ஆனால் பெருமாளின் சக்ராயுதம் போலச் சுழன்று மூன்று பெயரையும் முறியடித்தார்.

வானதியைப்போல், மாறன் இருவருடன் வாள் போர் நடத்தியதை கவனித்துப் பூரித்து கொண்டிருந்தாள் லோகா. பரமேசுவரன் புழுவைப் போலக் கையில் ஈட்டியுடன் அடி அடியாய் தன்னை நோக்கி வருவதை கவனிக்க வில்லை.

கணவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த வானதிதான் தரையில் ஒரு அசைவை முதலில் கண்டாள். பாண்டியப் போராளி ஒருவன் அடிபட்டுக் கீழே கிடந்தான். அவன் ஒரு வழியாகப் பிராணனை விட்டுவிட்டான் என்று நினைத்தால், இல்லையே! உயிர் போயிற்று என்று பார்த்தால் மெல்ல மெல்லப் புழுவைப் போல நகர்ந்தான். எதைக் கையில் வைத்துக்கொண்டு நகர்கிறான்

என்று பார்த்தால் கீழே விழுந்திருந்த ஈட்டி ஒன்றை அல்லவா எடுத்து கொண்டு அருகே வந்துகொண்டிருந்தான்!

வானதி அப்படியே சிலை போல நின்றாள். அசைவில்லை. யார்மீது ஈட்டியை எறியப்போகிறான் என்று மெய்மறந்து பார்த்தாள். முதலில் போரிட்ட சோழர்களின் மேல் தான் ஈட்டியை எறியப்போகிறான் என்று நினைத்தாள். ஆனால் அப்படி இல்லை.

லோகாவைப் பார்த்துவிட்டான் பரமேசுவரன். அவள் மீது ஈட்டியை ஏவத் தயாரானான். சூரிய ஒளி கொஞ்சம் மேலிருந்த மரங்களின் நடுவே வந்திருக்கவேண்டும். ஈடியின் கூர்மையான முனையின் மேல் அது பட்டு மின்னியிருக்கவேண்டும். அந்த ஒளியைக் கடைசி நிமிடத்தில் லோகாவும் கவனித்துவிட்டாள். அதற்குள்ளாக முழுச் சக்தியையும் பயன் படுத்தி ஈட்டியை எறிந்து விட்டுச் சாய்ந்தான் பரமேசுவரன். அந்த மாபெரும் செயலினால் அவன் உயிர் சற்று நேரத்தில் பிரிந்துவிடும். அதனால் வெற்றியா தோல்வியா என்று அவன் தெரிந்து கொள்ளாமல் ஏங்கிக் கொண்டே விழுந்தான்.

அப்போது வேலை எறிந்தவனை லோகா நேரே பார்த்தாள். அடையாளம் தெரிந்து கொண்டாள். அவன் முகம் முழுவதும் ரத்தம். எனினும் தன்னைக் காட்டில் காவல் காத்த பரமேசுவரன் இவன் என்று புரிந்து கொண்டாள். அவன் முகத்தில் இருந்த வெறி அவளை நோக்கியதே என்று தெரிந்தது. அந்த வேலும் தன்னை நோக்கி எறியப்பட்டது தான் என்று புரிந்து கொண்டாள்.

பறந்து வந்த ஈட்டியை மந்திரத்தில் கட்டுண்டவள் போல லோகாவும் பார்த்தாள். அதற்குள்ளாக ஈட்டி எங்கு செல்கிறது என்று வானதி கணக்கிட்டுவிட்டாள். அவள் நினைத்தது போல் ஈட்டி நேராக லோகாவுக்குத் தான் வந்து கொண்டிருந்தது. யோசிக்க நேரமில்லை. உடனே பாய்ந்து லோகாவை தள்ளி விட்டாள் தரையின் மீது.

இவளும் விழுந்து விடலாம் என்று தான் எண்ணியிருப்பாளோ என்னவோ? ஆனால் கணக்கில் ஒரு சிறிய தவறு. ஈட்டி வானதியின் விலா எலும்பில் பாய்ந்தது.

ஈட்டி பறந்து வந்ததையும், வானதியும் லோகாவும் தரையில் சாய்ந்ததையும் பெண்களே முதலில் கவனித்தனர். அவர்களின் சத்தம் கேட்டபின் தான் போரிடும் ஆண்கள் திரும்பினார்கள். கூச்சலையும் குழப்பத்தையும் கண்டனர்.

ஒரக்கண்ணில் ரவிதாசனும் பரமேசுவரன் செய்த காரியத்தைப் பார்த்துவிட்டான். 'நண்பா பரமேசுவரா! இந்தக் காரியத்தை நீ



எதற்காகச் செய்கிறாய் என்று எனக்கு புரிகின்றது. உன்னை நான் திட்டியதெல்லாம் தவறு. உன் விடுதலை வேட்கையைக் குறை சொன்னதும் தவறு தான்' என்று நினைத்தான்.

எல்லாரும் அந்த பெண்கள் இருவரும் தரையில் கிடப்பதை கண்டாலும் அவர்கள் மேல் ரத்த கறைகள் தெரிந்தாலும் என்ன நடந்தது என்று முழுமையாகப் புரியாமல் ஸ்தம்பித்தனர். சில வினாடி நேரத்துக்குள் எல்லாம் நடந்து முடிந்து விட்டது. கண் மூடித் திறக்கும் நேரத்துக்குள் நடந்து விட்டது.

பெண்மணிகள் இருவரும் அவனால் எவ்வளவு காயப்படுத்தப் பட்டார்கள் என்பது ஒன்றும் சரிவரத் தெரியவில்லை. லோகா தரையில் விழுந்து கிடந்தாள். வானதியும் விழுந்திருந்தாள். இருவர் மேலும் செக்கசெவேல் என்று இரத்தம் பரவலாக பரவியிருந்தது. மற்ற பெண்கள் இவற்றையெல்லாம் திகிலுடன் பார்த்துக் கொண்டுதானிருந்தார்கள்.

தன் மேல் கிடந்த பெண் அப்படியே சக்தியிழந்து வருவதை உணர்ந்தாள் லோகா. உடம்பெல்லாம் ரத்தம். ஆனால் தனக்கு ஒரு கீறல் கூட இல்லை. தனக்கென வந்த வேலைத் தடுத்து விட்டாள் வானதி என்று புரிந்து கொண்டாள்.

சட்டென லோகா எழுந்து அமர்ந்தாள். விழுந்தது விழுந்த படியே கிடந்தது வானதிதான். அந்த ஈட்டி கொடும்பாளூர் இளவரசியின் ரத்தத்தை சுவைத்திருந்தது என எல்லோரும் அப்போது தான் புரிந்து கொண்டனர்.

ஆனால் அந்தத் தாக்குதலின் விளைவு முதலில் பரமேசுவரனுக்குத் தெரிந்து விட்டது. இன்றும் ஒரு பெண்ணின் எதிர்பாராத தலையீட்டினால் காரியம் கெட்டது. குறிபிசகாய்ப் போயிருந்தாலும் பரவாயில்லை. மற்றும் ஒரு பெண்ணைக் கொன்று என்றென்றும் ஸ்த்ரீஹத்தி தோஷத்தைப் பெற்று கொண்டோமே என்ற வருத்தம்.

வாழ்வின் எல்லைக்கே தோல்வி தன்னை துரத்தி வந்ததென்றும், காரியம் நிறைவேறவில்லை என்றும் பார்த்தபின்னரே உயிரை விட்டான் பரமேசுவரன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்திரண்டு

# தியாகத்தில் சிறந்த தியாகம்

தரையில் விழுந்த இருவரையும் எல்லோருமே உற்றுப் பார்த்தனர். ஓடிச்சென்று உதவமட்டுமல்ல, அசையக்கூட யாருக்கும் தெம்பில்லை. விபரீதம் நடந்து விட்டது என்று மட்டும் சந்தேகமறத் தெரிந்தது. பாண்டியர் எறிந்த வேலொன்று விழுந்து கிடந்த இரு பெண்களில் ஒருவரையோ இருவரையுமோ தாக்கிவிட்டது. அதற்கு அத்தாட்சியாய்க் கீழே கிடந்த இருவர் மீதும் பாரபட்சமின்றி ரத்தம் பரவியிருந்தது.

ஒரு நொடிக்கு ஒன்றும் நடக்கவில்லை. ஒரு யுகம் போலத் தோன்றிய அந்த ஒரு நொடியின் முடிவில் லோகா மட்டும் எழுந்தாள். தன் மேல் ஈட்டி பட வில்லை என்று தெரிந்ததும் துள்ளி எழுந்து நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். வானதியோ இன்னும் விழுந்த இடத்திலேயே அசைவின்றிப் படுதிருந்தாள். லோகாவின் மேலிருந்தது வானதியின் ரத்தம் என்று எல்லோருக்கும் உடனே தெரிந்விட்டது. குருதியின் அளவைப் பார்த்தால் வானதிக்குப் பெரும் காயம் ஏற்பட்டிருந்தது என்பதும் புரிந்தது. கண் மூடித் திறக்கும் நேரத்துக்குள் நடந்தது இந்த கோர சம்பவம். உடனே ஆற்றங்கரையின் மேலிருந்த மக்கள் எல்லாம் பதறியடித்துக் கொண்டு கூச்சலிட்டனர்.

ஏறக்குறைய போரும் முடிவடையும் நிலையில் இருந்தது. வந்தியத் தேவனும், மாறனும், பொன்னியின் செல்வர் அருகிலிருந்த போராடுகிறோம் என்ற பெருமிதத்தில் இருந்தனர். பாண்டியரை வீழ்த்திவிட்டோம் என்ற சந்தோஷமும் இருந்தது. அனேகமாகப் பாண்டியர் எல்லோரும் அடிபட்டு மாண்டு விட்டனர். மிஞ்சி நின்றது ஒரு வீரன் தான். மாறன் அவனைச் சுட்டிகாட்டினான்.

பாண்டியப் போராளிகளில் தனியாய் நின்றவன் ரவிதாசன் மட்டும்தான். உடலெங்கும் வாள் வெட்டுகள் பெற்று ரத்தம் ஒழுக கோரமாகக் காட்சி தந்தான். மாறன் கோபத்தில் நடுங்கும் குரலில் "அவனைப் பிடியுங்கள்" என்றான். ரவிதாசனை உயிருடன் பிடிப்பதே முக்கியம் எனக்கருதி அப்படிச் சொன்னான்.

மேடாய் இருந்த ஆற்றங்கரையில் நடந்த சண்டையிலிருந்து வேளக்காரப்படையினர் அதுவரை ஒதுங்கியே நின்றனர். போர்க்களமோ மிகக்குறைந்த பரப்பளவு கொண்ட இடம். நிறையப் பேர்



வாளை சுழற்றினால் விழ்வது நண்பனா எதிரியா என்று தெரியாத நிலை. அதிலும் மற்றவருக்கு வேலை வைக்காமல் சோழ நாட்டு இளவரசர்கள் மூவரும் வெகு லாகவமாக எதிரியைச் சமாளித்துக் கொண்டிருந்தனர். தேவையென்றால் போருக்குள் மூக்கை நுழைக்கலாம் என்று சோழ நாட்டு வீரர்கள் ஒதுங்கியே போரை ரசித்துக் கொண்டிருந்தனர்.

இப்போது தனித்து நின்ற எதிரியை உயிருடன் கைது செய்ய வேளக்காரப்படைத் தலைவன் கட்டளையிடுகிறான் என்று அதைச் செய்து முடிக்க ஆயத்தமானார்கள்.

ஆனால் அப்போது பார்த்துப் பெண்கள் பக்கத்திலிருந்து கூச்சலும் குழப்பமும் எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தன. மாறனும் திரும்பிவிட்டான். பெண்களில் யாருக்கோ காயம் பட்டிருந்தது போல, என்று பயந்த வீரர்களின் கவனம் திசை திரும்பியவுடன் ரவிதாசன் ஒரே எட்டில் பாய்ந்து கொள்ளிட நதிக்குள் குதிக்க ஆயத்தமானான். ஆற்றங்கரையின் விளிம்பில் நின்றான், ஆதரவுக்கு ஒரு ஆலம் விழுதைப் பிடித்துக்கொண்டு.

கரையோரம் நின்றபடி என்ன நடக்கிறது என்று ரவிதாசனும் கணக்கிட்டுவிட்டான். அவன் ஆற்றுக்குள் குதிக்கும் முன் புரியாத ஒரு உணர்வை அவன் முகம் வெளிக்காட்டியது. அதைப் பார்த்த மாறனுக்கு அது ஏளனப் புன்னகையா அல்லது எதிரியின் மனதில் வேறேதும் எண்ணம் குடிகொண்டிருந்ததா என்று புரியவில்லை.

ரவிதாசனது அந்தப் புன் சிரிப்பு பரமேசுவரனைப் பார்த்துத் தான். வெகு காலமாக பரமேசுவரனை ரவிதாசனுக்கு மிகவும் பிடிக்கும். தனக்கு என்ன நேர்ந்தாலும் அவனே இந்தப் பாண்டியப் போராளிகளின் கூட்டத்தை வழி நடத்திச் செல்ல வேண்டுமென்பது ரவிதாசனின் ஆசை. அதெல்லாம் அந்தப் பழுவூர் இளவரசி காட்டிலிருந்து தப்பிக்கும் படலத்துக்கு முன்னால். அதற்குப்பின் இருவருக்கும் இடையே பூசல்கள் அதிகமாகி விட்டன. ஆனால் இப்போது பரமேசுவரனிடம் கல்லாக மாறியிருந்த அவன் மனமும் கனிந்தது.

'ஐயோ பாவம்! சாகும் தருவாயில் தன்னுடைய தவறை நிவர்த்தி செய்யவே பரமேசுவரன் மாண்டுவிட்டான். அதற்கு முன் அவன் கொல்ல நினைத்த லோகாவுக்கு பதிலாக ஒன்னும் தெரியாத வானதியைக் கொன்று விட்டான். நாட்டின் விடுதலைக்காக அப்படிப்பட்ட கோர கிருத்தியங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. அந்த ஸ்த்ரீ ஹத்தி தோஷப் பாவம் அவன் செத்தாலும் தொடருமே! அதை எனக்காகத்தான் செய்தான். ஆனால் நண்பனே

கவலைப்படாதே! உனது விழுப்புண்களுக்கு வீர சொர்க்கத்தில் ஆறுதல் கிட்டும். பரமேசுவரா! உன்னை நான் பூரணமாக மன்னித்துவிட்டேனடா!' என்று நினைத்தே சிரித்தான்.

'பரமேசுவரா! உனக்கு நான் மனத்தினால் செய்த அநீதியை மன்னித்துவிடு. என்றைக்கு நாம் வேறு உலகத்தில் சந்தித்தாலும் உன் தியாகத்தை முன்னிட்டு உன் வீரத்தை ஒப்புக்கொண்டு உனக்குத் தலை வணங்குகிறேனன் என்று நினைத்துக் கொண்டான். கடைசியாக ஒரு முறை இறந்து கிடந்த பரமேசுவரனின் அசைவற்ற உடலை கண்டு கண் கலங்கினான்.

அதுமட்டுமல்ல. கடைசி நேரத்தில் ரவிதாசனுக்கு ஒரு தடுமாற்றம். 'பரமேசுவரா உன்னைக் கட்டி அழக்கூட எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே? அதைச் செய்யாமல் சென்றால் நியாயமாகுமா? இந்தச் சோழர் என்னை பிடித்தால் பிடிக்கட்டும். கழு மரத்தில்தானே ஏற்றுவான். இல்லை, யானைக்காலால் என் தலையை இடறச்செய்வான். அதனால் பரவாயில்லை. உன்னைக் கட்டி அணைக்கவேண்டும் என்று எனக்கு தோன்றுகிறதே' என்று யோசித்தான்.

பின் அவனது அறிவு தன் ஆற்றலை நிலைநாட்டிக்கொண்டது. 'இல்லை. இல்லை. இந்தப் போராட்டத்தைத் தொடர வேண்டும். பரமேசுவரனின் வீரத்தையும் தியாகத்தையும் வெளியே எடுத்துச் சொல்ல ஒரு ஆளாவது வேண்டுமே' என்று நினைத்துக் கொண்டு ஆற்றில் குதித்தான்.

உடனே இரு நண்பர்களும் தண்ணீர்க் கரையோரம் பாய்ந்து வந்தார்கள். பிடிப்பதற்குள் அந்தக் கல்நெஞ்சன் கொள்ளிடத்துக்குள் குதித்துவிட்டான் என்ற கோபம் மாறனுக்கு.

இதற்குள் ரவிதாசன் தண்ணீரிலே சிறிது தூரம் சென்றுவிட்டான். அவன் மிதந்த விதத்தைப் பார்த்தால் அவன் பிராணன் போய்விட்டது போலத்தானிருந்தது. இல்லை அவன் பட்டிருந்த காயங்களினால் அதி சீக்கிரம் அவனும் மரணமடைவான் எனத் தோன்றியது.

ஆற்றில் அவன் பின்னால் தானும் குதிக்கலாமா என்று ஆயத்தமானான் மாறன். அவனுடைய கையைப் பிடித்து நிறுத்தி அதைவிட முக்கியமான வேலையிருக்கிறது என அறிவுறுத்தினான் வந்தியத் தேவன்.

அதற்குள்ளாகப் பொன்னியின் செல்வர் வாளைத் தரைமீது விட்டெறிந்துவிட்டுப் பெண்கள் கூட்டமாய் நின்ற இடத்துக்கு ஓடிவந்தார். அசம்பாவிதம் ஏற்பட்டுவிட்டது என்று அவருக்கு



உள்ளுணர்வு சொன்னது. தரையில் ரத்தக் குளத்தில் கிடந்த வானதியைப் பார்த்தவுடன் அவர் இதயம் ஒரு நொடி இயங்க மறுத்தது. பேச்சு மூச்சற்ற ஆசை மனைவியின் அருகே இடிந்து போய் உட்கார்ந்தார்.

வானதிக்கு முதலில் சுய நினைவு இல்லாமலிருந்தது. அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகக் கண் விழித்துப் பார்க்கவும் தம் எதிரிலுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளவும் ஆரம்பித்தாள் வானதி. அவளுக்கு லேசாக உணர்வு திரும்பியபோது, தன்னுடைய கரத்தைப் பிடித்திருந்தார் ஆசைக் காதலர் என்று உணர்ந்தாள். அதுவும் வெகு நாட்களுக்கு பின். 'இவருடன் இல்வாழ்க்கை தொடங்கி அது முடியும் தருவாயில் வந்துவிட்டாரே. அவர் காலங் கடந்து வரவில்லை. சரியாக வந்துவிட்டாரர் என்று பூரிப்புடன் நினைத்துக்கொண்டாள் .

அருகிலிருந்த ஆருயிர்க் காதலனைக் கண்டபின் வானதிக்குப் பல ஞாபகங்கள் வந்தன. ஒரு முறை அவரை 'யானைப் பாகா' என்று அழைத்துக் குருவிக்கூட்டைக் காக்கச் சொன்னது ஞாபகம் வந்தது. ஒரு சமயம், அவர் ஈழம் கிளம்பும் முன் ஆரத்தித் தட்டை இவள் தவறவிட்டதும் நினைவுக்கு வந்தது. இப்படி இன்னமும் எவ்வளவோ சுவையான சம்பவங்களை அவரருகே இருக்கும் போது நினைத்து கொண்டே இருக்க வேண்டும் போலிருந்தது. ஆனால் திடீரென அந்த ஞாபகத்தை ஒரு சுடும் வலி வந்து பாதியில் குலைத்தது. தன்னுடைய ஆயுள் மெல்ல மெல்ல நழுவிச் செல்கிறது என்றறிந்தாள். மயக்கம் வந்து கண்களை மூடினாள்.

பாண்டியப் படையால் ஹிம்சிக்கப்பட்ட இவள் பிழைப்பது கஷ்டம். ஈட்டியினால் வீழ்ந்து யமனோடு அவள் போராடிக் கொண்டிருந்த சமயத்தில் என்ன சிகுருஷை செய்தாலும் காப்பாற்றுவது கடினம் என்று எல்லாருக்கும் தெரியும். ஆனாலும் அவசர அவசரமாய் வைத்தியர்கள் அழைக்கப்பட்டனர். அவர்களும் வானதியைப் பரிசோதித்தனர். நாடி பிடித்தனர். ரத்தத்தில் ஊறிய துணிகளை அகற்றி வேறு துணிகளை காயத்தின் மீது வைத்தனர்.

வைத்தியர்கள் வெளிப் படையாக சொல்லவில்லை யென்றாலும் கையை விரித்துவிட்டார்கள். அவளைப் பிழைப்பிக்க அரண்மனை வைத்தியர்கள் பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்த போதும் எந்த நிமிஷத்திலும் துக்கச் செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவள் அடைந்த காயங்களினால் யமன் உலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் என அவர்கள் யூகித்துவிட்டனர்.

வைத்தியர்களுக்கு அது தெரியும் முன் வானதிக்குத் தெரிந்து விட்டது. அவளது பூவுலகு வாசம் இன்னும் சில நொடிகளுக்கு மட்டும் தானென்று அறிந்து கொண்டாள். வானதியின் சௌந்தர்யம் நிறைந்த முகம் வலியினால் மாறவில்லை. ஒரு அமைதியே உருவெடுத்தது போலிருந்தது. வலிவேதனைகளுக்கு அப்பாற்பட்டுப் போய்விட்டாள் அவள்.

நினைவற்ற நிலையிலேயே குற்றுயிராய்க் கிடந்த வானதியின் விழிகள் மெல்லத் திறந்தன. வானதிக்கு மீண்டும் சுயப் பிரக்ஞை வந்தது என அறிந்தவுடன் எல்லோரும் ஆறுதல் அளிக்க முற்பட்டனர். ஆனால் அவள் யாரையும் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

நிமிடத்துக்கு நிமிடம் உயிர் பிரிந்து செல்வதை அவளால் உணரமுடிந்தது. 'காலம் தாழ்த்தக்கூடாது. மனதிலிருந்ததை வெளியே சொல்லிவிடவேண்டும். அதுவும் சொல்ல வேண்டியவளிடம் சொல்லிவிடவேண்டும்' என்று வாயைத் திறந்தாள். உணர்ச்சி அதிகமாகிப் பேசுவதற்கு முயன்றபடியால் வலியும் அதிகமானது. பேசினால் உயிர் போய்விடும் என்று தெரிந்து கொண்டாள்.

கணவன், குந்தவை, சக்கரவர்த்தினி எல்லோரும் அவளைச் சுற்றியிருந்தார்கள். குழந்தைகளும் இருந்தன. வானதிக்கு தாய்ப் பாசமாகிய உணர்ச்சி வெள்ளமும் இப்பொழுது கரையை உடைத்துக் கொண்டு பாய்ந்து பொங்கிற்று. காதலெனும் இன்னுமொரு புயற்காற்றும் மனதில் அடித்தது. 'ஆசைக் காதலன் வந்துவிட்டான். நெடு நாள் கழித்து வந்துவிட்டான். சாகும் என்னை கைப்பிடித்து ஆறுதல் சொல்லி வழி அனுப்ப வந்துவிட்டான். அவனைப் பார்க்கவேண்டும்' என்ற ஆசையும் வந்தது.

ஆனால், தன் கணவரை, தன் கரை காணாக் காதலைத் தெரிவிக்கும் பொருட்டு அன்பும் ஆர்வமும் ததும்பிய நோக்குடன் அவள் பார்க்கவில்லை. முழுவாழ்வும் அவனுடனேயே வாழ அவ்வளவு பாக்கியம் செய்யவில்லை, ஆனால் சாகும் முன்னராவது கடைசியில் அவனை இன்னும் சற்று நேரம் கண்குளிரப் பார்த்து விடவேண்டும் என்ற எண்ணம் கூட அவளிடம் இல்லை. உள்ளத்தில் அணைபோட்டுத் தடுத்து விட்டாள். தூர எறிந்தாள் அந்த ஆசைகளை.

வானதிக்கு ஒரே எண்ணம்தான். 'மெல்ல மெல்ல நினைவை இழக்கிறோம். இருக்கும் சக்தியையெல்லாம் ஒன்று சேர்த்துப் பேச



வேண்டும். அந்த லோகாவுக்குச் விஷயத்தை சொல்லவேண்டும்' பரிதவித்தாள். அவளது இதழ்கள் துடிதுடித்தன.

லோகாவைத்தான் கூட்டத்தில் தேடினாள். அவள் மகன் ராஜேந்திரனைப் பார்க்கவில்லை. ஆசைக் காதலனைப் பார்க்கவில்லை. அவளுடைய கண்ணின் முன்னால் தெரிந்தவள் இளவரசி லோகா மட்டும் தான்; லோகா மட்டும் தான்!

வானதி தனக்கு அந்திமக் காலம் வந்துவிட்டது என்றறிந்தாள் போலும். அதற்குள்ளாக ஏதோ செய்தி ஒன்றை வெளியிட்டு விடவேண்டுமென்றும் துடித்தாள். தன் தேக நிலையைப் பொருட்படுத்தாமல் ஏதோ செய்தி சொல்ல நினைத்தாள். அதில் சந்தேகமில்லை. அதை யாரிடம் சொல்ல நினைத்தாள் என்பதிலும் சந்தேகமில்லை. லோகாவிடம் தான்!

லோகா விம்மத் தொடங்கினாள். உணர்ச்சி மிகுதியால் விம்மினாள். வானதி அனுபவித்த வலிவேதனையைத் தானே அனுபவித்ததாய் தோன்றியது லோகாவுக்கு. 'தன்னைக் காப்பாற்ற இப்படி உயிர் நீத்தாளே, இதே நிலையில் நாம் செய்திருப்போமா?' என்ற கேள்வி கூட எழுந்தது அவள் மனதில்.

மாறன் ஓடி வந்து அவளிடம் 'உனக்கொன்றும் இல்லையே?' என்று விசாரித்தான். லோகாவுக்குப் பேச்சு வரவில்லை. கண்ணீர் வந்தது. இல்லையென்று தலையசைத்தாள். எந்த நேரத்திலும் வானதியின் உயிர் இந்த மண்ணுலகை விட்டுப் போய்விடலாமென்று அறிந்தாள் லோகா. அவளுடைய மூச்சு பிரிவதற்கு முன்னால் ஏதேதோ தன்னிடம் சொல்ல நினைத்தாள். ஆருயிர்க் கணவனிடம் அல்ல. குழந்தை ராஜேந்திரனிடம் அல்ல. லோகாவிடம்! 'அருகில் வா' என்பதைப் போலக் கண்களால் அழைத்தாள். லோகாவும் அதைப் புரிந்து கொண்டு சாகக் கிடந்த வானதியிடம் சென்றாள்.

அந்த நான்கு கண்களுக்குள் மட்டும் ஏதோ செய்தி பரிமாறியிருக்க வேண்டும். 'உற்றார் உறவினர் முகத்தை ஏறிட்டுப் பாராமல் என் பக்கம் பார்க்கிறாளே. ஏன்? உன்னைக் காப்பாற்றச் சென்று இப்படி அவதிப்படுகிறேன் என்கிறாளா? இல்லை, இல்லை! வானதி கோபமாக இல்லை. தன்னிடம் ஏதோ மன்றாடிக் கேட்கிறாள் போலத்தெரிகிறது' என்று லோகா உணர்ந்தாள்.

ஆனால் அதற்கு மேல் ஒன்றும் அவளுக்குப் புரியவில்லை. 'நம் இருவருக்குமே அந்த ரகசியம் தெரியும். என் தியாகம் உனக்குப் புரியும்' என்கிறாளா? அதற்கு ஏதேனும் பிரதி உபகாரம் கேட்கிறாளா?

எல்லோரும் நினைத்தார்கள் அந்த ஈட்டி வானதிக்காகத்தான் ஏவப்பட்டது என்று. ஆனால் லோகாவுக்கு மட்டுமே உண்மை தெரியும். அந்த ஈட்டி வானில் பாய்ந்து வந்துகொண்டிருக்கும் போதே அவள் அதை ஏவிய பரமேசுவரனின் கண்களைப் பார்த்திருந்தாள். அதனுள் இருந்த வெறியைப் புரிந்து கொண்டிருந்தாள். அந்த ஈட்டி தனக்கெனத்தான் என்று தெரிந்து கொண்டாள். பின் ஏன் அதனை வழி மறித்து வானதி தாங்கிக் கொண்டாள் என்று அவளுக்கு இன்னமும் புரியவில்லை.

லோகா அழாமல் இருக்க உதடுகளை இறுக்கிக் கடித்துக் கொண்டாள். வானதிதேவி தன்னுடைய கண்ணீர் ததும்பிய கரிய கண்களினால் லோகாவைப் பார்த்தாள்.

"என்ன அக்கா! என்ன? சொல்லுங்கள் அக்கா" என்று உணர்ச்சி ததும்பிய லோகாவின் அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் வானதியின் காதில் விழுந்தன. ஆனால் இதழ்களைப் பிரித்து ஒரு வார்த்யையும் அவளால் சொல்ல முடியவில்லை. அவள் கள்ளம் இல்லாத உள்ளத்திலே என்ன நினைத்தாளோ, அதை சொல்ல முடியாமல் தவித்தாள். ஏதேதோ சொல்ல வேண்டுமென்று பிரயத்தனப்பட்டாள். அவளுடைய வாயிலிருந்து ஏதேதோ வார்த்தைகள் குழறிக் குழறி வந்து கொண்டிருந்தன. சிலவற்றுக்குப் பொருள் விளங்கின. பெரும்பாலும் சம்பந்தமற்ற வார்த்தைகளாகத் தோன்றின. அர்த்தமுள்ள கோர்வையாய் அவை வெளிவரவில்லை.

பேச முடியாமல் தடுமாறியவளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. உயிர் தன்னை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக வெளியே சென்று கொண்டிருந்தது என்று தெளிவாய்த் தெரிந்தது. உடலில் ஒவ்வொரு பாகமாக உணர்வுகள் குறைந்து கொண்டிருந்தன. 'கடவுளே நான் இதை வெளிப்படுத்தும் முன் என் ஆவியை வாங்கிவிடாதே' என்று வேண்டினாள் வானதி.

வானதியின் விழிகள் இங்கும் அங்கும் பாய்ந்தன. உடலும் மெல்ல மெல்ல வெளுத்து வந்தது. விளக்கொளி மெல்ல மெல்ல அணைத்து போலக் கண்கள் இருட்டிக்கொண்டு வந்தது. வானதியின் மனம் கதறியது. 'அய்யோ பெண்ணே! நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்று உனக்குப் புலப்படவில்லையா? உன் மனமென்ன இரும்பா?'

வானதி ஒரு முடிவுக்கு வந்தாள். எப்படியாவது ராஜேந்திரன் கையை எடுத்து லோகாவின் கையில் ஒப்படைத்துவிட்டால் இந்த பெண் தன் கடைசி ஆசையை புரிந்து கொள்வாள் என்று. 'பாவிப் பயல் அருகில் வர இப்போது பார்த்து பயப்படுகிறானே?'



'தெய்வங்கள் எல்லாம் செவிடா, இல்லை கல் நெஞ்சம் கொண்டவர்களா?' என்று மனதுக்குள் கதறினாள். அப்போது பார்த்து மிரண்டு போயிருந்த ராஜேந்திரன் ஓடி வந்து லோகாவின் மடியில் அமர்ந்தான். ஒரு நொடி தான் தாமதம். வானதியின் இதழ்கள் இரண்டும் புன் முறுவலாய் வளைந்தன.

'இதழ்கள் ஏன் வளைந்தன? வலியா, இல்லை வார்த்தை யின்றியே சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டோம் என்ற வெற்றிப் புன்னகையா?' என்று கடைசிவரை யாருக்கும் புரிய வில்லை.

வானதி லோகாவையும் அவள் மடியில் அமர்ந்திருந்த ராஜேந்திரனையும் பார்த்தாள். பால் வடியும் முகத்தில் கண்ணீர் வழிந்த அவனைக் கட்டி அணைத்துக் கொண்டிருந்தாள் லோகா. மகனைப் பார்த்தாள். அவளுடைய இளம் புதல்வன் பால்மணம் மாறா பாலகன் ராஜேந்திரன். பின்னால், இந்த சிறுவன் பல பெருமைகளை அடையப் போகிறான் என்று வானதிக்குத் தோன்றியது. சேதுவிலிருந்து இமய பர்வதம் வரையில் புலிக் கொடியை பறக்கவைக்கப் போகிறான்.

அதைக் கண்ட வானதி 'இன்றைக்குப் புரியாவிட்டாலும் என்றைக்காவது உனக்குப் புரியும். இருவருக்கும் புரியும். விதி இணைத்தது உங்கள் இருவரையும்தான். நான் இவன் சரித்திரத்தில் வெறும் வழிப்போக்கன் போலத்தான்' என்று நினைத்தாள் .

வானமாதேவிக்கோ மெல்ல மெல்ல மயக்கம் உண்டாயிற்று. நினைவற்ற தூக்கத்தை விரும்பிவிட்டாள். தேகம் நடுங்கியது. ஒரு நீண்ட பெருமூச்சு வாங்கினாள். பின் கண்கள் வேறெங்கும் திரும்பவில்லை.

ஆட்டம் முடிந்தது!

துடி துடிக்கும் இதயம் அதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாமல் நின்றது. ஈழத்துப் போரில் வீரசொர்க்கம் எய்திய பராந்தகன் சிறிய வேளாரின் செல்வப் புதல்வி வானதி, கொடும்பாளூர் வேளிர் வீர பரம்பரையில் வந்தவள் என்பதை நிலை நாட்டி உயிர் நீத்தாள். வானுலக தேவதைகளெல்லாம் மலர்தூவி அவளை மேலுலகுக்கு வரவேற்றனர்.

ஒரு உடலிலிருந்து ஜீவன் வெளியேறுவதை வியப்போடு உற்றுப் பார்த்து கொண்டிருந்தாள் லோகா.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்து மூன்று
## "பதில் சொல்ல மாட்டாயா?"

கொள்ளிடக்கரையில் மாண்டவளுக்கு வடவாற்றுக் கரையில் தகனம் என்று முடிவெடுக்கப்பட்டது.

மழபாடியிலிருந்து தஞ்சைக்கு அன்று இரவுக்கிரவே வானதியின் சடலத்தை சுமந்து கொண்டு கிளம்பலாம் என்றால் அதற்கு வேளக்காரப்படைத் தலைவனான மாறன் இணங்கவில்லை. ''வழி நெடுகிலும் ஆபத்துகள் நிறைந்திருக்கின்றன'' என்று சொன்னான். ''பாண்டியர் ஆபத்துதவிகளின் தாக்குதல் ஏதேனும் நடக்கலாம்'' என்று எச்சரித்தான். ''இந்த முறை அரசரும் ஊர்வலத்தில் இருப்பார் என்பதால் இரவுப்பயணம் உகந்ததல்ல'' என்று வலியுறுத்தினான். அவன் சொற்களை மதித்தாக வேண்டும் என்று அரசரும் விருப்பப் பட்டார். மாறனது வேலை விளையாட்டானதல்ல. மன்னன் மாண்டால் அடுத்த நிமிடம் தன் தலை தரையில் உருளவேண்டும் என்பது வேளக்காரப்படையின் உறுதி.

மன்னர் மட்டுமல்ல, ஒருவரும் அவனுக்கு ஆட்சேபம் தெரிவிக்கவில்லை. ஏன், இனி ஜன்மம் உள்ளவரையில் மாறனின் எச்சரிக்கையை மீறக்கூடாது என்று அரசர் முடிவெடுத்திருந்தார். போன வாரம் மட்டும் அவன் சொன்னதைத் தாம் கேட்டிருந்தால் இன்று எவ்வளவு கோலாகலமாக தஞ்சை திரும்பிக் கொண்டிருப்பார்கள் சோழர்களின் குடும்பத்தினர் என்று சக்கரவர்த்தி நினைக்காத நேரமில்லை.

அதனால் விடிவதற்கு முன்பே எல்லாரும் கிழக்கு நோக்கிப் பிரயாணமானார்கள். வானதியைப் பல்லக்கில் வைத்துத் தஞ்சைக்கு தூக்கிச்சென்றனர். பல்லக்கின் ஒரு பக்கத்தை பிடித்த படியே அருகில் கால் நடையாகப் பொன்னியின் செல்வர் நடந்தார்.

மழபாடியே வெறிச்சோடிப் போனது போல எல்லோரும் அந்த ஊர்வலத்தைப் பின் தொடர்ந்தனர். ஊர்வலத்தில் மழவராயன் மகளாம் செம்பியன் மாதேவி கூடத் தனது சிவிகையில் இருந்தார்.

இறைவனின் விளையாடல் இது என்று உணர அவருக்கு முதிர்ச்சி இருந்தாலும் 'அருள்மொழியின் மனம் சின்னா பின்னமாகி விடலாம்' என்று அவருக்கு பயம் உண்டாகியது. 'கருணைக் கடலான சிவபெருமான் தான் அவனையும், சோழர் குலத்தையும் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டினார் மழவரையர் மகளார்.



பெரிய பிராட்டிக்கு மட்டுமல்ல. எல்லோருக்கும் பொன்னியின் செல்வருடைய சோகம் தெரிந்தது; தளர்ந்து போய்விட்டார் ஒரு இரவுக்குள்! 'எங்கோ சென்றுவிட்டு மூன்று மாதக் காலத்துக்கு பின் திரும்பி வந்தவருக்கு, கண்ணுக்கு முன்பே காதல் மனைவி கொல்லப்பட்டார் என்பது விதியின் விளையாடல் இல்லாமல் வேறென்னவாக இருக்க முடியும்?' என்று பேசிக் கொண்டனர்.

ஆனால் பலருக்கும் தெரியாது. முக்கியமாக அவரைத் தளரச் செய்தது அவரது குற்ற உணர்வு. பாதி வழியில் அடிக்கடி பொன்னியின் செல்வர் தடுமாறினார். எப்போதும் போல இம்முறையும் சண்டையில் காயம் பெறவில்லை என்றாலும், சோகத்தின் தாக்குதல் அவரை வீழ்த்திவிட்டது போல் ஒரு எண்ணம். எங்காவது அமர்ந்து ஆர அமர அவரது கஷ்ட நஷ்டங்களை ஆராய வேண்டும் போலிருந்தது. எனினும் வீரன் போலவே மீதிப் பிரயாணத்தையும் நடந்தே தொடர்ந்தார்.

பல்லக்கின் மறுபக்கம் நடந்த சோழர் படைகளில் மூத்த தலைவரும் வானதியின் சிற்றப்பனுமான பூதிவிக்ரமகேசரி, ''ஆஹா! என் கண்மணி இறந்து விட்டாளா?'' என்று அடிக்கடி கேட்டபடி தலையில் அடித்து கொண்டார். 'தாய் தந்தையில்லாத பெண்ணைக் கூட்டி வந்து கொன்று விட்டோமே' என்று கொடும்பாளூர் அரசர் சோகத்தில் மூழ்கினார்.

ஊர்வலத்தின் இறுதியில் பெண்களின் கூட்டம் வந்தது. சிவிகைகளிலும் தேர்களிலும் வந்தனர் அரச குலப் பெண்கள். பலரும் அடிக்கடி வானதியை நினைத்து மயக்கம் போட்டுக் கொண்டிருந்தனர். ராஜ வைத்தியர்களுக்குத் தொடர்ந்து வேலை இருந்தது.

மாறன் தனது முழு அதிகாரத்தையும் பயன்படுத்தி ஊர்வலத்துக்குக் காவலை ஏற்படுத்தியிருந்தான். ஒரு ஈ எறும்பு கூட இனியும் சோழர்களைத் துன்புறுத்திவிடாமல் வியூகம் அமைத்தான். வழியின் இரு பக்கங்களில் விழிகளைச் செலுத்தியபடி வேளக்காரப் படையினரும், சோழ வீரர்களும் நடை போட்டனர்.

போகும் வழியெல்லாம் மரஞ்செடி கொடிகளில் புஷ்பங்களே இல்லை. மொட்டைச் செடிகளைப் பார்த்தால், தாவரங்களும் வானதியின் மரணத்துக்கு வருத்தபடுகின்றனவா என்று யோசிக்க வைத்தது. ஆனால் அப்படியில்லை. பாமர ஜனங்கள் வழி நெடுகிலும் அந்த மாதரசியின் கடைசிப் பயணத்துக்கு மலர்

தூவுவதற்காக அவற்றையெல்லாம் மலர்வதற்கு முன்பு மொட்டாகவே பறித்துவிட்டிருந்தனர்.

துக்கச் செய்தி காட்டுத் தீ போல பயணிக்கும் அல்லவா! ஊர்வலத்தின் முன்பே அது பரவிச் சென்றது. பாதையின் பக்கங்களில் பலரும் வாயைக் கையால் பொத்தியபடி துக்கம் அனுஷ்டித்தனர். ஊர்வலம் கடந்த பின் மக்களில் அநேகர் அழுது புலம்பிக் கொண்டுதான் வீட்டுக்குச் சென்றார்கள். பலர் பாண்டியரை வாயாரச் சபித்துக் கொண்டும் சென்றார்கள். 'நல்லதொரு விசேஷம் இப்படி மாறிப் போனதே' என்று மனம் நொந்தனர்.

ஒரு நாள் விடாமல் பிரயாணித்து, இனந்தெரியாத சோகத்தோடு நடந்த அந்த ஊர்வலமும் முடிந்தது. திருவையாற்றின் வழியாகத் தஞ்சையை அடைந்த ஊர்வலம், தஞ்சைக் கோட்டை வாசலின் நடுவே நுழைந்தது. பின் ஜன நெருக்கடியான தெருக்களைக் கடந்து தன் புகுந்த வீட்டுக்குப் பிணமாய்ப் புகுந்தாள் கொடும்பாளூர் இளவரசி!

வானதியைப் பல்லக்கிலிருந்து எடுத்துச் சென்றனர் அரண்மனைக்குள். ஒரே மூச்சாய் வந்தவர்களெல்லாம் களைப்பாற அரண்மனையின் படிகளிலும் தோட்டத்திலும் அமர்ந்தும் சாய்ந்தும் இருந்தனர்.

வானதியின் சடலம் அந்தபுரத்துக்குள் எடுத்துச்செல்லப்பட்டது. சற்று நேரத்துகெல்லாம் ரத்தகறைகள் துடைக்கபட்டு பிணத்தை குளிப்பாட்டி, பட்டுபுடவை அணியவைத்துப் படுக்க வைத்திருந்தார்கள். பட்டு விதானத்தால் அலங்கரிக்கப்பட்டிருந்த தந்தக் கட்டிலில் பஞ்சணைமெத்தை மீது உறங்கவேண்டிய கொடும்பாளூர் இளவரசி இன்று அரண்மனை நிலா முற்றத்தில் தென்னை ஓலையில் பின்னிய பாயில் படுத்திருந்தாள்.

உயிருள்ள பெண்ணின் அழகைப் பற்றிக் கவிதைகளிலும் காவியங்களிலும் நாம் படித்திருக்கலாம். ஆனால் மரணமும் அப்படி ஒரு அழகைக் கொடுத்தது இந்தக் கொடும்பாளூர் பெண்ணுக்கு. பார்ப்போரெல்லாம் 'சாகும் போது யாரேனும் இவ்வளவு முககாந்தியும் சௌந்தரியமும் உள்ளவளாய் இருக்க முடியுமா?' என்று வியந்தனர்.

வானதியைக் காணும் போது நிம்மதியாகத் தூங்குவது போலத்தான் தெரிந்தது. மிருதுவான அவளுடைய உடல் நேற்று கோரமாக ஈட்டியால் கிழிக்கப்பெற்றது என்று யாராலும் சொல்ல முடியாது. அமைதிக்கும் ஒரு அழகுண்டு. அந்த அழகெல்லாம் திரண்டு ஓர் உருவம் பெற்று நம் முன்னால் படுத்திருக்கிறாளோ



எனத் தோன்றியது எல்லோருக்கும். அவளுடைய திருமேனியின் நிறம் எப்போதும் செந்தாமரை மலரின் செந்நிறத்தைப் போலிருக்கும். ஆனால் இன்றோ சரத் காலச் சந்திரனின் நிறத்தை ஒத்திருக்கிறது. முகத்தில் மட்டும் கருவிழிகள் மூடியிருந்தன.

பார்ப்பவருக்கெல்லாம் 'இதென்ன அறியாமை? வானதி ஓய்வெடுகிறாள். மரணம் எல்லாம் அவளருகில் வரவில்லை' என்று சொல்லும் அளவுக்கு சாந்தம் கொண்டிருந்தது அவள் முகம்.

ஆனால், மனித ஆசைகளுக்கு ஏற்ப நிகழ்வுகள் தான் நடக்குமா? இல்லை காலச் சக்கரத்தைத்தான் பின் தள்ளி வைக்க முடியுமா? வானதி கோரமான முடிவடைந்தது நேற்றுத் தான். அதை நேரே காணச் சகிக்காமல் கண்டவர் பலர்.

சோழர் குடும்பத்தில் நிகழ்ந்த இந்தச் சோக சம்பவத்தை பற்றிய செய்தி தெரிந்த பலரும் துக்கம் விசாரிக்கவும், வானதியைக் கடைசி முறையாக தரிசிப்பதற்காகவும் வந்தனர். இறுதி அஞ்சலியாக கையில் மலர் மாலை ஏந்தி வந்தனர். வானதியின் அசையாத கோலத்தைக் கண்டு வந்தவர்களெல்லாம் கண்ணீர் வடித்தனர். உள்ளம் உருகியது எல்லோருக்கும். 'இயற்கை நியதியின்படி எல்லோரும் ஒரு நாள் சாகவேண்டியது தான். ஆனால் இவ்வளவு இளம் வயதில் இவ்வளவு கொடூரமான சாவா?' என்று விதியை நொந்தனர்.

நிலா முற்றத்தில் வானத்தை பார்த்தபடி படுத்திருந்தாள் வானதி. அவள் உயிருடன் இருக்கும் போது எவ்வளவு துடிதுடிப்பாய் இருப்பாள் என்று அறிந்த பலரும் அவள் செத்துக் கிடந்த காட்சியைப் பார்க்க சகியாமல் தள்ளியே நின்றனர். அதுமட்டுமல்ல. வானத்தில் கருமேகங்கள் சூழ்ந்திருந்தன. சொல்லமுடியாத துயருடன் இருந்த தஞ்சை மக்களின் மன நிலையை அப்படியே வானமும் பிரதி பலித்தது. சிறு தூரல் வேறு போட்டு கொண்டிருந்தது- மாண்டு போன வானதிக்குக் கண்ணீர் அஞ்சலியாய். நிலா முற்றத்தில் மழைவருவது கூடத் தெரியாமல் அமர்ந்திருந்தவர்களைக் கூரைக்கு அடியில் அழைத்து சென்றனர் பணிப்பெண்கள்.

ஆனால், வானதிக்கு இரு பக்கங்களிலும் இருவர் அசையாமல் நின்றனர்.

லோகா, ஒரு பக்கத்திலிருந்து வானதியின் சடலத்தை வெறித்துப் பார்த்துகொண்டே நிலா முற்றத்தின் தூண் ஒன்றைப் பிடித்தபடி நின்றிருந்தாள். அவளது முகத்தில் சோகம் மட்டுமல்ல. குழப்பமும் இருந்தது. மனதில் ஆயிரம் கேள்விகளுடன் நின்றாள். பதில்

சொல்லவேண்டியவள் தலைமாட்டில் விளக்குடன் நிரந்தரத் தூக்கம் தூங்கிக்கொண்டிருந்தாள்.

கங்கணம் கட்டிக் கொண்டு பாண்டியர் அருள் மொழியைப் பழிவாங்கிவிட்டனர் என்று எல்லோரும் நினைத்தனர். 'உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகப் பிறந்தவர்கள் சிலர் உண்டு. அவர்கள் யுத்தம் செய்யத்தான் வேண்டும். அவர்கள் குடும்பத்தார்கள் அதனால் சிரமப்படவேண்டும்' என்று லோகாவின் காதுபடவே பலர் வருத்தப்பட்டனர்.

ஆனால் லோகாவுக்கு மட்டும் அது உண்மையான விஷயமல்ல என்று தெரியும். இன்னும் ஒருத்திக்கும் அது தெரியும். ஆனால் அவள் பேசும் நிலையில் இப்போது இல்லை.லோகா நன்கு அறிவாள். அந்த வேல் எறியப்பட்டத்து தனக்காக. கண் சிமிட்டும் நேரத்தில் பாய்ந்து அதை ஏற்று கொண்டவள் வானதி. வேறு யாரும் அந்த நொடிப்பொழுது நிகழ்வைக் கண்டதாகத் தெரியவில்லை.

மிகவும் பயந்தவளாய் தஞ்சைக்கு வந்தவள் வானதி என்று ஒரு செய்தி அந்தபுரங்களிலெல்லாம் உண்டு. லோகாவும் அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டிருந்தாள். கொடும்பாளூர் இளவரசி சிறிது காலத்துக்கு முன்பு வரையில் பெரும் பயங்கொள்ளியாயிருந்தாள் என்றும் இளையபிராட்டி குந்தவையின் மற்ற தோழிகள் இவளை அதற்காகப் பரிகசித்துக் கொண்டிருந்தார்கள் என்றும் அவளுக்கு தெரியும். பொம்மை முதலையை நதியில் மிதக்க விட்டு இவளைப் பயமுறுத்திப் பார்த்தார்கள் என்று கூடக் கதை பரவலாக உண்டு. அடிக்கடி உணர்ச்சிவசத்தால் மயக்கம் போட்டுவிடுவாள் என்றும் பேச்சுண்டு. 'ஆனால் இப்போது திடீரென்று இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது? எங்கிருந்து தான் வந்தது? முக்கியமாகத் தனக்காக ஏன் வந்தது?'

'உன்னைப்போய் பயங் கொள்ளி என்று சொல்வார்களே வானதி. உனக்கு எப்படி இவ்வளவு மனோதிடம் வந்தது.?' என்று மனதுக்குள் கேட்டாள் லோகா. 'ஏன் என்னைத் தள்ளிவிட்டு ஈட்டியை நீ வாங்கி கொண்டாய்? இல்லையென்றால் நீ இங்கே படுத்திருப்பது போல பழுவூர் அரண்மனையில் நான் அல்லவா படுத்திருக்க நேரிடுமே. ஏனம்மா ஏன்? அதுமட்டுமல்லவே நேற்றைய மர்மம். சாகும் போது என்னிடம் ஏதோ சொல்லத் துடித்தாயே. என்ன அது? சாகும் வரை சொல்ல முடியாமல் தவித்தாயே. மற்றவரையெல்லாம் மறந்து என்னிடம் பேச



துடித்தன உன் கண்கள். அதன் அர்த்தம் தான் என்ன? சொல், வானதி சொல்' என்று மனதுக்குள் அலறினாள். ஆனால் ஒன்றுமே கேட்காதவள் போல வானதி படுத்திருந்தாள்.

சாகும் போது கூடத் தன்னிடம் ஏதோ சொல்ல நினைப்பானேன். அருகில் கணவனும் குழந்தைகளும் இருந்தாலும் அவர்களைப் பார்க்க அவள் நினைக்க வில்லையே? கடைசியில் ஏன் புன் முறுவலுடன் மறைந்தாள்? வானதி தன் விழிகளை மூடும் முன் தோன்றிய பார்வைக்கு உட்பொருள்கள் இருக்கின்றன என அறிந்த லோகாவுக்கு அவற்றை அறிந்து கொள்வதற்கு தக்க பரிபக்குவம் இல்லை. அறிந்து கொள்ள வேண்டுமென்னும் சிரத்தை இருந்தும் அவளால் அது முடியவில்லை.

இப்படி குழப்பத்தின் உச்சகட்டத்தில் லோகா ஒருபுறம் நிற்க, முற்றத்தின் மறுபுறம் மழையில் நனைந்த மற்றும் ஒருவர் பொன்னியின் செல்வர். மனச் சோர்வினால் புயலில் சாய்ந்துவிட்ட மரம்போலக் காட்சி தந்தார் பொன்னியின் செல்வர். அவரது உடலை தாங்கிப் பிடித்தது முற்றத்தின் ஒரு தூண். இல்லையென்றால் நிச்சயம் அவர் கீழேயே விழுந்திருப்பார்.

தரையில் மோதிச் சுக்கு நூறாகிச் சிதறி விழுந்த கனவுகளோடு நிற்க முடியாமல் தவித்தார். வெகு காலம் மனைவியைப் பார்க்காதவர் இப்போது இந்த நிலையிலா அவளைப் பார்க்கவேண்டும் என்று நொந்தார். 'உலகமறியாத பெண் வானதி. நாம் சொல்லாமல் கிளம்பிய போது அவள் மனம் எப்படித் துடித்திருக்கும்?' என்று வேதனைப்பட்டார். 'திரும்பி வந்து ஒரு ஆசை வார்த்தை கூடப் பரிமாறிக் கொள்ளவில்லையே. பிரியமாய் இருந்த கணவன் ஏன் இப்படி மாறிவிட்டான் என்று புரியாமல் தவித்திருப்பாளே? நல்ல வேளை நான் மாறிய காரணத்தை அறியாமலேயே போய் விட்டாள்' என்று மட்டும் நிம்மதி கொண்டார். இப்பேர்ப்பட்ட நிலை வருமென்று அவர் கனவிலும் நினைத்திருக்கவில்லை. நினைத்திருந்தால் பயணம் கிளம்பிப்போயே இருக்கமாட்டார்.

'போருக்குச் சென்று வந்த பின் அவளது மலர்க் கையினால் என்னுடைய மார்பைத் தொட்டு மாலையிடுவாளே. இனி அது முடியுமா? முதலில் என்னால் இனிமேல் போருக்கே செல்ல முடியுமா?' என்று பயந்தார்.

'இவள் போன்ற தேவதை கிடைத்ததை பாக்கியமாய் கருதாமல் இன்னும் ஒரு பெண்ணை நினைத்ததனால் கடவுள் கொடுத்த தண்டனையோ இது?' என்று பொன்னியின் செல்வர் நினைத்தார். 'மனதில் எதையும் வைக்காமல் வெளியே கொட்டிவிடும் பெண்ணிவள். இனி அவள் குரலையே என்னால் கேட்க முடியா

தென்றால் மனதை ஈட்டியை வைத்து குத்துவது போலிருக்கிறதே!' என்று நொந்துகொண்டார். இனி அவளைப் பாராத நாள் எல்லாம் வீண் போன வெறும் நாளாகவே தமக்குத் தோன்றும் என உணர்ந்தார்.

வெகு தூரத்திலிருந்தெல்லாம் வானதியைக்காண உறவினர் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்காக தகனம் செய்யும் வேளை மீண்டும் மீண்டும் தள்ளிப்போடப்பட்டது. ஏதோ எல்லோருக்கும் வானதியை வழி அனுப்ப மனமில்லாமல் தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. ஒரு நிலையில் அது சரியல்ல என்று எல்லோருக்குமாக முடிவெடுத்தான் வந்தியத் தேவன்.

எழுந்தவன் திடமான குரலில் "கிளம்பும் நேரம் ஆகிவிட்டது. வெகு தூரம் செல்ல வேண்டும்" என்றான். வேறு யாரும் பேசத் துணியவில்லை. அந்தச் செயலுக்காகக் கல் நெஞ்சம் கொண்டவன் அவன் எனப் பலரும் நினைத்தனர்.

'இன்னமும் சோகம் தீர அழவேயில்லை. அதற்குள்ளாக என் ஆசை வானதியை அழைத்து செல்லப் போகிறேன் என்கிறானே' என்று குந்தவைகூடக் கணவனை கண்டு முறைத்தாள். குந்தவையின் அகக் கண்முன்னால் வானதியுடன் செலவழித்த பல காட்சிகள் அப்படி அப்படியே தோன்றின. அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று. வானதி இறந்ததாகவே அவளுக்கு இன்னமும் தோன்றவில்லை .

வந்தியத் தேவனின் வேண்டுகோளுக்குப் பல பெரியவர்களும் சம்மதித்தனர். முதலில் அரசர் எழுந்தார். அவரைப் பின் தொடர்ந்து எல்லோரும் எழுந்தனர். கொடும்பாளூர்க் குலத்தை சேர்ந்த ஆண்கள் நால்வர் முன் வந்தனர். வானதி படுத்திருந்த தென்னம் ஓலைப்பாயின் நான்கு மூலைகளிலும் நின்றனர். கடைசியாகச் சில சடங்குகள் நடைபெற்றன.

சடலத்தை நான்கு பேர் தூக்கியவுடனே பெண்கள் பக்கத்திலிருந்து பெரும் கூச்சலுடன் அழுகை கேட்டது. பல பெண்கள் மயங்கி விழுந்தனர். ஆண்களில் கூட பலரால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

சடலத்தைச் சுமந்தவாறு அரண்மனையை விட்டு வெளியேறினர். நால்வருக்கும் முன்னால் கையில் ராஜேந்திரனைத் தூக்கிக்கொண்டு பொன்னியின் செல்வர் நடந்தார். பலரும் தலையில் அடித்துக் கொண்டு அழுதனர். தலைவிரிகோலமாய் இருந்த பெண்கள் எல்லோரும் ஒருவரை ஒருவர் கட்டிப்பிடித்து அழுதது



மிகவும் மனதை உருக்கும்படியிருந்தது. ஆனால் லோகாவுக்கு மட்டும் ஒரு சொட்டுக் கண்ணீர் வரவில்லை.

அழாத லோகா சடலத்தை அரண்மனை வாசல் வரை பின் தொடர்ந்தாள். அமைதியாய்த் தூங்குவது போலிருந்த வானதியின் முகத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டே அதன் பக்கத்திலேயே நடந்தாள்.

மனதுக்குள் நினைத்ததைக் கடைசிமுறையாக வானதியின் காதுக்கே எட்டும் வரை உரக்கக் கத்திக் கேட்டுவிடவேண்டும் போலிருந்தது லோகாவுக்கு. 'சாகும் போது ஏதோ எனக்கு சொல்ல நினைத்தாயே. என்ன அது? புன்னகைத்தாயே, எனக்குப் புரிந்து விட்டது என்று எண்ணி. ஆனால் எனக்கு ஒன்றும் புரியவில்லையே? என்னை காப்பாற்றிவிட்டு அதற்கு மாற்றாக என்ன வேண்டும் என்று சொல்லாமல் செல்கிறாயே. பாவியடி நீ! என் வாழ்நாளெல்லாம் நீ என்ன சொல்ல நினைத்தாய் என்று புரியாமல் நாட்களை நான் கடன்காரியைப்போல் கழிக்க வேண்டுமா?' என்று திட்டினாள். அவள் பேச மாட்டாளா என்று ஏங்கியே அவள் பக்கம் நடந்தாள் லோகா. போகும் அவசரத்தில் வானதி எதற்கும் திருவாய் மலர்ந்து வார்த்தை ஏதும் சொல்லவில்லை.

சடலத்தைச் சுமந்தவர்கள் அரண்மனைப் படியில் இறங்கினார்கள். வானதி அவள் புகுந்த வீட்டிலிருந்து கடைசி முறையாக வெளியேறினாள். தெருவோரம் ஊர்வலம் திரும்பும் வரை வாயடைத்து ஊர்வலத்தைப் பார்த்தபடி நின்றிருந்தாள் லோகா.

பின் 'சடேல்' என்று அரண்மனைப் படியில் அமர்ந்தபடி முகத்தைக் கைகளில் புதைத்தபடி கதறினாள், அது வரை அழாத பழுவூர் இளவரசி லோகமாதேவி!

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்து நான்கு

## "தீக்கிரையானாள்.."

வானதியின் உயிரற்ற உடலை அரண்மனையிலிருந்து வடவாற்றுக்கரையில் தகனத்துக்காக எடுத்து சென்றார்கள். கோட்டையின் பிரதான கதவின் வழியாக ஊர்வலம் வெளியே சென்றது.

தஞ்சைக்கு ஒரு புறம் காவிரியின் கிளையாம் வடவாறே கோட் டைக்கு காவலாய் ஓடியது. ஆற்றுக்கும் கோட்டை மதிலுக்கும் இடைப்பட்ட இடத்தில்தான் இருந்தது அரசகுலத்தினருக்கான பிரத்யேக மயானம். இதற்கு முன் ஆதித்தனும் சுந்தர சோழரும் இங்குதான் மேல் உலகுக்கு வழி அனுப்பிவைக்கப்பட்டனர்.

பாண்டியரைத் திட்டி முதல் நாள் மக்களிடையே கேட்ட கோஷங்கள் கூட இன்றைக்கு இல்லை. ''தலைவிதியின் பேரில் பாரத்தைப் போடாதே! பாண்டியர்களைக் கொன்று விட்டு மறுகாரியம் பாருங்கள்'' என்பது போலான பேச்சுக்கள் முன் தினம் அடிபட்டன. அதெல்லாம் இன்று சுத்தமாக இல்லை.

ஆனால் ஒரு ஒற்றுமை. இந்த செய்தியைக் கேட்டவுடன் அனைவரும் அனுபவித்தது நம்பாமைதான். 'சற்று முன்னால் என் காதில் விழுந்த விஷயம் உண்மைதானா? அல்லது என்னுடைய சித்தப்பிரமையா?' என்று சந்தேகமே வந்தது. பாண்டியரின் துரோதம் கள்ளங்கபடமறியாத இந்த இளம் பெண் வரையில் செல்லும் என்று யாரும் கருதவில்லை. எனினும் நேற்றிருந்த கோபம் இன்று இல்லை. வானதியைக் கொன்ற சண்டாளப் பாதகர்களுக்குத் தக்க தண்டனையை ஆண்டவனே விதிக்கட்டும் என்று மக்கள் நினைத்தனரோ என்னவோ?

ஊர்வலம் செல்லும் போது மக்கள் இருபுறமும் அமைதியாய் இருந்தனர். எவ்வகை கோஷமும் அவர்கள் எழுப்பவில்லை. மாதரசி கடைசிப் பயணம் மேற்கொள்கிறாள். சலனமின்றி அவள் பயணத்தை தொடரட்டும் என்று அமைதி காத்தனரோ என்னவோ?

சிலர் மட்டும் வழி நெடுகிலும் மலர்களைத் தூவி விட்டனர். பலரும் ஊர்வலம் கடக்கும் வரை காத்திருந்து விட்டுப் பின் அதனுடன் இணைந்தனர்.

'ஊர்வலத்தில் பலவாயிரம் ஜனங்களுக்கு மேல் முன்னும் பின்னும் வருகிறார்கள். பாமர மக்களின் சோகத்துக்கு அணை போட முடியாது. அதுவும் சோழர் ஆட்சியில் செழிப்படைந்த மக்களுக்கு அளவு கடந்த பிரியம் அரசகுலத்தின் மீது' என்று மாறன் நினைத்துவிட்டான். ஆனால் இந்த கூட்டம் அவன் வேலையை அதிகரித்தது.

கூட்டத்திலிருந்த பலரும் பொன்னியின் செல்வருடைய மாற்றங்களை கவனிக்கத் தவற வில்லை. உலகெல்லாம் உலாவி வெற்றி வாகை சூடியபின் வலம் வரும் வேந்தன் மகனா இவர்? இப்போது அவர் உள்ளத்தில் நிரம்பியிருப்பதெல்லாம் நிராசையும்



அவநம்பிக்கையுந்தான் என்று பார்ப்பவருக்கே தெரிந்தது. இருக்காதா பின்னே? பாண்டியரின் ஆத்திரத்தினாலும் மூர்க்கத் தனத்தினாலும் அவர் குடும்பமே சிதைந்து போன கூட்டைப் போல சிதறிக்கிடக்கிறதே?

ஒரு கையில் தூக்கிப் பிடித்த தீச்சட்டியுடனும் இன்னொரு கையில் மகன் ராஜேந்திரனை தூக்கி கொண்டும் ஊர்வலத்தில் நடந்தார் பொன்னியின் செல்வர். அவ்வப்போது திரும்பி சுமந்து வரப்பட்ட வானதியின் முகத்தை பார்த்தார். 'உயிர்க் களை இழந்த திருமுகத்தை போலவேயில்லை' என வியந்தார். அவ்வப்போது திரும்பியதால் பொன்னியின் செல்வர் அடிக்கடி தடுமாறினார். கைச்சுமையில் தளர்ந்தார். மனச்சுமையில் கால் இடறிற்று.

வீரன் மனத்தைக் கலங்கவிடக் கூடாது என்ற எழுதாத சட்டம் உள்ளதே. ஆனால் வீரனும் மனிதன் தானே? மனதைக் கல்லாகச் செய்து கொண்டு விட முடியவில்லையே? அணுவளவாவது மனம் சலிப்படையாமல் இருக்க முடியுமா? மலையைப்போல் அசை யாமல் நிற்கமுடியுமா?

'ஆசைக் காதலி கடைசி நிமிடங்களில் அனுபவித்த வலியை நினைத்தால் எனக்கு பகீரென்கிறதே! உடல் எல்லாம் நோகிறதே! நெஞ்சை இறுக்கிப் பிழிவது போல் இருக்கிறதே!' என்று நினைத்த படி நடந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஆற்றங்கரையை அடைந்தது ஊர்வலம். ஊர்வலம் கடக்கும் போது ஆற்றின் இரு கரைகளின் மீதும் சாமானியரின் சிதைகள் சில இன்னும் புகைந்து கொண் டிருந்தன. தீகொழுந்து விட்டெரிந்தன சில சிதைகள். சாவே பல குலத்தினரையும் சமமாக்குவது என்றும் அதிலிருந்து தப்பிப்பவர் யாரும் இல்லை என்றும் எல்லாருக்கும் எடுத்து காட்டியது. காலனெனும் மாயாவியின் வலையிலிருந்து யார் தப்பிவிட முடியும்? இல்லை அவன் வீசும் பாசக்கயிற்றின் குறிதான் என்றாவது தப்புமா?

சுற்றி நிச்சலனமாகியிருந்தது. கொடும்பாளூர் இளவரசியை வழியனுப்ப பிரகிருதியே சலனத்தில் மௌனம் காத்தது போல இருந்தது. இயற்கையின் மனம் கூட இளகியிருக்க வேண்டும். ஆற்றின் அலைகள் கூட திடீரென மௌனமாய் ஓடின. காவிரி யின் மகளென ஊர் போற்றும் வீரனின் மனைவி இந்த நிலையில் கருகிறாள் என்று நதி யும் அமைதி காத்தது போலும்.

அமைதியான நதியைப் பார்த்தவுடன் பொன்னியின் செல்வருக்குப் பழைய ஞாபகம் ஒன்று வந்தது. வானதிக்குக் கடந்த

காலத்தில் காவிரியின் மேல் மிகுந்த கோபம். ஒரு சமயத்தில் குடந்தை ஜோதிடர் வீட்டில் அவளும் இளைய பிராட்டியும் சிறிது நேரம் தங்கியபோது, அந்தச் சமயம் பார்த்துக் காவேரி கரையை உடைத்துக்கொண்டு வந்து, ஜோதிடர் வீட்டையே அடித்துச் சென்று விட்டது. அதன் பின் வானதி பொன்னியின் செல்வரிடம் முறையிட்டாள் ''இளவரசே! காவேரித் தாய் உங்களைக் குழந்தைப் பிராயத்தில் காப்பாற்றியதாகச் சொல்கிறார்கள். தங்களுக்கும் இந்தப் பொன்னி நதியின் பேரில் எவ்வளவோ பற்று உண்டு என்பதையும் நாடறியும். ஆனால் இன்று இந்த நதியினால் சோழ நாடு பட்ட கஷ்டத்தை நினைப்பதற்கே பயங்கரமாயிருக்கிறது. காவேரித் தாய் மிகக் கொடுமையானவள் என்று சொல்லத் தோன்றுகிறது...'' என்றாள்.

அதற்கு ''வானதி! காவேரி அன்னையின் பேரில் அப்படிப் பழி சொல்லாதே! இந்த மாதரசிக்கு எங்கள் சோழ நாட்டின்பேரில் அவ்வளவு ஆசை. அந்த ஆசை வரம்பு மீறிப் போகும்போது கரையை உடைத்துக்கொண்டு கிளம்பிவிடுகிறாள். இதை அறியாதவர்கள் அன்னையின் பேரில் வீண்பழி சொல்லுகிறார்கள்!'' என்று இவரும் சமாதானம் சொன்னார்.

'ஐயகோ, நானே இன்று அந்தப் பழி வீணென்று சொல்ல முடியாமல் நிற்கிறேனே? என் ஆசை மனைவியை எரித்து சாம்பலை ஆற்றுக்குள் தள்ளிவிடப் போகிறார்களே! என்னை காப்பாற்றியவள் இவளைக் காப்பாற்றவில்லையே?' என்று மனதுக்குள் கதறினார் பொன்னியின் செல்வர்.

கொள்ளிடக் கரையில் செத்தவளுக்கு வடவாற்றுக் கரையில் தகனம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கரையில் சந்தனக் கட்டைகளை வானதிக்கென ஏற்கனவே படுக்கையைப் போல அடுக்கி வைத்துவிட்டு வெட்டியான் மரியாதையுடன் அருகில் நின்றான். அதன் மேல் உயிரற்ற வானதியைப் படுக்க வைத்தனர்.

உயர்ந்த கட்டிலில் படுத்திருப்பது போல அடுக்கி வைக்கப்பட்ட சந்தனக்கட்டைகளின் மேல் ஒரு அலங்காரமும் இல்லாமல் படுத்திருந்தாள் வானதி. பொன்னியின் செல்வருக்கு அது வேறொரு பழைய ஞாபகத்தையும் வெளிக்கொணர்ந்தது.

அவருக்குப் பட்டம் சூட்டும் நாளுக்குச் சில தினங்கள் முன்பு வானதியை பார்த்து ''கண்டோர் கண்கள் கூசும்படி ஜொலிக்கும் நவரத்தினங்கள் பதித்த பொற்கிரீடத்தை உன் சிரசில் சூட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை உனக்கு இல்லையா?'' என்று பொன்னியின் செல்வர் கேட்டிருந்தார்.



வானதி சற்றும் யோசிக்கவேயில்லை. ''அந்த ஆசை எனக்குச் சிறிதும் இல்லை! சோழ குலத்துப் புராதன மணி மகுடங்களை நான் பார்த்திருக்கிறேன். அதை என் தலையில் வைத்துக் கொண்டால், அதன் கனம் என் தலையை அழுத்திக் கழுத்தை நெறித்து மூச்சுவிடத் திணறும்படி செய்துவிடும் என்று அஞ்சுகிறேன். அவ்வளவு வலிமை என் உடலில் இல்லை. அவ்வளவு தைரியம் என் மனத்திலும் இல்லை'' என்று நிராகரித்துவிட்டாள். அவர் மனமெனும் சிம்மாசனத்தில் மட்டும் வீற்றிருந்தால் போதும் என்று நினைத்தவளுக்கு எவ்வளவு பெரிய துரோகம் செய்துவிட்டார்.

'ஏழு ஜென்மங்களில் நான் செய்த தவத்தின் பயன் என்று ...றுதிப் பூரிப்பு அடையாமல் வேறொரு பெண்ணை நினைத்தேனே! வானதியை மீண்டும் கண்டு மன்னிப்பு கோரி நல் வாழ்க்கை வாழலாம் என்றால், நிறைவேற முடியாமற் போயிற்றே' என மனம் நொந்தார். 'மற்றும் ஒரு பெண்ணைப் பற்றி ஆசைக் கனவு கண்டது தவறானது என்று மனப்பூர்வமாக மனம் மாறி வாழ்க்கை நடத்த வந்தவனுக்கு இப்படியொரு பரிசா? வாழ்க்கையில் இனி ஒவ்வொரு கணமும் அதை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கப்போகிறேனா?' என்று திகைத்தார்.

இறந்தவளின் வாய்க்கு அரிசி போட எல்லோரும் வானதியைச் சுற்றி வந்தார்கள். சௌந்தரியவதிகளான எத்தனையோ பெண்களை அவர்கள் பார்த்ததுண்டு. ஆனால், இம்மாதிரி இறப்பிலும் பேரழகு வாய்ந்த பெண்களைப் பார்த்தது கிடையாது. வானதி இயற்கையாகவே நல்ல ரூபவதி. மரணம் இன்னமும் அவளுக்கு மெருகூட்டியிருந்தது.

பேயறைந்தாற் போலிருந்த ராஜேந்திரனை அழைத்து வந்தார் கொடும்பாளூர் அரசர். ஆற்றங்கரையில் அமர வைத்து அவன் ...லை மழிக்கப்பட்டது. அவன் கையில் ஒரு மண் சட்டியில் ...யேந்திய கரித்துண்டுகள் கொடுக்கப்பட்டது. மிரண்டு போயிருந்தான் சிறுவன். பாட்டனும் தந்தையுமாய் அவனைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று சிதையின் அருகே அக்கினியை வைத்தார்கள்.

ஏதோ அதற்காகவே காத்திருந்தாற்போல சந்தனக் கட்டைகளெல்லாம் தீப் பிடித்துக் கொண்டன. சற்று நேரத்துக்கெல்லாம் சிதையின் மேல் தீ கொழுந்துவிட்டெரிந்தது. எல்லோரும் கதறினர். இருளில் மஞ்சள் நிற அக்கினியின் பேயாட்டம் அகோரமாய் இருந்தது. அழுது அழுது கண்ணீர் வற்றிய பொன்னியின்

செல்வர் தன் ஆசை மனைவியை அக்கினி தீண்டியதைப் பார்க்க சகிக்காமல் முகத்தைத் திருப்பிக் கொண்டார் .

திரும்பியவர், மயானத்தில் கூடிய எல்லாருடைய கண்களும் அடிக்கடி சுற்றுப்புறத்தை நோக்கிக் கொண்டிருந்தன என்பதையும் கவனித்தார். இடுகாட்டில் வரும் இயற்கையான பயமே அதற்கு காரணம் என்று முதலில் நினைத்துவிட்டார் பொன்னியின் செல்வர். ஆனால் அது அப்படியல்ல.

எல்லாரும் மயானத்தைச் சுற்றியிருந்த மரங்களையே பார்த்து கொண்டிருந்தனர். அளவில்லாத வியப்பு அந்த ஈராயிரம் கண்களிலேயும் ததும்பின. அப்படி எதைத் தான் வைத்த கண் வாங்காமல் எல்லாரும் பார்க்கிறார்கள் என்ற ஆர்வம் அவருக்கு. அவர்கள் பார்க்கும் திசையை அவரும் நோக்கினார். முகத்தைத் திருப்பியபோது தான் அவருக்கு ஒரு அபூர்வக் காட்சி தெரிந்தது. ஆற்றங் கரையில் வளர்ந்திருந்த எல்லாக் கருவேல மரங்களின் மேலும் ஆயிரக்கணக்கான காகங்கள் 'உம்ம்' என்று முகத்தை வைத்து கொண்டு அமர்ந்திருந்ததைப் பார்த்தார்.

அந்த இடுகாட்டில் இருந்த மரங்களின் மேலெல்லாம் ஆயிர மாயிரம் காகங்கள் வீற்றிருக்கும் அதிசயத்தை கண்டபோது கூடியிருந்தவர்கள் எல்லாருடைய மனங்களும் அதிசயித்தன. மேகம் தரைக்கு இறங்கி வந்தால் போலிருக்கும் கரிய நிறப் பறவைக் கூட்டத்தை கண்டபின் எல்லாரையும் போல் ஒரு நொடி பொன்னியின் செல்வரும் சிறிது நேரம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார். 'மயக்கத்தில் தடுமாறுகிறோமா? இல்லை பூமிதான் என்னுடைய பாதங்களுக்குக் கீழே நழுவிச் சென்று கொண்டிருக்கிறதா?' என்று தோன்றியது.

அவர் பார்த்தவுடன் காகங்கள் எல்லாம் சொல்லி வைத்தாற் போல் வானத்தில் கிளம்பி தெற்கு நோக்கிப் பறந்தன- ஏதோ அவர் பார்ப்பதற்காகவே காத்திருந்தது போல. வானம் ஒரே இருட் டானது. எரியும் சிதையின் மேல் ஒரு மேகத்தின் நிழல் படர்ந்தாற் போலிருந்தது.

கூடியிருந்த மக்கள் எல்லோரும் காகங்களின் எண்ணிக்கை யைக் கண்டு வியந்தனர். ஒரே திசையில் அதுவும் சரியாகக் காரியங்கள் முடிந்த பின், பறக்கின்றனவே என்று அதிசயித்தனர். ''இயற்கை கூட வானதிக்கு அஞ்சலி செலுத்துகிறது'' என்று பேசிக்கொண்டனர்.

ஒரு பறவைகூட வாயைத் திறக்கவில்லை. மௌனமாக விடை பெற்றுக் கொண்டிருந்தன. ஆனால் பறவைகள் தம் சிறகுகளை



அடித்து ஆர்ப்பரித்தன. காகங்களின் சிறகு சத்தத்தைக் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டுப் போய் நின்றார்கள். அளவிலாத வேகம் பொருந்திய காகங்கள் தெற்கை நோக்கிச் சென்று கொண்டிருக் கின்றன. அதி சீக்கிரத்தில் சேருமிடத்தைச் சென்று அடைய வேண்டும் என்ற ஆவல். எல்லோரும் யோசித்தனர். இவ்வளவு காகங்களும் எங்கு செல்கின்றன? ஆனால் பொன்னியின் செல்வருக்கோ அதில் வியப்பில்லை; ஏமாற்றம்! அவருக்கு மட்டும் காகங்களின் இலக்கு தெளிவாய்த் தெரியும். அவை திருபூவனத் துக்குச் செல்கின்றன.

அப்போது அவருக்கு ஒளிமயமான தோற்றத்துடனும் சாந்தம் குடி கொண்ட முகத்துடனும் பொலிந்த குருநாதரின் முகம் நினை வுக்கு வந்தது. அவையெல்லாம் கருவூராரிடம் சென்று நடந்த விஷயத்தையெல்லாம் சொல்லி விடச் செல்கின்றன என்பதில் அவருக்கு ஐயமில்லை.

அப்போது தான் பொன்னியின் செல்வருக்குப் புரிந்தது. எவ்வளவு பெரிய பிழை செய்திருந்தார் என்று. 'ஆகா சித்தர் புண்ணியத்தில் வானதியைப் பிழைப்பூட்டியிருக்கலாமே? கஷ்ட காலத்தில் குருநாதரை மறந்தோமே.'

'ஒரு காகத்திடம் சொல்லி அனுப்பு' என்றாரே. 'நாம் மறந் தோமே! சிதை மூட்டியவுடன் இவ்வளவு காகங்கள் வந்தனவே? கருவூரர் எப்பேர்பட்டவர்களை எல்லாம் குணப்படுத்தினார்! பூவனத்தில் பிரத்தியட்சமாய்ப் பார்த்தோமே அவர் சக்தியை. ஒரு மனிதனுக்கு ஞாபக மறதி இவ்வளவு இருக்கலாமா? அய்யோ. ஒரு காகத்திடம் சொல்லி அனுப்பியிருந்தால் குருநாதர் இவ்விடத்தில் தோன்றி வானதியை உயிர் பெற்று எழுப்பித் தம்மிடம் ஒப்படைத்திருப்பாரே! அவரது அருள் வானதி விஷயத்தில் மட்டும் பொய்யாகப் போயிருக்குமா? என் கஷ்டம் தெரிந்து காகங்களை அனுப்பினாரே. நானல்லவா அவரை நினைக்கவில்லை' என்று இவ்வாறு எண்ணம் கொண்டார்.

சிவந்த கண்களில் கண்ணீர் ததும்ப அருள்மொழி நினைத்தார். 'நான் பாக்கியமற்றவன்தான். அதற்கும் சந்தேகமா? ஆசைக் காதலியை பறி கொடுத்து விட்டு, அவள் உயிரை மீட்க இருந்த ஒரே வழியை முக்கியமான நேரத்தில் மறந்தேனே!' ஏற்கனவே வெளுத்துபோயிருந்த அவன் முகம் இருண்ட மேகத்தினால் மறைக்கப்பட்ட நிலவு போலானது.

இப்போது கூடக் காகங்களை அழைத்து 'குருநாதரை அழைத்து வா' என்று சொல்ல அவருக்கு அளவற்ற ஆவல் இருந்தது.

எனினும், அந்த ஆவலைப் முறியடிக்கும்படி காகங்களெல்லாம் வெகு தூரம் பறந்து விட்டன. இவ்வளவு நேரம் அவர் ஒரு முறை கூட அவற்றைப் பார்க்கவில்லை என்று கோபம் போல. சிதையில் தீ கொழுந்துவிட்டெரியும் போதுதான் பார்த்தார் என்ற ஆதங்கம் அந்தப் பறவைகளுக்கு.

கருவூர்ச் சித்தரின் கருணையினாலே இந்தப் பேராபத்திலிருந்து மீண்டிருக்க வாய்ப்பிருந்ததே? அத்தகைய சந்தர்ப்பம் ஒன்றை இப்போது குருநாதர் ஏற்படுத்திக்கொடுத்தார். மயானத்தை சுற்றிச் சுற்றிப் பார்த்தவர் ஆகாயத்தை ஒரு முறை பார்த்திருந்தால் போதுமே. சமய சஞ்சீவியைக் கையில் வைத்துகொண்டு மறதியால் இழப்பைச் சந்தித்தோமே என்ற ஏமாற்றம்; ஒரு மனத்தாங்கல்.

தவறொன்றும் இல்லை.

இப்போது கூட ஓடிச் செல்லாலாம் பூவனத்துக்கு. அவர் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கலாம். கையேந்த லாம். 'என் வானதியைத் திரும்ப அழையுங்கள் என்று மன்றாட லாம். அவர் அழைப்பார்' என்று நினைத்தவருக்குத் தெரியும் அதற்கு காலம் கடந்துவிட்டது என்று.

ஏக்கத்தைப் போலவே அவருக்குக் கோபமும். 'என்னுடைய பயங்கரமான கற்பனைகளைக் காட்டிலும் பயங்கரமான நிகழ்வு நடக்கபோகிறது என்று சித்தர் சொல்லவில்லையே. இந்தக் காட்சியை கண்டு களிப்பதற்காகவா இத்தனை காகங்களையும் அனுப்பிவைத்தார்? குருநாதர் தன் விளையாட்டைக் காட்டி விட்டாரே. மனமிரங்கி எனக்கு வேறு வழி காண்பித்திருக்கக் கூடாதா? போய் முறையிட்டால் என்ன சொல்லுவார்?'

'இரண்டாயிரம் காகங்களை அனுப்பினேனே! உனக்கு அப்போது கூட என் நினைவு வரவில்லையா, பொன்னா?' என்பார். 'அதில் ஏதாவது ஒரு காகத்திடம் தூதனுப்ப மாட்டாயா என்று காத்திருந்தேனே?' என்பார்.

பொன்னியின் செல்வர் புரிந்து கொண்டார் 'இல்லை, இல்லை இதெல்லாம் அவர் வேலையில்லை. அவரைச் சொல்லியும் குற்ற மில்லை. கையில் பிடித்த கயிற்றின் நுனியில் ஆடும் பாவையைப் போல் எல்லாரையும் ஆட்டி வைத்து வேடிக்கை பார்ப்பது வேறு யாரோ. எந்தப் பக்கம் கயிறு ஆடப்போகிறது, எந்த பக்கம் அறுபடப்போகிறது என்பதை மட்டும் முன் கூட்டியே அறிந்தவர் கருவூரார். அவ்வளவுதான்.'



மீண்டும் ஒரு முறை, ஒரு கடைசி முறையாக தகனத்தைப் பார்த்துவிட்டுத் தன் மகனின் பிஞ்சுக் கையைப் பிடித்துக் கொண்டு மாளிகை திரும்பினார் பொன்னியின் செல்வர்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்றி நாற்பத்தைந்து

## வஜ்ரநாதரின் பதில்

தஞ்சையே ஓரிரு நாட்களாய் துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தது.

பிரசித்தி பெற்ற வணிகர் சபைகள் தஞ்சையில் இருந்தபடியால், பற்பல நாடுகளிலிருந்தும் யாத்திரிகர்கள் அந்நகருக்கு வருவதுண்டு. அதனால் தஞ்சை நகரம் எப்போதும் கலகலப்பாகவே இருந்து வந்தது. பழமையான காலத்திலிருந்து செல்வமும் பண்பாடும் சேர்ந்து வளர்ந்து வந்த மதுரையோ காஞ்சியோ இன்று தேய்ந்து கிடந்தன. திடீரென்று செல்வம் படைத்துச் செழிப்படைந்த புதுப் பட்டணமாம் தஞ்சை அவற்றையெல்லாம் விடக் கலகலப்பா யிருந்தது. மாடமாளிகைகள், கூடகோபுரங்களுடன் விளங்கிய தஞ்சையின் வீதிகள் எப்போதுமே திருவிழாக் காலத்தைப் போல் ஜனக்கூட்டம் நிறைந்து விளங்கும். வண்டி வாகனங்களின் சப்தம் ஓயாமல் கேட்ட வண்ணமிருக்கும்.

ஆனால் இன்று அப்படியில்லை. எங்கும் அமைதி. அதற்காக மக்கள் வீட்டுக்குள் அடைந்து கிடக்கவில்லை. நடுநிசி ஆன போதுகூட, நகரின் பல இடங்களில் மக்கள் குழுமியிருந்தார்கள். வருத்தத்துக்கு விலக்கானவர்கள் யாருமில்லை என்பது போல் இந்தச் செய்தி சோழர் ஆண்ட பிரதேசம் முழுவதுமாய்ப் பரவி யிருந்தது. அவரவர் வீட்டில் நடந்த சாவுக்குக் கதறுவது போல ஒலமிடும் சத்தமும் ஆங்காங்கே கேட்டது

வீதிகளில் இப்படியெல்லாம் அல்லோல கல்லோலமாயிருக்க, பெரும் கூட்டம் ஒன்று அரண்மனைக்கு முன்னால் கூடியது. தங்கள் சோகத்தைத் தெரிவிக்க வேறு வழிதெரியாமல் அந்த ஜனக்கடல் அங்கே வந்துவிட்டது. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அலை மோதிய கூட்டம் என்ன செய்யுமென்றே தெரியவில்லை. முக்கியமாக அதற்குள் பாண்டிய ஆபத்துதவிகள் ஒளிந்து இருந் தார்களா என்றும் தெரியவில்லை. கூட்டத்தினரை சாந்தபடுத்திக்

கலைத்துவிடவேண்டும் என்று மாறன் கேட்டுக்கொண்டதற்கு இணங்கி வந்தியத் தேவன் அரண்மனைக்கு வெளியே வந்தான்.

அவன் கையமர்த்திக் கூட்டத்தில் அமைதியை உண்டாக்கிய பிறகு உரத்த குரலில் கூறினான்; "மகா ஜனங்களே! இந்த ஆபத்துக் காலத்தில் நீங்கள் எல்லாரும் காட்டும் இராஜ விசுவாசத்தைக் கண்டு சக்கரவர்த்தி ஆறுதல் பெற்று உங்களுக்கெல்லாம் நன்றி செலுத்துகிறார். எதிர்பாராத வஞ்சகச் செயலினால் இத்தகைய துரதிர்ஷ்டம் நமக்கு நேர்ந்து விட்டது. வானதி அம்மையார் இயற்கையெய்தி விட்டார் என்பதனால் ஆழ்ந்த துக்கத்தில் இருக்கிறது அரச குடும்பம். அவரது ஆன்மா சாந்தியடைய அரச குடும்பம் சடங்குகளை கவனிக்க வேண்டும்" என்றான். மக்களின் கூட்டத்திலிருந்து சம்மதக் குரல் அவ்வளவு வேகத்துடன் வர வில்லை. எனினும் கூட்டம் வேண்டா வெறுப்பாகக் கலைந்தது.

தஞ்சை நகரத்திலேயே இப்படி இருந்தது என்றால், அரண் மனைக்குள்ளே கேட்க வேண்டியதேயில்லை. புயல்காற்றில் அலைப்புண்ட தோப்பை போலக் காட்சி தந்தது சோழர் அரண் மனை. அரண்மனையில் இப்போது ஆழ்ந்த மௌனம் குடிகொண் டிருந்தது. பலரும் பல கோணங்களில் இடிந்து போய் உட்கார்ந் திருந்தார்கள்.

அரண்மனையில் மனச்சோர்வு நூறுமடங்காயிற்று. எப்போதும் கலகலப்பாக இருந்த அரண்மனையின் அந்தப்புரத்துக்குள்ளே நிசப்தம் குடிகொண்டது. தினமிருக்கும் நிலைக்கு நேர்மாறாகக் களையற்றுக் கலகலப்பற்று, சோபிதமில்லாமல் இருந்தார்கள் அரச குடும்பத்தினர். 'உற்சவத்தை சிரத்தையாக நடத்துவோமென்றால் இப்படி சவத்தைச் சுமந்து வீடு திரும்பினார்களே' என்ற சோகம்.

குன்றும் கடலும் மரமும் கொடியும் மிருகமும் பட்சியும் சகல ஜீவராசிகளும் கூட அழுவது போலத் தோன்றியது. பட்சி ஜாலங்கள் கூட உதய ராகம் பாடவில்லை. அரண்மனையில் ஓரிரு நாட்களாகவே கீத வாத்தியங்களின் ஒலியோ, பேரிகை முரசங்களின் கோஷமோ சங்கங்களின் முழக்கமோ, ஏன், நேரம் அறிவிக்கும் ஆலாட்சி மணிகளின் சத்தமும் கூடக் கேட்கவில்லை. அரண்மனைத் பெண்டிரும் தாதிப் பெண்களும் கால்களில் அணிந்திருந்த பாதசரங்களின் கிண்கிணி ஓசை கூடக் கேட்காமல் நுனிக் காலில் நடந்தனர். காரியமாகச் சென்ற தாதிகள் அடிமேல் அடிவைத்து மெல்ல நடந்தார்கள். மிகவும் மெதுவாகப் பேசினார்கள்.



வானவன்மாதேவி அருள்மொழியை மணந்து தஞ்சை அரண் மனைக்குள்ளே கால் வைத்த நாளிலிருந்து, இந்த அரண்மனை ஒரு காலத்திலும் இம்மாதிரி கலகலப்பற்றும் பிரகாசமில்லாமலும் தோற்றமளித்தது கிடையாது. பலர் இங்கு உயிர் விட்டிருந்தனர். போர்க்களத்தில் வீர சொர்க்கம் அடைந்து வந்தவர்களும் உண்டு. நோய் வாய்ப்பட்டு மாண்டவரும் உண்டு. ஆனால் இன்று போல் என்றும் இல்லை.

செத்தவள் போய்விட்டாள். இனி நடப்பதைப் பார்ப்போம் என்றால் அத்தகைய மகா வீரரும் அளவிலா வலிமையும் அதிகார மும் படைத்தவருமான, பொன்னியின் செல்வர் இப்படி அறை யின் ஓரமாக இடிந்து போய்க் கிடந்ததைப் பார்க்க சகிக்கவில்லை. அருள்மொழிக்கு ஆறுதல் சொல்லவேண்டும் என்று நினைத்த வர்கள்கூட வாயடைத்தே நின்றார்கள். மனதிலிருந்த ஆறுதல் வார்த்தைகளாய் வெளிவர மறுத்தன. மௌனம் சாதித்தனர் எல்லோரும். வார்த்தைகளால் அவருக்கு ஆதரவு சொல்லமுடியாது என்று தெரியும்.

பொன்னியின் செல்வருக்கோ மனவேதனையும் அமைதிக் குலைவும் அதிகமாயின. வானதியின் கடைசி நாட்களில் அவளருகே இல்லையென்பதே அவருக்குக் குற்ற உணர்வைக் கொடுத்தது. அவர் எத்தகைய சித்திரவதையை அநுபவித்து வருகிறார் என்பதை மற்றவர்கள் பூரணமாக அறியவில்லை. அவருக்கோ எல்லோருடைய அழுகையும் காதில் நாராசமாக விழுந்தது. தன்னைத் தாக்கும் குற்ற உணர்வுகளுக்கு சப்த மலியிருந்தால் அவை இப்படித்தான் இருக்கும் என்றறிந்தார். முக்கியமாக, அவர் மனம் விட்டுப் பேசுவதற்கு அரண்மனையில் யாரும் இல்லை. எல்லோருடனும் அதிக இடைவெளி ஏற்பட் டிருந்தது. தமக்கை குந்தவைகூட எப்போதும் கண்ணீரும் கம்பலையுமாயிருந்தார்.

பொன்னியின் செல்வர் பழையதையெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தார். மென்மையான காதல் தான் வானதிக்கும் அவருக்கும்- ஒருவருக்கு ஒருவர் என்று தமக்கை குந்தவை ஏற்கனவே முடிவு செய்து வைத்திருந்தாள் என்பதால். ஆனால் அதிலும் எவ்வளவு நிகழ்வுகள். அதன் நினைவுகளெல்லாம் இனி வாழ்நாளெல்லாம் வந்து வந்து துன்புறுத்துமே.

இதற்காகவா சித்தர் கருவூரார் 'அவசரமாய் ஓடு' என்றார். 'ஆம். தீர்க்கதரிசியால் அவள் மரணத்தை மனக்கண் முன் காண முடிந்தது. சித்தரின் அருள் மகிமையில் அகக்காட்சியைக் காணும் சக்தியைப் பெற்றிருந்தார். அதனால் தான் அவசரப்படுத்தினார்

போல. ஆனால் அதைத் தடுக்க அவருக்கு சக்தி இல்லை. இல்லை, இஷ்டம்தான் இல்லையோ?'

அருள் மொழிக்குக் கோபம் கோபமாய் வந்தது. 'அவ்வளவு சக்தியிருந்தால் அவளைக் காப்பாற்றியிருக்கலாமே. அவள் சாவதைக் காண தக்க தருணத்துக்கு என்னை அனுப்பி வைத்து வேடிக்கை பார்த்தாரே. இது தான் நடக்க போகிறது என்று தெளிவாகச் சொல்லியிருந்தால் காலை பிடித்து மன்றாடியிருப்பேனே' என்ற ஆதங்கம்.

பின்னர் ஒரு எண்ணம் தோன்றியது. 'ஆகா! கருவூரார் சொன்னாரே. பண்ட பரிமாற்றம் என்று. ஆமாம். அன்றே அந்தச் சித்தர் சொன்னார். விலைகொடுக்க வேண்டுமென்று. இது தான் விலையா? ஐயகோ! இவ்வளவு விலையா? மதிப்பில்லாத விலையா? பழுவேட்டரையர் மகளின் காரணமாகத்தான் என்னுடைய உத்தேசங்கள் எல்லாம் பாழாய்ப் போயின. மனமொத்துத் தன்னுடன் வாழ்ந்த வானதி இன்று இல்லை. தாயில்லாப் பெண்ணின் வாழ்க்கை இப்படி பாழானதே!' என்றெல்லாம் மனம் நொந்தார்.

'தாயில்லா' என்று நினைத்தவுடன் தன் குழந்தைகளும் அதே நிலையில் தானிருக்கிறார்கள் என்று நினைவுக்கு வந்தது. உடனே அவரது சிவந்த கண்கள் குழந்தைகளைத் தேடின. தன் பெயர் கொண்ட மருமகளைக் குந்தவை வைத்திருந்தாள். குழந்தை விரலை வாயில் வைத்துக்கொண்டு மருண்ட மான் போல மிரண்டிருந்தது. 'என்ன தான் அப்பா என்றாலும் அம்மாவின் அன்புக்கு சமானம் என்ன?' அதுவும் நல்லதொரு தந்தையாகத் தானில்லை என்பதை அவரே அறிந்திருந்தார். அவர்களுக்கு எப்படி ஆறுதல் சொல்வது? வெகு காலமானது மகனையும் மகளையும் பார்த்து. தன் முகமே அவர்களுக்கு மறந்து போயிருக்கும்.

இடிந்து போய் உட்கார்ந்திருந்தார் பொன்னியின் செல்வர். அவருடைய உள்ளமும் உடம்பின் நரம்புகளும் துடித்துக் கொண்டிருந்தன. அடிக்கடி பெருமூச்சு எழுந்தது. அவரை பார்க்க பார்க்க எல்லோருக்கும் பயமே வந்தது. முக்கியமாக உத்தம சோழருக்கு வேதனை. அரசருக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் துக்கத்தையும் சொல்ல முடியாது. உத்தம சோழர் ஓரிரு நாட்களில் மூப்படைந்தே விட்டார். தன் வாழ்வில் தனக்கு வந்த மிகப்பெரிய சோதனையிது என்று புரிந்து கொண்டார். அவருக்கு எப்போதும் ஆறுதல் சொல்லும் மனைவியிடம் திரும்பினார். சகஜமாகப் பேசும் சுபாவமுடைய பூங்குழலி கூட இன்று வாயடைத்துப் போயிருந்தாள்.



'விதி இப்படி இருக்கும்போது நான் என்ன செய்வேன்!' என்று அவரால் சாக்குச் சொல்லிக்கொள்ள முடியவில்லை. வானதியின் ரத்தம் தரையில் சிந்தியதற்குத் தானும் ஒரு முக்கியக் காரணம் என்பது அவர் மனதை ஈட்டியால் குத்துவது போல திரும்பத் திரும்பத் துன்புறுத்தியது.

'வேளக்காரப்படையின் தலைவர் சொன்னதைக் கவனியாமலிருந்தது எவ்வளவு பிசகு?' என்று சக்கரவர்த்தி யோசித்தார். 'வேளக்காரப்படைத் தலைவன் சொன்னதைக் கேட்டிருக்க வேண்டும். கும்பாபிஷேகத்தைத் தள்ளிப்போட்டிருக்க வேண்டும்,' என்று திரும்பத்திரும்ப நினைத்துக் கொண்டார். தனக்கு அரசியலிலோ போர்க்கலையிலோ அனுபவம் போதாமல் போனதே இதற்குக் காரணம் என்று தன்னைத்தானே குற்றம் சொல்லிக்கொண்டார்.

வானதியின் தகனம் முடியும் வரை காத்திருந்துவிட்டு மாறன் அரசரைக் காண வந்தான். 'மன்னர் மன்னா. நானும் இந்தப் பதவியிலிருந்து விலக நினைக்கிறேன். தாங்கள் அதற்குச் சம்மதம் அளிக்கவேண்டும். இந்தச் செய்தி நாடு நகரமெல்லாம் பரவியிருக்கிறபடியால், ஜனங்கள் பாண்டியர்கள் மீது ஒரே கோபமாயிருக்கிறார்கள்; என் மீதும் கூடத்தான். நான் கடமையிலிருந்து தவறிவிட்டதாக ஜனங்களிடையில் பேச்சாயிருக்கிறது....'' இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சக்கரவர்த்திக்குக் கண்கள் கலங்கின.

தான் மாறனின் பேச்சை கேட்காததால் நேர்ந்தது இந்த கஷ்டம் என்பது ஒரு புறம். 'எனக்கு அதிகாரம் கொடுங்கள். நான் நிலைமையைச் சீர் செய்கிறேன். பாண்டியரை உள்ளே வர விடாமல் தடுக்கிறேன்' என்று மன்றாடினானே?

மக்களுக்கு இடையூறு ஏற்படக்கூடாது என்று தானே தடுத்துவிட்டாரே? இல்லையென்றால் இந்தச் சந்தர்ப்பமே எழுந்திருக்காதே. சோழர் குலத்துக்குக் கேடு வராமலிருக்க வேண்டும் என்று கவனமாய் இருந்தானே மாறன். அவன் பேச்சை மீறியதால் நான் இது நடந்தது.

''நீர் தடுத்தும் கேளாமல், கும்பாபிஷேகத்தை நடத்தியது நான். யாரேனும் பதவி விலக வேண்டுமென்றால் முதலில் அது நான் தான்'' என்றார். ''நானும் இந்த சோகத்துக்கு ஒரு காரணம் என்பதை நினைக்கும்போதுதான் எனக்கு வேதனை தாங்கவில்லை. இந்த உலகமே உமக்கு எதிராகப் போனாலும் நான் இருக்கிறேன். யாரேனும் உம்மைப் பதவி விலகச் சொன்னால் சொல்லுங்கள். விலகுகிறேன். என்னுடன் மன்னரும் வருகிறார்

சிம்மாசனத்தை உதறிவிட்டு என்று. சற்று அமைதியாய் இருங்கள் சம்புவராயரே. சற்று சாந்தமானவுடன் முடிவெடுப்போம்'' என்றார்.

''அரசர்க்கரசே!''

''நீர் தவறியதாக உலகமே சொன்னாலும் நான் நம்ப மாட்டேன். வேளக்காரப்படைத் தலைவா! இளம் சம்புவராயரே! ஆபத்தைப் பற்றித் நீர் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் சத்தியம். ஆனாலும் உமது வார்த்தையை நான் மதிக்கவில்லை. அதைக் கேலிக்கூத்தாக்கிவிட்ட நானே தவறு செய்துவிட்டேன். என் கட்டளைக்கு கீழ்ப்படிந்து நீரும் காவலைக் கூட்டவில்லை. என்னை மன்னிக்க வேண்டும்'' என்றார் அரசர்.

''மன்னர் மன்னா! வேளக்காரப்படையினர் தங்களிடம் இணையற்ற பக்தி விசுவாசம் கொண்டிருக்கிறார்கள். தாங்கள் என்னிடம் மன்னிப்புக் கோருவதா?'' பதறிப்போனான் மாறன். ''என்னையும் மன்னிக்க வேண்டும் பிரபு! எவ்விடத்தில் அவர்கள் தாக்குவார்கள் என்று எனக்கும் நிச்சயமாய்த் தெரிந்திருக்கவில்லை. இளவரசிகளின் உயிருக்கு ஆபத்து நேரிடாது என்று உறுதியாயிருந்தேன்.''

ஊரெங்கும் தன் மேல் கோபமாய் இருந்தார்கள் என்று மாறன் நினைத்தது தவறு. இளம் சம்புவராயன் தக்க சமயத்தில் எச்சரிக்கை செய்தான் என்றும் ஊரெங்கும் பேச்சு அடிபட்டது. அதைப் பிரதமரும் அரசரும் நிராகரித்து விழாவை நடத்தினார்கள் என்றும் பொது மக்கள் பேசிக்கொண்டனர். பொய்யா மெய்யா என்று மக்களுக்கு உண்மை வெளிப்பட வாய்ப்பில்லை. ராஜாங்க விஷயம் அடி மட்டக் குடிமகனுக்குத் தெரியத் தடைகள் ஏராளம்.

அரண்மனையில் எல்லோரும் களைப்பினால் தன்னையறியாது கண்ணயர்ந்தார்கள். அரசர் சாதாரணமாகவே சொற்ப நேரந்தான் தூங்குவது வழக்கம். அன்றிரவு அவர் கண்ணை மூடவேயில்லை. பொன்னியின் செல்வர் நிலையைப் பார்த்த அரசரின் உள்ளத்தை வாள் கொண்டு அறுப்பது போலிருந்தது என்பதை அவருடைய முகக் குறி காட்டியது. பொன்னியின் செல்வர் சுத்த வீரர். சொல்ல முடியாத வேதனையைக்கூட வெகு சீக்கிரத்திலேயே சமாளித்துக் கொண்டு விடுவார் என்று நினைத்தால் அப்படி இல்லையே. ஒரு வீரன் சில காலம் தான் துக்கத்தில் இருக்கலாம். அதற்கு மேலும் இருந்தால் அவனது இன்னலைத் தாங்கும் சக்தி குறைந்து விட்டதென்றே பொருள் என்று அவருக்குத் தெரியும்.



''அப்படியென்றால் பொன்னியின் செல்வருடைய வீரம் குறைந்துவிடுமா?'' என்ற கேள்வி அவரை வெகுவாக வேதனையடையச் செய்தது.

அவரை மட்டுமல்ல. பல சிற்றரசர்களுக்கும் அது தான் சந்தேகம். பொன்னியின் செல்வர் பலமாத காலம் காணாமல் போனார். அப்போதே அவருக்கு மன உளைச்சல் என்று முடிவெடுத்தனர் அரசியல் நிபுணர்கள். வந்திறங்கியவுடன் மனைவியுடன் ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை. அவர் கண் முன்னேயே அவளும் கொல்லப்பட்டாள். இதிலிருந்து மீண்டு வருவாரா?' மாவீரன் என்ற பட்டம் பொன்னியின் செல்வருக்கே தகும். ஆனால் இன்று இருந்த நிலையில் அவர் மீண்டும் வாளேந்துவாரா என்பதே ஒரு கேள்விக்குறி. உத்தம சோழரோ போருக்குச் செல்ல மாட்டார். பின் சோழர் குலத்தின் கதி? முன் போல் கிரகணம் பிடிக்கப் போகிறதா என்ற கவலை எல்லாச் சிற்றரசர்களுக்கும். சோழர் ஸ்தாபித்த சாம்ராஜ்யம் என்னவாகும்? நல்ல வீரன் குடும்பத்தில் இல்லையென்றவுடன் எவ்வளவு அரச வம்சங்கள் நசித்துப் போயின என்று சரித்திரம் சொல்லும். அடிக்கடி போர் மிரட்டல் விடுக்காவிட்டால் சேகரித்து வைத்த பலமெல்லாம் கரையும். இதுவரை நாம் நினைத்திருந்த பலமெல்லாம் மிகைபட்ட நினைப் புகள் தாம் என்று எல்லையில் சோதித்து பார்ப்பான் எதிரி. இந்த ஊருக்குள் இருந்த எதிரியின் ஒற்றனெல்லாம் போய்ச் செய்தி சொல்லி இருப்பான்அதற்குள்ளாக.

அரசர் ஒழுக்கத்துக்கும் தெய்வபக்திக்கும் பெயர்போனவர். மறந்தும் அவர் வாயில் ஒரு கடுஞ்சொல் வராது. அதனால் படைகளைச் செலுத்திச் செல்ல சோழர் பரம்பரையில் அருள்மொழி மட்டும் தான். பொன்னியின் செல்வரைப் பார்த்தார் அரசர். அவரது குழந்தைகளைப் பார்த்தார். குட்டிக் குந்தவையோ அழுது அழுது பின்னர் தூங்கிவிட்டாள். ராஜேந்திரன் மட்டும் ஒன்றும் புரியாமல் இங்கும் அங்குமாய் அலைந்து கொண்டிருந்தான்.

வெகு நேரம் பயந்து போய் அமர்ந்திருந்தான் ராஜேந்திரன். மயானம் சென்று தாயின் சிதைக்குத் தீமூட்டி, தலையை மழித்துக் கொண்டு திரும்பியதில் குழந்தை மிரண்டுபோயிருந்தது. இவ்வளவு சிறிய பிள்ளை மயானத்தில் சென்று தாய்க்கு இறுதிக் கடன்களைச் செய்திருக்க வேண்டாம். ஆனால் அரச குலத்தில் சில தலையாய கடமைகள் இருந்தன. அவற்றுள் இதுவும் ஒன்று.

பின்னர் கதவு வழியாக வெளியே சென்றான் ராஜேந்திரன். 'பாலம் இந்த வயதில் இப்படி அவனுக்கு நேரவேண்டுமா?' என்று

நினைத்த அரசர் தாயைப் பிரிந்து வாழும் துன்பம் எவ்வளவு கடினம் என்பதை நன்கு அறிவார்.

இப்படிப் பல கோணங்களில் சோகமும் இயலாமையும் தாக்கியபடி அரசர் பரிதவித்துகொண்டிருந்தார். பூமண்டலத்தை ஆளும் மன்னர்களாகியவர்கள் தான் என்ன செய்யமுடியும்? காலனுடன் போராட முடியுமா? இல்லை பிரதமர் போல அதி சமர்த்தர்கள் தான் என்ன செய்ய முடியும்? காலனின் தூதுவர்கள் வரும் போது கண்காணாத இடத்தில் எவரையேனும் ஒளித்து வைக்க முடியுமா?

தன்னை எப்போதும் தேற்றும் பூங்குழலியும் இடிந்து போய் உட்கார்ந்திருந்தாள். யாரிடம் தான் அவர் பேசுவது? இந்தக் கஷ்டத்துக்கெல்லாம் எப்படி ஒரு நிவாரணம் தேடுவது?

எந்தத் துன்பக் கடலில் தத்தளித்தபோதும் தான் திரும்பும் ஒரே கலங்கரையாம் வஜ்ரநாதரையே நாடினார் அரசர். எல்லா வற்றிற்கும் மருந்தாம் அவரைத் துதித்தார். கண்களை மூடினார்.

'சந்தவார் குழலாளுமை தன்னொரு கூறுடை
எந்தையானி மையாத முக்கண்ணினன் எம்பிரான்
மைந்தன் வார் பொழில் சூழ் மழபாடி மருந்தினைச்
சிந்தியா யெழுவார் வினையாயின தேயுமே'

என்று சம்பந்தர் தேவாரத்தை முணுமுணுத்தார்.

மனம் அமைதி பெற்றது போல் ஒரு எண்ணம். 'மகனே நான் பார்த்துக்கொள்கிறேன்' என்று வஜ்ரநாதரே சொன்னது போல ஒரு பிரமை. கண்களைத் திறந்தார். ஆனால் அறை அதே சோகச் சூழலில்தான் இருந்தது. ஒரு நொடி அரசர் மனமுடைந்தார், எல்லாம் பிரமை தானா என்று.

அப்போது நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு ஒரு மழலைக் குரல் கேட்டது. ராஜேந்திரன் புன்னகை பூத்து கொண்டே ஓடி வந்தான் அறைக்குள்.

குழந்தை ஆனந்தத்தில் "அம்மா வந்து விட்டாள். அம்மா வந்துவிட்டாள்" என்று அலறியபடி உள்ளே வந்தது.

'குழந்தை எதையோ கண்டு பயந்திருக்கும் போல, உளறுகிறது' என்று எல்லோரும் நினைத்தார்கள். எனினும் திகைப்புடன் வாயில் கதவை எல்லோரும் நோக்கினார்கள்.

கால்களை விந்தி நடந்தபடி பழுவூர் அரசர் உள்ளே வந்தார். அவரை தாங்கியபடி லோகா வந்தாள். முதலில் பிரமித்த அரசர் பின் லேசாகச் சிரித்தார்.



எப்போதும் போல வஜ்ரநாதர் கேட்ட கேள்விக்கு பதில் கொடுத்துவிட்டார்.

❖ ❖ ❖

### அத்தியாயம் நூற்று நாற்பத்து ஆறு

## குழந்தையும் தெய்வமும்

"அத்தை, அத்தை! அம்மா வந்திருக்கிறாள்" என்று கத்தியபடி ராஜேந்திரன் அரண்மனைக்குள் ஓடி வந்தான்.

அவன் முகம் மலரும்படி புன்னகை பூத்து ஆனந்தமாய் அவன் உள்ளே வரும் போது, திரும்பித் திரும்பிப் பார்த்துத்தான் வந்தான். அதனால் இயல்பாகவே குழந்தை ஓடி வந்த திசையை எல்லோரும் நோக்கினார்கள். 'வானதி வரமாட்டாளா?' என்ற பைத்தியக் காரத்தனமான ஆசைகூட இருந்தது சிலருக்கு.

ஆனால், வாசலின் வழியே வந்தது வீராதி வீரரான பழு வேட்டரையர். தனது பலமற்ற கால்களினால் தள்ளாடி நடந்து வந்தார். பல சிற்றரசர் குடும்பங்கள் சோழர் குடும்பத்துக்கு ஏதாவது பரோபகாரம் செய்ய முடியுமா என்று தினந்தோறும் வந்தனர். அப்படி வந்த பழுவூரார் இரண்டு நாட்களுக்குள் பலங்குன்றித் தள்ளாடிக் கொண்டிருந்தார். அதனால் அவரைத் தாங்கியபடி லோகா வந்தாள்.

தன் தந்தையுடன் உள்ளே நுழைந்த லோகாவைப் பார்த்த வுடன் பலருக்கும் பலவித எண்ணங்கள். ஓடிச்சென்ற குழந்தை லோகாவைக் கட்டித் தழுவி ஆனந்திப்பதை மன்னர் கண்டார். உடனே அரசருக்கு விளங்காத மர்மமாயிருந்தது. அளவிட முடியாத வியப்பு. 'குழந்தையும் தெய்வமும் ஒன்றா? தெய்வம் குழந்தையின் வாயால் பேசுமா? இந்த பிரச்சனைக்கெல்லாம் நிவாரணம் என்னவென்று இந்தக் குழந்தை சொல்லிவிட்டதா? இல்லை அதன் மூலம் எல்லாம் தெரிந்துகொண்டே பேசாம லிருக்கும் வஜ்ரநாதர் பதில் சொல்கிறாரா?' என்று மன்னர் நினைத்தார்.

அரசரின் சோர்வடைந்த முகத்திலும் புன்னகை பூத்தது. லோகாவை இப்போது முன்னைவிட அதிக ஆர்வத்தோடு பார்த் தார். இந்த அற்புத சம்பவத்தைப் பற்றிய விஷயத்தை யாரிடமாவது உடனே பரிமாறிக்கொள்ள வேண்டுமென்று அரசர் எண்ணினார்.

அரசர் முகத்தில் உண்டான பிரகாசத்தை பிரதமர் அநிருத்தர் கவனிக்காமல் இருக்கவில்லை. அரசர் அவரை நோக்கித் திரும்பிய வுடன் சரியாக அரசரையே பார்த்துகொண்டிருந்தார். தலை யசைத்தார். அரசரின் நோக்கம் புரிந்துவிட்டது என அவர் முகத்தில் தெளிவாய்த் தெரிந்தது.

பிரதமருக்கு அலுவல் அதிகம் இருக்கிறது என்று எல்லாருக்கும் தெரியும். எனினும் அவரும் சோழர் அரண்மனையில் இடிந்து போய் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார். நிகழ்ந்த இந்த துர்சம் பவத்தின் காரணமாய் குடிமக்களின் கன்னங்களில் எல்லாம் நித்தியப் பிரவாகம் ஓடிக் கொண்டிருக்கிறது!. இப்போது என்ன வேலை ஓடும்?

அரசர் அவரை ஒரு பார்வை பார்த்தார். பிரதமருக்குப் புரிந்து விட்டது. பழுவேட்டரையரிடம் பேச்சை எப்படித் தொடங்குவது என்று நினைக்கத் தொடங்கிவிட்டார். ஆனால் அப்போது பார்த்து பிரதமரின் மனதின் ஓரத்தில் ஒரு நெருடல். அந்த பெண்ணின் மீது மாறன் வைத்திருந்த காதல் நினைவுக்கு வந்தது.

பிரதமர் எப்போதும் ஒரு முடிவெடுக்கும் போதும் சோழ நாட்டின் நன்மையையே பிரதானமாகக் கொள்வார். தனியொரு வனின் நன்மைகள் எல்லாம் காலடியில் நசுக்கப்பட்டாலும் கவலைப் படுவதில்லை.

மாறன் லோகா காதல் கைகூடும் தருணம் நெருங்கிவிட்டது என்று போன வாரம் வரை திருப்திப்பட்டு கொண்டிருந்தார் பிரதமர். மாறன் துடுபில்லாத படகுபோல வாழ்வெனும் மஹா சமுத்திரத்தில் தத்தளித்துக் கொண்டிருந்தான். அந்தப் பழுவூர்ப் பெண் அவனுக்கு நல்லதொரு ஆதரவாய் இருப்பாளென்று பிரதமர் அப்போது நினைத்தார். சம்புவராயர் குலமும் பழுவேட் டரையர் குலமும் திருமணம் மூலம் இணையப் போகிறது என்பது சோழர் சாம்ராஜ்யத்துக்கு நல்லது என்றும் எண்ணம் கொண்டார்.

ஆனால் இப்போது நிலைமையே வேறு. அதனால் வேறு விதமாகச் சிந்திக்க வேண்டும். புது விதமாக வியூகம் அமைக்க வேண்டும். ஏன் என்றால், தற்சமயம் நிலைமையே இடம் மாறிப் போனது. 'மாறனுக்குச் சொன்ன உவமைச் சொற்களெல்லாம் இன்று பொன்னியின் செல்வருக்கே பொருந்தும். பொன்னியின் செல்வர் இடிந்து போய் உட்கார்ந்தால் சோழ மஹா சாம்ராஜ்யம் என்னவாகும்?'

'இன்னும் இரு நூறாண்டுகளுக்கு இந்தச் சோழ சாம்ராஜ்யம் பலமாயிருக்க சேமித்து வைக்கவேண்டிய சக்தியையெல்லாம்



வெளிக்கொணரமுடியும் என்றால் அது பொன்னியின் செல்வரால் மட்டும் தான் முடியும். இல்லையென்றால் காரியமெல்லாம் சீர்கெட்டுவிடும். அதனால் பொன்னியின் செல்வர் அவரது பழைய நிலைக்குத் திரும்புவது என்பது மூக்கியமானது. சோழநாட்டுப் பிரஜைகளும் சோழர் பிரதேசமும் இவன் வீரத்தையே நம்பி யிருக்கிறது. லட்சோப லட்சம் மக்கள் நம்பியிருந்த சோழரின் எதிர்காலமே கேள்விக்குறியான போது சம்புவராயரும் பழு வேட்டரையரும் சேர்ந்தால் என்ன? பிரிந்தால் என்ன?' என்று நினைக்கத்தொடங்கினார்.

இதை நினைத்த பிரதமர் முற்றத்தில் அமர்ந்திருந்த பொன்னி யின் செல்வரைப் பார்த்தார். பலரும் அவர் முன் வந்து வாய் பொத்தி துக்கம் தெரிவித்தனர். அதற்குப் பொன்னியின் செல்வர் தலையை மட்டும் அசைத்தார். அவர் முகத்தில் குடிகொண்டிருந்த சோகத்தைப் பார்த்தபின் தற்போது எடுத்த முடிவே சரியெனப் பிரதமருக்குப் பட்டது.

முற்றத்தில் நேற்று வானதியின் உடலை வைத்திருந்த இடத்தின் அருகே பொன்னியின் செல்வர் அமர்ந்திருந்தார். அடிக்கடி பெரு மூச்சுவிட்டார். அவ்வப்போது பழைய நினைப்புகளில் அவ ருடைய கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிற்று. முற்றத்தைச் சுற்றி வீற்றிருந்த அரச குடும்பத்தினர் யாரும் அவருக்கு ஆறுதல் கூற முன்வரவில்லை! அவரது துன்பம் வெளி வராமல் இருந்தால் அவருக்கு அதன் காரணமாக என்ன விபரீதம் நேருமோ என்னவோ என்று அனைவரும் அமைதி காத்தனர். கதி கலங்கிக் கொண்டிருந்தார்கள்.

சோகமோ அவர் மனத்தை விட்டு ஒரு கணமும் அகலவில்லை. நாளடைவில் குறையும் துன்பமா இது? சோழ நாட்டு நதிகளில் புது வெள்ளம் வரும்போது உண்டாகும் அபாயமான சுழல்களில் சிக்கியது போலத் திண்டாடித் திணறும்படி செய்து விட்டது விதி!

அவ்வப்போது தலையை நிமிர்த்திச் சுற்று புறத்தை கவனித்தார் பொன்னியின் செல்வர். தனது மகன் ராஜேந்திரனோ பழுவூர் இளவரசியின் மடியில் படுத்திருந்ததை கண்டார். 'மடையன்! அவளை அம்மா என்று தான் அழைகிறான்' என்ற ஆதங்கம் அவருக்கு.

'மகனே வேண்டாம். இவளுடன் உறவு கொண்டாட நினைத்த தால் தான் இந்த கதி எனக்கு. நீயும் அந்தத் தவறை செய்யாதே' என்று கத்த வேண்டும் போலிருந்தது.

பின் உடனே தான் கொண்ட காதலை நினைத்து பார்த்தார். 'மனித சஞ்சாரமற்ற தீவாந்தரத்தில் கனவில் கண்டேன் அவளை. அன்று ஆரம்பித்தது கஷ்டகாலம். அவள் கிடைக்கவில்லை என்ற கஷ்டத்தைக் குறைப்பது போல இதர துன்பங்கள் பூதாகாரமாக உருவெடுத்துவிட்டன. பலவிடங்களில் பிரியம் முற்றிலுமாக மாறித் துவேஷமாகவும் அருவருப்பாகவும் உருவெடுக்குமாமே? இதுவும் அப்படித் தான் மாறப்போகிறதோ என்னவோ?' என்று நினைத்துக் கொண்டார்.

பொன்னியின் செல்வருடைய முகக்குறிகள் அடிக்கடி மாறுவதைக் கண்ட பிரதமர் அவர் பெரும் குழப்பத்தில் இருக்கிறார் என்று யூகித்து விட்டார். பிரதமர் மனதில் யோசனையொன்று தோன்றியது. 'இதைப்பற்றி உடனே யாரிடமாவது பேச வேண்டும்' என்று நினைத்தார். ஆனால், யாரிடம் சொல்வது? வந்தியத் தேவனிடம் சொல்வதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. இரு ஆருயிர் நன்பர்களான பொன்னியின் செல்வருக்கும் மாறனுக்கும் இடையே அவன் என்னவென்று முடிவெடுப்பான்? பெண்கள் யாரிடமாவது கலந்தாலோசித்தால் பரவாயில்லை என்று நினைத்தார். ஆனால், குந்தவை இப்போது அதற்கு ஏற்ற நிலையில் இல்லை.

எல்லோரையும் சுற்றிப் பார்த்தார் பிரதமர். அரசியார் பூங்குழலியே ஆலோசனை சொல்ல ஏற்றவள் என்ற முடிவுக்கு வந்தார். பூங்குழலி தன்வேதனைச் சுமையை வெளிகாட்டாமல் ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தாள். எல்லோரும் பட்ட துக்கத்தையும் அழுத அழுகையையும் பார்த்து அரை வயிறாவது சாப்பிட வேண்டும் என்று பூங்குழலி கட்டாயப்படுத்திக் கொண்டிருந்தாள். ஆரம்பத்தில் வானதிக்கும் பூங்குழலிக்கும் ஒத்தே போகாது. எனினும் போகப்போக வானதியின் மீது தனியான பிரியம் கொண்டிருந்தாள் அரசியார்.

அவளைத் தனியே அழைத்தனர் பிரதமரும் அரசரும். முதலில் ஆச்சரியப்பட்டவள் உடனே வந்தாள். விஷயத்தை எடுத்துச் சொன்னார்கள். அவளுக்கும் இதுவே சரியெனப் பட்டது.

''பழுவேட்டரையர் தங்களிடம் மிகுந்த நம்பிக்கையும் மரியாதையும் உள்ளவர். ஆகையால் தாங்களே நேரில் சென்று அவரிடம் இதைப்பற்றிப் பேசலாம்'' என்றாள் பூங்குழலி அரசரை நோக்கி.

''உடனே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யும்படி நானே சின்னப் பழுவேட்டரையருக்குச் சொல்கிறேன்!'' என்றார் அரசர்.



''அப்போது பாதகம் ஏற்பட வாய்ப்பில்லை; அவரை அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்தால் எல்லா விஷயங்களையும் பேசி முடிவு செய்து விடலாம். அவர் பெண் கொடுக்க மறுத்தால் சில நாள் கழித்து மீண்டும் பேசிக் கொள்ளலாம். ஆனால் எனக்கு என்னவோ பொன்னியின் செல்வரை மாப்பிள்ளையாய்ப் பெற அவர் ஆட்சேபம் தெரிவிக்க மாட்டார் என்று தோன்றுகிறது. உடனே சம்மதிப்பார்,'' என்றார் முதன்மந்திரி.

ஆனால், பழுவேட்டரையர் அவர்கள் நினைத்தது போல உடனே சம்மதிக்கவில்லை.

மற்ற சிற்றரசர்களை எல்லாம் விட்டுவிட்டுத் தன்னை மட்டும் அரசர் தனியே அழைக்கிறார் என்று முதலில் ஆச்சரியப்பட்டார் பழுவேட்டரையர். பழுவேட்டரையரிடம் அரசியல் பேசுவது போல ஆரம்பித்தார்கள். ''அரசே மனைவியின் பிரிவைப் பொன்னியின் செல்வர் மிகவும் பேரிடியாக எடுத்து கொண்டு விட்டார். அதைவிட்டு மீண்டு வருவது சுலபமல்ல என்று நினைக்கிறேன்'' என்றார் சக்கரவர்த்தி.

நம்பாதவர் போல இடிந்து போய் உட்கார்ந்திருந்த பொன்னியின் செல்வரைத் திரும்பிப் பார்த்தார் பழுவேட்டரையர். 'பெண்ணின் மேல் பிரேமை கொண்டு வீரம் போகுமா?' என்ற சந்தேகம் அந்தக் கிழட்டு வீரருக்கு வந்தது. பின்னர் பொன்னியின் செல்வரை உற்று கவனித்தவருக்கு சக்கரவர்த்தி சொல்வதில் உண்மை இருக்கிறது என்று தோன்றியது.

'ஆமம் என்பது போலத் தலையசைத்தார். பழுவேட்டரையர் பின்னர் கூறினார்; ''இது ஆபத்தான நிலைமையல்லவா? அவர் இன்னமும் சோழநாட்டுக்காகச் செய்ய வேண்டியவை பலவும் இருக்கின்றன. நாடே அவர் மீது பல ஆசைகள் கொண்டிருக்கிறது. எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கை கொண்டிருக்கிறது. இனிமேல் பொன்னியின் செல்வருக்கு என்ன வேலையிருக்கிறது என்று யாரும் நினைக்க முடியாது. அவர் போர்க்களத்துக்குத் திரும்பிச் செல்லவேண்டும். ஆயிரம் கப்பல்களில் வீரர்களை ஏற்றிக் கொண்டு கீழ்த்திசைக் கடல்களில் உள்ள மாநக்கவாரம், மாபப்பாளம், மாயிருடிங்கம், கடாரம், சாவகம், புட்பகம் ஆகிய நாடுகளை வெற்றி கொள்ளவேண்டும். தெற்கே முந்நீர்ப்பழந்தீவு பன்னீராயிரமும் கைப்பற்றவேண்டும். மேற்கேயுள்ள கேரளம், குடமலை, கொல்லம் ஆகிய நாடுகள் அவருக்குச் சரணடைய வேண்டும். பிறகு பொன்னியின் செல்வர் வடதிசை நோக்கிப் புறப்படவேண்டும். வேங்கி, கலிங்கம், இரட்டபாடி, சக்கரக் கோட்டம் என்னும் நாடுகளுக்குப் படையெடுத்துச் செல்ல

வேண்டும். கடைசியாகக் காவியப் புகழ் பெற்ற கரிகால் வளவனைப் போல் இமயமலைக்கும் சென்று புலிக்கொடியை நாட்டவேண்டும். சோழ நாட்டுக்கு வரவேண்டிய பெருமை அவ்வளவும் ஒரு பெண்ணின் சாவால் காணாமல் போகப் போகிறதா? சரித்திரம் என்ற பெரிய சக்கரம் பெண்ணாசை என்ற அச்சாணியில் சுற்றுகிறதா? என்னால் நம்பமுடியவில்லையே? சோழர் தொல்குலத்தின் மங்காமணிவிளக்கு அணைந்து விட்டதா?'' என்று தொடர்ச்சியாகப் பேசினார். தாங்கள் பேச வேண்டியவற்றை எல்லாம் பழுவேட்டரையரே பேசுகிறார் என்று மனதுக்குள் திருப்தி பிரதமருக்கு.

அரசருக்கோ பிரமிப்பு. 'நாடு தான் பொன்னியின் செல்வரின் மேல் எவ்வளவு நம்பிக்கை கொண்டிருக்கிறது!' என்று வியந்தார்.

தூரத்திலிருந்த குந்தவை அரசரும் பழுவேட்டரையரும் பேசியதை ஓரக்கண்ணால் பார்த்துவிட்டாள். முதலில் குந்தவை எப்போதும் கண்ணீரும் கம்பலையுமாகவே இருந்தார். என்றும் திடமாய் இருப்பவளின் அழுகையே எல்லோர் காதில் நாராசமாக விழுந்தது. ஆனால் குந்தவைக்கு வானதியின் மரணம் வேறு கோணத்தில் சிந்தனைகளைக் கொடுத்தது.

'இரண்டு முறை பழுவூர் சம்பந்தம் தடை பட்டவுடன், இனி அது நிகழாது என்று நினைத்து விட்டாளோ என்னவோ. வானதி தன் உயிரைக் கொடுத்து மூன்றாவதாய் ஒரு சந்தர்பத்தை உருவாக்கியிருக்கிறாள்' என்று குந்தவை நினைத்தாள்.

இந்த நிலையிலும் தம்பிக்கு பழுவூர்ப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தால் தான் பரம திருப்தி குந்தவைக்கு. ஆனால் ஒரு முடிவுக்கு வந்தாள். 'அவனுடைய வாழ்க்கையை மீண்டும் ஆனந்த மயமாக்கக் கூடிய பேறு வேறு என்ன இருக்கிறது?' என்று அந்த முடிவெடுத்தாள். ஆனால் இப்போது என்ன செய்வது, எது செய்வது என்று தெரியாமல் திகைத்தாள். அப்போது அரசரும், பிரதமரும் பழுவேட்டரையரைத் தனியே அழைத்துச் சென்று பேசுவதை ஓரக்கண்ணால் பார்த்தாள்.

அவர்கள் பேசியது எதுவும் அவளுக்குக் கேட்கவில்லை, ஆனால் எதைப் பற்றிப் பேசுகிறார்கள் என்று ஒரு பெண்ணுக்கே இருக்கும் உள்ளுணர்வைக்கொண்டு உணர்ந்துவிட்டாள்! 'அவரிடம் சமத்காரமாகப் பேசி ஒப்புதல் வாங்கவேண்டுமே' என்று அவள் கும்பிடாத தெய்வமே இல்லை. அவளும் பாய்ந்தோடிச் சென்று பேச்சு வார்த்தைகளில் கலந்து கொண்டு அதை ஜெயமாக்க வேண்டும் என்ற தன் ஆவலை அடக்கிக்கொண்டாள்.



அரசரும் பிரதமரும் வாய் திறக்க வில்லை. பழுவேட்டரையர் இன்னும் உணர்ச்சிவசப்படட்டும் என்று காத்திருந்தனர். அவர் பேசவேண்டியதெல்லாம் பேசியபின் அரசர் கல்யாணப்பேச்சை எடுத்தார்.

சற்று நேரம் ஆழ்ந்த யோசனைக்குச் சென்றுவிட்டார் பழு வேட்டரையர். பின்பு கடைசியாக 'முடியாது' என்பது போல் தலையை பலமாக அசைத்தார். பிரதமர் மற்றும் சக்கரவர்த்தியின் முகம் வாடிப்போனது. குந்தவையின் இதயம் கனத்தது. அது பாதாளம் வரை மூழ்கியது.

குந்தவையின் மனக்கலக்கம் உடலிலும் பிரதி பலித்தது. உடனே குந்தவையின் மடியில் படுத்திருந்த குட்டிக் குந்தவை தூக்கம் கலைந்து எழுந்தாள். தன் அண்ணன் இருக்கும் இடத்தைத் தேடினாள். பின் மெல்ல நடந்து அவளும் லோகாவிடம் சென்று அவள் மடியில் தலை சாய்த்த படி உறங்கச்சென்றாள். லோகா இரு குழந்தைகளையும் மடியில் படுக்க வைத்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்கும் சோகம். செத்தவளுக்காக வருத்தப்பட்டதைவிட அவள் விட்டுச் சென்ற குழந்தைகளுக்காகவே அதிகம் வருந்தினாள். 'காலஞ்சென்ற வானதி தான் தோன்றாத் துணையாயிருந்து இந்தக் குழந்தைகளை காக்கவேண்டும்' என நினைத்துக் கொண்டாள்.

தாயை இழந்து நிராதரவான குழந்தைகள் பேயறைந்தாற் போல் மிரண்டு போய்ப் படுத்திருந்தன. லோகா அருகில் இருக்கும் போது அவர்கள் அதிக மனக்கலக்கத்துக்கு உள்ளானதாகத் தோன்றவில்லை! எனினும் அவர்களைக் கண்ட மற்றவர்கள் லோகா காது படவே 'கடவுள் எவ்வளவு கல் நெஞ்சக்காரன்' என்று பேசினர்.

'கடவுளுக்கு மட்டுமா? எனக்கும் தான்' என்று நினைத்துக் கொண்டாள் லோகா. 'அக்கா என்னை மன்னித்துவிடு' என்று அவ்வப்போது முணுமுணுத்துக் கொள்வாள். குரல் தழுதழுத்தது.

ராஜேந்திரன் லோகாவின் மடியில் படுத்திருந்தான். திடீரெனக் குழந்தைக்கு ஏதோ கனவு வந்திருக்க வேண்டும். கெட்ட கனவா? உடனே கண் கூட விழிக்காமல் லோகாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டான். அவன் தெளிவற்ற குரலில் 'அம்மா' என்று சொன்ன வார்த்தை மட்டும் கேட்டது லோகாவுக்கு.

லோகாவுக்கு திடீரென்று ஒரு நடுக்கம். இடி விழுந்த இடத்தின் வெகு அருகில் நிற்பது போலொரு உணர்வு. பலமுறை விழித்திருக்கும் போது ராஜேந்திரன் அவளை அம்மா என்று அழைத்த

போதெல்லாம் அதை வேடிக்கையாய் எடுத்துக்கொண்டவளுக்கு இப்போது அவன் தூக்கத்திலும் 'அம்மா' என்றழைத்தது வேறொரு எண்ணத்தைத் தோற்றுவித்தது. குழந்தையைத் தரையில் இட்டு விட்டு வெகுவேகமாக நடந்தால்தான் அவளது மனகுழப்பம் தீரும் என்று ஒரு எண்ணம். ஆனால் அவ்விடத்திலேயே ஒரு நொடியில் ஒரு மின்னல் அவள் மன இருட்டைக் கிழித்தது.

வானதி சாகும் தறுவாயில் என்ன சொல்ல எண்ணினாள் என்று புரிந்து கொண்டாள் லோகா. லோகாவுக்கு உடலின் ஒவ்வொரு அணுவும் வலித்தது. இனியும் தாங்கமுடியாதென்று முடிவெடுத் தாள். இனி என்ன செய்வதென்றும் முடிவெடுத்தாள். குழம்பிய உள்ளத்தின் அடிவாரத்தில் ஒரு சிறிது தெளிவு ஏற்படத் தொடங்கி யது.

'விலையில்லாத தியாகத்துக்கு என்ன விலைகொடுப்பது? மற்றும் ஒரு தியாகம் தான்' என்றது அவள் மனம்.

'ஆனால் அது எப்படி என்னால் முடியும்?' என்றது அவளுடைய காதல் உணர்வு.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்தேழு
## தந்தையின் விண்ணப்பம்

முதலில் சற்று நேரம் பழுவேட்டரையர் தன் விரித்த கைகளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். சற்று நேரம் மேலே நிமிர்ந்து கூரையை நோக்கிய வண்ணம் யோசித்தார். சற்று நேரம் பூமியை நோக்கிய வண்ணம் சிந்தித்தார். கடைசியாகக் கதவை உற்று நோக்கிக் கொண்டிருந்தார், ஏதோ அதன் வழியாக அவர் குழப்பத் துக்கு ஒரு முடிவு வரும் என்பது போல.

சக்கரவர்த்தி அவரைத் தனியே அழைத்துப் 'பொன்னியின் செல்வருக்கு லோகாவைக் கல்யாணம் செய்துதர முடியுமா?' என்று கேட்டவுடன் தான் இந்தக் குழப்பம் ஆரம்பித்தது. பழுவேட்டரை யர் தன் மகள் லோகாவை மாறனுக்குக் கல்யாணம் செய்விக்க லாம் என்று சிறிது காலமாக எண்ணியிருந்ததுண்டு. கடம்பூர் வம்சம் அந்தஸ்திலும் பூர்வீகத்திலும் பழுவூர் வம்சத்துக்கு சமம். அதைவிடவெல்லாம் முக்கியம், லோகாவுக்கும் இந்தத் தேர்வில் விருப்பம் இருக்கும் என்று எண்ணினார். காட்டிலிருந்து அவளைக்



காப்பாற்றி அழைத்து வந்தது முதல் சம்புவராயனுடன் லோகா நெருங்கிப் பழகியது அவருக்கு நன்கு தெரியும்.

சம அந்தஸ்துக் கொண்ட குலத்தில் ஒரு மாப்பிள்ளை என்று நினைத்து திருப்தி கொண்டார் பழுவேட்டரையர். இப்போது மாறனைவிட உயர்ந்த இடத்தில் சம்பந்தம் வந்தவுடன் மனம் குழம்பினார். ஒரு காலத்தில் தன் வீட்டு மாப்பிள்ளையாவதற்கு அருள் மொழியை விடத் தகுந்தவர் வேறு யார் என்று கேட்கத் தோன்றியிருக்கும். ஆனால் இன்று அவர் அப்படி எண்ணவில்லை.

மாறன் தன் மகளுக்கு மிகவும் பிடித்தமானவன் என்பது இது நாள் வரை திருப்தியைத் தந்தது. பல ஆண்டுகளாகத் தனக்கு சேவை செய்வதே தன் முழு வேலையாக வைத்திருந்த மகளுக்கு, ஒரு பிடித்தமான ஆண்மகன் கிடைக்கவேண்டும் என்று மனப் பூர்வமாக எண்ணினார். இப்போது சக்கரவர்த்தியே அழைத்து லோகாவை மனைவியை இழந்து பரிதவிக்கும் அருள் மொழிக்குத் திருமணம் செய்ய முடியுமா என்று கேட்டவுடன் தான் குழப்பம்.

இப்போது மகள் என்ன சொல்கிறாளோ என்று நினைத்தார். அவளுக்கு சுத்தமாகப் பொன்னியின் செல்வர் மேல் அபிப்பிராயம் ஒன்றும் இல்லை என்பது அவருக்குத் தெரியும். ஆனால் அவரது குழந்தை லோகாவிடம் அன்பாய் இருந்ததைக் கிழவர் கவனிக்கத் தவறவில்லை. ஒரு சமயத்தில் தன்வீட்டுக்கு விஜயம் செய்த போதே அச்சிறுவன் ராஜேந்திரன் லோகாவை 'அம்மா' என்று அழைத்ததும் நினைவுக்கு வந்தது. பெற்றவளிடம் இல்லாத தாயமையைக் குணத்தை இவளிடம் கண்டது அந்தப் பிஞ்சு மனம்.

சற்று நேரம் குழம்பினார் பழுவேட்டரையர். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து விட்டார். 'பொன்னியின் செல்வன் என்ன? அந்த பரந்தாமனே மாப்பிள்ளையாய் வந்தாலும் லோகா இஷ்டப் பட்டல் தான் அது நடக்கும். அவள் இஷ்டத்துக்கு மாறுதலாக ஏதும் செய்யக்கூடாது' என்று முடிவு செய்திருந்தார்.

ஆனால் வேறொன்று நினைவுக்கு வந்தவுடன் அவருடைய புருவங்கள் நெரிந்தன. நெற்றி சுருங்கியது. இது வெறும் கல்யாண, பிரச்சனையோ, தாம்பத்திய சம்பந்தமோ இல்லையே? இது சாம்ராஜ்யத்தைப் பற்றியது. அதை அடுத்த பல ஆண்டுகளுக்குக் காப்பாற்றி விஸ்தரிக்கக் கூடிய வீரனைப் பற்றியது அல்லவா? பழுவேட்டரையருக்கு உண்மையில் சோழ தேசத்தை வாழவைக்க வேண்டும் என்று ஆசையாய் இருந்தது. ஆசை மட்டுமல்ல, கடமையும் அல்லவா? ஆனால் அந்தக் கடமை அங்கு சுற்றி இங்கு சுற்றித் தன் வாசலில் இப்போது வந்திருந்தது.

முதலில் இந்த விஷயத்தை மகளிடமே எடுத்துச் சொல்ல வேண்டாம் என்று எண்ணிய பழுவேட்டரையர் 'அரசரே கேட்டிருந்தபடியால் லோகவிடம் பேசாமல் இருக்க முடியாது' என்ற முடிவுக்கு வந்தார். ராஜ்ஜியத்தின் நன்மைக்காக முழு மூச்சுடன் இதற்கான முயற்சியும் செய்ய வேண்டும் என்று தீர்மாணித்தார்.

அதனால் தன் மகளை அழைத்து, அருகில் அமரவைத்துப் பேசினார். தந்தையின் அழைப்பு லோகாவுக்கு அதிசயத்தைக் கொடுத்தது. மனோ வியாகூலத்தினால் பலவாண்டுகள் தேக சுகமின்றித் தவித்த பழுவேட்டரையர் நடுவில் தெம்பாய்த் தேறி வந்தார். ஆனால் இன்று மீண்டும் பழைய நிலைக்கு விஷயங்கள் அவரைத் தள்ளிவிட்டன. தனக்கென ஆயிரம் கஷ்டங்கள் வந்தபோது புலம்பியிருப்பார். ஆனால் வயிரம் பாய்ந்த அந்த வீரக் கிழவர் அவ்விதம் மற்றவருக்காக மனம் கலங்கிப் புலம்பியதை அதுவரையில் மகள் கண்டதில்லை.

அவர் தொண்டையைக் கனைத்தார், ஏதாவது சொல்வதற்கு. அந்த சப்தமே அவள் வேதனையை கிளறி விட்டது. பெண்களுக்கே இருந்த உள்ளுணர்வினால் அவர் எதைப் பற்றிப் பேசப் போகிறார் என்று அறிந்தாள். எல்லவற்றிலும் தன் தந்தையாரின் சித்தம் எதுவோ அதையே நிறைவேற்றிவைக்கும் பெண், இன்று அவர் தன் சித்தத்தை வெளியே சொல்லி விடக்கூடாது என்று கடவுளைக் கும்பிட்டாள்

''அம்மா லோகா! சோழர் குலத்தை நானும் என் பரம்பரையுந்தான் தாங்கி வந்தது என்று பெருமை அடித்துக் கொண்ட காலங்களும் இருந்தன. அண்ணன் உடம்பிலுள்ள வீரத்தின் பரிசான 'அறுபத்து நாலு' விழுப்புண்கள் இந்தச் சோழர் தேசத்தை விரிவடையச் செய்த விழுப்புண்கள். அவர்களுக்குக் கஷ்டமென்றால் நானும் என் குலத்தோரும் துடித்த காலங்களும் உண்டு. இன்று அந்தப் பரம்பரையின் மிகச் சிறந்த வீரன் தவிக்கிறான். பிரிவென்னும் துயரால் தடுமாறுகிறான்.....'' என்று சொல்லி அவள் முகத்தைப் பார்த்தார்.

அவளோ ஒன்றும் சொல்லாமல் அமர்ந்திருக்கவே ''ஐயையோ! எப்பேர்பட்ட வீரனம்மா பொன்னியின் செல்வன்! அவனுக்கு இந்தக் கதியா நேரவேண்டும்! சோழ தேசத்தின் நெடும் பரப்பில் இவனைப் போல ஒரு வீரன் கிடைக்க மாட்டான். ஒரு தலைமுறைக்கு அப்படிப்பட்ட ஒரு தலைவனே உருவாவான். இப்போது நம்மிடையே உதித்தவன் இவன் தான். இவனுடைய வீரம் குறைந்தால் இந்த சாம்ராஜ்யமே வாழ்வதற்கு பாதுகாப்பானதல்ல என்றாகிவிடுமே? வீரம் என்பது உள்ளே பிறப்பதன்று. வளர்த்துக்



கொள்வது. 'தன்னால் முடியும்' என்ற நம்பிக்கையே வீரத்தை வளர்க்கிறது. வீரம் வளரப் பல ஆண்டுகள் ஆகும். ஆனால் வீரம் குன்றிப் போக ஒரு அசம்பாவிதம் போதும். அது அவனுக்கு நடந்துவிட்டது. அவனுக்கு ஆறுதல் கொடுத்து அரவணைக்க நாம் முன்வரவேண்டும்'' என்றார்.

அப்பா எதற்கு வருகிறார் என்று யூகித்துவிட்டாள் லோகா. ஆனால் அதை எப்படி வார்த்தைகளில் சொல்லபோகிறார் என்று காத்திருந்தாள். ''லோகா, உன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு எனக்கு ஒரு முடிவு சொல்ல வேண்டும். சோழர்கள் நாட்டுக்காக இது வரை செய்திருக்கும் தியாகங்களையெல்லாம் காட்டிலும் மகத்தான தியாகம் ஒன்றைச் செய்ய உன்னைக் கோரப் போகிறேன்'' என்றார்.

தியாகம் என்றவுடன் லோகாவின் மனம் வானதியின் தியாகத்துக்குத்தான் சென்றது. இது நாள் வரை யாரிடமும் சொல்லவில்லை. வானதியின் மறைவுக்கு ஏற்பட்ட பிரம்மாண்ட சோகத்தில் அவள் சாவுக்குத் தன்னையே காரணமாக்கி விடுவார்கள் என்று மனதோரமாக லோகாவுக்கு ஒரு பயம். இப்போது தந்தையிடம் சொல்லிவிடவேண்டும் என்று தோன்றியது. லோகாவுக்கும் நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. விம்மி அழுதால் இதயத்தை அடைத்துக் கொண்டிருந்த சோகம் மெல்ல மெல்லக் குறைவது போலொரு எண்ணம். விம்மி அழத் தொடங்கினாள். அவளுடைய கண்களில் கண்ணீர் அருவி பெருகிற்று.

அவள் அழுகைத் தவறாகப் புரிந்து கொண்டார் பழுவேட்டரையர். ''அம்மா, உன்னிடம் தியாகம் செய்யச் சொல்லி நான் கேட்டிருக்கக்கூடாது. இதுவரை என் குலத்துக்கு நீ செய்த தியாகங்கள் போதாதா?'' என்றார். தன் மகள் அழுவதைப் பார்ப்பதற்கு அவருக்கு சகிக்கவில்லை.

''இல்லை அப்பா, நான் சொல்வதைக் கேளுங்கள். வானதியை ஒரு பாண்டிய ஈட்டி பலி வாங்கியது அல்லவா? உங்களுக்கு தெரியாது அந்த ஈட்டி யாருக்கு வந்ததென்று. உங்களுக்கென்ன, யாருக்குமே தெரியாது; என்னையும் வானதியையும் தவிர. அது எனக்கென வந்தது. என் உதிரத்தைச் சுவைத்து உங்களிடமிருந்து என்னை நிரந்தரமாகப் பிரிக்கவே அது வந்தது. என்னைத் தள்ளிவிட்டு வானதி அதை ஏற்றுக்கொண்டாள் அப்பா'' என்றாள்.

நம்பாமல் பார்த்தார் பழுவேட்டரையர். லோகா தொடர்ந்தாள். ''அந்தச் சண்டையின் அவசரத்தில் பலரும் அதைக் கவனிக்க

வில்லை. என்னைத் தள்ளிவிட்டே என் மேல் ஏறியப்பட்ட வேலைத் தான் பெற்று கொண்டாள் வானதி.''

பழுவேட்டரையர் திகைத்துப் போனார் என்று சொன்னால் போதாது! அசந்து வாயடைத்துப் போனார். "ஐயோ அம்மா, நீ சொல்வது உண்மையா? என்னை அனாதையாய் ஆக்கியிருக்கும் அந்த ஈட்டியைத் தான் வாங்கி அவள் குலத்தை அனாதையாய் விட்டுச் சென்றாளா?'' தன் மகளுக்கு நேர்ந்த அபாயத்தை நினைத்து ஒரு கணம் நடுக்கம் கொண்டார் பழுவேட்டரையர்.

சந்தேக நிவர்த்திக்காக சம்பிரதாயத்துக்குத்தான் கேட்டார், "நீ சொல்வது உண்மைதானா?'' என்று. ஆனால் பழுவேட்டரையருக்கு உள்ளூரப் புரிந்தது. வானதி மேல் வேலெறிய ஒரு நோக்கமும் இல்லை பாண்டியருக்கு. தப்பிவந்த தன் மகள் மீது தானே அவர்கள் குரோதமெல்லாம்?

அந்த நடுக்கத்திலும் பழுவேட்டரையருக்கு ஒரு திருப்தி. காரசாரமான வார்த்தைகளுக்கும் கடுமையான விவாதத்திற்கும் தயாராய் வந்தவர் இப்போது காற்று தன் பக்கம் வீசுகிறது என்று அறிந்தார். பெரிய மகள் பாண்டியருடன் சேர்ந்து ஓடிப்போன பின் தந்தையின் விருப்பத்தை ஒட்டியே தன் வாழ்க்கையை அமைத்து கொண்டவள் லோகா. இன்று அவர் கேட்டதற்கு முடியாதென்று சொல்லிவிட்டால் அவரால் மறுக்க முடியாதென்று அவருக்குத் தெரியும்.

"அம்மா நாம் சோழருக்கு மிகவும் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம். நாம் சோழர் குலத்தோடு ஆறு தலைமுறையாக நட்புக் கொண்டவர்கள்; உறவும் கொண்டவர்கள். சோழருக்குக் கைம்மாறு என்ன செய்தோம் என்று ஏற்கனவே புலம்பிக் கொண்டிருக்கும் போது இப்படி என் குலம் விளங்க ஒரு தியாகத்தைச் செய்து சென்றாளே?'' என்றார் பழுவேட்டரையர்.

ஆனால் பெரியவர் வார்த்தைகளை அளந்துதான் வெளியே விட்டார். "யாரும் உன்னை வற்புறுத்தப் போவதில்லை மகளே. அதை நான் அனுமதிக்க மாட்டேன். என்னைத் தவறாகவும் நினையாதே! நான் உன்னைச் சோழர் நாட்டுக்கு அரசியாக்கிப் பார்க்கவேண்டும் என்ற ஆசையினாலெல்லாம் இப்படிச் செய்ய வில்லை. அருள் மொழி அரசனாக வாய்ப்பே இல்லை. எனினும் உன்னை நான் அவனுக்கு மணம் முடித்து வைக்க விரும்புகிறேன். அதற்கு முக்கியக் காரணம் தேவையெனும் போது உதவுவதுதான் நண்பனின் இயல்பு என்று நினைப்பவன் நான். சோழர்கள் தோன்றிய ஆதி நாளிலிருந்து இன்று வரை நமது குலத்தில் பல



ஏற்றத் தாழ்வுகளை சந்தித்திருக்கிறோம். ஒவ்வொரு முறையும் நம்மை அவர்கள் தூக்கி நிறுத்தியிருக்கிறார்கள். நாம் நன்றி மறக்கக்கூடாது.''

"யாரேனும் ஏதேனும் பேசினார்களா அப்பா?'' என்று வினவினாள் லோகா.

"சக்கரவர்த்தியே வந்து கேட்டாரம்மா. ஆனால் உன் எண்ணத்தையும் நான் தெரிந்து கொள்ளாமல் வாக்குக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லிவிட்டேன்''

அமைதியாய் இருந்த மகளிடம் மேலும் எடுத்துரைந்தார். "இந்த பாரத வர்ஷத்தைக் கட்டியாளும் சோழர் பரம்பரை என்பதை நிர்ணயிக்கவேண்டும். அதற்குப் பொன்னியின் செல்வர் அவரது பழைய நிலைக்குத் திரும்புவது என்பது முக்கியமானது. நீயே அவனுக்கு அருமருந்தாய் இருக்க முடியும் எனப் பலரும் நினைக்கிறார்கள். அவனது புகழுக்கு அமிர்தமாய் இருக்க உன்னால் முடியும்''

மகள் ஏதும் எதிர் வார்த்தையே சொல்லவில்லை. அதனால் நிம்மதிப் பெருமூச்சு விட்டார். மகளுடன் ஒரு பெரும் வாக்குப் போர் நடக்கும் என்று நினைத்தவருக்கு நிம்மதி.

உரையாடல் முடிந்து தட்டுத் தடுமாறி எழுமுன் "எனக்கு இதில் பிடிவாதம் ஒன்றுமில்லையம்மா. பேராசையும் இல்லை. நீ உடன்படவேண்டும் என்ற நிர்பந்தமும் இல்லை'' என்றார் பழுவேட்டரையர் "ஆற அமர யோசி.உன்னை பலவந்தப்படுத்த வில்லை. நமது குல தெய்வமான துர்கைதான் இந்தச் சமயத்தில் உனக்குத் தேவையான துணிச்சலைக் கொடுக்கவேண்டும்'' என்று மீண்டும் வலியுறுத்தினார்.

அப்பா சென்றவுடன் தனியாக அமர்ந்து யோசித்தாள் லோகா. இது போன்ற நேரங்களில் மனித யத்தனத்தில் நம்பிக்கை குன்றி எல்லாம் விதியின் விளையாடல் என்று தோன்றும். தனக்கென ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் போது விதி விளையாடுகிறது. 'விதி வெகு பொல்லாதது. என்னை இப்படிச் சிக்க வைத்துப் பார்க்கிறது. ஈவிரக்கமின்றி வாழவேண்டிய கட்டாயம் இது. தன் மீது கூட.'

இந்தச் சூழ்நிலையில் யோசிப்பது என்பது ஒரு பிரம்மாண்டமான தராசைக்கொண்டு இரு தரப்பின் நன்மை தீமைகளை அளவிடுவது போலிருந்தது. முதலில் அவள் மனம் மாறனிடம் சென்றது. 'அவனுக்கு எதிராக நான் முடிவெடுத்தால் மாறனின் நிலையென்னவாகும்? அவனுக்கு ஏற்கனவே கசந்து போனது

வாழ்க்கை. மீண்டும் அவனைக் கீழே தள்ளி விட்ட பாவம் எனக்கு வேண்டாம்' என்று நினைத்தாள். குழந்தைத் தனமான பிரியமல்ல அவள் மாறனின் மேல் வைத்திருந்தது. அவள் உயிரைக் காப்பாற்றியதற்காவும் நன்றியல்ல. தான் இல்லை என்றால் இடிந்து போய்விடுவான் என்ற பயம் தான் காதலாய் உருவெடுத்திருந்தது.

ஆனால் அவளுக்குத் தெரியும். மாறன் முன் போலில்லை. இன்று அவன் அந்தப் பழைய நிலையிலும் இல்லை. 'நீ இல்லையென்றாலும் பெரிய நாடொன்றை ஸ்தாபிக்கும் சக்தியும் வலிமையும் அவனுக்கு வந்து விட்டது. அழகுக்கு அழகு பார்க்கவே உன்னை அவனுக்கு கல்யாணம் பேசுகிறார்கள்' என்று தனக்கு தானே சொல்லிக்கொண்டாள்.

பொன்னியின் செல்வரை நினைத்தபோது லோகாவுக்கு ஒன்றுதான் பிரதானமாகத் தெரிந்தது. தனக்காக உயிரைத் தியாகம் செய்தாள் வானதி. இந்தச் சம்பவம் எல்லாவற்றிலும் அதிக வேதனையை அளித்திருந்தது. அதற்குப்பின் உற்றவர் யாரையும் பார்க்காமல் சாகும் தருவாயில் தன்னை மட்டுமே வானதி பார்த்தது ஏன்? என்று எண்ணமிட்டுக் கொண்டே ஓரிரு நாள் கழித்தாள். பின் புரிந்தது. 'என் குழந்தையை அனாதையாய் விட்டு விடாதே' என்பது தான். அது போலவே ராஜேந்திரனும் வந்து அவள் மடியில் அமர்ந்த போது புன்னகையுடனேயே உயிர் விட்டாள் வானதி. 'யாராவது சிரித்து கொண்டே சாவார்களா? அதுவும் அந்த மரண வலியில்.' வானதிக்கு அவ்வளவு நம்பிக்கை லோகாவின் மேல். அந்த நம்பிக்கை வீண் போகக்கூடாது என்று முடிவுக்கு வந்தாள்.

தன்னை 'அம்மா அம்மா' என்று அழைக்கிறானே ராஜேந்திரன். அவனது அம்மா இறந்து அவன் அனாதையாய் நிற்கக் காரணமாயிருந்தவள் லோகா. தன்னால் நேர்ந்த துன்பத்துக்குப் பரிகாரம் தேட வேண்டாமா? புரியவில்லையே! ''அரண்மனையிலிருந்து கிளம்பி வரும் முன் 'அம்மா மீண்டும் வருகிறேன்' என்று சொல்லி வந்தாயே? அவனுக்கு வீண் ஆசை காட்டுகிறாயா?'' என்று தனக்குத் தானே கேட்டு கொண்டாள். ராஜேந்திரனுக்குத் தாயாய் இருக்கவேண்டும் என்ற விருப்பைத்தவிர அவள் இதய அந்தரங்கத்தில் வேறொரு காரணமும் இல்லை. அருள் மொழியுடன் அவள் பேசியது கூட இல்லை.

நள்ளிரவுக்குச் சற்று முன் தான் ஒரு முடிவுக்கு வந்தாள் லோகா. 'நாளைக் காலை மாறனுக்குச் சொல்லி அனுப்ப வேண்டும்' என்று முடிவெடுத்தாள்.



'இருவரும் மனம் விட்டுப் பேசவேண்டும். எங்கள் வாழ்க்கையைப் பற்றி மட்டுமல்லாமல், இந்த நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் பேசவேண்டும்' என்று நினைத்தாள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்து எட்டு

## கனவிற்கு ஒரு முடிவு

ஆசைக் காதலி லோகாவிடமிருந்து செய்தி வந்தவுடன் அதன் சாரத்தை ஒரு வகையாக உணர்ந்துவிட்டான் இளம் சம்புவராயன். வாழ்க்கையெல்லாம் தோல்வி தோல்வி என்றே அனுபவித்தவனுக்கு, தோல்வியானது தூரத்து வானத்தில் உருவாகும் போதே உணர்வு வந்துவிடும் போல. அதுமட்டுமல்ல. தன் காதலியையே காதலித்த பொன்னியின் செல்வர் இப்போது மனைவியை இழந்து நின்றவுடன் மாறனுக்கு அடிமனதில் ஒரு பயம் ஏற்பட்டது; முற்றிலுமாக நீல நிற வானில் ஒரு சிறிய கருமேகம் போல. அதுமட்டுமல்லாமல் தனக்கும் பழுவூருக்கும் இருந்த நெருக்கத்தைப் பற்றித் தெரியாதவர்கள் மூலமாக சில விஷயங்கள் தெரியவந்தன. சக்கரவர்த்தி பழுவூர் அரசிடம் பெண்கேட்டது அரசல் புரசலாக மாறன் காதுகளிலும் விழுந்தது.

தனக்குச் சிந்திக்க நேரம் தேவை. அதனால்தான் புரவி வேண்டாம் என்று தஞ்சை வீதிகளில் நடந்தே சென்றான் மாறன். சாலையில் நிசப்தம் நிலவியது. தேனடைகளை மொய்க்கும் தேனீக்களைப் போல இருக்கும் தஞ்சைத் தெருக்கள் வெறுமையாய் இருந்தன. ஒருவர் கூட சப்தித்துப் பேசவில்லை. தஞ்சை மாநகரம் இன்னமும் துக்கத்திலிருந்து விடுபடவில்லை. எல்லோருடைய முகங்களிலும் குடிகொண்டிருந்த சோர்வும் யாவரும் இருதயத்துக்குள் தேக்கி வைத்திருந்த வேதனையை வெளிக்காட்டியது. ஆனால் பலரும் இவனைப் பார்த்து வணங்கி விட்டுத்தான் சென்றனர். மாறன் அதைக் கண்டு கொள்ளவில்லை.

'வீரத்துக்குப் புகழ் பெற்ற இராஜ்யத்தில், ஒரு பேதை ஸ்திரீயை, பட்டப் பகலில் துஷ்டர்கள் கொல்ல முற்பட்டது, எப்படிப்பட்ட அக்கிரமம்? சோழ நாட்டில் தர்மம் தலைகீழாகி விட்டது! கட்டுக்காவல் அற்றுப் போய்விட்டது!' என்று ஊரெல்லாம் பேச்சு.

உண்மையறியாதவர்கள் மக்கள். தான் எச்சரித்தது பற்றி யாருக்கும் தெரியாது. எனினும் நடந்தவற்றுக்குத் தானும் தனது பொறுப்பற்ற தன்மையும் ஒரு முக்கியக் காரணம் என்று பேச்சு அடிபட்டதாகக் கேள்விப்பட்டான். அதில் வேறு அவனுக்கு மனக்கசப்பு.

மாறன் பழுவூர் அரண்மனைக்குள் நுழையும் போது யாரும் அவனைத் தடுக்க வில்லை. வாசலில் இருந்த காவலாளிகள் தலை சாய்த்து வணக்கம் சொன்னார்கள். தனக்கெனப் பிரத்யேகமாக நின்றிருந்த தாதிப் பெண் ஒருத்தி அவன் முன் வணங்கி, அவனைத் தோட்டத்தின் அருகே அழைத்துச் சென்றாள்.

அச்சமயம் பழுவூர் அரண்மனைத் தோட்டம் ஒரு ஏகாந்தமான பிரதேசமாக விளங்கி நிசப்தம் குடி கொண்டிருந்தது. தேடக்கூடத் தேவையில்லை, லோகா எங்கு அமர்ந்திருப்பாள் என்று. சரியாக அவன் எதிர்பார்த்தபடி மூடப்பட்ட சுரங்க வாசலின் அருகே லோகா அமர்ந்திருந்தாள். ஆனால், உற்று பார்த்தவருக்கே லோகா அமர்ந்திருப்பது தெரியும். இல்லையென்றால் அருகிலிருந்த மண்டபத்தின் சிலையொன்றைப்போல அவள் அசைவற்று அமர்ந்திருந்தாள். தனக்குள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாய்த் தோன்றிய லோகாவைச் சற்றுத் தூரத்திலிருந்தே கண்டுவிட்ட மாறன், பேசப்போகும் விஷயம் கசப்பானது என்பதை யூகித்துவிட்டான்.

'ஆகா! இந்த இடத்திலா நாம் பேசவேண்டும்? பெரும் வெற்றி பெற்ற இடத்திலா தோல்வியைச் சந்திக்க வேண்டும்? இங்கு தான் இருவரும் உயிருடன் மீண்டு வந்தோம். அப்படியே உள்ளே செத்திருக்க கூடாதா?' என்று கூடத் தோன்றியது மாறனுக்கு.

சற்று நேரம் அங்கேயே நின்று மனதை அமைதிப்படுத்திக் கொண்டான். பிறகு சாவதானமாக நடந்து அவளிடம் வந்து நின்றான். அருகில் வந்தவனை ஏறிட்டுப் பார்த்த வண்ணம், ''சம்புவராயரே! சற்று உட்காருங்கள்'' என்றாள்.

உட்காரும்போதே மாறன் சொன்னான் ''லோகா, எனக்கும் மனத்தில் ஏதோ உறுத்திகொண்டேயிருக்கிறது. ஏதேதோ பேச்சுக்கள் என் காதில் விழுகின்றன. எனினும் உன் வாயிலிருந்து அதற்கெல்லாம் மறுப்பைத் தெரிந்து கொண்டால் தான் என் மனம் நிம்மதியடையும்'' என்றான்.

''சம்புவராயரே! இன்று எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்'' என்றாள்.

கண்களை மூடிகொண்டு வார்த்தைகளைப் பல முறை சொல்லி சொல்லிப் பார்த்தாள் லோகா. போன வாரம் வரை உயிருக்கு



உயிரானவன் என்று முடிவு செய்திருந்தவன் அங்கு வீற்றிருந்தது, அவளுக்குத் தயக்கத்தை உண்டு பண்ணியது. அவனை நிமிர்ந்து பார்க்கவே வெட்கமாயிருந்தது. முதல் முறை சொல்லும் போதே தனது பேச்சு நன்றாய் மாறனுக்குப் புரியவேண்டும் என்று நிச்சயப் படுத்திக் கொண்டாள். எனினும் அவனைப் புண்படுத்தக்கூடாது என்றும் ஒரு ஆர்வம். அவனை நேரே பார்த்த போது, உருப் போட்டு வைத்திருந்த வார்த்தைகளெல்லாம் மாறி மாறிப் போயின. எனினும் ஒரு நெடிய பெரு மூச்சை விட்டுக் கண்களைத் திறந்தாள்.

''நாம் இருவரும் மனம் விட்டுப் பேசவேண்டும். உங்கள் வாழ்க்கையைப் பற்றி மட்டுமல்லாமல், இந்த நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் பேசவேண்டும்'' என்றாள்.

உடனே வரப்போகும் செய்தியின் சாரத்தை நன்றாக அறிந்து கொண்டான் மாறன். ரசமான சம்பவங்கள் நிறைந்த காதல்; மனதில் ஆழமாயும் இருந்தது. அது இப்படி ஆகுமென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை.

''நாம் இருவரும் கை கோர்த்துக் கொண்டு பயணிக்கலாம். யாருக்கும் அதில் ஆட்சேபணைகள் இல்லை. ஆனால் நமக்குப் பிற பொறுப்புக்களும் உள்ளனவே'' என்றாள் லோகா.

''சம்புவராயரே, நம் காதலைத் தியாகம் செய்யும் தருணம் வந்து விட்டது. நான் வானதி தேவியின் குழந்தைகளுக்கு அன்னையாக இருக்க விரும்புகிறேன்.''

சொல்லும் போது அவளுடைய குரல் மட்டும் ஏனோ நடுங்கியது. அவள் முகத்தை உற்றுப் பார்த்தபோது அதில் சந்தேகத்தின் அறிகுறியை அணுவளவும் அவன் காணவில்லை; எல்லையில்லாத திடமும் அளவிடமுடியாத உறுதியும் அதில் காணப்பட்டன! தியாகம் என்பது பெண் குலத்தின் உயர்ந்த குணநலன்களில் ஒன்று என்றறிந்திருந்தான் மாறன். ஆனால் தன்னையும் அல்லவா அந்தத் தியாகத்தில் பங்கேற்கச் சொல்கிறாள்!

''நான் கூறியதை நீர் மனமார ஒப்புக் கொள்வீரா, மாட்டீரா?'' என்று கேட்காமல் கேட்டாள்.

''நீ என்னை உயிருக்கு உயிராய் விரும்பவில்லையா? என்னை மணந்து கொண்டு கடம்பூர் நாட்டின் பட்டமகிஷியாக இருக்க ஆசைப்படவில்லையா?'' என்ற கேள்விகளைக் கேட்டான் மாறன்.

அவள் பதிலேதும் சொல்லவில்லை.

''பின் என் கதி?'' என்றான் கடைசியாக.

''வீரர்கள் துச்சமென நினைத்து நாட்டுக்காக உயிரையே விடுவ தில்லையா? அது போலத்தான் இதுவும். உமது சாதனைகளுக்கும், வீரத்துக்கு ஏற்ற ஒரு பெண் கிடைப்பாள் என்பது உறுதி'' என்றாள் லோகா.

''அவர்களெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு நீ தான் வேண்டும் என்றிருந்தேனே?''

''எனக்கொரு கடமை இருக்கிறது. அதை நிறைவேற்றி வைக்க வேண்டும். என்னை மறந்து விடுங்கள்'' என்றாள்.

அவன் பேசப் பேச அவள் பதிலேதும் சொல்லவில்லை. அமைதி காப்பதே நல்லது என முடிவெடுத்தாள். அவன் கோபத்தை யெல்லாம் வெளியே கொட்டட்டும். அமைதி ஏற்பட்டவுடன் சொல்லிப் புரிய வைக்கலாம் என நினைத்தாள்.

''உன் கடமையை நிறைவேற்றுவதற்காக என் மீதான காதலையே துறந்துவிட முடிவெடுத்தாயா?அப்படி யார் உன்னை நிர்பந்தித்தது?''

''இது என் தந்தையின் கட்டளையில்லை'' என்று மட்டும் சாதித்தாள். ஆனால் அவள் தந்தை சொன்ன வார்த்தைகள் அவள் மனதில் பளிசென்று மீண்டும் தோன்றின. 'பொன்னியின் செல்வனைப் போல ஒரு வீரன் இல்லையென்றால் சோழ நாடு-நம்முடைய அருமைத் தாய்நாடு அடிக்கடி பயங்கர ரணகளமாகி விடும். அது நல்லதா என்று எண்ணிப் பார்! அப்படிப்பட்ட கேடு சோழ நாட்டுக்கு ஏற்படக் கூடாது அம்மா.'

'இந்த எண்ணம் உனக்கு எப்படி உண்டாயிற்று' என்று கேட்கத் தோன்றியது. கேட்டும் விட்டான். உண்மை தெரியாவிட்டால் தலையே வெடித்துவிடும் போலிருந்தது.

லோகாவோ உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளைப் பொரிந்து தள்ளினாள். ''இந்த நாட்டின் நலன் கருதி என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட உம்மைத் தியாகம் செய்யச் சித்தமா யிருந்தேன் என நினைத்தீரா? இல்லை! உங்களைவிட அந்தஸ்தில் கூடியவருக்கு மாலையிடச் சம்மதித்தேன் என்று நினைத்தீரா? அதுவும் இல்லை!''

''உங்களில் யாருக்கும் தெரியாத ஒன்றைச் சொல்கிறேன் கேளுங்கள். அந்தப் பாண்டியன் யாருக்காகத் தன் கடைசி மூச்சை செலவழித்து ஈட்டியை எறிந்தான்? வானதியுடன் அவனுக்கு என்ன பகை? யாராவது அதை நினைத்தீர்களா?'' என்றாள்.



உடனே அவனுக்குப் புரிந்தது. தன்னைப் போலவே அவளுக் கும் இதில் இழப்புதான்.

''சம்புவராயரே! பரமேசுவரன் எறிந்தானே ஒரு வேல், அது யாருக்கு வந்ததென்று நினைத்தீர்? வானதி மேல் வேலெறிய, சாகும் தறுவாயில் அவனுக்கென்ன குரோதம்? அன்று அந்த வேல் என்னைத் தீண்டியிருந்திருந்தாலும் நான் உங்களுக்கு கிடைத் திருக்க மாட்டேன்'' என்றாள்.

மாறனுக்குப் புரிந்தது. பரமேசுவரன் செய்ததில் ஒரு வகை வெற்றி பாண்டியருக்குச் கிடைக்கத்தான் செய்திருந்தது. விதியின் வலிமை எப்பேற்பட்டது? அந்த வேல் சரியான இலக்கை அடைந்திருந்தாலும் அடையாவிட்டாலும் தனக்கு மட்டும் இழப்பு நிச்சயம் என்று விதி நிர்ணயித்திருந்தது.

'ஆகா! பெண்களின் இருதயம் வெகு ஆழமானது என்று சொல்வது எவ்வளவு உண்மை? ஏன் இப்படி செய்கிறாள்?' என்று யோசித்தவனுக்குப் புரிந்தது. பொன்னியின் செல்வருக்கு என்ன ஆபத்து நேரிடுமென்று அவன் எதிர்பார்த்தானோ அந்த ஆபத்து அவனுக்கே தற்போது நேரலாயிற்று. புயல் காற்று, எரிமலை, பூகம்பம், போன்ற அவ்வளவையும் ஒரு வினாடிப் பொழுதில் அனுபவித்தான்.

இருண்ட பாதை போல நிர்மலமான வானம். அதில் சந்திரன் கண்ணுக்குத் தெரியாத தேரொன்றின் சக்கரம் போலச் சுழன்று கடந்தது. இருவரும் பேசி முடிப்பதற்குள் வெகு தூரம் கடந்து விட்டது நிலா. வெண்மையான அதன் ஒளி தரையில் படர்ந் திருக்க, மரம் செடிகொடிகளின் நிழல்கள் இப்போது வேறு இடத்தில் விழுந்துகொண்டிருந்தன.

'இந்த நிலையில்லாத வாழ்க்கையில், காற்றில் அறுபட்ட சிலந்தி வலையின் நூல் போல இருக்கும் இந்த வாழ்க்கையில், அன்பு செலுத்துவதெல்லாம் சரியா?' என்பதுவே கேள்விக்குறியானது மாறனுக்கு.

'அளவில்லாத ஆனந்தத்தில் நீ வாழக்கூடாது, என்று விதி சொல்லிவிட்டபின் என்ன செய்ய முடியும்? 'தங்களுக்காக அவசிய மானால் யுக யுகமாக வேண்டுமானாலும் காத்திருக்கிறேன்!' என்று சொல்லாமல் சொன்னவள் 'உனக்கு என் வாழ்வில் இடமே இல்லை' என்று சொல்கிறாளே? 'உனக்காக என் பிராணனை வேண்டுமானாலும் தியாகம் செய்வேன்' என்று அவன் சொல்லிய துண்டு. இன்று 'என்னையே தியாகம் செய்யுங்கள்' என்று சொல்லி விட்டாளே.

அதிவேகமாய் எதிர்காலத்துக்கு சென்று திரும்பி வந்தது மாறனின் மனம். 'இவள் இல்லாமல் எப்படி மீதி நாட்களைக் கழிப்பது?' என்று நினைத்தான். நீச்சல் தெரியாதவன் தண்ணீருக்குள் மூச்சடைத்துத் திணறும் போது எப்படியிருக்குமோ அப்படியிருந்தது மாறனுக்கு. தான் சுவர்க்க வாழ்க்கையையே அடைந்துவிட்டதாக நினைத்து மகிழ்ந்திருந்தவனுக்குத் தன்னுடைய தலை பதினாயிரம் சுக்கல்களாக உடைந்ததென்று கருதினான். சிறிது காலம் வார்த்தைகளில் வர்ணிக்க முடியாத காதலெனும் பரவச நிலையில் இருந்த பிறகு, இப்படி நடக்க வேண்டுமா?

'நாம் நினைப்பதெல்லாம் நடக்கும் என்று மனிதன் நினைப்பது எவ்வளவு பெரிய அறிவீனம்?' என்று நினைத்துகொண்டு, "அப்போது நமக்குள் எல்லாம் முடிந்ததுவிட்டதா இளவரசி?" என்று கேட்டான் மாறன். கேட்கும்போதே அவன் குரல் உடைந்தது.

"அடுத்த வருடம் நீர் என்னை மறந்துவிடுவீர். அதையே நானும் விரும்புகிறேன்" என்றாள் லோகா.

விரக்தியாகச் சிரித்தான். அமர்ந்திருந்த அவள் அவன் முகத்தைக் கூட நிமிர்ந்து பார்க்கவில்லை. இருவர் கண்களிலும் கரை காணாத காதல் வெள்ளம் வெளியே பொங்கக் காத்திருந்தது. அதனால் அவன் கண்களைப் பார்க்காமலே பேசினாள். ஒருமுறை அந்தப் பார்வைகள் சந்தித்தாலும் கட்டி அணைத்துக் காரியங்களை மறந்துவிடுவார்கள்.

'இதற்கெல்லாம் காரணம் மர்மமான காரியங்களாயிருந்தன. எல்லாம் இராஜாங்கத்தோடும் இராஜ வம்சத்தாரோடும் சம்பந்தப்பட்ட சிக்கல்களாக இருந்தன' என்று நினைத்து வந்த மாறனுக்கு, தன் காதல் சாமானியர் காதல் போல இருந்திருந்தால் யார் எக்கேடு கெட்டுப் போனாலும் போகட்டும் என்று விட்டுவிடலாமே என்று தோன்றியது. முதல் முறையாக உயர்குடியில் தான் பிறந்ததை எண்ணி மனம் நொந்தான் மாறன்.

லோகா நினைத்ததை விட அதி வேகமாகவே மாறன் அமைதி கொண்டான். தோட்டத்தில் சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. விதியின் சூழ்ச்சிகள் என்றுமே வீண் போவதில்லை. நித்தியமான, நிரந்தரமான வெற்றிவேந்தன் விதிதான். அவனுடன் போராடுவது எப்போதும் வீண் தான்.

சிறிது சமாதானம் அடைந்ததும் "சம்புவராயரே உம் மனத்தை நன்றாகச் சோதித்துப் பார்த்துப் பதில் சொல்லுங்கள். உண்மையாகவே நீர் என்ன நினைக்கிறீர்?"



லோகவின் முகத்தை ஒரு விரல் கொண்டு நிமிர்த்தி "கண்மணி! நீ என்ன சொன்னாலும் நானும் கட்டுப்படுகிறேன். ஆம் இளவரசி! சரித்திரத்துக்கு பதில் சொல்லும் தறுவாயில் நாம் இருவரும் இருக்கிறோம்" என்றான்.

"மனமொப்பி நீர் சம்மதித்தால் சரி" என்றாள் லோகா.

அந்த வார்த்தை இதயத்தைச் சுருக்கென்று தைத்தது. 'எப்படி மனமாற உன்னையின்றி என்னால் வாழ முடியும் என்று நான் சொல்ல முடியும்?'என்று நினைத்தவன் "சரி நான் வருகிறேன்" என்று சொல்லியபடி எழுந்து நடந்தான்.

அவளுடைய விழிகள் இரண்டிலும் கண்ணீர்த்துளிகள் ததும்பி வெளிவர ஆயத்தமாய் இருந்தன. ஆனால் இது அழுது கலங்கும் தருணம் அல்ல. சம்புவராயன் சென்ற பின் கதறிக் கதறி அழலாம். அதற்கு ஏற்ப நேரமும் இருந்தது. ஆனால் அவன்முன் அழுதால் உறுதி உருக்குலைந்து போய்விடும்.

அவன் சற்று தூரம் சென்றவுடன்தான் தைரிமாக அவனைப் பார்த்தாள். அவன் நடையை பார்த்தாள். சோகமாய் இருந்தது. தோள்கள் துவண்டிருந்தன. அவனது கால்கள் பின்னிக் கொண்டன.

அந்தப் பழைய நினைவுகள் அவனுடைய கால்களுக்கு மிகுந்த நடுமாற்றத்தைக் கொடுத்தன. திடீரென நின்றான். அவன் தயங்கி நிற்பதன் காரணத்தைக் நினைத்து அஞ்சினாள் லோகா. ஏதோ கடைசி முறையாகச் சொல்ல நினைத்தவன் போல நின்றான். அவள் இதயமும் நின்றது. ஆனால் 'சொல்லாத வார்த்தையாக அதுவும் போகட்டும்' என்று நினைத்தானோ என்னவோ, அந்த எண்ணத்தை ஓரம் தள்ளிவிட்டு மீண்டும் நடந்தான்.

'இடிந்து போயிருக்கிறான். ஆனால் மீண்டுவிடுவான். நிச்சயம் அவனுக்கு மீண்டும் ஒரு விடிவு வரும். காலமென்பது நல்ல மருந்து. அதுமட்டுமல்ல. அவனுக்கென ஒரு பெண் நிச்சயம் பிறந்திருப்பாள். ஆனால் அது நான் அல்ல' என லோகா நினைத்துக் கொண்டாள்.

வீரன் என்ற எண்ணம் நிமிர்ந்து நிற்கச் செய்தது. நடை அவ்வப்போது தளர்ந்தாலும் விரைந்து சென்றுவிட்டான்.

மாறன் தோட்டத்தை விட்டு வெளியேறி பழுவூர் அரண்மனை வாசலைக் கடந்தான். அதுவரை அவனையே உற்றுப் பார்த்தாள் லோகா. அவன் எழுந்து தனியே நடந்து செல்வதைக் கண்ட போது இருதயம் படபடத்தது. தேவாமிர்தத்துடன் கலந்த அனுபவம்

காதல். அதன் நினைவுகள் நித்ய வாழ்வு கொண்டவை. அழிவே காணாதவை.

துவண்ட தோள்களுடன் அந்தச் சுத்த வீரன் நடந்து சென்று வாயில் கதவில் திரும்பி மறையும் வரை லோகா பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தக் காட்சியானது உள்ளத்தை உருக்கிவிட்டது. தான் இருந்த குழப்பமான நிலைமையைக்கூட மறந்து அவள் மாறனின் மீது இரக்கம் கொண்டாள்.

லோகாவுக்குத் தேம்பியழவேண்டும் போலிருந்தது. அந்தச் சோக வெள்ளத்தில் கரை காணாமல் தத்தளித்துக் கொண் டிருந்தாள். வெளியேற முயற்சித்த உயிரின் உடலின் ஒவ்வொரு அணுவும் வலித்தது. 'இனியும் தாங்கமுடியாதென்று' என்று முடிவெடுத்தாள்.

'எழுந்திரு' என்றது அவள் மனம். 'ஓடு' என்றது அவள் கால்கள். 'கட்டியணை அவனை' என்றது அவள் காதல் நெஞ்சம்.

'அவன் மனம் உடையச் செய்தது யார்? நீ தானே? திடீரென்று உனக்குப் பச்சாத்தாபம் இப்போது எப்படி வந்துவிட்டது? அழியாத காதலென்று நினைத்தது இப்படி அழிந்துவிட்டதே!'' என்று குற்றம் சாட்டியது அவள் மனம்.

'என் தியாகமே சோழரின் வளர்ச்சிக்கு விதையாக உருக் கொள்ளும் என்று நம்பியவர் பலர். ஆனால் எல்லோருமாய்ச் சேர்ந்து என்னைத் தவறான முடிவெடுக்க வைத்து விட்டார் களோ!' என்று நினைத்தாள்.

லோகாவின் மனக்கண் முன்னால் மாறன் பழுவூர் வாயில் கதவைத் தாண்டியவுடன் இடறி விழுந்து யாரும் கேட்பாரற்று கிடப்பது போலொரு பிரமை பயங்கரக் காட்சியாய்த் தோன்றிக் கொண்டிருந்தது. அதற்கிடையே அவள் மனமோ அவளைப் பார்த்து ''பெண்ணே நீ கொலை பாதகி!'' என்று குற்றம் சாட்டுவது போலிருந்தது.

திடீரென்று விம்மி அழத் தொடங்கினாள். முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு தேம்பினாள். சட்டென எழ முயன்றாள். 'ஓடிச் சென்று அவனை அணைத்து கொள்ள வேண்டும். மன்னிப்புக் கோர வேண்டும். வாழ்க்கையெல்லாம் அவன் காலடியில் கிடக்கவேண்டும்' என்று மனம் சொன்னது.

எழுந்தாள். பழைய காதலையே பூரணமாய் ஏற்றுகொள்ள ஆயத்தமானாள். அதே கணத்தில் அரண்மனைக்குள்ளிருந்து 'அம்மா' என்று ஒரு குரல் கேட்டது. 'அம்மா, அம்மா' என்ற குரல்



மீண்டும் கேட்டபின் மண்டபத்திலிருந்து நாலாபுறமும் தன்னுடைய பார்வையைச் செலுத்தினாள். குரலைக் கேட்டவுடன் அவளுக்கு தெரிந்தது, தன்னைக் காண வீட்டிற்கு வந்த ராஜேந்திரன் அவளைத் தேடி, தோட்டத்துக்கும் வந்திருந்தான்.

தலையில் இன்னமும் சரி வர முடி முளைக்காமல் ஓடி வந்த குழந்தை அவளைக் கட்டி அணைத்தது. கன்னத்தில் முத்தம் கொடுத்தவன் பின் வாங்கினான். அவள் அழுதது ராஜேந்திரனுக்குத் தெரிந்துவிட்டது.

''என்ன அம்மா? உப்புக் கரிக்கிறது. அழுதாயா?''

'ஆம்' என்பது போல தலையை அசைத்தாள்.

அவனுடைய சின்ன முகத்தில் ஒரு அபூர்வ உணர்ச்சிக் கலவை தோன்றியது. கோபமா இல்லை அனுதாபமா, என்று அவள் இளைய வயதினால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால் அவன் பேசிய வார்த்தைகளில் ஒரு பெரிய மனிதனின் தோரணை இருந்தது.

''இனி உன்னை யாரும் அழவிடாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி மீண்டும் அவள் கன்னத்தில் முத்தமிட்டான் ராஜேந்திரன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று நாற்பத்து ஒன்பது
## எதிரியைத் தேடி

வந்தியத் தேவனும் அடியானும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

இருவருமாக சம்பாஷித்திருந்தது பிரதமர் அலுவலகத்தின் வரவேற்பு அறையில். உள்ளே அவர் அழைப்பார் எனக் காத்திருக்கும் போது நாட்டு நடப்புக்களை இருவருமாகப் பேசிக் கொண்டிருந்தனர். பேச விஷயங்களுக்கு என்ன குறைவா? ஓரிரு வாரங்களில் எவ்வளவு நடந்து முடிந்திருந்தது? அவற்றில் பலவும் சோழ தேசத்தின் எதிர்காலத்தையே பாதிக்கக்கூடியவை அல்லவா?

பலவிஷயங்கள் பேசினாலும் முக்கியமாக இருவரும் மாறனைப் பற்றிப் பேசவேயில்லை. வந்தியத் தேவனைப் பார்த்தவுடன் அடியானுக்கு அவனும் சோகத்தில் ஆழ்ந்திருந்ததாகத்

தெரிந்தது. 'இந்த நாட்டில் யார் கண்களிலும் ஒளி இல்லையே' என்று நினைத்துக் கொண்டான்.

வந்தியத் தேவனுக்கோ மாறனை நினைத்தால் வருத்தமா இருந்தது. அவனைப் பற்றிய விஷயமே அவனுக்குத்தான் கடை யாகத் தெரிந்தது. அவன் முதுகுக்குப் பின்னால் ஒரு பெரி நாடகமே நடந்திருந்தது. அதில் புலிக்கரசராகிய உத்தம முதற்கொண்டு பிரதமர் வரை இடம் பெற்றிருந்தார்கள். குந்தவை யும் பழுவேட்டரையரும் கூடக் கலந்து கொண்டனர். இவ்வள பேருடன் தனியொருவனால் போராடமுடியுமா? ஏழையின் பேச்சு அம்பலம் ஏறுவது கடினம் தான். எல்லோருமாய்ச் சேர்ந்து மாறனின் எதிர்காலத்தை அழித்துவிட்டார்கள் என்று எண்ணி கொண்டான் வந்தியத் தேவன். காத்திருந்தவன் பெண்ணை நேற்று வந்தவன் கொண்டு போன கதையாய் மாறிவிட்டது. கடைசி யாகக் காதலி லோகாவின் வாயாலேயே மாறனுக்கு அந்த விஷயம் தெரியவந்தது.

வந்தியத் தேவனைப் போல முதலில் செய்தியைக் கேள்விபட்ட வுடன் அடியானின் மனம் கூடத்தான் பதறியது. 'இதெல்லாம் நியாயம் அல்லவே.' பின் அவன் மனதைத் தேற்றிக்கொண்டான். 'இது இருவரின் காதல் மட்டும் சம்பந்தப்பட்டதில்லையே? ஒரு நாட்டின், இல்லை ஒரு சாம்ராஜ்யத்தின்; இல்லை இல்லை, ஒரு கலாச்சாரத்தின் அச்சாணியே அன்று அந்தப் பழுவூர்ப் பெண்ணின் முடிவைப் பொறுத்து நின்றது. அந்தப் பெண்ணும் எல்லோருக்கும் பிடிக்கும்படியான முடிவையே சொன்னாள்; அதாவது மாறனைத் தவிர!

அடியானுக்கு மாறனை நினைத்து வருத்தம் இருந்தது நியாயமே. மாறனோ தஞ்சையின் பக்கமே வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தான். அடியான் தான் அவனை அழைத்து வந்தவன். மாறனைச் சந்தித்து ஏதாவது ஆறுதல் சொல்லலாம் என்றால் அதைச் சுட்டிக்காட்டிக் கடிந்து கொள்வானோ என்று பயம். என்ன சமாதானம் சொல்லித் தேற்றுவது? எல்லோரும் சேர்ந்து அவன் கழுத்தைப் பிடித்து பலாத்காரமாய்த் தள்ளிவிட்டது போலொரு எண்ணம் மாறனுக்கு ஏற்பட்டதிலும் ஒரு நியாயம் இருந்தது. இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்து நின்றான். அப்போது இந்த நிலைமைக்கெல்லாம் மூல காரணமான ரவிதாசனைத் துரத்திப் பிடிப்பது என்று முடிவுக்கு வந்தான்.

அடியானின் நினைவுகளைக் கலைத்துவிட்டு "ரவிதாசன் கொள்ளிடத்தில் மூழ்கி மாண்டுதான் போயிருப்பான்; அவனுக்கு



இந்தக் கோர மரணம் வேண்டியதுதான்!" என்றான் வந்தியத் தேவன்.

'அப்படி அவன் யமதர்மனைப் பார்க்கப் போயிருந்தால் சோழர் சாம்ராஜ்யத்துக்கு க்ஷேமம்' என்று நினைத்தான் அடியான். ஆனால் தன் சந்தேகங்களை வெளிப்படுத்தினான். "ரவிதாசன் நீரில் அமிழ்ந்திருப்பான் என்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை! ரவிதாசனை அப்படியெல்லாம் கொன்று விட முடியுமா? அவனுக்கு நூறு உயிர் ஆயிற்றே?" என்று அடியான் சொன்னான்.

"உயிர் தப்பியிருந்தாலும், அவன் செய்த அந்த மகாபாதகத் துக்கு என்றாவது அவன் உரிய தண்டனையை அனுபவிப்பான்" என்றான் வந்தியத் தேவன். "ஆனால் அன்று சண்டையின் திசை மாறியதே பொன்னியின் செல்வர் வந்தவுடன் தான். இல்லை யென்றால் எங்கள் எல்லாருடைய கதியும் அதோ கதிதான்!" என்று கூறிக்கொண்டான்.

மழபாடியில் நடந்த அந்த அற்புதமான போரைப்பற்றிப் பேசலாம் என்று அடியான் வாய் திறந்தான். ஆனால் அதற் குள்ளாகப் பிரதமரின் அறைக்கதவு திறந்தது. உள்ளே இருவரும் அழைக்கப்பட்டனர். பிரதமர் இருவரையும் அமரவைத்தார். ஆனால் பேச்சைத் தொடங்கத் தயங்கினார்.

இந்த ஒரு வாரத்தில் பிரதமரின் பல ஏற்பாடுகள் தடம் புரண்டு விட்டன. நந்தினியை வேறு காணவில்லை. இனி அவளைக் கண்டு பிடிப்பது என்பது இந்த ஜன்மத்தில் முடியாது என்று அவருக்குத் தெரியும். ரவிதாசனின் வெறியிலிருந்து சோழர்களால் அவளைப் பாதுகாக்க முடியாது என்று தெரிந்து கொண்டிருப்பாள். என்றாவது அவள் வளர்க்கும் சிறுவன் ஒரு படையைத் திரட்டி சோழனுக்குச் சவால் விடுவான். அப்போது தான் நந்தினியை பற்றி இனிமேல் தெரிய வரும் என்று பிரதமருக்கு நன்றாய்த் தெரியும்.

இருவருக்கும் பிரதமர் முன்னிருந்த பலகையின் மேல் வைக்கப் பட்டிருந்த பொருள் கண்களில் தென்பட்டது. ஒரே சமயத்தில் பாண்டிய நாட்டுக் கிரீடத்தைப் பார்த்தனர். அந்தக் கிரீடமோ ஜொலித்தது. உடனே இன்றைய பேச்சு அதைப்பற்றித் தான் என்று யூகித்தனர். அடியானின் கூரிய கண்களுக்குக் கிரீடம் உள் அடங்குவதற்கேற்ப ஒரு மரப்பெட்டியும் தயாராய் தரையின் மேல் இருந்தது தெரியவந்தது.

கிரீடத்தையே உற்றுப்பார்த்தனர் இருவரும். இதைச் சோழர் அபகரித்ததில் ஏதோ ஒரு தீய விளைவு இருக்கவேண்டும். மற்ற பாண்டியர் குழுக்களிடமிருந்து பிரிந்து ஒரு குழு மட்டும் ஜன்ம

விரோதியுடன் நேசக்கரம் நீட்டி இந்தக் கிரீடத்தைப் பெற முயன்றது. ஆனால் அவர்களுக்கு அது கிட்டவில்லை. தங்கள் பாதுகாப்பில் மகுடத்தை வைத்திருக்கும் சோழருக்கோ பெரும் அடி. குடும்பத்தில் முக்கியமானவரைக் கொலைவெறித் தாக்குதலுக்கு இழக்க நேரிட்டது. முக்கியமாக இதில் பெரும் மாற்றத்தைக் கண்டவர்கள் இளம் சம்புவராயன் மாறனும், பழுவூர் இளவரசி லோகாவும் தான். மணமேடையை அடைந்தேவிட்டோம் என்று எண்ணிய அவர்கள் கல்யாணம், இருவருமாய் இந்த கிரீடத்தை சேர்ந்து கண்டுபிடித்தபின் தடம் புரண்டது. கிரீடம் மிகவும் ராசியற்றது போல.

''திருமலை, வல்லவராயரே! உங்களிடம் ஒரு முக்கியமான வேலையைச் செய்யுமுன் சொல்லிவிட்டுச் செய்ய எண்ணினேன்'' என்றார் பிரதமர். ''இந்தப் பாண்டியப் பொக்கிஷத்தை நமது பொக்கிஷ நிலவறையில் பத்திரப்படுத்தி வைக்க எண்ணியுள்ளேன். அதற்கு ஒரு நாள் உபயோகம் வரும். அன்று நான் இருப்பேனா என்று தெரியாது. ஆனால் பாண்டிய அரசியலில் முக்கிய வழிகள் உருவாக அது பின்னர் ஒரு நாள் உதவும். நீங்கள் இருவரும் அதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்'' என்றார் அநிருத்தர்.

பிரதமரின் உள்ளத்திலும் என்னவெல்லாமோ சந்தேகங்கள் உதித்திருக்கவேண்டும் என்று இருவரும் புரிந்துகொண்டனர். நந்தினியையும் அந்தச் சிறுவனையும் காணவில்லை. ரவிதாசன் உயிருடன் இருக்கிறானா என்று தெரியவில்லை. இவ்வளவு கேள்விகளின் மத்தியில் இந்தக் கிரீடம் மகுடாபிஷேகத்துக்கு உதவுமா?

பிரதமர் தொடர்ந்தார். ''முன்னொரு நாள், சிதம்பரம் அருகில் திருவேட்களத்தில் வல்லவராயர் என்னைக் கேலி செய்தார்; மகுடத்தை நானே ஒளித்து வைத்துக் கொண்டு தேடுவது போலப் பாசாங்கு செய்கிறேன் என்று. அவர் நாக்கில் மச்சம் இருக்குமோ என்னவோ? அதைத்தான் இப்போது செய்யப்போகிறேன். இந்தப் பெட்டிக்குள்ளே பத்திரமாக வைக்கப்போகிறேன்! பின்னொரு காலம் ஈழத்தில் கண்டுபிடித்தோம் என்று சொல்லி நாட்டை நம்ப வைப்போம். அன்று ஆளும் சோழ அரசனுடைய மெய்கீர்த்தியில் அதைப் பற்றி எழுதி சரித்திரத்தையும் நம்பவைப்போம்!'' என்றார்.

''குருநாதா, அது தவறு இல்லையா?'' என்றான் அடியான். முக்கியமாக மாறனின் மாபெரும் சாதனையை மூடிமறைப்பது போல அவனுக்குத் தோன்றியது.



''இல்லை திருமலை! சரித்திரத்தில் பாதி தான் உண்மை. மீதியெல்லாம் மனிதனின் கற்பனையே'' என்றார் பிரதமர்.

இருவரும் சென்றவுடன் பிரதமர் தன் சொந்த நினைவுகளுக்குள் மூழ்கினார். அருள் மொழிக்கும் லோகமாதேவிக்கும் திருமணம் கிட்டத்தட்டப் பேசி முடிவாகிவிட்டது. அதற்கு இளம் சம்புவராயனின் உணர்வுகள் எப்படியிருக்கும் என்று பார்க்க நினைத்த பலருக்கு ஏமாற்றம். தற்காலிகமாகத் தன் வேளக்கார படைப் பதவியிலிருந்து விலகி, கொள்ளிடம் நதியையொட்டித் தனியாக ரவிதாசனுக்கான ஒரு தேடுதல் வேட்டையை அவன் தொடங்கி விட்டான். ஆனால் மாறன் தஞ்சையிலிருந்து தள்ளியிருப்பது தான் நல்லது என்று எல்லோரும் வெவ்வேறு காரணங்களுக்காக ஆசைப்பட்டனர். இந்தத் திருமணம் நடக்கும் போது நிச்சயமாக அவன் தலைநகர் தஞ்சையில் இருக்க மாட்டான் என்று யூகித்த பிரதமருக்கு மனதில் திருப்திக்கு நடுவில் லேசான வலியும் உண்டானது.

'காதலைக் கெடுப்பது உனக்கென்ன புதியதா? அதில்தான் நீ கைதேர்ந்தவனாயிற்றே' என்று தனக்கு தானே மனச்சாட்சி குற்றம் சாட்டிக்கொண்டது. சுந்தர சோழரையும் ஊமை ராணி மந்தாகினியையும் முன்பொரு காலத்தில் பிரித்தது இந்தப் பிரதமர் தான்.

'அதுவும் நாட்டின் நன்மைக்கே. இதுவும் நாட்டின் நன்மைக்கே. சுந்தர சோழர் காதலில் தோல்வியுற்றவுடன் இல்லறத்தில் ஈடுபட வில்லையா? இல்லை, தன் பிள்ளைகள் மீதும் நாட்டின் மீதும் அன்பு செலுத்தவில்லையா? அது போல மாறனும் மனதைத் தேற்றிக்கொள்வான். வாழ்வில் வெற்றி பெறுவான்' என்று அவருக்கு ஒரு நம்பிக்கை இருக்கத்தான் செய்தது.

கொள்ளிடம் கடல் போல ஒரு பக்கம் பரவிக்கிடந்தது. அதன் உயரமான கரைகளில் மட்டுமல்லாமல் ஆற்றின் பக்கத்தில் நெடுந்தூர வயல்களெங்கும் செழிப்பு. அந்தச் செழுமை சூழ்ந்த பாதையில் மாறன் தனியொருவனாகக் குதிரையின் மேல் சென்று கொண்டிருந்தான்.

அக்கம் பக்கம் உன்னிப்பாகவே பார்த்துக் கொண்டு சென்றான். அவ்வப்போது குதித்து மேட்டில் ஏறிக் கரையோரம் இருந்த நாணல் புதர்களையெல்லாம் ஒரு தடவை கவனமாகப் பார்த்தான். ஆற்றின் ஓரத்தில் எவரேனும் ஒதுங்கி கிடக்கிறார்களா என்று பார்த்தான். அதுமட்டுமல்ல. வானத்தையும் அவ்வப்போது அண்ணாந்து பார்த்தான். கழுகுகள் ஏதேனும் வட்டமிடு

கின்றனவா என்று? தரையில் பிணம் கிடக்கிறது என்பதற்கு அது ஒரு முக்கியமான அறிகுறி.

பல இடங்களில் கொள்ளிடத்தின் மறுகரைக்கு மேல் கரும் புகைத்திரள் அடர்த்தியாகக் கிளம்பி கொண்டிருந்தது. ஆர்வத்துடன் சென்று பார்த்த மாறனுக்கு ஏமாற்றம். கரும்பு வயலில் அறுவடை செய்துவிட்டுத் தோட்டத்துக்குத் தீ வைத்துவிடுவார்கள். அது தான் இந்தப் புகை என அறிந்தான்.

ஒவ்வொரு கிராமமாக விசாரித்து கொண்டே சென்றான். 'யாராவது மழபாடி கும்பாபிஷேகத்தின்போது இரவில் கரை ஒதுங்கினார்களா? ஏதாவது அனாதைப் பிணம் தகனம் செய்யப் பெற்றதா?' இதுவரை அவனுக்குச் செய்தி ஏதும் கிடைக்கவில்லை.

கொள்ளிடக் கரையில் மாறனுக்கு ஒரு சந்தேகம் ஜனித்தது. இவ்வளவு சிரத்தையுடன் ரவிதாசனைத் தேடத் தேவையில்லை என்று அவன் மனதின் ஒரு பாகம் சொன்னது. ரவிதாசன் அப்படியெல்லாம் அனாதைப் பிணமாகக் கரை ஒதுங்கியிருக்கமாட்டான். 'ரவிதாசன் மட்டும் ஏதோ அலாதிப் பிறவி போலிருக்கிறது. அவனுக்கு மட்டும் சாவே கிடையாதா? கரையோரம் அவன் சகாக்கள் எல்லோரும் பலியானார்களே. இவன் மட்டும் காயம் பட்டு ஆற்றுக்குள் குதித்துவிட்டானே?' குதித்தவன் என்ன ஆனான் என்று தீர்மானமாய்த் தெரிந்துகொள்ளும் எண்ணத்துடன் கொள்ளிடம் கடலில் கலக்கும் இடம் வரை சென்று பார்க்கவேண்டும் என்ற முடிவில் இருந்தான் மாறன்.

'தனக்கு ஏதேனும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்காமலா போகும்?' என்று மாறன் எண்ணினான். கட்டாயம் கிடைத்தே தீரும் என்றும் நம்பினான். 'அப்படிச் சந்தர்ப்பம் கிடைத்த அன்று ரவிதாசனை நார் நாராய்க் கிழிப்பது உறுதி' என்று தீர்மானித்தான்.

மாறன் தஞ்சையிலிருந்து கிளம்பும் போது தன் நண்பர்களான அடியானையும் வந்தியத் தேவனையும் சந்தித்தான். அவன் ரவிதாசனைத் தேடி செல்வது என்ற முடிவில் இருந்தான் என்றும், உலகின் எல்லைக்கே செல்லவேண்டியதென்றாலும் அவனைப் பிடிப்பதில் உறுதியாய் இருந்தான் என்றும் அறிந்த வந்தியத் தேவனும் அடியானும் அவனுடைய முடிவை மாற்ற முடிந்தவரை முயற்சித்தனர். ஆனால் அந்தப் பிரயாசையெல்லாம் விழலுக்கு இறைத்த நீராய்ப் போனது. ரவிதாசன் தப்பித்துவிட்டான் என்பதை மாறனால் சகித்துக்கொள்ள முடியவில்லை.

''ரவிதாசன் ஏற்கனவே கொள்ளிடத்தில் மூழ்கி மாண்டிருக்கலாம்'' என்று எடுத்துச் சொன்னான் வந்தியத் தேவன். அதற்கு



''விபரீதங்களுக்கும் அபாயங்களுக்கும் இடையிலும் அவன் உயிர் பிழைத்திருப்பான். ஏன் என்றால் அவன் விதி என் கையினால் சாவதுதான் வல்லா. அதற்காக அவன் உயிருடன் பிழைத்திருக்க வேண்டும் என்று வேண்டுகிறேன். அவனைக் கொல்லவேண்டும் என்ற வெறி என் மனத்தை விட்டு அகலவில்லை. பகலிலும், இரவிலும், பிரயாணத்திலும், போர்முனையிலும், கஷ்டத்திலும், சுகத்திலும் அவன் முகம் தான் முன்னே வரும். நான் எங்கே போனாலும், எது செய்தாலும், என் இருதய அந்தரங்கத்தில் அவன் உருவம் இருந்து கொண்டுதானிருக்கும்'' என்றான் உறுதியோடு.

மாறன் பட்ட வேதனையைப் பார்க்க சகிக்காமல் இருந்தனர் வந்தியத் தேவனும் அடியானும். காலமும் கடவுளுமே அவனுக்கு ஆறுதல் தர முடியும். அதுவும் பழையதையெல்லாம் நினைவூட்டுவது போல ஏதும் நடக்காமலிருந்தால் அதுதான் நல்லது.

லோகாவின் முடிவை அவள் வாயிலிருந்தே தெரிந்தவுடன் இடிந்து போய்த் தன் அரண்மனைக்குத் திரும்பினான் மாறன். அதுவரை வெகு நாட்களாகத் தரையில் காலை வைத்து நடந்ததாகவே அவனுக்குத் தோன்றவில்லை. அப்படி அவர்கள் இருவரும் ஆனந்த மனோராஜ்ய உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் இந்தப் பேரிடி அவன் தலையில் விழுந்துவிட்டது.

லோகாவுடன் வாழ்வது போல எத்தனை எத்தனையோ கற்பனைகளைச் செய்திருந்தான். தன் வாழ்வே இனி அவள்தான் என்று எண்ணி நாட்களைக் கழித்து விட்ட மாறனுக்கு, அவள் தனக்கு இல்லை என்றவுடன் அதிர்ந்து போனான்.

தோல்வி தோல்வி என்று தொடர்ச்சியாய் நிகழ்ந்தவனுக்கு திடீரென வெற்றி வந்தவுடன் பழைய தோல்விகளெல்லாம் மறந்து போயிற்று. தோல்வி என்றால் எவ்வளவு கசக்கும், எப்படி வலிக்கும் என்று மீண்டும் அறிந்தான். அவளுடைய வார்த்தைகள் அவன் காதில் இரும்பைக் காய்ச்சி விடுவதுபோல் விழுந்தன. மனத்தில் 'சொரேல்' என்றது.

ஆனால் சற்றும் எதிர்பார்க்காத கோணத்தில் அவன் மனம் ஆறுதல் அடைந்தது. அவன் கண்ணை மூடும் போதெல்லாம் முன்னால் தோன்றிய ஒரே காட்சியைத்தான் பார்த்தான். வானதி இறந்து கிடப்பதும், ரவிதாசன் கொள்ளிடத்தில் குதிப்பதும் தான் கண்முன்னே வந்தது. வானதியின் மரணம் லோகாவின் சமீபத்திலேயே ஏற்பட்டது. அவளுடைய உடலிருந்து பெருகிய இரத்தம் லோகாவின் உடம்பையும் உடைகளையும் நனைத்தது. இனி லோகாவைப் பார்க்கும் போதெல்லாம் அவனுக்கு வானதியின்

மரணம் தான் நினைவுக்கு வரும். தன் தோல்வியெனக் கருதும் சம்பவம் நினைவுக்கு வரும். தான் வாங்க வேண்டிய பழியும் நினைவுக்கு வரும். அதனால் லோகாவிடமிருந்து அகன்றது ஒரு வகையில் நல்லது தான்.

அப்போது காதல் என்பது போய் விட்டதா?

காதல் போகவில்லை. ஆனால் முன்போல முழுவதுமாய் அவனை ஆக்கிரமிக்கவில்லை. கடமை அழைத்தது. வீரனின் உணர்வு வரச்சொன்னது. 'எங்கிருந்தாலும் அந்த ரவிதாசனைத் தேடிப்பிடிப்பேன். பழிக்குப் பழி வாங்குவேன்' என்ற வஞ்சம் மனதை முழுமையாக ஆக்கிரமித்தது.

அவளிருக்கும் ஊரில் வாழக் கொடுத்து வைத்திருக்கிறேன் என்று சில மாதங்களுக்கு முன் நினைத்திருந்தான். ஆனால் இன்று அவளிருக்கும் ஒரே இடத்தில் இருந்து கொண்டு எவ்வளவு காலத்துக்குத் தோல்வியை தினம் தினம் பார்த்துக் கொண்டிருக்க முடியும்? லோகாவுக்கும் தர்மசங்கடம் அல்லவா?

அரசரிடம் சென்று தன்னை வேளக்காரப்படையிலிருந்து விடுவிக்குமாறு மீண்டும் விண்ணப்பித்தான். தான் ரவிதாசனைத் தொடர்ந்து செல்லப் போவதாகவும் சொன்னான். விஷயம் தெரிந்தவுடன் அரசர் இந்த முறை அவன் போகக்கூடாது என்று தடுக்கவில்லை. ரவிதாசன் உயிரோடிருப்பதாகச் சொன்னால் தனியொருவனாய் மாறனால் அவனைக் கண்டுபிடித்து, கயிற்றில் பிணைத்து அழைத்து வருவது என்பது எளிய காரியமாயில்லை. படையோடு சென்றாலே மிகவும் சிரமமாயிருக்கும். எனினும் மாறன் சிலகாலம் இந்த ஊரிலிருந்து அகன்றிருந்தால் நல்லதுதான் என்று பிரதமர் சொல்லி அரசர் ஒப்புகொண்டார். பிரதமர் சொன்னது, லோகா திடீரெனத் தன் மனதை மாற்றிக்கொண்டு விடுவாளோ என்கிற பயத்திலும் தான்.

இப்போது தஞ்சையை விட்டு வெகு தூரம் வந்துவிட்டான் மாறன். முதலில் அவன் மனமோ அவ்வளவு சீக்கிரம் தேறுகிற தாகக் காணவில்லை. முதலில் இந்த துரதிர்ஷ்டம் பிடித்தவனை விதியானது ஆசைகாட்டிப் பரிகாசம் செய்கிறது என்று தோன்றியது. லோகா சொன்னது அவன் மனதைக் கத்தியை வைத்து கிழித்தது போலிருந்தது. வாய்விட்டு அழவேண்டும் போலிருந்தது.

ஆனால் அவனுக்கே ஆச்சரியம். போன வாரம் வரை அவன் மனதில் இருந்த உணர்வுகளெல்லாம் முற்றிலுமாய் மாறிப்போய் இன்று ரவிதாசனைத் தேடுவதே குறிக்கோளானது. எல்லாருமாகச் சேர்ந்து தனக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறார்கள் என்று



ஆரம்பத்தில் தோன்றினாலும், விதியின் விரல் கோலமிட்டுக் கொண்டிருந்தது என அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. தலை நிமிர்ந்தபடி அவன் புரவியைச் செலுத்திச் சென்றதில் ஒரு நம்பிக்கை தெரிகிறது. நமக்கும் நம்பிக்கை பிறக்கிறது.

மாறா! மாபெரும் வீரா. உன்னிடமிருந்து இப்போது விடை பெறுகிறோம். உனக்குச் சரித்திரம் செய்த துரோகம் இந்த உலகம் தோன்றிய காலத்திலிருந்து யாருக்கும் நேர்ந்திராதது. ஆனால் இச்சதியெனும் சகதியிலிருந்து நீ மீண்டு வந்துவிடுவாய்!

பெண்ணின் மேல் காதலென்பது உயரிய உணர்வு தான். அது முறியும் போது ஏற்படுத்தும் வலியும் அபாரமானது தான். ஆனால் காலத்தால் குணமடையாதது ஏதுமில்லை. நீயும் உன் பழைய நிலைக்கு வருவாய். உனது குலமும் உயர்ந்து வரும். வருவது மட்டுமல்ல; பெரிய நிலைக்கு வளரும்.

ஒன்று தெரியுமா உனக்கு? நாங்கள் சொன்னால் நீ நிச்சயமாக இன்றைய நிலையில் அதை நம்பமாட்டாய். ஆனால் அது தான் சரித்திரத்தில் நடக்கப்போகிறது. இந்த சோழர் பாண்டியர் குலங்களின் காலத்தைத் தாண்டியும் உன் குலம் இந்தத் தமிழகத்தில் வாழும். பெரும் பேர் பெறும். உன்னுடைய சந்ததியர் பெரும் சாதனைகளைச் செய்வார்கள். வானுயர நிற்கும் கோயில்களைக் கட்டுவார்கள்.

ஏன்? மன்னர் ஆட்சி எல்லாம் போய் மக்கள் ஆட்சி இந்த பாரத வர்ஷத்தில் தோன்றியபின், மாவட்டங்களுக்கேகூட உங்கள் நினைவில் பெயரிடப்படும்.

வருந்தாதே மாறா! மாபெரும் வீரா!

'நாளையென்பது புதியதொரு நாள்.'

❖ ❖ ❖

## அத்தியாயம் நூற்று ஐம்பது

## முடிவுரை

ரவிதாசன் ஈட்டியின் வேகத்தினால் உந்தப்பட்டவனைப்போல ஆற்றில் போய் விழுந்தான். அடிபட்டு உள்ளே விழுந்தானா? இல்லை, வேண்டுமென்றே கொள்ளிடத்துக்குள் குதித்தானா? பார்த்தவர்களால் யூகிக்கமுடியவில்லை.

வந்தியத் தேவனும் மாறனும் ஓடிப்போய்க் கரையிலிருந்து எட்டிப்பார்த்தனர். பொன்னியின் செல்வரோ அடிபட்ட தன் மனைவியைக்காண விரைந்து சென்று விட்டார்.

எட்டிப் பார்த்த இருவரும் மனதில் குரோதம் பொங்கத் தேடினர். ஆலம் விழுதுகளுக்கு இடையில் ஒளிந்திருக்கின்றானா ரவிதாசன் என்று பார்த்தனர். ஆனால் யாரும் அங்கே தென்பட வில்லை.

மாறன் ஒரு முடிவுக்கு வந்து விட்டான். அதை உணர்ந்த அவன் நண்பன் வந்தியத் தேவன் ஆற்றின் உள்ளே குதிக்க முற்பட்ட மாறனைத் தடுத்துவிட்டான். எதிரி என்னவானான் என்ற குழப்பத்திலேயே மழபாடிக்கும், பின்னர் தஞ்சைக்கும் எல்லோ ரும் திரும்பினார்கள்.

ரவிதாசன் வேண்டும் என்றேதான் கொள்ளிடத்துக்குள் குதித் திருந்தான். குதித்தவுடனே தண்ணீரில் மூழ்கினான். சில வினாடி நேரத்துக்கெல்லாம் அவன் குதித்த இடத்துக்குச் சற்றுத் தூரம் கிழக்கே அவனுடைய தலை மட்டும் மேலே எழுந்தது. அவன் கொள்ளிடத்தில் குதித்தவுடன் நீர் வெகு உயரம் எழும்பியது. அதனால் அவனைக் கரையின் மேலிருந்தவர்கள் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் வேல்களை எறிந்திருப்பார்கள். அவர்களைப் பொருத்தவரையில் தண்ணீரில் மூழ்கியவன் அடியோடு மூழ கியவன்தான். அதற்கு மேல் அவர்கள் கண்களுக்குத் தென்பட வேயில்லை.

வெகு நேரம் கொள்ளிடத்தின் இழுப்புக்கெல்லாம் எதிர்ப்புக் காட்டாமல் ரவிதாசன் சென்றான். அவ்வப்போது மூச்சு இழுக்க மட்டும் மேலே வந்தான். விழுந்து சில நிமிடங்களில் மழபாடி யைக் கடந்தபோது, தனது இடப் பக்கத்தில் கும்பாபிஷேக ஏற்பாடுகளில் இன்னமும் ஜொலித்தது மழபாடி நகரம் என்பதைப் பார்த்தான்.

மழபாடியைப் பார்த்தவுடன் ஆற்றில் குற்றுயிராய் மிதந்த ரவிதாசனுக்குச் சற்றுமுன்னர் நடந்ததெல்லாம் தொடர் படமாய் ஓடியது. 'அந்தப் பொன்னியின் செல்வன் எப்படி திடீரென அங்கு வந்து சேர்ந்தான்? அவனால் தான் போரின் நிலையே மாறியது. இல்லையென்றால் நிச்சயம் வெற்றிதான். மாறனும் வந்தியத் தேவனும் மாண்டிருப்பார்கள். நந்தினியைக் கொன்றுவிட்டு மகராஜாவைக் கைப்பற்றியிருக்கலாம். முடிந்தால் அந்தப் பழுவூர்ப் பெண்ணையும் அபகரித்திருக்கலாம். ஆனால் அந்த ஒரு மனிதன் வந்ததில் எல்லாம் மாறியது. ஏன் சரித்திரம் கூட இன்று மாறியிருக்



கும்.' சண்டையின் கடைசியில் கடைக்கண்ணால் அவன் தேடினான். நந்தினியும் மகராஜாவைக் கூட்டிக்கொண்டு மறைந்து விட்டாள். இனி அவளைத் தேடிப் பிடிப்பது பிரம்மப் பிரயத்தனம்தான்.

'அடிமை விலங்கைத் தகர்க்கும் காலம் வந்துவிட்டது என்று தவறாய்க் கணக்குப் போட்டுவிட்டோம். இல்லை. கணக் கெல்லாம் சரி தான். வேலை வெற்றிபெற முடியாமல் போனதை விதியெனச் சொல்வதா? அப்படித்தான் சொல்லவேண்டும். பொன்னியின் செல்வன் சரியாக எப்படி அந்த நேரத்தில் வந்தான்? பாவம், அவன் மனைவி சாவதை தன் கண்ணால் பார்க்கவே வந்தான் போலும்! ஆனால் அவனுக்கு மட்டும் அது சாபம் அல்ல. எனக்கும் தான்! பரமேசுவரனும் செத்துப் போனான். இடும்பனும் மாண்டுவிட்டான். அதை நான் பார்க்கவேண்டியிருந்ததே! போராடும் வீரனுக்கு ஆறிலும் சாவு, நூறிலும் சாவு தான்! என்றாலும் மனது கேட்கவில்லையே? ஆனால் இனி அவர்களைப் போல வீரர்களை வேறெங்கும் காண்பது துர்லபம்' என்று நினைத்தவன், 'என்னை எல்லோரும் மந்திரவாதி என்பார்கள். மந்திரம் மட்டும் தெரிந்திருந்தால் அவர்களை உயிர்ப்பித்திருக்க மாட்டேனா?' என்றும் நினைத்தான்.

நாலாபக்கமும் ஒரே அந்தகாரந்தான். ஆற்றங்கரையெங்கும் இருள் மூடியிருந்தது. திக்குத்திசை தெரியாத இருட்டிலே நதியானது அவனை இழுத்துச்சென்றது. அவ்வப்போது ஆற்றில் பயணித்த படகுகளைக் கண்டான். இருள் சூழ்ந்த இரவில் படகுத் தொடர் போகும் காட்சி ஓர் அழகான காட்சிதான். ஒவ்வொரு படகிலும் ஒரு விளக்கு. சில படகோட்டிகள் பாடினார்கள். என்னவோ இருளில் வரும் பாடல்கள் அனைத்திலும் ஒரு சோகம் தொனித்திருக்கும். அந்த பாடல்கள் விட்டு விட்டு அவனுக்கு கேட்டது. இரவில் ஊர்வலமாய்ச் செல்லும் படகுகளின் அழகிய தீப அலங்காரக் காட்சி அவனை யோசிக்கவைத்தது. ஆனால் அவற்றை அணுகினால் ஆபத்து என்று முடிவெடுத்தான்.

ஆற்றில் மிதந்து சென்ற ரவிதாசன், தன் உடலிலிருந்து குருதி யானது கசிந்து கொண்டே இருந்தது என அறிந்தான். சீக்கிரம் கரையைச் சேர வேண்டும் என்ற முடிவுடன் தன் உடலின் திசையைச் சற்றே திருப்பிக் கொண்டான். அவ்வப்போது கால்கள் தரையில் பட்டன. காலை ஊன்றினால், காலுக்கடியில் மண் கரைந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் கொள்ளிட ஆறே அவனைக் கரை மீது தள்ளியது.

ஆனால் அவனால் முழுவதுமாகக் கரையேற முடியவில்லை. கால்களை ஆறு இன்னமும் தொட்டுக் கொண்டுதான் இருந்தது. அப்படியே குற்றுயிராய்க் கிடந்தான். பின் என்னவோ தோன்ற, தப்பி வந்த ஆற்றைத் திரும்பிப் பார்த்தான். நம்பாமல் பார்த்தான். பிரமையா என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான். கொள்ளிட ஆற்றில் முழங்கையளவுக்கு ஒரு மீன் கரையோரமாய் வந்து நீரின் மேல் எட்டிப்பார்த்தது. ஏதோ அவனை நலம் விசாரித்தது போல! பின்னர் திரும்பி, கொள்ளிடத்தின் ஆழத்துக்குள் பாய்ந்தது. அன்றைக்கு முதல் முறையாக ரவிதாசன் சிரித்தான். 'பாண்டிய நாட்டை விடுதலை நாடாய் மாற்ற நீ ஒருவனாவது உயிருடன் மிஞ்சவேண்டும் என்று விதி பாண்டியரின் சின்னமாகிய கயல் வடிவில் வந்து சொல்கிறதோ என்னவோ?'

'தப்பிப் பிழைத்தது மூவேழு இருபத்தொரு தலைமுறைகளில் செய்த தவத்தின் பயன் என்றுகூடச் சொல்லலாம். உடலில் ஏற்பட்ட காயங்களும் உன் நண்பர்கள் செத்தொழிந்ததைக் கண்ணெதிரே கண்ட மனக் காயமும் உன்னை பலவீனப்படுத்தாது. பலப் படுத்தும்' என தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

அவன் மீண்டும் எழாவிட்டால் பாண்டிய நாட்டின் வருங்காலமும் இருள் சூழ்ந்ததாயிருக்குமோ என்ற எண்ணம் ஒரு கணம் அவன் மனத்தில் தோன்றியபோது சட்டென ஒரு சக்தி பிறந்தது.

'ஒரு இடும்பன் என்ன? ஒரு பரமேசுவரன் என்ன? ஆயிரம் பேர் பாண்டிய நாட்டில் மீண்டும் எழுவார்கள். தேனடைகளை மொய்க்கும் தேனீக்களைப்போல் உன்னைச் சுற்றி பாண்டிய வீரர்கள் சேருவார்கள். ஒன்று கூடிச் சோழர்களை அடித்து விரட்டுவார்கள். அவர்களை வழி நடத்திச் செல்ல ஒரு தலைவன் வேண்டும். ரவிதாசா எழுந்திரு' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

பின்னர் அதில் வந்த உத்வேகத்தில் தவழ்ந்து கரையின் மேல் பாகத்துக்குச் சென்றான். சுற்றிப் பார்த்தால் இரவுக்கும் பகலுக்கும் அதிக வேற்றுமையில்லாமல் இருள் சூழ்ந்திருந்த காடு அது எனத் தெரிந்தது.

அடிபட்டிருந்தது. ஆனால் ஒன்றும் பாதமில்லை. எனினும் பொழுது விடிவதற்குள் நல்லதொரு மறைவிடத்தைக் கண்டு பிடித்துவிடவேண்டும். வானத்தைப் நோட்டம் விட்டு சப்த ரிஷிமண்டலத்தைப் பார்த்தான். இன்னும் நேரம் இருந்தது. அப்போது அவன் வெள்ளி நட்சத்திரங்களை அள்ளித் தெளித்திருந்த வானவிதானத்தின் இதர பாகங்களையும் கண்டான். ஏதோ



ஒரு யோசனை. 'இறந்தவரெல்லாம் நட்சத்திரமாவார்களா? அப்போது சோமனும் இடும்பனும் இதில் அடக்கமா?'

ரவிதாசனுக்குச் சில விஷயங்கள் தெளிவாகத் தெரிந்தன. தற்போதைக்கு வேட்டையைக் கைவிட்டுவிடவேண்டும். இவ்வளவு நாள் தன்னைக் கண்டு மனோபீதியில் இருந்த சோழர்களின் கையோங்கிவிட்டது. கண்களுக்கு மறைந்திருந்த மாயாவி என்ற ஸ்தானம் போய் இப்போது அவர்களிடம் சிக்காமல் ஓடவேண்டியிருந்தது. வேங்கையோ உதிரத்தை முகர்ந்து பார்த்துத் துரத்தப் போகிறது என்று அவனுக்கு தெரியும். ஆனால் ஓரிரு நாட்கள் சோழ நாடே கொந்தளிப்பில் இருக்கும். அதில் தப்பிவிடலாம் என்ற நம்பிக்கை இருந்தது.

நிச்சயம் மாறன் அவனைப் பின் தொடர்வான். அவன் உறையிலுள்ள கத்தி இரத்தம் வேண்டும் என்று கேட்குமென ரவிதாசனுக்குத் தெரியும். அவர்கள் இருவருக்கும் உள்ள ஜாதகப் பிணைப்பு அப்படி. அவனை முதல் முறை கடம்பூரில் காணச் சென்ற போதே ரவிதாசன் புரிந்து கொண்டான்.

ஆனால் அதற்காகவெல்லாம் பயப்பட முடியுமா? என்றாவது எல்லோரும் தன் மானத்துடன் தத்தம் விடுதலை நாடுகளில் வாழ்வார்கள். அதற்குப் போராடவும் வீரர்கள் தோன்றிக் கொண்டேயிருப்பார்கள். பசி தாகம் போன்ற உணர்வுதான் விடுதலை வேட்கையும். அதை அடக்க முடியும் என்று நினைப்பது அறிவீனம் அல்லவா?

'தீபத்தை ஒளியும், உடம்பை நிழலும் பிரியாததுபோல் நான் உயிருடன் இருக்கும் வரை இந்த விடுதலை வேட்கை பிரிவது என்பது கிடையாது...' என்ற முடிவுக்கு வந்தான்.

'உம்மையெல்லாம் கேள்வி கேட்க நான் ஒருவன் தப்பிப் பிழைத்தேனடா' என்று நினைத்து இருளில் சிரித்தான் ரவிதாசன்.

'ஹா ஹா ஹா!'

இருளில் அவனுடைய சிரிப்பானது எதிரொலித்தது. பலரும் அவனோடு சிரிப்பது போலொரு பிரமையை ஏற்படுத்தியது.

❖ ❖ ❖

**முற்றும்**